பகவான்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

திருவாய் மலர்ந்தருளிய

# உபதேச மொழிகள்

கு. ரு. சி. ப. சுப்ரமணியன் செட்டியார் காரைக்குடி




மூன்றாம் பதிப்பு

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர்
சென்னை

1937



காலிகோ பைண்டு ரூ. 1-12-0.] [சாதா பைண்டு ரூ. 1-6-0.

# முதற் பதிப்பின் முகவுரை

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் பெருமையும் அவரது மகிமையும் எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அம்மஹானுடைய திவ்ய சரித்திரமும் அனந்த கல்யாண குணங்களும் உலகமெங்கும் அவரது பிரதம சிஷ்யரான ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகளின் மூலமாய்ப் பரவினதும் யாவரும் அறிவர்.

பரமஹம்ஸர் திருவாய் மலர்ந்தருளிய உபதேச மொழிகள் ஒப்புயர் வில்லாதன; படிப்பவர், கேட்பவர் மனத்தில் ஸர்வேசுவரனிடம் பிரேமை யுண்டாகும்படி செய்து சிறந்த உண்மைகளைப் பாமரர்களுக்கும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளக்கிப் பேரானந்தத்தை உண்டாக்க வல்லன; சகலரும் கடைத்தேறச் சுலபமாயிருக்கும் பொருட்டு வேதாந் தார்த்தங்களின் ஸாரத்தை எளிதில் கற்பிக்க வல்லன; மோக்ஷ ஸாதனமாயுமுள்ளன. இவ்வளவு மகிமை வாய்ந்த உபதேச மொழிகளை முதன் முதல் வங்காள பக்தர்களும் பின்பு மாக்ஸ் முல்லர் (Prof. Max Muller) முதலிய ஆங்கில விற்பன்னர்களும் தனித்தனியே வெளியிட்டனர். இவைகளில் ஆயிரத்தொரு மொழிகளைத் திரட்டி ஒருங்கு சேர்த்து ஆங்கிலத்தில் சென்ற மூன்று வருஷங்களுக்கு முன் சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார் பதிப்பித்தனர்.

ஆனால் இத்திவ்வியோபதேசங்கள் ஆங்கில மறிந்தவர்கள் மாத்திரமன்றி, மற்றவர்களும் படிக்கவேண்டியது அவசியமானதால், அவை தமிழில் வெளியாயின் இப்பிரதேசத்து பக்த கோஷ்டிகள் பேரானந்த மடைவரென்று பலர் தெரிவித்தனர். அவ்வாறே அவர்கள் வேண்டுகோளுக்

முகவுரை

கிணங்கி, ஆங்கிலம், தமிழ், வங்காளம் முதலிய பாஷைகளி
தேர்ச்சியுள்ள ஸ்ரீமான் தாதாசாரியாரவர்கள், இ
நூலை இனிய தமிழில் எழுதி உதவினார்கள். அவருடை
பேருபகாரம் என்றும் மறக்கற்பாலதன்று. இதைப் பி
சுரம் செய்யும் விஷயத்தில், தென்னிந்தியாவிலுள்ள மக
தார்மிகர்களில் ஒருவரும், கல்வி அபிவிருத்திக்காகவும் நம
மதக்கிரந்தங்களைப் பரவச் செய்வதற்காகவும் பேருதவ
புரிந்து வருபவரும், சிறந்த பக்தருமான ஆண்டிப்பட்
ஜமீன்தார் ஸ்ரீமான் M. C. T. பெத்தாச்சி செட்டியாரவ
கள் தம் இயற்கைப்படி முன் வந்து அச்சிடுவதற்கான பொ
ளுதவி கொடுப்பதாய் மிக்க அன்புடன் ஏற்றுக் கொண்ட
னர். அவருக்கு நாம் என்றும் நன்றி பாராட்டக் கடமை
பட்டுள்ளோம். அவருடைய சிறந்த தர்ம சிந்தைக்கு ஈச
அருள்புரிவாராக.

இகபரசுகங்களுக்கு ஸாதனமான இந்நூல் வாழ்
கைப்பயனை உணர்ந்துய்வதற்குப் பலருக்கும் பெருந்துணை
யாயிருக்க வேண்டுமென்பதே எம் பிரார்த்தனை.

மயிலாப்பூர்,
27-10-1920.

சர்வானந்தர்.

## இரண்டாம் பதிப்பு

இரண்டாம் பதிப்பில் ஆங்கிலப் பதிப்பினின்றும் புதிதாய்
கிடைத்த இரண்டு உபதேசங்கள் சேர்க்கப்பட்டு மொத்த
1003 உபதேசங்களாய்ப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

## மூன்றும் பதிப்பு

பொருள் நன்கு விளங்குதற் பொருட்டு இப்பதிப்பில் நடை
யானது பெரிதும் மாற்றியும் திருத்தியும் அமைக்கப்பட்டிரு
கிறது.

# பொருளடக்கம்



# பரமஹம்ஸரின் சரித்திரச்சுருக்கம்

"ஆண்டா யுன்னைக் காண்பதோரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனை வாழ்க்கையை விண்ணகர் மேயவனே"

என்று திருமங்கை மன்னனோடு சேர்ந்து மனங்கசிந்து கூவி
ழைக்கக்காரணனான ஸர்வேசுவரனை நேருக்குநேரே தரிசிக்க விரும்பு
வோர் அருமையிலும் அருமை. மற்றைக் கோடானுகோடி ஜனங்
ள் கேவலம் விஷய சுகத்தி லழுந்தி, 'ஆயினை மனையைச் சேயி
னைப் பிதாவை அனத்தினைத் தனத்தினை விரும்பி' ஸர்வ ஜீவ தயா
ரனும் அடியவர்க்கெளியவனுமான ஈசுவரன் மீது கவனமில்லா
ருக்கின்றனர். இந்த துர்த்தசை இன்று அல்லது நேற்று உண்
ான காரியமல்ல. உலகம் தோன்றிய கால முதற்கொண்டே,
துாவது ஈசுவரன் ஜனஸமூகத்தைச் சிருஷ்டித்தது தொடங்
யே ஏற்பட்டுள்ளது. அவ்வக் காலங்களின் உலக சரித்திரத்தை
ராயப் போவோமானால் இவ்விஷயத்துக்கு ஏராளமான சாக்ஷி
ங்கள் கிடைக்கும். உலகத்தில் பாபம் நிறைந்ததைச் சகியாமல்
மிதேவி ஈசுவரன் முன்னர்ச் சென்று பாபிகளைத் தன்னகத்தி
ின்றும் அகற்ற வேண்டுமென முறையிட்டதாக நாம் படித்
துள்ள கதைகளெல்லாம் மேற்கூறிய விஷயத்தை விளக்க வல்
னவேயன்றி வேறல்ல. அவதார புருஷர்கள், ஆசாரியர்கள்
ன்று நம்மால் கொண்டாடப்படும் மஹான்கள் அனைவரும் இப்
டிப்பட்ட துர்த்தசையைக் கூடுமான வரையில் நிவர்த்திக்க வந்
வர்களேயாவர்.

புற்றீசல்கள் போல ஒன்றன் பின்னொன்றாய்த் தேவைகள்
ன்றுகிற இக்காலத்தில் மனிதனுடைய காலம், புத்தி, முயற்சி
யெல்லாம் அத்தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதிலேயே
ரும்பாலும் கழிகின்றன. ஆகவே அவனுக்கு ஈசுவரனிடத்தில்
க்தி செய்வதற்கும் ஆத்மவிசாரணை பண்ணுவதற்கும் சாவகாசங்
டைக்கிறதில்லை. இப்படி, மானிடர்கள் தங்கள் தங்களுடைய
ந்திரியங்களின் வசப்பட்டுத் துர்த்தசையை அடையவேண்டு

# பரமஹம்ஸரின் சரித்திரச் சுருக்கம்



"ஆண்டா யுன்னைக் காண்பதோரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனை வாழ்க்கையை விண்ணகர் மேயவனே"

என்று திருமங்கை மன்னனோடு சேர்ந்து மனங்கசிந்து கூவி ஜகத்காரணனான ஸர்வேசுவரனை நேருக்குநேரே தரிசிக்க விரும்புவோர் அருமையிலும் அருமை. மற்றைக் கோடானுகோடி ஜனங்கள் கேவலம் விஷய சுகத்தி லழுந்தி, 'ஆயினை மனையைச் சேயினைப் பிதாவை அனத்தினைத் தனத்தினை விரும்பி' ஸர்வ ஜீவதயாபரனும் அடியவர்க்கெளியவனுமான ஈசுவரன் மீது கவனமில்லாதிருக்கின்றனர். இந்த துர்த்தசை இன்று அல்லது நேற்று உண்டான காரியமல்ல. உலகம் தோன்றிய கால முதற்கொண்டே, அதாவது ஈசுவரன் ஜனஸமூகத்தைச் சிருஷ்டித்தது தொடங்கியே ஏற்பட்டுள்ளது. அவ்வக் காலங்களின் உலக சரித்திரத்தை ஆராயப் போவோமானால் இவ்விஷயத்துக்கு ஏராளமான சாக்ஷியங்கள் கிடைக்கும். உலகத்தில் பாபம் நிறைந்ததைச் சகியாமல் பூமிதேவி ஈசுவரன் முன்னர்ச் சென்று பாபிகளைத் தன்னகத்தினின்றும் அகற்ற வேண்டுமென முறையிட்டதாக நாம் படித்துள்ள கதைகளெல்லாம் மேற்கூறிய விஷயத்தை விவரிக்க வந்தனவேயன்றி வேறல்ல. அவதார புருஷர்கள், ஆசாரியர்கள் என்று நம்மால் கொண்டாடப்படும் மஹான்கள் அனைவரும் இப்படிப்பட்ட துர்த்தசையைக் கூடுமான வரையில் நிவர்த்திக்க வந்தவர்களேயாவர்.

புற்றீசல்கள் போல ஒன்றன் பின்னொன்றாய்த் தேவைகள் தோன்றுகிற இக்காலத்தில் மனிதனுடைய காலம், புத்தி, முயற்சியெல்லாம் அத்தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதிலேயே பெரும்பாலும் கழிகின்றன. ஆகவே அவனுக்கு ஈசுவரனிடத்தில் பக்தி செய்வதற்கும் ஆத்மவிசாரணை பண்ணுவதற்கும் சாவகாசம் கிடைக்கிறதில்லை. இப்படி, மானிடர்கள் தங்கள் தங்களுடைய இந்திரியங்களின் வசப்பட்டுத் துர்த்தசையை அடையவேண்டு

மென்பது ஸர்வேசுவரனுடைய திருவுள்ளமேயல்ல. அவர்களுடைய தீச்செய்கைகளினல் எஞ்சிநிற்கும் நற்குணமுடையவர்க்குத் தீங்குகள்நேர்வதை ஸர்வேசுவரன் சகிப்பதில்லை. ஆனதுபற்றியே,

நல்லார்கள் தம்மை நலம் புரிந்து காத்தற்கும்
பொல்லாரைப் போன்று நெறி போக்கற்கும்-சொல்லாரு
முந்தை யறநாட்ட முய்த்தற்கு நான்பிறப்பன்
இந்தவுகந் தோறு மிசைந்து.

என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவத்கீதையில் சொல்லியருளினர். தர்ம ஸ்தாபனத்துக்காக ஈசுவரன் அவதரிப்பதாகச் சொன்னபோதிலும், அவன் காலமல்லாத காலங்களில் தோன்றுவதில்லை. அவனுடைய தெய்வீக சக்தி உலக முழுவதும் பரவுமாதலால் அச்சக்தியைப் பொறுக்கவும் அதனல் நன்மை யடையவும் ஜனங்களுக்கு எற்ற மன நிலைமை வேண்டுவது அவசியம். வியாதியிருந்தால் மட்டுமேதான் மருந்து குணங் கொடுக்கும். கற்றரையில் போட்ட வித்து எவ்விதச் சவுகரியத்தைக் கொண்டும் முளைத்தெழாததைப் போல தெய்வீக சக்தியைப் பொறுத்து அதனல் பயனடையக் கூடிய மன நிலைமை மானிடர்க்கில்லாத காலங்களில் ஈச்வராவதாரம் நேர்வதில்லை. இதுவேதான் ஈசுவரனும் அவனுடைய அருளைப்பெற்ற மஹான்களும் அருமையிலும் அருமையாகவே உலகத்தில் தோன்றுவதற்குக் காரணம்.

நமது பாரத தேசம் ராஜீய விஷயத்தில் சுயேச்சையை இழந்த காலமுதற்கொண்டு நமது ஸனாதன தர்மத்துக்கு மலினம் நேரத் தலைப்பட்டது. முகம்மதியர்கள் நமது நாட்டின் மீது படையெடுத்ததின் காரணமாகவும் அவர்களின் கீழ் நமது நாட்டின் பெரும்பாகம் சென்றதின் காரணமாகவும் நம்முடைய தர்ம ஸ்தாபனங்களில் பல அழிந்தன. முகம்மதிய தர்மத்தில் தீவிர புத்தியையுடைய அவுரங்கசீபு சக்கரவர்த்தி, டிப்பு ஸுல்தான் போன்றவர் ஹிந்துக்களைப் பலவந்தமாக முகம்மதியர்களாக்கினர். ஸமதர்சனக் கொள்கையைப் பின்பற்றிய அக்பர் சக்கரவர்த்தியைப் போன்றவர்களால் நமக்குண்டான நன்மைகள் அற்பமென்றே சொல்லவேண்டும். இப்படி ஸனாதன தர்மம் குன்றவுடைவதை

நிவர்த்திப்பதற்காகவே நானக் பாபா, கபீர்தாஸ், ராமானந்தர், சைதன்ய ஸ்வாமி முதலியோர் பல் வேறுபட்ட சமயக்கொள்கைகளை ஸமரசப்படுத்தி ஒருவாறு தேச க்ஷேமத்தைத்தேடினர். ஆனால் சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டில் பாரத தேசத்தில் ராஜீய விஷயமாகப் பெரும் மாறுபாடு ஒன்று உண்டாயிற்று. சுமார் 350 வருஷங்களாக அரசுசெலுத்திய மொகலாய வம்சம் தலைகவிழ்ந்து போயிற்று. அதன் ஸ்தானத்தில் ஆங்கிலேய ராஜ்யம் தலையெடுத்தது. ராஜ பாஷையைக் கற்பதினாலும் அவர்களுடைய நடையுடைகளைப் பின்பற்றுவதினாலும் உண்டான சௌகரியங்கள் காரணமாகப் பலர் அவ்வாறு செய்யத் தொடங்கினர். ஆங்கிலேயருடைய அரசாட்சியால் ஸனாதன தர்மத்துக்கு மலினம் ஏற்பட்டதென நாம் சொல்லவில்லை. உண்மையைக் கூறுங்கால் அவர்கள் இந்தியாவிலுள்ள தர்ம ஸ்தாபனங்களில் தலையிடுவதேயில்லை என்று ஸங்கல்பித்துக் கொண்டிருக்கின்றனர். இதினின்றும் அவர்கள் வழுவாதிருக்கும் வரையில் நமது தர்மத்துக்கு அவர்களால் யாதொரு மலினமும் ஏற்படாது.

தர்மத்துக்கு மலினம் ஏற்பட்டது நம்மாலேயே; இங்கிலீஷ் பாஷையைப்படித்துப் பரீக்ஷைகளில் தேறி உத்தியோகம் செய்து பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையும், ஆங்கிலேயரைப் போல உடை உடுத்து உணவருந்தி அவர்களைப்போலாக வேண்டுமென்னும் துரபிமானமும் நமது பிராசீன தர்மத்துக்கும், தலைமுறை தத்துவமாக வந்த பழக்கங்களுக்கும் நேர் விரோதிகளாயின. இது காரணமாக ஜனங்களிடம் தெய்வபக்தி குறைவுதாயிற்று. தர்மத்துக்கு விரோதமான குற்றங்குறைகள் காணப்பட்டன. தர்ம ஸ்தாபனத்துக்காக அவதாரம் நிகழ வேண்டிய காலம் இதுவென சிகித்ஸகனான ஈசுவரன் திருவுளத்திற் பட்டது. ஆகவே அவன் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரெனப் பிற்காலத்தில் கொண்டாடப்பட்ட மஹானாகத் திருவவதாரம் செய்தருளினன்.

புண்ணிய பூமியாகிய நமது பரதகண்டத்தில் வங்க தேசத்திலே ஹூக்லி ஜில்லாவைச்சேர்ந்த 'காமார் புகூர்' என்னும் சிறு கிராமத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சகாப்தம் 1756-ம் வருஷத்தில் மாசிமாதத்துப் பூர்வ பக்ஷத்துத் துவிதியையில் (கி. பி.

போது அங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மஹா லிங்கரை இவருடைய பக்திக்கு மெச்சி, இவர் கனவில் தோன்றி, 'நான் உனக்குக் குமாரனாக அவதரிக்கப் போகிறேன்,' என்றருளி மறைந்தனர். இதன் பிரகாரமே சந்திரமணி தேவி கர்ப்ப வதியாகி உரியகாலத்தில் நல்ல லக்ஷணங்கள் பொருந்திய புருஷப் பிரஜையைப் பெற்றனள். ஸ்ரீ மஹாலிங்கரின் பெயர்களில் ஒன்றான 'கதாதரர்' என்ற நாமம் இக்குழந்தைக்கு இடப் பட்டது. இந்த கதாதரர்தான் பின்னர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரெனப் பிரஸித்தி வாய்ந்த பரமாசார்யராானர். இவருக்கு ராமகுமாரர் என்ற ஜேஷ்ட ஸகோதரர் ஒருவரிருந்தார்.

'விளையும் பயிர் முளையிலே' என்பது கதாதரர் விஷயத்தில் முற்றிலும் உண்மையாகவே இருந்தது. ஸமதர்சனம், எல்லாரிடத்திலும் அன்பு, அருள், சாந்தம், சீலம் முதலிய நற்குணங்கள் இவரிடம் பிற்காலத்து விளங்கின வென்பதை நாமறிவோம். அப்படிப் பட்ட குணங்கள் அதிபால்ய தசையிலும் இவரிடத்து மிக்குத் தோன்றின. கிராமத்துக்கு அருகாமையில் உள்ள ஒரு மாந்தோப்பில் கதாதரர் தலைமையின் கீழ் சிறுவர்களெல்லாரும் கூடி விளையாடுவதுண்டு. அங்கு கதாதரர் மற்றைய எல்லா ஜாதிப் பிள்ளைகளோடும் சேர்ந்து யாதொரு ஜாதி வித்தியாசமும் பாராட்டாமல் விளையாடிக் களிப்பார்.

வங்க தேசத்தில் கூத்தாடிகள் ஊரூராய்ச் சென்று நாடக மாடி ஜனங்களை இன்புறுத்தித் தாங்களும் பணம் பெறுவது வெகுகாலமாக நடைபெற்று வழக்கம். இதிகாசங்களான ராமாயணம், மஹாபாரதம் இவைகளினின்றும், பதினெண் புராணங்களினின்றும் ஏதாவதொரு கதையை எடுத்துக்கொண்டு அதை நடித்துக் காட்டுவது அத்தகைய கூத்தாடிகளின் தொழில். இவர்களுடைய நாடகத்தில் சங்கீதம்தான் பிரதானம். அதைக்கேட்பதற்கு ஜனங்கள் திரள் திரளாய்க் கூடுவார்களாதலால் கேவலம் எழுதப்படிக்கத் தெரியாதவனுக்கும் இக்கூத்தாடிகள் மூலமாக சமத புராணக் கதைகள் தெரிந்து விடும். இப்படிப்பட்ட கூத்துக்கள் சுற்றுப் பக்கத்தில் ஸமீபத்திலுள்ள எந்தக் கிராமத்தில் நடந்தாலும் சரி, அங்கு கதாதரரை நிச்சயமாகப் பார்க்கலாம்.

பார்த்த நாடகத்தை அவர் தாமே திரும்பவும் நடிக்கக்கூடிய ஞாபகசக்தி வாய்ந்தவராக விருந்தார்.

ஒருநாள் மேற்கூறிய மாஞ்சோலையில் ஊர்ச்சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருக்கும்போது, கதாதரர் வெகு இனிமையாகப் பாடித் தமது தோழர்களை ஆனந்தப்படுத்திக் கொண்டிருந்தனர். திடீரென்று பாட்டை நிறுத்திய கதாதரர், "தம்பிகளே! நாம் அன்று பக்கத்து கிராமத்தில் பார்த்த 'ராதா சோகம்' என்ற நாடகத்தை இப்போது நடிக்கலாமா?" என்றனர். உடனே, "நடிக்கலாம், நடிக்கலாம்," என்று அனைவரும் ஒரே குரலாய்க் கூறினர். கதாதரருக்கு ராதை வேஷமும் மற்றவர்க்குச் சேடிகளின் வேஷமும் போடப்பட்டன. கிருஷ்ணனுடைய பிரிவாற்றாமைக்குப் பெரிதும் வருந்திய ராதைக்குப் பிராணபயம் நேரிடுமெனக் கண்டு கொண்ட சேடிகள், தங்களுள் ஒருத்தியான பிருந்தையைக் கிருஷ்ணனிடம் தூதனுப்பியதாக வரும் சந்தர்ப்பத்தை நடிக்கும்போது, பிருந்தையாக வேஷம் பூண்டவன் ராதையாக வேஷம் தரித்த கதாதரரிடம் சென்று, "கிருஷ்ணனிடம் என்ன சொல்லுகிறது?" என்று கேட்டாள். கதாதரர் யாதொரு பதிலும் சொல்லாமல், "கிருஷ்ணா! கிருஷ்ணா!" என்று சொல்லிக் கொண்டே மூர்ச்சையடைந்து கீழே விழுந்து விட்டனர். இதனால் நாடகம் நடுப்பாதியில் நிற்க வேண்டியதாயிற்று. கதாதரர் தம்மை ஒரு வேஷதாரனாக நினையாமல் வாஸ்தவத்தில் கண்ணனைப் பிரிந்து துயரமடைந்த ராதையேயெனக்கருதியிருந்தனர். கண்ணபிரான் உரலுடன் சேர்த்துப் பிணிக்கப்பட்டதைக் கேட்டு, "எத்திறம் உரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே," என்று ஸ்ரீ நம்மாழ்வார் சோகித்திருந்ததும், ஸ்ரீராமபிரான் தனிமையில் கரதூஷணாதியருடன் யுத்தஞ் செய்கிறாரென்பதைக் கேட்டதும் சதுரங்க சேனைகளையும் கூட்டிக்கொண்டு சகாயத்துக்கு ஸ்ரீ குலசேகராழ்வார் புறப்பட்டதும் இப்படிப்பட்ட மனநிலைமைக்கு உதாரணங்களாம்.

கதாதரருக்கு உலகப்பற்று பால்ய முதற் கொண்டே அற்றிருந்தது. ஸந்யாஸிகளைக் கண்டால் அவருக்குப் பரம சந்தோஷம். அவர்களோடு பேசுவதும் அவர்களுக்குப் பணிவிடைகள் புரிவதும்

கதாதரருக்கு உவப்பான காரியங்கள். ஒருநாள் சந்திரமணி தேவியார் கதாதரருக்கு ஒரு புது வஸ்திரத்தைக் கொடுத்தனர். இவர் அதை உடுத்துக் கொண்டு, ஜகந்நாதத்துக்கு யாத்திரையாகச் செல்லும் சில சாதுக்கள் தங்கியிருந்த விடத்துக்கு அவர்களைத் தரிசிக்கச் சென்றனர். அந்த ஸாதுக்கள் கௌபீனதாரிகளாக இருப்பதைப் பார்த்துத் தாமும் அவ்வாறே இருக்க வெண்ணி தமது புது வஸ்திரத்தைத் துண்டு துண்டுகளாகக் கிழித்து, இரண்டு துண்டுகளைக் கௌபீனமாக உடுத்துக் கொண்டு, தம் தாய் முன்னர்ச் சென்று, "அம்மா! நான் ஸந்யாஸியாகப் போய் விட்டேன் பார்!" என்றனர்.

பால்யத்தில் கதாதரர் பார்வைக்கு வெகு அழகுள்ளவராக விருந்தார். ஆகவே ஊரார் எல்லோரும் அவரைக் கொண்டாடிக் கண்ட போதெல்லாம் அவருக்குப் பக்ஷண பலகாரங்களைக் கொடுப்பதுண்டு. வயது முதிர்ந்தோர் கூட இவரிடமிருந்த பக்தியைப் பார்த்து, இவர் தேவதாம்சரெனவே மதித்தனர். கதாதரர் பிறந்ததும் அவர் குடும்பத்தைப் பிடித்துவந்த தாரித்திரியம் ஒருவாறு நீங்கி விட்டதாகையால், அவருடைய பெற்றோர்களும் உற்றார் உறவினர்களும் அவரை வெகு உயர்வாகவே பாராட்டி வந்தனர். குழந்தைப் பருவத்திலேயே அவர் சித்திரங்களை எழுதுவதிலும் மண் பிரதிமைகளைச் செய்வதிலும் அபார சாமர்த்தியமுள்ளவராக இருந்தார். மண்பதுமைகள் மட்டுமன்றி, ஊனமாய்ப்போன சிலாவிக்ரகங்களையும் கூடச் செப்பனிடத் தொடங்கினர். தக்ஷிணேசுவர ஆலயத்தில் இவரால் செப்பம் செய்யப்பட்ட கிருஷ்ண விக்ரகம் ஒன்று இன்னும் இருக்கிறது.

ஒன்பதாவது வயதில் கதாதரருக்கு உபநயனமாயிற்று. அத்தருணத்தில் வழக்கப்படி உயர்குலத்துதித்த ஸ்திரீயிடம் பிக்ஷையேற்க வேண்டியதிருக்க இவர் அவ்வாறு செய்யாமல் ஒரே பிடிவாதமாய் தாழ்ந்த குல ஸ்திரீ யொருத்தியிடம் பிக்ஷையேற்றுத் தம்முடைய ஸமதிருஷ்டியை வெளிப்படுத்தினர்.

பிறகு கதாதரரைத் தமையனரான ராமகுமார சட்டோபாத்தியாயர் தாம் கல்கத்தாவில் ஏற்படுத்தியிருந்த கலாசாலையில் சேர்ந்து படிக்கும்படி தூண்டினர். ஆனல் அங்கு நிகழும் வீண்

வாதங்களைக் கேண்டு வெறுப்புற்ற கதாதரர் தமக்கு அப்படிப் பட்ட கல்வி தேவையில்லை யென்றும், வயிற்றுப் பிழைப்புக்கான கல்வியன்றி ஈசுவரனை அடைய வேண்டிய கல்விதான் தமக்கு வேண்டுமென்றும் சொல்லி கலாசாலையிற் கற்க மறுத்துவிட்டார்.

அக்காலத்தில் கல்கத்தாவுக்கு வடக்கே ஐந்து மைல் தூரத் திலுள்ள தக்ஷிணேசுவரம் என்னுமிடத்தில் வெகு பொருள் செல விட்டு ராணி ராஸமணி அம்மாள் காளிதேவிக்கு நேர்த்தியான கோவில் ஒன்று கட்டுவித்தாள். அங்கு ராமகுமாரர் அர்ச்சகராக அமர்ந்து தமது தம்பியான கதாதரரையும் உதவிக்கு அழைத்துச் சென்றார். அங்கு கதாதரர் போஜனம் செய்யாமல் கங்கைக் கரை யில் சுயம்பாகம் செய்துகொண்டு சாப்பிடுவார். சில காலம் சென்ற தும் ராமகுமாரர் நோயால் வருந்தி இறந்துவிட்டார். அதன் பிறகு கதாதரரே அக்கோயிலுக்கு அர்ச்சகராக நியமனம் பெற்றார்.

காளிதேவியை ஆராதனை செய்ததில் இவர் காட்டிய பக் திக்கு அளவேயில்லை. அந்த ஜகன்மாதாவைத் தமது தாயெனவே நம்பினார். தாயைப் பார்த்துக் குழந்தை கொஞ்சுவதுபோலப் பேசுவார்; பின்னும் ஸ்தோத்திரம் செய்வார்; ஆடுவார்; பாடு வார்; தேவி தமக்குப் பிரத்தியக்ஷமாகாததைக் கண்டு மனங் கசிந்து அழுவார். சில வேளைகளில் பக்தி பரவசத்தால் தேவிக்கு அர்ச்சிக்கவேண்டிய புஷ்பங்களைத் தம் தலையிலேயே போட் டுக் கொள்வார். ஆரத்தி யெடுக்கும் காலம் கழிந்த பிறகும் கூட ஆரத்தியைச் சுழற்றிக்கொண்டே யிருப்பர். இவ்விதமான விபரீ தச் செய்கைகளினால் இவருக்குப் பைத்தியம் பிடித்து விட்ட தென்று எல்லோரும் எண்ணினார்கள். இவருக்குக் கல்யாணம் செய்து வைத்தால் சித்தப் பிரமை தீருமென்று நினைத்துத் தாயா கிய சந்திரமணி தேவியார் காமார்புகூருக்கு அழைப்பித்து இவ ருக்கு ராமசந்திர முகோபாத்தியாயர் என்பவரின் குமாரத்தி யான ஸ்ரீமதி சாரதாமணி தேவியென்னும் ஐந்து வயதுப் பெண்ணை விவாகம் செய்வித்தனர். விவாகமான பிறகு கல்கத்தா வுக்கு வந்து பழையபடியே காளிகோவிலில் பூஜையை ஒப்புக் கொண்டார். ஆனால் 'சித்தப்பிரமை' மட்டும் முன்னிலும் பன் மடங்கு அதிகமாயிற்று. தேவியை நோக்கி, "தாயே! அடி

யேனுக்குப் பிரத்யக்ஷமாவது என்று? எப்போது?" எனக் கதறித் துயர்முறுவர். டாக்கா நகரவாசியான வைத்தியர் ஒருவரே இவருக்கு தெய்வப் பித்தேறி யிருக்கிறதென்று கண்டு பிடித்தாரே யொழிய, மற்றையோரெல்லாரும் ஸபத்தியமென்றே கருதினர்.

அன்பும் பக்தியும் இப்படி நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு வருகையில் ஒரு நாள், தேவி தமக்குப் பிரத்யக்ஷமாகாததற்கு கதாதரர் மிகவும் வருந்தித் தம்முயிரை மாய்த்துக் கொள்ள விரும்பினர். அடியவர்களுடைய துயரத்தைப் பொறுக்காத தேவி உடனே பிரத்யக்ஷமாகி, "குழந்தாய்! சமாதானமடை; நீ கூப்பிடும் போதெல்லாம் நான் வருவேன்," என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனள்.

பிறகு நிர்விகல்ப ஸமாதியை அடைவதற்காக இவர் பன்னிரண்டு வருஷங்கள் கொடிய தவம் புரிந்தார். அக்காலத்தில் நீண்ட காலம் கண்மூடித் தூங்கினதில்லை. அவர் ஸமாதி நிஷ்டையிலிருக்கும் போதெல்லாம் அவருடைய மருகரான ஹிருதயர் அவரது சரீராதரணையின் பொருட்டுக் கொஞ்சம் கொஞ்சம் அன்னம் ஊட்டுவர். சில வேளைகளில் நமது கதாதரர் தாழ்ந்த ஜாதியர் வீடுகளில் நுழைந்து துடைப்பம் எடுத்துப் பெருக்கிக் கொண்டே "தாயே! நான் பெரியவனென்றும் பிராம்மணனென்றும், இவர்கள் ஈன ஜாதியரென்றும் எண்ணுகிற மனோபாவம் என்னிடம் இருக்க வேண்டாம்; இவர்கள் அனைவரும் பிரம்ம ஸ்வரூபம் என்னும் எண்ணம் எனக்குண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும்," என்று பிரார்த்திப்பார்.

செல்வத்தை இவர் ஒருபோதும் மதித்ததில்லை. ஒரு கையில் மண்ணையும் மற்றொரு கையில் பணத்தையும் வைத்துக் கொண்டு, "பணம் மண்; மண் பணம்" என்று கூறிக்கொண்டே மாற்றி மாற்றி, இரண்டையும் கங்கையில் எறிந்த விபரத்தையும், கோவில் அதிகாரியான மதுரநாதர் கொடுத்த விலையுயர்ந்த சால்வையை மண்ணில் போட்டு மிதித்து அப்பால் அகற்றிய சம்பவத்தையும் உதாரணமாகச் சொல்லலாம்.

இத்தருணத்தில் பிராம்மண ஸ்திரீ ஒருத்தி தோன்றி, கதாதரருக்குக் கடுந்தவத்தால் ஏற்பட்ட தேக எரிச்சலையும் தீராப்

பசியையும் போக்கி யோகாப்பியாசத்தின் இரகசியங்களை யெல்லாம் அவருக்குப் போதித்தாள். பின்னர், கதாதரர் பாரமார்த்திக ஞான மனைத்தையும் உணர்ந்து ஞானியாக வேண்டுமென்று முயல்கையில்,தோதாபுரி என்றவோர் மஹான் வந்து இவருக்குச்சகல வேதாந்த ரகசியங்களையும் உபதேசித்தார். கதாதரர் அவருடைய உபதேசப்படி மூன்று நாள் அப்பியாசம் செய்து நிர்விகல்ப சமாதி சித்தியடையப் பெற்றார். தோதாபுரி நாற்பது வருஷம் சிரமப்பட்டு அடைந்த நிர்விகல்ப ஸமாதியை கதாதரர் மூன்று நாளிலேயே பெற்றதற்கு முன்னவர் ஆச்சரியமடைந்து, "அப்ப! இனி எனக்கு நீ சிஷ்யனல்ல; எனக்குச் சமானன்," என்று சொல்லிச் சிலகாலம் அவருடன் தங்கி, தமக்குத் தெரிந்த விஷயங்களை யெல்லாம் கதாதரருக்குச் சொல்லித் தாமும் அவரிடமிருந்து பல கற்றுப்பின் அதை விட்டுச் சென்றார்.

தோதாபுரி மஹான் போன பிறகு, கதாதரர் ஆறு மாதகாலம் நிர்விகல்ப ஸமாதியிலிருந்தார். அதன் பயனாக அவருக்கு ரத்தக் கடுப்பு உண்டாயிற்று. உடம்பு ஒருவாறு குணமானதும், அவருடைய பக்தி வைராக்கியம் வேறு விதத்தில் திரும்பியது. வைஷ்ணவ ஸித்தாந்தத்தை அனுசரித்துப் பக்தி யோகத்தால் ஈசுவரனை ஆராதிக்கத் தொடங்கினார். தம்மை ராதையாகப் பாவித்து, ஸ்ரீகிருஷ்ணனைத் தமக்கு நாயகனாகக் கருதி அவரது ஸாந்நித்தியத்தை அடைந்து ஆனந்தித்தார். இதுபோலவே இன்னும் பல தெய்வீகக் காட்சிகளைக் கண்டு களித்தார். பின்னர் நமது நாட்டிலுள்ள முகமதிய மத முதலான இதர தர்மங்களையும் கொஞ்ச கொஞ்சகாலம் அனுசரித்து அவைகளின் மூலமாயும் தமது இஷ்ட சித்தியை வெகு சீக்கிரத்தில் அடைந்தார். அப்பால் கிறிஸ்துவ மதத்தையும் அனுசரித்து ஞான நிஷ்டையில் ஏசு கிறிஸ்துவைக் கண்டு வாழ்த்தித் திருப்தி யடைந்தார். இப்படிப் பல்வேறு தர்மங்களின் கோட்பாடுகளை அப்பியசித்து அவைகளின்படி பக்தி செய்து, தரிசனம் கண்ட பிறகு, எல்லாமதங்களும் உண்மையே யென்றும், சச்சிதாநந்தப் பரப்பிரம்மம் ஒன்றே யென்றும், அதையே ஒவ்வொரு மதஸ்தரும் ஒவ்வொரு விதமாக ஆராதிக்கின்றனரென்றும், ஒன்றுக் கொன்று விரோதமாகக் காணப்படும்

இந்த தர்மங்களெல்லாம் அந்தப் பரப்பிரம்மத்தை அடைவதற்கான பல்வேறு மார்க்கங்களே யென்றும் நமது கதாதரர் வித்தாந்தப் படுத்தினர்.

இத்தருணத்தில் கதாதரரின் மனைவியான ஸ்ரீமதி சாரதாமணி தேவிக்கு 18-வயது ஆகியிருந்தது. தன் புருஷனுக்குச் சித்தஸ்வாதீன மில்லாதிருப்பதைக் கேட்டுத் துக்கித்து, அவரை நேரில் தரிசித்து சங்கதியைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று, தன் கிராமத்தை விட்டு, தக்ஷிணேசுவரத்துக்குக் கால் நடையாக நடந்து வந்து தம் பதியைக் கண்டாள். கதாதரர் அவளை வெகு பிரியமுடன் வரவேற்றா ரென்றாலும், அவளைப் பார்த்து, "உன்னை முன் மணந்த கதாதரன் இறந்து விட்டான்; இப்போதிருக்கும் புதிய கதாதரன் எந்த ஸ்திரீயையும் மனைவியாக ஏற்பதில்லை. உன்னிடம் ஜகந்மாதாவான காளிதேவியின் ஸ்வரூபத்தைத் தவிர வேறொன்றையும் நான் காணவில்லை," என்று சொன்னார். அவரது கருத்தை யறிந்த சாரதாமணி தேவியும், அவருக்குப் பணிவிடை புரிந்து கொண்டு அவர் அருகிலேயே இருக்க மட்டும் அனுமதி தரவேண்டுமென்று கேட்டுப் பெற்று, அவருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து கொண்டும் அவர் உபதேசித்தருளியபடி நடந்துகொண்டும் காலம் கழித்தனள். தமது கணவனை பகவானது அவதாரமாகவே பாவித்து அவரைப்போலவே ஞானச்செல்வம் பெற்றுப் பரம பக்தையாய் வாழ்ந்துவந்த அவ்வுத்தமி சில நாள்களுக்கு முன்னர்தான் கல்கத்தாவில் தேக வியோகமாயினள்.

அக்காலத்தில் மதுரநாதர் குடும்ப சகிதராய்த் தீர்த்த யாத்திரை சென்றபோது நமது பரமஹம்ஸரையும் அழைத்துச் சென்றனர். பிருந்தாவனம் வரையில் போய்த் திரும்பியதினால், பரமஹம்ஸருக்கு, காசியில் பிரசித்தி பெற்றிருந்த த்ரைலிங்க ஸ்வாமிகள் முதலிய மஹான்களுடைய பரிச்சயம் ஏற்பட்டது. பரமஹம்ஸருக்குப் பிருந்தாவனத்திலேயே தங்கிவிடவேண்டுமென்று அவா மிகுந்திருந்தது. ஆனால் ஜகந்மாதாவான காளிதேவியை விட்டுப்பிரிய மனமிராதவராகித் திரும்பவும் தக்ஷிணேசுவரத்துக்கே வந்துவிட்டார். திரும்புகாலையில் வைத்தியநாதம் என்ற

ஊரில் உள்ள ஜனங்கள் பரம தரித்திரர்களாய் ஊண் உடையின் றித் தவிப்பதைக் கண்டு மனமிரங்கி அவர்களுடைய குறைகள் தீர்ந்தாலன்றித் தாம் தக்ஷிணேசுவரத்துக்கு வருவதில்லையென நின்று விட்டார். இதைக்கண்ட மதுரநாதர் அவ்வூராரெல்லா ருக்கும் வேண்டிய அளவு ஆகாராதிகளும் கொடுத்துப் பரமஹம் ஸரைத் திருப்திப் படுத்தி அவரைக் கூட அழைத்துக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தார்.

அதன்பிறகு பரமஹம்ஸருடைய காலம் முழுவதும் அவரி டம் வருபவர்க்கு உபதேசம் செய்வதிலேயே பெரும்பாலும் கழிந் தது. அவரைத் தரிசித்து ஞானோபதேசம் பெறவேண்டியதற்காக தக்ஷிணேசுவரத்துக்கு வந்த ஜனங்களுக்கு அளவில்லை. பிரம்ம ஸமாஜத் தலைவரான பாபு கேசவ சந்திரஸேனர் இவரை ஒரு தரம் வந்து பார்த்து இவருடைய மஹிமைகளை வெளியிட்டபிறகு, பரம ஹம்ஸரை நேரில் தரிசிக்க வந்த ஜனங்களைப் பல்லாயிரக் கணக்கி னல் தான் அளவிடவேண்டும். கேசவ சந்திரருக்கும் பரமஹம்ஸ ருக்கும் பரஸ்பர அன்பு மேலிட்டது. பிரம்ம ஸமாஜத்தார் ஈசு வரனைத் தாயாகப் பாவித்து வழிபடும் கொள்கை பரமஹம்ஸ ருடைய அனுக்கிரகத்தாலானதாம். ஐரோப்பா, அமெரிக்கா முத லிய மேற்றிசைக் கண்டங்களில் வேதாந்த தர்சனத்தைப் பரவச் செய்து புகழ்பெற்ற ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமி யெனப் பின்னர்க் கொண்டாடப்பட்ட நரேந்திரநாத தத்தர் முதலியோர் பரமஹம்ஸ ரிடம் உபதேசம் பெற்றுச் சிஷ்யர்களானது இக்காலத்தில்தான்.

பரமஹம்ஸர் தம்மைப் பார்க்க வந்தவர்களுடன் உதயம் முதல் அஸ்தமனம் வரையில் வேதாந்த விசாரம் செய்து அவர்க ளுடைய பக்குவ நிலைக்கு ஏற்றபடி உபதேசம் செய்துவந்தார். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதே அவ ரது கொள்கையாதலால் தம் சரீர சவுக்கியத்தைக் கொஞ்ச மேனும் கவனிக்காமல் பிறர்க்கு உபதேசம் செய்வதையே பரம ஹம்ஸர் பிரதானமாகக் கொண்டிருந்தார். சற்று சிரமபரிகாரம் செய்துகொள்ளும்படி யாரேனும் நிர்ப்பந்தித்தால், "எனது முயற்சியினல் ஒரு ஆத்மாவேனும் பந்தத்திலிருந்து நீங்கி மோக்ஷ மடையுமானல் அதற்காக என் சரீர வருத்தங்கள் இன்னும் நூறு

யிரம் மடங்கு அதிகமானாலும் சகித்துக் கொள்வேன்," என்பார். 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்பது புத்த தேவருக்கு மட்டும் பொருந்திய அடைமொழியல்ல; நமது பரமஹம்ஸருக்கும் நன்கு பொருந்தும்.

1885-ம் வருஷத்தில் பரமஹம்ஸருக்குத் தொண்டைப் புண் என்னும் நோய் உண்டாகி வரவர முதிர்ந்தது. சிகித்ஸை செய்த வைத்தியர்கள் இவர் ஒன்றுமே செய்யாது படுத்த படுக்கையோடிருந்தால் குணமுண்டாகு மென்றனர். சென்ற விடமெல்லாம் கும்பல் கும்பலாகக் கூடும் ஜனங்களை வீணே போகச் சொல்வதற்கு மனமிராத பரமஹம்ஸர் அவர்களோடு ஏதாவது வார்த்தை சொல்லிக்கொண்டே யிருப்பார். தொண்டை கட்டிப்போய்க் கஞ்சி பாயஸம் முதலிய திரவ பதார்த்தம் கூட உட்செல்லாத சமயத்திலும் அவர் ஞானோபதேசத்தை நிறுத்தவில்லை. இப்படிப் பரோபகாரத்திலேயே காலத்தைக் கழித்து 1886-ம் வருஷம் ஆகஸ்டு 16வ இரவு ஸமாதியிற் பிரவேசித்துப் பரப்பிரம்மத்தில் இரண்டறக் கலந்தனர்.

பரமஹம்ஸர் செல்வத்தைத் திரணமாக மதித்தனரென்பதை முன்னமேயே கூறியிருக்கிறோம். பொன் வெள்ளிகளை அவர் தொடுவதேயில்லை. தூக்கத்திலிருக்கும்போது கூட அவைகள் தேகத்தில் பட்டால் அவருக்கு நடுக்கமுண்டாகும். மதுரநாதர் தக்ஷிணேசுவரம் கோவிலையும் அதற்காக வருஷமொன்றுக்கு ரூ. 25,000 வருமானமுள்ள சொத்துக்களையும் பரமஹம்ஸரிடம் விட்டுவிடுவதாகப் பலமுறை சொன்னபோதிலும் இவர் அத்தகைய பெருங் கொடையை ஏற்றுக் கொள்ளாமல் நிராகரித்து விட்டதன்றி, மறுமுறையும் அப்படி நிர்ப்பந்தப்படுத்தினால் தாம் அவ்விடத்தையே விட்டுப் போய்விடுவதாகவும் பயமுறுத்தினர்.

பரமஹம்ஸர் உத்தம யோக சித்திகளைப் பெற்றிருந்தும் அவற்றை வெளிப்படுத்திப் புகழ்பெற வேண்டுமென்று கருதவேயில்லை. தாம் செய்த உபதேசங்களிலும், ஸித்திகளைப் பிறர்க்குக் காட்டி அவர்களுடைய புகழை நாடவேண்டா மென்றும், யோகாப்பியாசம் செய்வது பிரம்மத்தோடு இரண்டறக் கலப்ப

தற்கேயன்றி, பாமர ஜனங்களுக்கு விநோதம் உண்டாக்குவதற்கன்றென்றும் அடிக்கடி போதித்திருக்கின்றார்.

அவர் ஸமாதியிலிருக்கும்போது, தமது சரீரத்தையும் உலகத்தையும் முற்றிலும் மறந்திருப்பார். ஒரு சமயம் அவர் ஸமாதியிலிருக்கையில், சமீபத்திலிருந்த அக்கினி குண்டத்தில் விழுந்து விட்டார்; என்றாலும் அதை உணரவில்லை. சிஷ்யர்கள் வந்து சிகித்ஸைசெய்த போதுதான் தமது தேகம் வெந்து போனதைத் தெரிந்துகொண்டார். மற்றொரு சமயம் அவர் கால் நழுவிக் கீழே விழுந்ததனால் கையில் காயமுண்டாயிற்று. தெய்வத்தைப்பற்றிய சம்பாஷணை நேரும்போது இவர் ஸமாதியில் ஆழ்ந்து விடுவாராதலால், வைத்தியன் கட்டிய கட்டு அவிழ்ந்து கை மறுபடியும் காயமுறும். இப்படியாக அந்த அற்பமான காயம் ஆறுவதற்கு ஆறு மாதங்களுக்குமேல் சென்றது.

பரமஹம்ஸர் மனிதரூபமாய் அவதரித்த ஈசுவரன்தான் என்பதற்குச் சந்தேகமேயில்லை. அவர் கல்வியில் தேர்ந்தவர் அல்லர்; ஸம்ஸ்கிருத ஞானம் கிடையாது. தாய்ப்பாஷையாகிய வங்க பாஷையிலும் தகுந்த பாண்டித்யம் பெறவில்லை. என்றாலும் அவருடைய உபதேச மொழிகள் தபிக்கும் மனத்துக்குச் சாந்தத்தைக் கொடுக்கின்றன. அவ்வுபதேச வாக்கியங்கள் சூத்திரங்கள் போல திட்பநுட்பம் செறிந்து விளங்குகின்றன. இவை, வேதங்கள், உபநிஷத்துக்கள், தர்சன ஸித்தாந்தங்கள் முதலியவற்றுக்கெல்லாம் வியாக்யான வடிவமாய் நின்று அவற்றின் ஸாரங்கள் அனைத்தையும் எளிய நடையில் யாவரும் தெரிந்துகொள்ளும்படி அமைந்திருக்கின்றன. ஷோபன்ஹாயர் என்னும் ஜர்மானிய தத்துவஞானி உபநிஷத்துக்களைப் பற்றிப் பேசுகையில், "அவை எனது வாழ்நாளுக்கோர் ஆறுதலாக இருக்கின்றன; எனது அந்திய காலத்தும் அவை எனக்கு ஆறுதலளிக்கும்," என்று சொல்லியிருக்கிறார். பரமஹம்ஸருடைய உபதேச மொழிகளுக்கும் இப்படிப்பட்ட குணம் உண்டு என்பதை நாம் தனித்துச் சொல்லவேண்டியதில்லை.



# ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசமொழிகள்

## 1. ஆத்ம ஞானம்



1. ஒன்றென உணர்வது ஞானம்; பலவாகக் காண்பது அஞ்ஞானம்.

2. பாம்பும் அதன் மேற்சட்டையும் வெவ்வேறானவை; அதுபோல ஆத்மாவும் சரீரமும் வெவ்வேறானவை.

3. பாதரஸம் தடவின கண்ணாடியில் ஒருவனுடைய முகம் பிரதிபலிக்கும். அதுபோல, சக்தியையும் தூய்மையையும் பிரம்மசரியத்தால் காப்பாற்றிக் கொண்டிருக்கிறவனுடைய ஹிருதயத்தில் ஸர்வேசுவரனுடைய திவ்யரூபம் பிரதிபலிக்கும்.

4. குருவென்றும் சிஷ்யனென்றும் வித்யாஸம் பாராட்டாத தூய நிலைமை அகோசரமானது. பிரம்மஞானத்தை அடைபவனுக்குக் குருவென்றும் சிஷ்யனென்றும் வித்யாஸம் தெரிவதில்லை. ஆகவே, அந்த நிலைமை அகோசரமானதாம்.

5. இருட்டறையில் ஒரு திருடன் புகுந்து அங்குள்ள பொருள்களையெல்லாம் தடவிப் பார்க்கிறான். ஒரு மேஜையைத் தொட்டதும், "இதன்று" என்று சொல்லிக்கொண்டு அப்பால் போகிறான். அடுத்து, வேறொரு பொருள்—அதாவது ஒரு நாற்காலி என்று வைத்துக்கொள்வோம்—எதிர்ப்படுமானால், "இதன்று" என்று மறுபடியும் சொல்லிக்கொண்டு, இப்படியே ஒவ்வொரு வஸ்துவாகத்தள்ளிவிட்டு, தான் தேடி வந்த பொருள் மீது கவனமாகப் போகிறான். கடைசியாகப் பணப் பெட்டியின் மீது கையை வைத்ததும், "இதோ அகப்பட்டுவிட்டது," என்று சொல்லிக் கொள்கிறான். அப்பால் அவன் மறுபடியும் தேடப்

போவதில்லை. அதுபோலவேதான் பிரம்மத்தைத் தேடும்முயற்சியும்.

6. முதலில் உன்னையே அறிந்துகொள். அப்பால் உனது அனாத்மதத்தன்மையையும் உனக்கும் உன் அனாத்மாவுக்கும் அதிபதியான ஈசுவரனையும் நீ தெரிந்து கொள்வாய். "நான்" என்பது என்ன? அது என்னுடைய கையா, காலா, தசையா, அல்லது தசைநாரா?——ஆழ்ந்து யோசித்துப்பார். அப்போது "நான்" என்ற வஸ்துவே இல்லை யென்பதை அறிவாய். வெங்காயத்தின் மேல்தோலை எவ்வளவு உரித்தாலும் பருப்புத் தென்படாமல் தோல்களே தென்படுகின்றன. அதுபோல, அகங்காரத்தைப் பகுத்துப் பார்த்தால், "நான்" என்று சொல்லக்கூடிய வஸ்துவே இல்லை யென்பது விளங்கும். இப்படிப்பட்ட ஆலோசனையின் முடிவெல்லாம் ஈசுவரனிடம் சேரும். அகங்காரம் அகலும்போது, தெய்வீகம் தானே தோன்றும்.

7. தூய பக்தியும் தூய ஞானமும் ஒன்றேயாம்.

8. நமது தெய்வீகத்தை எப்படித் திரும்பப் பெற முடியும்? புஷ்பத்திலிருந்து பழம் உண்டாகியதும் அப்புஷ்பத்தின் இதழ்கள் தாமாகவே உதிர்கின்றன. அதுபோல, உன்னுள்ளிருக்கும் தெய்வீகம் அதிகரித்ததும் உனது மானிட சுபாவத்தின் குற்றங் குறைகளெல்லாம் தாமாகவே மறைந்துவிடும்.

9. உள்ளே (ஹிருதயத்தில்) ஈசுவரனையுணர்பவன் புறம்பேயும் அவரைக் காண்பான். தன்னுள்ளே ஈசுவரனைக் காணாதவன் தனக்கு வெளியேயும் அவரைக் காணமாட்டான். ஆகவே, தேகாலயத்தில் தெய்வத்தைக் காண்பவன் அகிலாண்டத்திலேயும் அவனைக் காண்பான்.

10. மானிட சரீரம் ஒரு பானையைப் போன்றுள்ளது. மனம், புத்தி, இந்திரியங்கள், அப்பானையில் போடப்பட்ட ஜலம், உருளைக்கிழங்கு, அரிசி, இவைகளுக்குச் சமானம். இவையெல்லாம் அடங்கிய பானையொன்றை அடுப்பின்மீது வைத்தால், அடுப்பின் நெருப்பு அவைகளை வேகச் செய்யும். அவைகளை ஒருவன் தொட்டால் அவனது விரல்களைச் சுட்டுவிடும்; என்றாலும் அவ்வுஷ்ணம் வாஸ்தவத்தில் பானையினுடையதன்று. ஜலம்,

அரிசி, உருளைக்கிழங்கு இவைகளினுடையதுமன்று. அது போலவே, மனிதனிடம் உள்ள பிரம்மத்தின் சக்தியால்தான் அவனுடைய மனமும், புத்தி, இந்திரியங்கள் எல்லாம் தத்தம் வேலைகளைச்செய்கின்றன. அந்தச் சக்தி வேலை செய்யாமல் நிற்கும்போது இவைகளும் தங்கள் தொழில்களைச் செய்யாமல் நின்றொழியும்.

11. அத்வைதமாகிய திவ்யஞானத்தைப் பெற்ற பிறகு எதை வேண்டுமானாலும் நீ செய்யலாம். ஏனெனில், அப்போது உன்னிடமிருந்து யாதொரு தீமையும் வெளிக் கிளம்பாது.

12. இந்தக் கலியுகத்தில் ஞானயோகம் வெகு சிரம சாத்தியமானது. முதலாவதாக, இந்த யுகத்தில் நமது வாழ்க்கை உணவைப் பொறுத்துள்ளது. இரண்டாவது, இந்த யுகத்தில் மனிதர்களுடைய ஆயுள் பிரமாணம் வெகு குறைவாக விருக்கிறது. மூன்றாவது, நம்மை விடாது பற்றிக்கொண்டிருக்கும் தேஹ புத்தியை நீக்குவது இந்த யுகத்தில் பெரும்பாலும் முடியாததாக விருக்கிறது. ஆனால் ஞானியானவன், "நான் சரீரமல்லன்; நான் முக்த், நிர்க்குணரான பரமாத்மனுடன் ஒன்றானவன். நான் சரீரனல்லனாகையால், அச்சரீரத்துக்கு நிச்சயமாக நேரும் உபாதிகளாகிற, பசி தாகம், ஜனன மரணம், வியாதி முதலியன என்னைக்கட்டுப்படுத்தமாட்டா," என்ற தீர்மானத்துக்கு வர வேண்டும். இப்படிப்பட்ட சரீராவசியங்களுக்குக் கட்டுப்பட்ட ஒருவன், தான் ஞானி யென்று சொல்லிக் கொள்வானானால், அவன் செயல், ரத்தம் வரும்படி முள்செடி யொன்று கையில் கீறிக் கிழித்ததனால் அதிகமாக வாதைப்படுபவன் ஒருவன் "என்ன! என் கை கீறு படவுமில்லை, கிழிபடவுமில்லை; அது சரியாகத்தா னிருக்கிறது," என்று சொல்வதைப் போன்றதாகும். இப்படிப்பட்ட வீண் வார்த்தை போதாது. முதன் முதலில் ஞானமாகிய நெருப்பினால் இந்த 'முட்கள்' சாம்பலாக எரிக்கப் பட வேண்டியது அவசியம்.

13. குணத்தாலும் அளவாலும் ஞானம் வேறுபடும். முதலாவது சாதாரண ஜனங்களுடைய—அதாவது உலகவாழ்க்கையிலிருக்கும் மனிதர்களுடைய—ஞானம். இது அவ்வளவாகச்

சக்தியை யுடையதன்று. ஒரு அறையின் உட்புறத்தைமட்டும் பிரகாசிப்பிக்கும் தீபச் சுடருக்கு இந்த ஞானத்தை உவமை கூறலாம். பக்தனுடைய ஞானம் இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கும் தீபமாகும். அறையின் உள்ளிலும் வெளியிலும் இருக்கும் பொருள்களைக் கட்புலனுக்குகிற சந்திரனுடைய வெளிச்சத்துக்கு இதைச் சமானமாகச் சொல்லலாம். அவதார புருஷருடைய ஞானமோ இன்னும் பன்மடங்கு சக்தியையுடையதாகும். அதற்குச் சூரியனைத்தான் இணையாக்கலாம். அவ்வவதார புருஷர் கற்பகோடிகாலமாகச் சேர்ந்துள்ள அக்ஞான இருளை அகற்றக்கூடிய பிரகாசத்தையுடைய தெய்வீக ஞான ஸூர்யராவர்.

14. சதையில் ஒரு முள் தைத்தால் அம்முள்ளை வேறொரு முள்ளினுல் எடுத்தபின் அவ்விரண்டு முட்களையும் எறிந்து விடுவார்கள். அதுபோல, ஆத்மாவின் கண்களை மூடுகிற 'விவகார' அக்ஞானத்தை 'விவகார' ஞானத்தால் தான் அகற்ற வேண்டும். அப்படிப்பட்ட ஞானம் அக்ஞானம் இரண்டும் அவித்தையில்தான் அடங்கியுள்ளன. ஆதலால், பரமோன்னத ஞானத்தை, அதாவது பாரமார்த்திக ஞானத்தை, அடைபவன் எல்லாவித த்வந்தபாவங்களினின்றும் விடுபடுவதால், ஞானம் அக்ஞானம் என்ற இரண்டினின்றும் கடைசியில் விடுபட்டவனுகிறுன்.

15. ஞானம் அல்லது அறிவு என்பதின் உண்மைப் பொருள் என்ன? "ஈசுவரனே! இவ்வுலகமாகிய நாடகசாலையில் நீர் ஒருவரே எல்லாரையும் ஆட்டிவைக்கிறீர். நான் உமது கைகளில் அகப்பட்ட ஒரு சிறு கருவியாவேன். என்னுடையது என்று பாத்தியம் கொண்டாடக்கூடிய பொருள் ஒன்றுமே எனக்கில்லை. எல்லாப் பொருள்களும் உம்முடையனவே. நான், எனது குடும்பம், செல்வம், புண்ணியம் எல்லாம் உம்முடையனவே," என்று ஞானி சொல்கிறுன்.

16. ஞானயோகம் என்பது ஞானத்தின் உதவியால் ஈசுவரனுடன் கலத்தலாம். விசுத்தஸ்வரூபியாகிய பிரம்மத்தை அடைவதுதான் ஞானியின் நோக்கம். அவன் மாயைப் பொருள்

களை யெல்லாம் "இதல்ல, இதல்ல," என்று சொல்லிப் புறக் கணித்து, கடைசியாய் மாயை இது, உண்மை இது என்ற விசாரம் அடியோடு அகன்றொழியும் பதவியைப் பெறுகிறான். அப்போதுதான் அவனுக்கு ஸமாதி நிலையில் பிரம்மதரிசனம் உண்டாகிறது.

17. தெய்வீகம் தோன்றுவதற்கு முன்னால் மானுஷ்யம் நசிக்கவேண்டும். ஆனால், இந்தத் தெய்வீகமும், காலக்ரமத்தில் "பிரம்மமயி" யாகிய இன்னும் உயர்ந்த நிலை தோன்றுவதற்குமுன் தொலையவேண்டும். இப்படி நசித்த தெய்வீகத்தின் (சிவ பிரான்) மார்பு மீதுதான் ஆனந்த மாதா தனது திவ்ய நர்த்தனம் செய்தருளுகின்றனள்.

18. கற்பூரத்தைக் கொளுத்தி வைத்தால் மிகுதியொன்று மிருப்பதில்லை. பகுத்தறிவு (விவேகம்) ஒழிந்து, மகோன்னதமான ஸமாதி நிலையைப்பெற்றால், அப்போது 'நான்' என்பதும், 'நீ' என்பதும், உலகமென்பதும் இராது. ஏனெனில் இந்த மனமும் மமகாரமும் விசுத்தப் பிரம்மத்தில் ஒன்றாய்க் கலந்து விடுகின்றன.

19. ஜலத்தில் அமிழ்த்திவைத்த பாத்திரத்தின் உள்ளிலும் வெளியிலும் ஜலம் நிரம்பியிருக்கும். அதுபோல, ஈசுவரனிடம் ஆழ்ந்துள்ள ஆத்மாவானது உள்ளும் புறத்தும் ஸர்வ வியாபகமான சைதன்யத்தைத் தான் காணும்.

20. பிரகிருதியும் ஆத்மாவும் பிரம்மத்தோடு ஒற்றுமைப் பட்டவையென்று தெரிந்து கொண்டவனை நன்மை தீமைகள் கட்டுப்படுத்த மாட்டா.

21. உயிருடனிருக்கும்போதே எவனொருவன் இறந்தவன் போலாகிறானோ, அதாவது எவனுடைய ஆசாபாசங்கள் பிணத்தினிடத்திற்போல் நசித்திருக்கின்றனவோ, அவன்தான் உண்மையான ஆத்மஞானியாவான்.

22. பிரம்மம் என்று வேதாந்திகள் கூறும் பொருளைத் தான், ஆத்மன் என்று யோகிகளும், பகவான் என்று பக்தர்களும் சொல்லுகின்றனர். பூஜை செய்யும்போது அர்ச்சகன் என்று

சொல்லப்படும் பிராம்மணனே, மடைப்பள்ளியில் வேலை செய்யும்போது சமையல்காரன் எனப்படுகிறான்.

23. காற்று நல்லவாசனையையும் கெட்டவாசனையையும் கொண்டு வீசுமாயினும் அவைகளால் விகாரப்படுவதில்லை. பரம்பொருளும் அந்தக்காற்றைப் போன்றதே.

24. பிரம்மம் குணங்களுக்கு அப்பாற் பட்டது; மாயையோடு சம்பந்தப்பட்டிருப்பனவற்றுக் கெல்லாம் புறம்பேயிருப்பது.

25. குருவியின் கூண்டு அழிந்துபோனால், அக்குருவி, ஆகாயத்தில் பறந்துபோய் விடுகிறது. அதுபோல, சரீர ஞானமும் உலக ஞானமும் மனத்தை விட்டு நீங்கினால், ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய ஆகாயத்தில் பறந்து சென்று ஸமாதி நிலையில் ஐக்கியமாகிறது.

26. அகங்காரம் அழியும்போது ஜீவனும் இறக்கும். அப்போது ஸமாதியில் பிரம்மஞான முண்டாகிறது. அங்கு, பிரம்மத்தை யனுபவிப்பது பிரம்மமே யன்றி ஜீவனல்ல.

27. மூலமாகிய ஒன்றைத் தெரிந்து கொள்; பிறகு உனக்கு எல்லாம் தெரியவரும். ஒன்று என்ற லக்கத்தின் பின் பூஜ்யங்களைச் சேர்த்தால் அது நூறாகவும் ஆயிரமாகவும் ஆகின்றது. ஆனால் அந்த ஒன்று என்னும் லக்கத்தை அழித்து விட்டால் மிகுந்திருப்பனவற்றுக்குப் பொருள் ஒன்றுமே இல்லை. ஒன்றினால்தான் பலவற்றுக்கு யோக்கியதை யுண்டாகின்றது. முதலில் ஒன்று, பின்னர் பல; முதலில் ஈசுவரன், பின்னர் ஜீவனும் உலகமும்.

28. நான்" எதைக் காண்கிறேன் என்பது உனக்குத் தெரியுமா? ஸர்வமும் அவனே என்று காண்கிறேன்! மனிதனும் மற்றப் பிராணிகளும் தோல்மூடிய உருவங்களோடு தலையை யசைப்பதாகவும் கை கால்களை ஆட்டுவதாகவும் காணப்படுகின்றனர். ஆனால் உள்ளே ஈசுவரன் இருக்கிறான்.

29. எனக்கு ஒரு சமயத்தில் ஒரு தோற்றமுண்டாயிற்று. ஸர்வ ஜீவப்பிராணிகளோடும் கூடிய உலகத்தின் உருவத்தை ஒரே ஒரு வஸ்து தாங்கிக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது.

அவ்வுருவம் மெழுகினால் ஆனதோர் வீட்டைப் போலவும், அத னுள்ளிருக்கும் மனிதர்கள், மற்றைய ஜீவப்பிராணிகள், தோட் டங்கள், ரஸ்தாக்கள் முதலியவை யெல்லாம் முழுவதும் மெழுகி னாலேயே செய்யப்பட்டிருந்தன போலவும் தோற்றியது.

30. ஸத்தை அடைவதற்குச் சித்துக்குப் போ.

31. லீலையின் மூலமாக நித்யத்தை அறிய முயல்.

32. உலகம் மாயையென்று சொல்வது எளிது. ஆனால் அதன் பொருள் இன்னதென்று உனக்குத் தெரியுமா? அது, மிகுதியொன்றையும் வைக்காத கற்பூரத்தைக் கொளுத்துவது போலாம். சாம்பலை மிகுதியாக்கும் கட்டைகளைக் கொளுத்து வது போன்றதன்று. விசாரணை முடியும் நிலையில், உயர்ந்த ஸமாதி நிலை கிட்டும். அப்போது, நான், நீ, உலகம் என்ற உணர்ச்சி கொஞ்சமேனும் இராது.

33. ஈசுவரன், வெளியிலும் வெகு தூரத்துக்கப்பாலுமே இருப்பதாகத் தோன்றும் வரையில் அக்ஞானம் இருக்கும். ஆனால் உள்ளே ஈசுவரனிருப்பதாக உணர்ந்து கொண்டதும் உண்மையான ஞானம் உண்டாகிறது.

34. ஒரு மனிதன் பாதி ராத்திரியில் விழித்துக் கொண்டு புகைச் சுருட்டுப் பிடிக்க எண்ணினான். அவனுக்கு விளக்கு வேண்டியிருந்தபடியால் அண்டை வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினான். உள்ளிருந்த ஒருவர் கதவைத் திறந்து வந்து, "உனக்கு என்ன வேண்டும்?" எனக் கேட்டார். "எனக்குச் சுருட்டுப்பிடிக்கவேண்டும். ஒரு விளக்குக் கொடுக்கிறாயா?" என்று அம்மனிதன் கேட்டான். "அடே! என்னடா சங்கதி! உன் கையிலேயே கொளுத்தின தீபம் ஒன்றை வைத்துக் கொண்டு, இந்த நேரத்தில் இவ்வளவு சிரமப்பட்டு வந்து எங்களை எழுப்பினாயே!" என்று அவர் சொன்னார். மனிதன் அடைய விரும்பும் பொருள் அவனுள்ளேயே இருக்கிறது; ஆயினும் அதைத் தேடிக்கொண்டு அவன் அங்குமிங்கும் அலைகிறான்.

35. பந்தப்பட்ட மனம் ஈசுவரனை அறியாது என்பது உண் மையே. ஆனால் அவரைச் சுத்தமான மனத்தால் அறியலாம். சுத்தமான மனமென்பது கலப்பற்ற விவேகமாகும். அவ்விவேக

மோ பந்தமற்ற விசுத்த ஆத்மாவாம். அளவுக்குட்பட்ட விவேகத்தாலும், பெண்ணாசை பொன்னாசையால் கட்டுப்பட்ட இந்திரிய சுபாவத்தையுடைய மனத்தாலும் அக்கடவுளை அனுபவிக்கமுடியாது. விஷய சுகானுபவம் மனத்தை விட்டகல வேண்டும்; அம் மனம் நற்பழக்கத்தினால் பரிசுத்தமாக வேண்டும். உலக பாசங்களினின்றும் ஆசா சக்திகளினின்றும் திரும்பவும் அது விடுபட வேண்டும். அப்போதுதான் அது பந்தமற்ற பரமாத்மாவுடன் ஒன்றாகக் கூடும். பழைய ரிஷிகள் ஈசுவரனைக் கண்டறிந்தது இவ்விதமாக வல்லவா? பரிசுத்தமான மனமுடையவர்களாக இருந்ததனால் அவர்களுக்கு ஈசுவரதரிசனம் நேர்ந்தது. அந்த மனமும் உள்ளே யிருக்கும் எல்லையற்ற ஜீவனாகிய ஆத்மனும் ஒன்றென்று அவர்கள் கண்டுகொண்டனர்.

36. வினா:—வேறுபடுத்த முடியாத பரமாத்மாவும் தனித்தனி ஜீவாத்மாவும் வெவ்வேறானவை யென்று கொண்ட மதிமயக்கம் எப்படி யுண்டாயிற்று?

விடை:—கேவலம் புத்தியை மட்டும் உபயோகிக்கும் தத்வசாஸ்திரியான அத்வைதி, "எனக்குத் தெரியாது," என்று அக்கேள்விக்குப்பதில் சொல்லுவான். ஸ்வானுபூதியில் அறியப்படுவதே தீர்மானம். "எனக்குத் தெரியும்," அல்லது "எனக்குத் தெரியாது," என்று சொல்லுகிறவரையில் நீ உன்னை ஜீவனாகவே பாவித்துக் கொள்கிறாய். அப்போது, இவ்வித பல்வேறு தோற்றங்களை நீ மாயையென்று கொள்ளாமல் உண்மை யென்றே கொள்ளவேண்டும். வியக்தித்வம் (ஜீவபேதம் என நினைக்கும் சுபாவம்) முற்றிலும் அகலும்போது, ஸமாதியில் விசுத்தஸ்வரூபியின் ஞானம் உண்டாகும். அப்போதுதான் மாயை உண்மை, விஷயம் என்ற சர்ச்சைகள் நின்றொழியும்.

37. ஆத்மா ஒன்றினோடும் பந்தப்பட்டதன்று. இன்ப துன்பம், பாப புண்யம் முதலியன ஒருபோதும் ஒரு விதத்திலும் ஆத்மாவைச் சார்வதில்லை. ஆனால் அவைகள், சரீரமே தாங்களென்று கருதியிருப்போரைச் சார்கின்றன. புகையானது சுவரைக் கரியாக்குமே தவிர அதனால் சூழப்பட்டிருக்கும் வெளியிடத்தைக் கரியாக்காது.

38. நித்யமாயுள்ள ஞானத்தையும் ஆனந்தத்தையும் பற்றித் தியானம் செய்; அப்போது உனக்கும் ஆனந்த முண்டாகும். ஆனந்தமோ எப்பொழுதும் சாசுவதமானது; ஆனால் அக்ஞானத்தினால் அது மூடப்பட்டு மறைந்துள்ளது. விஷயசுகங்களில் உனது ஆசை குறையுமளவுக்கு ஈசுவரனிடம் உனக்குப் பிரேமை அதிகமாகும்.

39. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினிடம் அணுகும்போதெல்லாம், ஸ்ரீமதி ராதைக்கு அவருடைய திவ்ய மங்கள சரீரத்தினின்றும் மனோஹரமான வாஸனை வந்தது. ஈசுவரனிடம் ஒருவன் நெருங்குமளவுக்கு ஏற்ப, அவனுக்கு அவரிடமுள்ள ப்ரேமை அதிகரிக்கும். சமுத்திரத்தை அணுக அணுக, நதியானது மேன் மேலும் பொங்கிவடியும் சுபாவத்தை அடையும்.

40. ஞானியின் ஹ்ருதயத்தில் பிரவாகமாகும் அறிவாகிய கங்கை ஒரே ஒரு திக்கை நோக்கித்தான் ஓடுகின்றது. அவனுக்கு இந்த உலகம் முழுவதும் ஒரு கனவு. அவன் எப்போதும் தனது ஆத்ம ஸ்வரூபத்திலேயே லயித்திருப்பவனாகிறான். ஆனால் ஒரு பக்தனுடைய ஹ்ருதயத்திலுள்ள ப்ரேமையாகிய கங்கையோ ஒரே திசையில் எப்பொழுதும் ஓடிக்கொண்டிருப்பதில்லை. சில சமயம் அது பெருக்கெடுத்தோடும், சில சமயம் வடியும். பக்தன் சில வேளைகளில் சிரிப்பான், சில வேளைகளில் அழுவான், ஆடுவான், பாடுவான். அவன் தன்னுடைய பிரியரான பரமாத்மாவை அனுபவிக்கவும் அவரோடு ஐக்கியமாகவும் விரும்புகிறான். தண்ணீரில் மிதக்கும் பனிக் கட்டியைப்போல, அவன் பரமாத்மாவாகிய நீர்ப்பரப்பில் சில சமயம் மூழ்கியும் சில சமயம் மேற் கிளம்பியும், நீந்துவது போல விருக்கிறான்.

41. தனக்குள் தானே பூர்ணானந்தத்தை அனுபவிப்பது ஈசுவர தரிசனத்தின் அடையாளங்களில் ஒன்றாகும். சமுத்திரத்தின் மேற்பரப்பில் அலைகள் சுருண்டோடுகின்றன. ஆனால் அதன் கீழுள்ள அகாதமான நீர்த்தொகுதியோ அசைவற்றிருக்கின்றது.

42. வினா:—ஞானம், அக்ஞானம் என்ற இரண்டு விகாரமும் அகன்ற பிறகு என்ன மிகுந்திருக்கும்?

விடை :—“ நித்ய சுத்த போத ரூபம்” என்று வேதங்களில் கூறப்பட்டிருக்கும் விசுத்த ஸ்வரூபம்தான் மிகுந்திருக்கும்.

43. வினு :—நான் எப்போது முக்தனுவேன் ?

விடை :—“ நான் ” என்பது இறந்தபின்பு.

“ நான்,” “ எனது,” என்பன அக்ஞானம் ; “நீ” “ உனது” என்பன ஞானமாகும்.

44. மனமும் புத்தியும் விஷய சம்பந்தத்தில் உட்பட்டிருக்கும் வரையில், ஈசுவரன் அவைகளுக்குப் புறம்பேதா லிருப்பான். அவைகள் பரிசுத்தமடையும்போது அவன் தோன்றுவான். காமமும் பொன்னுசையும்தான் மனத்தை அசுத்தமாக்குகின்றன. ஹ்ருதயத்தில் அவித்யை குடிகொண்டிருக்கும் வரையில் மனமும் புத்தியும் பரிசுத்தமாகா. அவைகள், ஒன்றுக்' கொன்று வேறுபட்டனவாக விருந்தபோதிலும், பரிசுத்தமடையும்போது ஒன்றேயாகி, சைதன்யத்துடன் கலக்கின்றன. அப்போது, சைதன்யனுகிற ஈசுவரன் சைதன்யத்துக்குக் கட்புலனுகிருன்.

45. ஈசுவரானுபவம் இரண்டு வகைப்படும்: ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஐக்கியமானது ஒருவகை; ஈசுவரனுடைய திவ்ய ரூபத்தை நேரில் தரிசிப்பது மற்றொரு வகை. முன்னதற்கு ஞானம் என்றும் பின்னதற்கு பக்தி என்றும் பெயர்.

46. அனேக மாயிரம் வருஷங்களாய் இருட்டாக விருந்த அறை யொன்று ஒரு தீபம் கொண்டுவரப்பட்டவுடனே பிரகாசமடைவதுபோல, ஞானதீபத்தால் ஜீவன் பிரகாசமடைந்து, அதனுடைய கற்பகோடி காலத்திய அக்ஞானத்தைப் போக்கிக் கொள்கின்றது.



## 2. கடவுள்

47. எல்லா மனிதர்களிடத்திலும் ஈசுவரன் இருக்கிறான். ஆனால் ஈசுவரனிடத்தில் எல்லா மனிதர்களும் இல்லை. இது தான் அவர்கள் துன்பப்படுவதற்குக் காரணம்.

48. இராத்திரியில் ஆகாயத்தில் அனேக நக்ஷத்திரங்களைக் காண்கிறாய்; ஆனால் சூரியோதயமானதும் அவைகள் தென்படுவதில்லை. ஆதலால் பகற்போதில் ஆகாயத்தில் நக்ஷத்திரங்களே இல்லையென்று சொல்லலாமா? மனிதனே! உனது அக்ஞான காலத்தில் நீ ஈசுவரனைக்காண முடியாததனால், ஈசுவரனே இல்லையென்று சாதிக்காதே.

49. சந்திரன் ஒவ்வொரு குழந்தைக்கும் "மாமா" வாகிறான். அதுபோல மானிடவர்க்கம் முழுவதுக்கும் ஈச்வரன் ஞானகுருவாகிறான். (குழந்தைகள் சந்திரனை 'மாமா' என்றழைப்பது வழக்கமன்றோ?)

50. மணியை அடிக்கும்போது, அடுத்தடுத்து வரும் அதன் ஒவ்வொரு ஓசையும் தனித்தனி உருவத்தையுடையது போலத் தோன்றும். ஆனால் அடிப்பதை நிறுத்தினால், சிறிது நேரம் வரையில் கேட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக நின்றொழியும் தெளிவற்ற சப்தமோ உருவமில்லாததுபோலத் தோன்றுகிறது. மணியின் ஓசையைப்போல கடவுள் உருவமுள்ளவனாயும் உருவமில்லாதவனாயு மிருக்கிறான்.

51. பிரம்மத்தின் சுபாவம் என்ன? பிரம்மத்துக்குக் குணங்கள் இல்லை; சலனமில்லை. அது போக்கு வரவற்றது; மகாமேரு பர்வதத்தைப்போல நிலைத்திருப்பது.

52. சூரியன் பூமியைக் காட்டிலும் பன்மடங்கு பெரியதாயினும், வெகு தூரத்துக்கப்பாலிருப்பதால் ஒரு சிறிய தட்டைப் போலக் காணப்படுகின்றது. அதுபோலவே ஈசுவரன் அளவற்ற மகத்துவமுடையவனாயிருந்தும், நமக்கும் அவனுக்கு மிடையே

உள்ள தூரத்தினால் நாம் அவனுடைய உண்மையான மஹத்வத்தை அறியச் சக்தியற்றவர்களாக இருக்கிறோம்.

53. நாணலும் பாசியும் மூடிய குளத்தில் துள்ளியோடும் மீன்களை வெளியிலிருந்து காணமுடியாது; அதுபோல மனிதனுடைய ஹிருதயத்தில் விளையாடும் ஈசுவரனைக் காணவொட்டாதபடி மாயை மறைக்கின்றது.

54. கடவுள் உருவமற்றவரும் உருவமுள்ளவருமாவர். உருவம், அருவம் இவ்விரண்டையும் கடந்தவருமாகிறார். அவர் எப்படிப்பட்டவரென்பதை அவரே தான் முற்றிலும் அறிவார்.

55. கடவுள் நித்யப் பரம்பொருளாகிய பிரம்மமும் ஜகத்பிதாவாகிய ஈசுவரனும் ஆவர். ஆனால் அகண்ட சச்சிதானந்தப் பொருளாகிய பிரம்மமோ நம்மைத் தத்தளித்து மூழ்கச் செய்யும் கரைகாண முடியாத பிரம்மாண்ட ஸமுத்திரத்தைப்போல மனோவாக்குக் கெட்டாததாம். திருவிளையாடல்களைச் செய்யும் ஈசுவரனுடைய அருட்கடலில் நாம் புகுந்துவிட்டாலோ, தண்ணீரில் மூழ்குபவன் மெதுவாகக் கரையோரத்தில் ஒதுக்கப்படுவதைப்போல, வெகு சுலபமாகச் சாந்தியைப் பெறுகிறோம்.

56. ஜலமானது உறையும் போது பனிக்கட்டியாவது போல, ஸர்வேசுவரனின் நிதர்சன ரூபமானது, உருவமற்று எங்கும் நிறைந்துள்ள பிரம்மத்தின் தோற்றமாகிய உருவமாம். அதை உருவெடுத்துவந்த சச்சிதானந்த மென்னலாம். ஜலத்தில் உண்டாகும் பனிக்கட்டியானது ஜலத்தைத் தவிர வேறல்ல; அது ஜலத்திலேயே இருந்து பின்னர் உருகி ஜலமாகவே ஆகிறது. அதுபோல, ஈசுவரன் பிரம்மத்தைத் தவிர வேறல்ல. அவன் பிரம்மத்திலிருந்து தோன்றி அதிலேயே நிலைத்திருந்து கடைசியில் அதிலேயே கலந்து மறைகிறான்.

57. பிரம்மமாகிற சமுத்திரத்திலிருந்து வீசும் காற்று அது மோதும் ஒவ்வொரு ஹிருதயத்தையும் விகஸிக்கச் செய்கின்றது. ஸனக, ஸனாதனர் முதலிய பூர்வரிஷிகள் இந்தக் காற்றினால் பக்குவமாயினர். ஈசுவரப்ரேமையால் பைத்தியங் கொண்ட நாரதர் கொஞ்சதூரத்திலிருந்து அந்த ஸமுத்திரத்தைத் தரிசித்தனர் போலும்; அது காரணமாக அவர் தம்மையே மறந்து சதா சர்வ

காலமும் ஸ்ரீஹரியின் புகழைப்பாடிக் கொண்டு, பித்தரைப்போல் உலக மெங்கும் திரிகின்றனர். பிறவித் துறவியான சுகதேவர், அந்த மஹாஸமுத்திர ஜலத்தை மூன்றுதரம் கையினுல் தொட்ட மாத்திரத்தில் பரிபூர்ண ஆனந்தத்தினுல் குழந்தையைப்போல் அங்கு மிங்கும் ஓடியாடிக் கொண்டிருக்கிறுர். லோக குருவாகிய மஹாதேவர், அந்த ஸமுத்திர ஜலத்தில் மூன்று கை அள்ளிக் குடித்ததனுல், திவ்யானந்தப் பித்தேறி, பிணம்போல அசைவற்றுக் கிடக்கிறுர். இந்த மஹா ஸமுத்திரத்தின் ஆழத்தையோ அல்லது அபூர்வ சக்தியையோ எவரால் கண்டுபிடிக்க முடியும்?

58. தூரத்திலிருந்து பார்க்கும்போது ஸமுத்திர ஜலம் நல்ல நீல நிறமாகத் தோன்றுகிறது. ஆனுல் அதில் கொஞ்சம் கையிலெடுத்தால் அதுசுத்தமாயும் தெளிவாயும் காணப்படுகிறது. அதுபோல, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தூரதிருஷ்டிக்கு நீலமேகனுகக் காணப்படுகிறுராயினும், உண்மையில் அப்படிப் பட்டவரல்லர். அவர் மாசுமறுவற்ற பரம்பொருள்.

59. "கடிக்கும் பாம்பும் அக்கடியைக் குணப்படுத்தும் வைத்தியனும் நானே; தண்டனை விதிக்கும் நியாயாதிபதியும் அத்தண்டனையை நிறைவேற்றும் வேலைக்காரனும் நானே," என்று ஈசுவரன் சொல்கிறுன்.

60. பிரம்மம் எப்படிப்பட்டது? அது வார்த்தைகளால் விவரிக்கமுடியாதது. ஸமுத்திரத்தைப் பார்த்திராத ஒருவனுக்கு அது இப்படிப்பட்டதென்று சொல்லும்படி வேருெருவனை நியமித்தால், அவன், "அது ஒரு பெரிய நீர்ப்பரப்பு; எங்குப் பார்த்தாலும் ஜலந்தான்," என்று மட்டுமே சொல்லக்கூடும்.

61. வேதங்கள், தந்திரசாஸ்திரங்கள், புராணங்கள் ஆகிய உலகிலுள்ள எல்லாக்கிரந்தங்களும், வாயினின்றும் துப்பிய சோற்றைப்போல், எச்சிலாகிவிட்டன போன்றுள்ளன. ஏனெனில், அவைகள் அடிக்கடி மனிதர்களுடைய வாயினுல் உச்சரிக்கப்படுகின்றன. அகண்ட ஸ்வரூபமான பிரம்மமோ அப்படி ஒருபோதும் எச்சிலானதில்லை. ஏனென்றுல், இதுவரையில் வார்த்தையால் அதை விவரித்துச் சொல்ல ஒருவராலும் முடியவில்லை.

62. ஒரு நாடகத்தில் ஒரே மனிதன் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல்வேறு வேஷங்களைப் போட்டுக் கொள்வதைப்போல், உலகத்தில் ஈசுவரனும் வேறு வேறு உருவங்களைத் தரிக்கின்றனன். ஒரே வேஷத்தை வேறு வேறு மனிதர்கள் போட்டுக்கொள்ளக் கூடியதைப்போல, வேறு வேறு ஜீவப்பிராணிகளும் மனிதரூபத்தை அடைந்திருக்கின்றன. அவையெல்லாம் பார்வைக்கு மனிதர்களாகக் காணப்பட்டாலும், சில கிழித்தெறியும் ஓநாய்களாகவும், சில குரூரமான கரடிகளாகவும், சில தந்திரமுள்ள நரிகளாகவும், இன்னும் சில விஷப்பாம்புகளாகவும் இருக்கின்றன.

63. திவ்ய மாதாவை நம்மால் ஏன் காணமுடியவில்லை? அவள், திரைக்குப் பின்னால் இருந்து, எல்லாக் காரியங்களையும் நடத்தி, பிறர் கண்ணிற் படாமல் தான் மட்டும் எல்லாவற்றையும் பார்க்கும் உயர் குலத்துதித்த ஸ்திரீ போன்றவளாவாள். அவளுடைய பக்தர்கள் மட்டும், மாயையாகிய திரையைத் தாண்டி, சமீபத்தில் சென்று, அவளைத் தரிசிக்கின்றனர்.

64. டாணாக்காரன், தனது லாந்தரின் வெளிச்சம் எவர் மீது படும்படி திருப்புகிறானோ அவரைப் பார்க்கக்கூடும். ஆனால் அந்த லாந்தரைத் தன்மீது திருப்பாதிருக்கும் வரையில் அவனை ஒருவராலும் பார்க்க முடியாது. அதுபோல, ஈசுவரன் எல்லாரையும் பார்க்கிறான். ஆனால் கிருபை மூலமாக அவன் தன்னைத் தோற்றுவிக்கும் வரையில் ஒருவராலும் அவனைக் காண முடியாது.

65. ஒவ்வொரு வஸ்துவும் நாராயணன் என்றே பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறுவதுண்டு: மனிதன் நாராயணன்; ஜீவப்பிராணி நாராயணன்; ரிஷியும் நாராயணன்; போக்கிரியும் நாராயணனே. உலகில் உள்ளன வெல்லாம் நாராயணனே. நாராயணன் பலவிதமான திருவிளையாடல்களைச் செய்தருள்கின்றார். எல்லாப் பொருள்களும் அவருடைய பல்வேறு உருவங்களாகவும் அவரது பிரபாவத்தின் தோற்றங்களாகவுமே இருக்கின்றன.

66. சரீரத்தில் ஈசுவரன் எவ்வாறு வசிக்கிறான்? பீச்சாங்குழலின் உள்ளே யிருக்கும் கம்பியைப்போல அவன் சரீரத்தில்

வாசஞ் செய்கிறான். அதாவது சரீரத்தின் உள்ளேயிருக்கிறானென்றாலும் அச்சரீரத்தோடு சம்பந்தப்பட்டவனல்லன்.

67. ஒரு சமயம் பகவான் சொன்னதாவது :—மாலையில் கோர்க்கப்பட்டிருக்கும் புஷ்பங்கள் எனக்கு வேண்டாம். அதனுள்ளே போகும் நூற்சரடு மட்டும் தான் எனக்குத் தேவை. உலகத்திலுள்ள பொருள்களையெல்லாம் நான் விரும்பவில்லை. ஆனால் உலகம் முழுவதும் கோர்க்கப்பட்டிருக்கும் ஸூத்ராத்மன் (ஆத்மச்சரடு) தான் நான் அடைய விரும்பும் பொருள்.

68. அவனுடைய நாமம் சின்மயமானது ; அவனது வாசஸ்தானம் சின்மயமே. ஸர்வேசுவரனான அவனே சின்மய ஸ்வரூபியே.

69. குருவின் உபதேசங்களைக் கேட்டுத் தெளிந்த ஸ்ரீ ராமபிரான், உலகத்தைத் துறந்துவிடத் துணிந்தனர். அவரது பிதாவான தசரதர் அவருக்கு உபதேசம் செய்யும்படி வஸிஷ்ட மகரிஷியை அனுப்பினர். ராமனிடம் தீவிர வைராக்கியம் குடிகொண்டிருப்பதை வஸிஷ்டர் கண்டுகொண்டார். ஆதலால் அவர், "ராமா, முதலில் நான் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்லு ; அப்பால் உலகத்தைத் துறக்கலாம். உலகம் ஈசுவரனிடத்தினின்று அன்னியமானதா என்றுதான் உன்னைக் கேட்கிறேன். அன்னியமானதாயிருந்தால், நீ தாராளமாக உலகத்தைத் துறக்கலாம்," என்றார். இவ்வார்த்தையைப் பற்றிச் சிந்தித்ததின்மேல் ஜீவனாகவும் உலகமாகவும் ஈசுவரன்தான் தன்னைத் தோற்றுவித்திருப்பதாக ராமபிரானுக்கு விளங்கியது. ஒவ்வொரு வஸ்துவும் அவனில்தான் நிலைத்திருக்கின்றது. ஆதலால் ராமபிரான் மௌனமாக இருந்துவிட்டார்.

70. விவேக விசாரணை இருவகைப்படும்—'நேதி நேதி' (இதுவன்று இதுவன்று), 'இதி இதி' (இது இது) என. முதலாவது, பிரகிருதித் தோற்றங்களிலிருந்து பிரம்மத்தை யடையும் வழியைக்காட்டும். இரண்டாவதோ, பிரம்மம் எப்படிப் பிரகிருதி ஸ்வரூபமாகத் தோன்றுகிறது என்பதைக் காட்டும்.

71. திருடப்போகும்படி கள்வனைத் தூண்டுபவன் ஈசுவரன். அதே சமயத்தில் ஜாக்கிரதையாக இருக்கும்படி வீட்டுக்

காரனை எச்சரிப்பவனும் ஈசுவரனே. ஒவ்வொரு காரியத்தையும் ஈசுவரனே செய்கிறான்.

72. பக்தி மார்க்கத்தின் ஒரு நிலையில், பக்தன் ஈசுவரனுக்கு உருவமுள்ளதென்று தெரிந்து திருப்தியடைகிறான். இன்னொரு நிலையில் உருவம் இல்லையென்றும் தெளிந்து திருப்தியடைகிறான்.

73. நான் சில சமயம் உடைதரித்தும் சில சமயம் உடைதரியாமலும் இருப்பதுபோல, பிரம்மம் சிலவேளை குணத்தோடு கூடியதாயும் சிலவேளை குணமில்லாததாயும் இருக்கும். ஸகுணப் பிரம்மம் என்பது சக்தியோடு கூடிய பிரம்மமாகும். அது அப்போது ஈசுவரன் எனப்படும்.

74. உருவத்தோடு கூடிய ஈசுவரனை நாம் பார்க்கலாம். அது மட்டுமோ? நம்முடைய பிரிய நண்பன் ஒருவனுடன் உறவாடுவதைப்போல நாம் அவனைத் தொடலாம்; அவனோடு நேர் நின்றும் பேசலாம்.

75. பழத்தின் மேற்றோல், சதை, கொட்டை எல்லாம் மரத்தின் ஒரே மூல விதையினின்றும் உண்டாகின்றன. அதுபோல, ஒரே ஈசுவரனிடமிருந்து, ஜீவ ஜடம், சித்து அசித்து ஆகிய ஸர்வ சிருஷ்டிப் பொருள்களும் தோன்றுகின்றன.

76. சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யும்போது குருவானவர், பிரம்மம், மாயை என்பன இரண்டென்பதைச் சுட்டிக்காட்டத் தமது இரண்டு விரல்களை முதலில் நீட்டினார்; பின்னர் ஒரு விரலை மடக்கிக்கொண்டு, மாயை மறைந்ததும் பரப்பிரம்மத்தைத் தவிர வேறொன்றும் நிலைத்திருப்பதில்லை யென்பதைக் கற்பித்தார்.

77. ஒருமனிதன் கற்பகவிருக்ஷத்தின் அடியில் உட்கார்ந்துகொண்டு, ‘நான் ராஜாவாக ஆகவேண்டும்,’ என்று விரும்பினான். விரும்பினவுடனே ஒரு நொடியில் அவன் அரசனானான். பின்னர் அவன், ‘ஒரு அழகிய நங்கை எனக்கு மனைவியாக வேண்டும்,’ என்றான். அப்பொழுதே ஒரு நங்கை அவன் பக்கத்தில் வந்துவிட்டாள். அந்த விருக்ஷத்தின் மஹிமையை இன்னும் பரீக்ஷிக்க எண்ணி, ‘ஒரு புலி வந்து என்னை விழுங்கட்டும்,’ என்று நினைத்

தான். உடனே அவன் வாஸ்தவமாகவே புலி வாயில் அகப் பட்டுக் கொண்டான். ஈசுவரன்தான் இந்தக் கற்பக விருக்ஷம். அவர் முன்னிலையில் எவனொருவன் 'ஈசுவரனே! என்னிடம் ஒன்று மில்லையே' என்கிறானோ, அவனுக்கு ஒன்றுமே கிடைப்ப தில்லை. ஆனால் எவனொருவன் 'ஈசுவரா! எனக்கு எல்லா வற்றையும் கொடுத்திருக்கின்றாய்' என்கிறானோ அவனுக்கு எல்லாம் கிடைக்கின்றன.

78. ஈசுவர தியானத்தில் மிதமிஞ்சிப் போவதும், அதனால் துன்பமடைவதும் இல்லை. வைரத்தினுடைய சோதி, பிரகாசித் துக் குளிர்ச்சியைத் தருமே ஒழிய ஒருபோதும் சுட்டெரிக்காது.

79. ஒருவரிடம் பகவான் சொன்னதாவது:—நல்லது; உனது வாழ்நாளின் சிலாக்கியமான பெரும் பாகத்தை உலக வாழ்க்கையில் கழித்துவிட்டு, இப்போது நீ ஈசுவரனைத்தேட வந் திருக்கிறாய். ஈசுவரனை அறிந்த பிறகு நீ உலக வாழ்க்கையில் புகுந்திருந்தால் எவ்வளவு ஆனந்தமும் நிம்மதியும் உனக்கு உண் டாயிருக்கும்!

80. ஒரு ஸாது பூரியிலுள்ள ஜகந்நாதர் ஆலயத்துக்குச் சென்றார். ஈசுவரன் ரூபியோ அரூபியோ என்ற சந்தேகம் அவ ருக்கு உண்டாயிருந்தது. திவ்ய மங்கள விக்ரகத்தைத் தரிசித்த தும் அந்த ஸாது தமது சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள விரும்பினார். தமது கையிலிருந்த தடியானது விக்ரகத்தின் மீது படுகிறதா இல்லையா என்று அறியும் பொருட்டு அதை இடது பக்கத்திலிருந்து வலது பக்கத்துக்குக் கொண்டு போனார். அப் பொழுது அவரது திருஷ்டிக்கு ஒன்றும் புலப்படவில்லை. தடி ஒன்றன் மீதும் படவில்லை. ஆகவே அவர், ஈசுவரன் உருவ மற்றவர் என நிச்சயித்தனர். தடியை வலது பக்கத்தினின்று இடது பக்கம் கொண்டு போகும்போது அது விக்ரகத்தின் மீது பட்டது! ஆதலால் கடவுள் ரூபியும் அரூபியும் ஆவார் என்பதைத் தெரிந்து கொண்டார்.

81. ஈசுவரனைக் காணுமற்போனால் இதை யெல்லாம் ஒரு வன் அறியமாட்டான். தனது பக்தர்களுக்காக ஈசுவரன் வேறு வேறு விதமாயும் வேறு வேறு உருவமாயும் தோன்றுகிறான்.

ஒரு சாயக்காரன், வஸ்திரங்களுக்குச் சாய மேற்றுவதில் பிறருக்குத் தெரியாத ஒரு முறையைக் கைப்பற்றி வந்தான். "உனது வஸ்திரத்துக்கு எந்த நிறமான சாயம் ஏற்றவேண்டும்?" என அவன் தனது வாடிக்கைக்காரனைக் கேட்பான். 'சிவப்பு வர்ணம்' என்று அவன் சொல்வானானால் சாயக்காரன் தனது தொட்டியில் அவ்வஸ்திரத்தைத் தோய்த்து எடுத்து 'இதோ உன் வஸ்திரத்துக்குச் சிவப்புச் சாயம் போட்டாயிற்று' என்று கொடுப்பான். மஞ்சள் சாயம் வேண்டுமென்று இன்னொருவன் கேட்பான். அதே தொட்டியில் சாயக்காரன் அவனுடைய வஸ்திரத்தையும் தோய்ப்பான்; வெளியில் எடுத்த போது அது மஞ்சள் நிறமாக விருக்கும். நீலம், ஊதா, பச்சை முதலிய எந்த நிறம் வேண்டியிருந்தாலும் சரியே, ஒரே தொட்டியில்தான் சாயக்காரன் வேஷ்டியை நனைப்பான். வேண்டப்பட்ட சாயம் வஸ்திரத்தில் ஏற்றப்பட்டிருக்கும்.

இதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த வாடிக்கைக்காரன் ஒருவன் சாயக்காரனிடம் வந்து "நண்பா! எனக்கு ஒரு விதமான நிறத்திலும் பிரிய மில்லை. உனது விருப்பத்தைக் கேட்டு, அதன் படியே என் வஸ்திரத்துக்குச் சாயமேற்றிக் கொள்ள விரும்புகிறேன். நீ எந்தச் சாயத்தில் தோய்த்துக்கொண்டிருக்கிறாயோ அந்தச் சாயந்தான் எனக்கும் தேவை" என்றான். பக்தனுடைய தேவைக்குத்தக்கபடி ஈசுவரன் ரூபியாகவோ அரூபியாகவோ தோன்றுகிறான். அப்படித் தோன்றும் திவ்ய ரூபம் ஒவ்வொருவருடைய நிலைமைக்கும் கால தேச வர்த்தமானங்களுக்கும் ஏற்ப வாஸ்தவமாக இருக்கும். ஈசுவரனாகிய சாயக்காரன் மட்டுமே, தான் எந்த நிறமான சாயத்தில் தோய்ந்திருக்கிறானென்பதை அறிவான். வாஸ்தவத்தில் எந்த ரூபத்தில் தோன்றவேண்டும், எந்த ரூபத்தை எடுத்துக்கொள்ளக்கூடாது என்ற நிபந்தனைகளுக்கு ஈசுவரன் கட்டுப்பட்டவனே யல்லன்.

நீ பாரமார்த்திக நிலை என்னும்போது வியவகாரிக நிலையும், நித்யம் என்னும்போது லீலையும், வஸ்து என்னும்போது குணங்களும், உருவம் என்னும்போது அருவமும், ஒன்று என்னும் போது பலவும் உனக்கு உண்டென ஏற்படுகின்றது.

82. அநித்யமாகிய இந்த ஜகத்சிருஷ்டியெனும் லீலை எவ ருடையதோ அவருடையதுதான் நித்யமாகிய நிலையும். அந்த நித்ய நிலையில் எவர் இருக்கிறரோ அவருடையதுதான் இந்த லீலையும். லீலையின் வழியாகத்தான் நித்யத்தை யடைய முயலவேண் டும். மறுபடியும் நித்யத்திலிருந்துதான் லீலைக்குத் திரும்பி வர வேண்டும். இப்படித் திரும்பி வரும்போது லீலை மாயையன்று; அது இந்திரிய மூலமாய்ப் பார்க்கப் படுகிற நித்ய நிலையின் தோற்றமாகும்.

83. நீ ஜீவனாக இருக்கும் வரையில், அதாவது கர்ம ஞானேந்திரிய அனுபவனாய் இருக்கும்வரையில், நீ ஞானமுள்ள வனாயினும், உனது 'விமுக்தி' ஒரு சம்பந்தத்தைக் குறிக்கும்; உனது நித்யம் ஒரு லீலையைக் குறிக்கும்; உனது ஜடவஸ்து குணசம்பந்தமுள்ளதாக விருக்கும். உனது அத்ருச்யமான தெய்வம் பிரத்யக்ஷ தெய்வத்தைக் குறிக்கும். உனது ஏகத்வம் வெகு பொருளைக் குறிக்கும்.

84. நீ வியக்தி ஸ்வரூபனாக இருக்கும் வரையில், அதாவது ஜீவனாகவே இருக்கும் வரையில், வெண்ணை, மோர் என்ற இரண்டையும் அங்கீகரிக்கவேண்டும். அதாவது ஈசுவரன், ஜகத் என்ற இரண்டையும் அங்கீகரிக்கவேண்டும். உவமையை விளக்கிச் சொல்வோமானல் முதன் முதலில் இருந்த பாலானது ஸமாதி மூலமாய் அறியப்படும் பிரம்மமாகும்; வெண்ணை ஈசு வ்ரனாகும்; மோர், இருபத்து நான்கு தத்துவங்களாலான உலக மாகும்.

85. பிரம்மத்துக்கும் சக்திக்கும் உள்ள வேறுபாடு சொல் லளவிலேயே ஒழிய உண்மையில் இல்லை. நெருப்பும் அதன் உஷ்ணமும், பாலும் அதன் வெண்மையும், மணியும் அதன் ஒளியும் ஒன்றானவைபோல பிரம்மமும் சக்தியும் ஒன்றானவை யாம். ஒன்றில்லாமல் மற்றொன்றை நினைக்க முடியாது. அல்லது அவை யிரண்டையும் வேறு படுத்தவும் முடியாது.

86. இடங்கள்தோறும் சக்தியின் தோற்றம் வேறு படுகின்றது. ஏனெனில் வேறுபாடுதான் உலகத்தின் இயல்பு. ஒரே தன்மையா யிருப்பதல்ல. ஈசுவரன் எல்லா ஜீவப்பிராணி

களிடத்தும் அந்தர்யாமியாயிருக்கிறான். எறும்பிலும் கூட அவனிருக்கிறான். தோற்றத்தில் மட்டும்தான் வித்தியாசம் காணப்படுகிறது.

87. ஏகமாய் இருக்கும் என் தாய் பராசக்தி பல்வேறு தோற்றத்துடன் விளங்குகிறாள். அளவில்லாத சக்தியையுடைய அவள் ஜீவனாகவும் ஜகத்தாகவும் பேதப்பட்டு சரீரம், புத்தி, சன்மார்க்கம், ஆத்மார்த்தம் முதலிய வேறுபட்ட சக்திகளையுடையவளாய்க் காணப்படுகிறாள். சக்தி, வேதாந்தத்தில் கூறப்படும் பிரம்மமே தவிர வேறல்ல. கட்புலனாகாத பிரம்மத்தின் பிரத்யக்ஷ ஸ்வரூபமே அவள்.

88. எனது திவ்யமாதா ஒன்றாய்ப் பலவாய், அவற்றிற்கப்பாலாய் இருக்கின்றனள்.

89. இயங்காப் பரப்பிரம்மமும் இயங்கும் சக்தியும் உண்மையில் ஒன்றேயாம். "அகண்ட சச்சிதானந்த ஸ்வரூபி எவனோ, அவனே ஸர்வ சக்தி, ஸர்வ ஞானம், ஸர்வானந்தம் இவைகளையுடைய" ஜகன் மாதாவாகவுமாகிறான். சுயப்பிரகாசமுள்ள மணியும் அதன் ஒளியும் ஒன்றானவை; ஏனெனில் ஒளியின்றி மணியையும் மணியின்றி ஒளியையும் மனத்தினால் சிந்திக்க முடியாது.

90. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற காரியங்கள் எங்கெங்கே நிகழ்கின்றனவோ அங்கங்கெல்லாம் சக்தி இருக்கின்றது. அசைவற்றிருந்தாலும் கொந்தளித்துக் கொண்டிருந்தாலும் ஜலம் ஜலந்தான். தலைவர்*, சில வேளைகளில் ஒன்றும் செய்யாமலிருக்கிறார்; சில வேளைகளில் பூஜை செய்கிறார்; சில சமயம் ராஜப் பிரதிநிதியிடம் போகிறார்; இப்படிப்பட்ட காரியங்களிலெல்லாம் அவருடைய வேறு வேறு நிலைமைகள் தெரிகின்றன. ஆயினும் அவர் எப்போதும் தலைவராகவே இருக்கிறார். அதுபோல ஸச்சிதானந்த ஸ்வரூபியான ஒருவரே உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் நித்ய சக்தியுமாகிறார்.

* நேபாள ராஜ்யத்தின் பிரதிநிதியான விச்வநாத உபாத்யாயரை 'தலைவர்' என்று ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸர் அழைப்பர். அவர் கல்கத்தாவில் இருந்தார்.

91. நன்மை தீமைகளோடு பிரம்மம் சம்பந்தப்படுகிற தில்லை. அது விளக்கின் ஒளிப் பிழம்பைப்போன்றது. அவ் விளக்கின் வெளிச்சத்தில் நீ பாகவதத்தைப் படிக்கலாம்; அவ் வெளிச்சத்தின் உதவியைக் கொண்டே பிறரைக் கெடுக்க வேண்டி ஒரு பொய்ப் பத்திரத்தை எழுதினாலும் எழுதலாம்.

இன்னும், பிரம்மம் ஸர்ப்பத்தைப் போன்றது. பாம்பின் பல்லில் விஷமிருந்தால் அப்பாம்புக்கு என்ன கெடுதி? அவ் விஷத்தால் அது சாவதில்லை. அப்பாம்பினால் கடிக்கப்படும் மற்றைய ஜீவப்பிராணிகளுக்குத்தான் அவ்விஷம் கெடுதி செய்கிறது.

அதைப்போலவே, இவ்வுலகத்தில் நாம் காண்கிற துன்பம் பாவம் முதலிய தீமைகள் எல்லாம் நமக்குமட்டுமே தீமைகளாக வுள்ளன. பிரம்மமோ இவை யனைத்துக்கும் அப்பாலும் புறம்பே யும் உள்ளது.

ஜகத் சிருஷ்டியிலுள்ள நன்மை தீமைகள் பிரம்மத்துக்கு நன்மை தீமைகள் ஆகா. மனிதர் நன்மை தீமைகளால் கட்டுப்பட்டிருப் பதுபோல் பிரம்மம் கட்டுப்பட்டதென்று நினைத்தல் கூடாது.

92. பரம்பொருளை சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச்செய் யாத நிஷ்கிரியர் என்ற பாவனையில் பிரம்மம் அல்லது புருஷன் என்று சொல்கிறேன். ஆனால் அத்தொழில்களைச் செய்தருளுகின் றார் என்ற பாவனையில், சக்தி, மாயை, பிரகிருதி என்ற பெயர் களுள் ஒன்றால் அழைக்கிறேன்.

93. அகங்காரம் என்னிடம் இருக்கும் வரையில், ஜீவனும் ஜகத்தாயும் வேறு வேறு ஐசுவரியங்களுடன் தம்மைத் தோற்று விக்கும் ஈசுவரன் என் முன்னால் இருக்கின்றார்.

94. ஸமாதி நிலைமையில் நிர்க்குணப் பிரம்மத்தை அறிந் தவர்களுங்கூட சரீரப் பிரக்ஞையை அடையும்போது, ஈசுவர னோடு அன்யோன்யம் கொண்டாடுவதற்கு வேண்டிய சிறிதளவு அகங்காரத்தைப் பெற்றிருக்கின்றனர். ஸரளியில் "நீ" என்ற உச்ச ஸ்வரத்திலேயே இடைவிடாது குரலை யுயர்த்திப்பிடிப்பது வெகு சிரமமல்லவா? ஆதலால்தான் சகுணப் பிரம்மம் அவசிய மாக விருக்கிறது.

95. "என்னுடைய கொள்கைதான் சரியானது; யுக்திக்கு ஒத்தது; உறுதியானது; உருவக்கடவுள் உண்டென்று நம்புகிறவர்களுடைய கொள்கை பிழையானது" என்று அத்வைதி சொல்லாமலிருக்கட்டும். ஈசுவரனுடைய பிரத்யக்ஷத் தோற்றங்களெல்லாம் மானிட சரீரத்தைக் காட்டிலும் பன்மடங்கு உண்மையானவை. சரீரம், மனம், உலகம் ஆகிய இவைகளைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு உண்மையானவை.

96. கடவுளை அரூபியெனத் தியானிப்பது முற்றிலும் சரியானதே. ஆனால் அதுதான் உண்மை, மற்ற கொள்கைகளெல்லாம் பொய் என்று எண்ணிவிடாதே. அவனை 'ரூபி' யெனத் தியானிப்பதும் சரியானதே. ஆனால் அவனை நீ காணும் வரையில் உனது பிரத்யேகமான கொள்கையைக் கைவிடாதே. அப்பால் எல்லாம் தெளிவாகும்.

97. அகண்ட பிரம்மத்தை ஸமாதியில் மட்டும்தான் அறியலாகும்; அப்பால் ஒரே மௌனம்; ஜீவன், ஜகத் இவைகளைப் பற்றிய உண்மை அல்லது மாயை, ஞானம் அல்லது அக்ஞானம் என்ற விவாதங்களெல்லாம் அடங்கிவிடுகின்றன. ஸ்வரூபத்தைத் தவிர வேறொன்றும் அங்கிருப்பதில்லை. உண்மையில், உப்புப் பிரதிமை பிரம்மாண்ட ஸமுத்திரத்தில் மூழ்கியபிறகு தன்னுடைய கதையைச் சொல்வதில்லை. இதுதான் பிரம்மக் ஞானம்.

98. ஸமாதி நிலைமையிலிருந்து இந்திரிய நிலைமைக்கு வருபவனுக்கு மட்டும் தன் திவ்ய சக்ஷுஸை (ஞானக்கண்ணைக்) கைவிடாதிருப்பதற்கு வேண்டிய அளவுள்ள ஒரு ரேகைபோன்ற அற்ப அளவு அகங்காரம் இருக்கும். இதனால் அவன் ஒரே கடவுளின் பல்வேறு தோற்றங்களாகத் தன்னையும் ஜீவர்களையும் ஜகத்தையும் காண்கிறான். ஜடஸமாதி அல்லது நிர்விகல்ப ஸமாதியில் நிராகார நிர்க்குணப் பிரம்மத்தையும், சேதன ஸமாதி அல்லது ஸவிகல்ப ஸமாதியில் ஸாகார ஸகுணப் பிரம்மத்தையும் அறிந்துகொண்ட விக்ஞானிக்கே இந்தத் திவ்ய தரிசனம் கிடைக்கும். உனக்கென்று தனி வியக்தி இருக்கும் வரையில், அதாவது உன்னிடம் அகங்காரம் இருக்கும் வரையில்

ஈசுவரன் உருவமுள்ளவன் என்பதைத்தவிர வேறு விதத்தில் அவனை உன்னால் தியானிக்கவோ, நினைக்கவோ, காணவோ முடியாது. அது வரையில் அகண்ட நிர்க்குணப் பிரம்மத்தை நீ உள்ளும் புறமும் சகுணக் கடவுளாகத்தான் காணுவாய். சகுணக் கடவுளின் இந்தத் தோற்றங்கள் பொய்யானவையல்ல. சரீரம், மனம், உலகம் இவைகளைக்காட்டிலும் பன்மடங்கு மெய்யானவை.

99. ஈசுவரனின் பிரத்யக்ஷ ரூபம், சுத்தாத்மாக்களால் மட்டும் காணக்கூடிய ஆத்மிக உருவமாக விருக்கும். அதாவது, ஈசுவரனிடமிருந்து பெற்ற திவ்ய சரீரத்தை (பகவதி தனுவை)ச் சேர்ந்த ஞானக் கண்களால்தான் இவ்வுருவங்களைக் காணமுடியும். ஆதலால், பரிபூர்ண மடைந்த மனிதனுக்குத்தான் இந்தத் திவ்ய ரூபங்கள் கட்புலனாகும்.

100. அத்வைதத்தைப் பற்றிப் பேசத் தொடங்கும் போதே, துவைத முண்டென்பதை ஸ்தாபித்துக் கொள்கிறாய். பாரமார்த்திகத்தைப் பற்றிப் பேசும்போது வியவகாரிக நிலையும் இருப்பதாகவே கொள்கிறாய். ஏனென்றால் ஸமாதி மூலமாக அறியும் வரையில் உனது அத்வைதம் பேச்சளவே; துவைதத் தோடு சம்பந்தப்பட்டதே. கேவலம் சம்பந்த குணத்தின் கூட்டாளிதான். அதை எடுத்துரைக்க முடியாது. ஏனெனில், அப்படி உரைக்கும்போது உன்னுடைய அகங்காரமும் அதனோடு சேர்கிறது.

101. ஞானம், அக்ஞானம்; நன்மை, தீமை; தர்மம், அதர்மம், இப்படிப்பட்ட த்வந்தங்களுக்கு அப்பாலும் மேற்பட்டும் பிரம்மம் இருக்கிறது.

102. முதலில் ஈசுவரனை அறிந்து, பிறகு அவனுடைய சிருஷ்டியைத் தெரிந்து கொள்ளவேண்டும். "ராம" என்ற மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருக்கும்படி வால்மீகி உபதேசம் பெற்றார். ஆனால் அவ்வார்த்தையை முன் பின்னாக்கி "மரா, மரா" என்று சொல்லிக்கொண்டிருக்கும்படி போதிக்கப்பட்டது. 'ம' என்றால் ஈசுவரன், 'ரா' என்றால் 'ஜகத்.' அதாவது முதலில் ஈசுவரன், பின்னர் உலகம் என்பதாம்.

103. ரூபியும் அரூபியுமான கடவுள் ஒன்றேதான். ஒன்றை நம்பினால் இன்னொன்றையும் நம்பினதாகும். எரிக்கக் கூடிய சக்தியைத் தவிர்த்து நெருப்பையும் நெருப்பைத் தவிர்த்து எரிக்கிற சக்தியையும் சிந்திக்க வொண்ணாது. இன்னும் சூரிய கிரணங்களைத் தவிர்த்துச் சூரியனையும், சூரியனைத் தவிர்த்துச் சூரிய கிரணங்களையும் நினைக்க முடியாது; பாலைத் தவிர்த்து அதன் வெண்மையையும், வெண்மையைத் தவிர்த்துப் பாலையும் கருதவொண்ணாது. அதுபோல குணஸ்வரூபனை ஈசுவரனைத் தவிர்த்து நிர்க்குணஸ்வரூபனையும், நிர்க்குணஸ்வ ரூபனைத்தவிர்த்து குணஸ்வரூபனையும் சிந்திக்க முடியாது.

104. இது அனுலோம விலோம விஷயமாகும். ஸர்வேசு வரனிடம் நீ திரும்பிப் போகிறாய். அப்போது உன்னுடைய வியக்தித்வம் ஈசுவரனோடு கலக்கின்றது. இதற்கு 'ஸமாதி' என்று பெயர். பின் இந்த உயர்ந்த நிலையிலிருந்து நீ முதன் முதலில் எங்கிருந்து புறப்பட்டாயோ அதே இடத்துக்குத் திரும்பி வருகிறாய். அப்போது ஜகத்தும் உனது அகங்காரமும் ஒரே ஈசுவரனிடமிருந்து பரிணமித்தன வென்றும் ஈசுவரன், மனிதன், பிரகிருதி இவைகள் எல்லாம் கேவலம் அபின்ன மென்றும் தெரிந்துகொள்வாய். இவைகளில் ஏதேனுமொன்றை நீ அறிந்தால் மற்றவைகளைத் தெரிந்து கொள்வாய்.

105. மேலும் கீழும் நாலா பக்கங்களிலும் நீர் நிரம்பிய பிரம்மாண்டமான நீர்நிலை ஒன்றிருப்பதாக நினைத்துக்கொள், அதில் சில பாகங்களில் குளிர் காலத்தில் ஜலம் உறைகிறது; கோடை காலத்தில் உறைந்த ஜலம் உருகிப் பழையபடியே நீராகின்றது.

பிரம்மம் இந்த நீர் நிலையாகும். இதில் பனியாக உறையும் பகுதிகள் யாதெனில் ஈசுவரனுடைய ஸகுண ஸ்வரூபங்களாம். பக்தனுடைய அன்பு, பக்தி, சரணாகதி இவையெல்லாம் உறை விக்கும் சீதளமாகும். உஷ்ணம் யாதெனில்; நிர்விகல்ப ஸமா திக்குக் கொண்டுசேர்க்கும் ஞான விசாரமாகும். அந்த நிலையை யடைந்தால் "நான்" என்று சொல்லும் அகங்காரம் முற்றிலும் அகன்று போம்.

106. பக்தனுக்கு ஈசுவரன் பல்வேறு உருவங்களில் தோன்றுகின்றார். ஆனால் ஸமாதியில் பிரம்ம ஞானத்தை அடைந்தவனுக்கு அவர் அகண்ட நிராகார நிர்க்குணப் பிரம்ம மாக இருக்கின்றார். இதில்தான் ஞானமும் பக்தியும் ஸமரஸப் படுகின்றன.

107. நெருப்புக்கு அதற்கென்றே ஒரு ஸ்திரமான உருவ மில்லை. ஆனால் தணல்விட்டு எரியும்போது அதற்கு வெவ்வேறு ரூபங்கள் உண்டாகின்றன வாதலால், ரூபமில்லாத நெருப்புக்கு ரூபங்கள் தோன்றுகின்றன. அதைப் போலவே, அரூபியான கடவுள் சிற்சில வேளைகளில் ரூபங்களை எடுக்கிறார்.



# 3. மாயை

108. மாயையும் பிரம்மமும் முறையே ஓடும் பாம்பையும் சலனமற்றுக் கிடக்கும் பாம்பையும் ஒக்கும். கிரியா சக்தி மாயையாகும்; நிஷ்கிரியா சக்தி பிரம்மம்.

109. ஸமுத்திர ஜலம் சிலவேளை அமைதியாயும், சிலவேளை அலைகள் பொங்கிக் கொந்தளித்தும் இருப்பதுபோல பிரம்மமும் மாயையும் இருக்கின்றன. சலிக்கும் சமுத்திரம் மாயை; சலன மற்ற சமுத்திரம் பிரம்மம்.

110. நெருப்புக்கும் அதன் எரிக்கும் சக்திக்கும் உள்ள சம்பந்தம் போன்று பிரம்மத்துக்கும் சக்திக்கு முள்ளது.

111. மப்பு மந்தாரமே இல்லாத ஆகாசத்தில் திடீரென்று ஒரு மேகம் தோன்றி விண் முழுவதையும் மறைக்கலாம். பிறகு அம்மேகம் திடீரெனக் காற்றினால் தூரத்தப்பட்டு அப்பால் போகவும் கூடும். அதைப்போன்றதுதான் மாயையும். அது திடீரென்று ஞானத்தை மறைத்து திருஷ்டிக்குப் புலப்படும் ஜகத்தையுண்டாக்கிப் பின் ஈசுவரனுடைய அருள் காற்றினால் அகன்று ஒழிகின்றது.

112. மாயைதான் பிரம்மத்தைத் தோற்றுவிக்கின்றது. மாயை யில்லாவிட்டால் பிரம்மத்தை யாரால் அறிந்திருக்க முடியும்? ஈசுவரனுடைய சக்தியை அறிந்துகொள்ளாமல் போனால் அவனை அறியவே முடியாது.

113. கண்டுபிடிக்கப்பட்டதும் திருடன் ஓடிப்போய்விடுகிறான். அதுபோல மாயையின் சுபாவம் இன்னதென்று நீ ஆய்ந்து கண்டுபிடித்துவிட்டால், அது உன்னிடமிருந்து ஓடிப்போய் விடும்.

114. தொங்கும் விளக்கின் ஸ்படிகத்தை இரவும் பகலும் ஒரு ஸாது நோக்கி மந்தஹாஸ மடைவது வழக்கம். காரணமென்னவெனில், அந்த ஸ்படிகமூலமாய் சிவப்பு, மஞ்சள், நீலம் முதலிய

பல வர்ணங்களை அவர் காண்பார். இவ்வித வர்ணங்கள் உண்மை யானவை யல்ல என்பதை அவர் தெரிந்து கொண்டதும் உலக மும் அம்மாதிரியே உண்மையல்லவென்று அறிந்தார்.

115. சிங்கம்போலப் பொய்க்கோலம் பூண்டுகொண்ட ஹரி, பார்க்க வெகு பயங்கரமாகத்தானிருக்கிறுன். அவன் தன்னு டைய தங்கை விளையாடுமிடத்துக்குச் சென்று பயங்கரமாகக் கூச் சலிடுகிறுன். அதைக் கேட்டு நடுநடுங்கிய அவள், இந்தக் குரூரப் பிராணியிடமிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டுமே யென்று துக்கத்தோடு உரக்கக் கூச்சலிட்டு அழுகிறுள். ஆனல் ஹரி, தன் வேஷத்தைக் கலைத்துவிட்டதும், பயந்துபோயிருந்த சிறுமி தனது பிரிய சகோதரனைக் கண்டு "ஓ, அண்ணுதானு இது!" என்று சொல்லிக்கொண்டு அவனிடம் ஓடுகிறுள். மாயையைக் கண்டு மதிமயங்கிப்பயந்து, கண்ட காரியங்களையெல்லாம்செய்யும் லௌகிகர்களுடைய (உலகப் பற்றுள்ளவர்களுடைய) விஷயமும் இதைப்போன்றதுதான். மாயையாகிற பொய்க்கோலத்தில் பிரம் மம் மறைந்துகொள்கிறது. அதை அகற்றிவிட்டால், பிரம்மம் இரக்கமற்ற குரூரமாகத் தோன்றுமல் மானிடர்களுடைய அன் புருவான அந்தர்யாமி யாகவே தோன்றும்.

116. மாசு மறுவற்று விளங்கிய ஆகாசத்தில் திடீரென்று மேகங்கள் தோன்றுவதையும் அடுத்த நிமிஷத்தில் அவை காற் றினுல் அப்பால் போக்கப்படுவதையும் ஒருகால் கண்ட பரம ஹம்ஸர் ஒருவர், மிகுந்த குதூகலத்துடன் குதிக்கத் தொடங்கி, "இதைப்போன்றதுதான் மாயையும்; முதலில் அது இருந்த தில்லை. பிரம்மமாகிற நிர்மல ஆகாயத்தில் திடீரென்று தோன்றி, ஜகத் முழுவதையும் உண்டாக்கியது. பிறகு அதே பிரம்மத்தின் காற்றினுல் அகற்றப்படுகிறது" என்றுர்.

117. ஈசுவரன் எங்கும் நிறைந்திருப்பவரானுல் நம்மால் என் அவரைப் பார்க்க முடியவில்லை? பாசியும் நாணலும் மிகுந் திருக்கும் குளத்தின் கரையில் நின்றுகொண்டால் அக்குளத்தில் ஜலமே இல்லை யென்றுதான் நீ சொல்வாய். ஜலத்தைக் காண வேண்டுமானுல், குளத்தின் மேற்பரப்பிலிருந்து பாசியை அகற்ற வேண்டும். மாயையாகிற திரையால் மூடப்பட்ட கண்களையுடைய

நீ, ஈசுவரனைக் காணமுடியவில்லை யென்று குறை கூறுகிறாய். அவரைக்காண வேண்டுமானால் உனது கண்களினின்றும் மாயை யாகிய திரையை அகற்று.

118. மேகம் சூரியனை மறைப்பதுபோல, மாயையும் ஈசுவரனை மறைக்கின்றது. மேகம் அப்பால் அகன்று போனதும் சூரியன் காணப்படுகிறது. அதுபோல மாயை அகன்றதும் ஈசுவரன் கண்ணுக்குத் தென்படுவார்.

119. ஜலம் கலந்த பாலிலிருந்து ஜலம் வேறு பால் வேறாகப் பிரிக்கக்கூடிய அன்னப்பறவை, பாலை மட்டும் குடித்து நீரைத் தள்ளிவிடுகிறது. ஆனால் மற்றப் பறவைகளுக்கு இப்படிச் செய்யச் சக்தியில்லை. ஈசுவரன் மாயையோடு இரண்டறக் கலந்திருக்கின்றார். சாதாரண மனுஷ்யர்களுக்கு மாயையினின்றும் தனித்து அவரைக் காணச் சக்தியில்லை. பரமஹம்ஸர்கள் மட்டுமே மாயையை அகற்றிவிட்டு சுத்தாத்மாவான ஈசுவரனைப் பற்றிக்கொள்ளச் சக்தியுள்ளவர்களாக இருப்பார்கள்.

120. ராமன், ஸீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் நாட்டை விட்டுக் காட்டுக்குச் சென்றனர். ராமன் முதலிலும் ஸீதை நடுவிலும் லக்ஷ்மணன் கடைசியிலுமாகப் போயினர். லக்ஷ்மணனுக்கு ராமனுடைய திவ்யரூபத்தின் முழுத்தோற்றத்தையும் காண வேண்டுமென்ற அபிலாஷை மிகுந்திருந்தது. ஆனால் ஸீதை நடுவிலிருந்தபடியால் அது முடியாத காரியமாயிற்று. அப்பால் அவர் ஸீதாப்பிராட்டியைச் சற்று நகர்ந்து கொள்ளும்படி பிரார்த்தித்தார். அவள் அப்படிச் செய்ததும் லக்ஷ்மணனுக்கு ஸ்ரீராகவனுடைய திவ்ய தரிசனம் நன்றாகக் கிடைத்தது. இவ்வுலகத்தில், பிரம்மம், மாயை, ஜீவன் என்ற இவைகளுக்கு ஏற்பட்டுள்ள வரிசைக்கிரமமும் இப்படித்தான். மாயையின் பொய்த்தோற்றம் அப்பால் நகராதவரையில் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவனால், ஈசுவரனைக் காணமுடியாது.

121. பாம்புக்குப் பல்லில் விஷமிருந்த போதிலும், அவ்விஷத்தால் அது தீமையை அடைவதில்லை. ஆனால் அது பிறரைக் கடித்தால் அவ்விஷம் கடியுண்டவனுக்கு மரணத்தைத் தரும். இதைப்போல ஈசுவரனிடத்திலும் மாயையுள்ளது. ஆனால் அது

அவரைப் பந்தப்படுத்தாமல், ஜகத் முழுவதையும் தனக்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கிறது.

122. பூனையானது தனது குட்டிகளைப் பற்களால் பிடிக்கும் போது அக்குட்டிகளுக்குத் தீங்குண்டாவதில்லை. ஆனால் அது ஒரு எலியை அப்படிப் பிடிக்குமானால் அவ்வெலி உடனே இறக்கின்றது. இதைப்போலவே மாயையானது மற்றவர்களை வருத்துவதாயினும் பக்தனை ஒருபோதும் துன்புறுத்தாது.

123. சிவம், சக்தி ஆகிய இரண்டும் சிருஷ்டிக்கு அத்தியாவசியமானவை. உலர்ந்துபோன களிமண்ணை வைத்துக்கொண்டு எந்தக் குயவனாலும் சட்டி பண்ணமுடியாது. தண்ணீர் அதற்கு அவசியம் வேண்டும். அதுபோல சக்தியினுடைய உதவியில்லாமல் சிவனால் மட்டும் சிருஷ்டித் தொழில் நடைபெறாது.

124. பிரம்மஞானப் பிராப்தி, பரமானந்தபோகம் முதலியவை யெல்லாம் மாயையால்தான் நமக்குக் கிடைக்கின்றன. இல்லாவிட்டால் இவையெல்லாம் நமக்கு லபிக்குமெனக் கனவிலும் கண்டவர் எவர்? மாயையிலிருந்துதான் த்வைதமும் மற்ற வியவகாரமும் உண்டாகின்றன. மாயைக்கு அப்பால் போகம், போகி என்றவை கிடையா.

125. மாயையைக் காணவேண்டுமென்ற அபிப்பிராயங் கொண்ட நான், ஒருநாள் ஒரு காட்சியைக் கண்டேன். ஒரு சிறிய நீர்த்துளி கொஞ்சம் கொஞ்சமாகப் பரிணமித்து ஒரு சிறு பெண்ணாயிற்று. அப்பெண் ஒரு ஸ்திரீயாகி ஒரு குழந்தையைப் பெற்றாள். பெற்றதும் அவள் அக்குழந்தையை எடுத்து வாயில் போட்டு விழுங்கிவிட்டாள். இவ்விதம் அவளுக்குப் பிறந்த எல்லாக் குழந்தைகளையும் அவள் விழுங்கினாள். அப்போது அவள் மாயை யென்பதை நானறிந்தேன்.

126. மாயை என்பது என்ன? ஆத்மீய அபிவிருத்திக்கு இடையூறாகவிருக்கும் காமந்தான் மாயை.



## 4. அவதாரங்கள்

127. பிரம்மத்துக்கும் (ஸ்ரீராமர் கிருஷ்ணன் போன்ற) அவதாரங்களுக்கும் உள்ள சம்பந்தம், சமுத்திரத்துக்கும் அதன் அலைகளுக்கும் உள்ள சம்பந்தத்தைப் போன்றது.

128. சச்சிதானந்தமாகிற விருக்ஷத்தில், ராமர்கள், கிருஷ்ணர்கள், புத்தர்கள், கிறிஸ்துக்கள் முதலியோராகிய பூங்கொத்துக்கள் கணக்கற்றுத் தொங்குகின்றன. அவர்களுள் அவ்வப்போது இரண்டொருவர் பூமியில் அவதரித்து பிரம்மாண்டமான மாறுதல்களையும் வேறுபாடுகளையும் உண்டாக்குகின்றனர்.

129. ஸ்ரீராமபிரான் இவ்வுலகில் அவதரித்தபோது, ஏழு ரிஷிகள் மாத்திரமே, அவர் ஈசுவராவதாரமென்பதைத் தெரிந்து கொண்டிருந்தனர். எனவே இவ்வுலகில் எப்போது ஈசுவரன் வந்தபோதிலும் சரியே, சிலர் மட்டுமே அவனுடைய தெய்வீக சுபாவத்தைத் தெரிந்துகொள்வர்.

130. தீபம் தன்னைச் சுற்றியுள்ள பொருள்களை விளக்கிக் காட்டுமாயினும், அதனடியில் எப்போதும் இருட்டாகத்தான் இருக்கும். அதுபோல, அவதார புருஷருக்கு வெகு சமீபத்தில் இருப்பவர்கள் அவரைத் தெரிந்துகொள்வதில்லை. தூரத்திலுள்ளவர்கள் அவ்வவதார புருஷருடைய ஆத்ம ஜோதியாலும் அஸாதாரணமான சக்தியாலும் மனங் கனிந்து இன்புறுகின்றனர்.

131. யானைக்கு வெளியே தோன்றும் தந்தமும் உள்ளே இருக்கும் பற்களுமாக இரண்டுவகைப் பற்களிருக்கின்றன. அவ்வாறு, ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா போன்ற அவதார புருஷர்கள் சாதாரணமான வெளித்தோற்றம் உள்ளவர்களாய், எல்லாருடைய பார்வைக்கும் மனுஷ்யரீதியை உடையவர்களாகப் புலப்படுகின்றனர். ஆயினும் அவர்கள் கர்ம வசத்துக்கு வெகுதூரம் அப்பாற்பட்டவர்களாகிப் பரம சாந்தியில் நிலைத்திருக்கின்றனர்.

132. உலகில் தோன்றிய அவதாரங்களெல்லாம் ஒரே ஈசுவரனே. ஈசுவரன் பிரம்மமாகிய சமுத்திரத்தில் அமிழ்ந்து ஓரிடத்தில் கிளம்பும்போது கிருஷ்ணன் எனவும், இன்னொரு தரம் மூழ்கி வேறிடத்தில் கிளம்பும்போது கிறிஸ்து எனவும் அழைக்கப்படுகிறான்.

133. சாதாரண காலங்களில் கிணறுகளில் அதிக ஆழத்திலிருந்து வெகு பிரயாசையுடன் ஜலம் கிடைக்கின்றது. ஆனால் மழைக்காலத்தில் நாடெங்கும் தண்ணீர் நிறைந்திருக்கும்போது எளிதில் கிடைக்கும். அதுபோல சாதாரண காலங்களில், ஈசுவரனைக் காண்பதற்குப் பிரார்த்தனை தவம் முதலியவைகளைச் செய்து வெகுவாகச் சிரமப்படவேண்டியிருக்கிறது. ஆனால் பூமியில் ஈசுவரன் அவதரிக்கும்போது எங்கும் அவனைக் காணலாம்.

134. இந்தச் சரீரத்தை எடுப்பதற்கு நான் செய்திருக்கும் பரித்யாகத்தையும் அதனால் நான் தரிக்கும் பூமிபாரத்தையும் எவர் அறிவர்? கேவலம் மனுஷ்யனாக உடம்பெடுப்பதற்கு ஈசுவரன் செய்யும் பரித்யாகத்தின் அளவை ஒருவரும் அறியமாட்டார்கள்.

135. ஒரு இடத்தைச்சுற்றி உயர்ந்த சுவர் எழுப்பப்பட்டிருந்தது. வெளியிலிருந்த ஜனங்களுக்கு அது எப்படிப்பட்ட இடமென்று தெரிந்துகொள்ள வழியில்லை. ஒரு சமயம் ஏணியை வைத்துச் சுவரேறி உள்ளே என்ன இருக்கிறதென்பதைப்பார்க்க வேண்டுமென நால்வர் நிச்சயித்தனர். முதல் மனிதன் சுவரின் மேல் ஏறி நின்றதும், “ஹா ஹா ஹா” என்று சிரித்து விட்டு உள்ளே குதித்தான். இரண்டாமவனும், மூன்றாமவனும் அப்படியே உரக்கச் சிரித்துவிட்டு உள்ளே குதித்தனர். கடைசியாக நான்காமவன் சுவரின்மேல் ஏறியதும், ருசியுள்ள பழங்கள் நிறைந்த மனோஹரமான சோலைகள் அடங்கிய அழகிய பெரிய தோட்டம் ஒன்று தன்முன்னிருப்பதைக் கண்டான். உள்ளே குதித்து இன்பம் அனுபவிக்க வேண்டுமென்ற விருப்பம் அவனுக்கு வெகுவாக இருந்தும் அதை அவன் அடக்கிக்கொண்டு, ஏணியின் வழியாகக் கீழே இறங்கி அந்த மகிமை வாய்ந்த தோட்டத்தைப்பற்றிய சந்தோஷ சமாசாரத்தை வெளியிலுள்ளவர் எல்லாருக்கும் தெரியப்படுத்தினான். பிரம்மம் என்பது அந்தச் சுவ

ரெழுப்பிய தோட்டத்துக்குச் சமானம். பிரம்மத்தைக் காண்பவன் தன்னை மறந்து அதனுடன் கலந்துகொள்வதற்காகத் தலைகால் தெரியாமல் மூழ்கிவிடுகிருன். இத்தகையோர் பரிசுத்தர்களும் உலக பந்தங்களினின்று விடுபட்ட மஹான்களுமாவர். ஆனல், லோக ஸம்ரக்ஷகர்கள் யாவரெனில், ஈசுவரனைத்தரிசித்து, அப்படிப் பட்ட தெய்வீக தரிசன இன்பத்தைத் தம்மோடு மற்றவர்களும் பெற்று அனுபவிக்கவேண்டுமென்னும் கருத்துடையவர்களாய், தாங்கள் மோக்ஷம் அடைய நினையாது தவிக்கும் ஜன ஸமூகத்துக்கு உபதேசம் செய்து, அவர்கள் அடையவேண்டிய பதவியின் மார்க்கத்தைக் காட்டுவதற்காகப் பிறவித்துன்பங்களை வேண்டுமென்றே மறுபடியும் மறுபடியும் அனுபவிப்பவர்களாவர்.

136. அவதார புருஷர் ஈசுவரனல் அனுப்பப்படும் மனுஷ்ய தூதர் ஆவர். அவர் ஒரு பெரிய சக்ரவர்த்தியின் பிரதிநிதி போன்றவர். நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ள பிரதேசத்தில் கலகம் நிகழும்போது அதை அடக்குவதற்கு அரசன் தனது பிரதிநிதியை அனுப்புவதுபோல, உலகத்தில் எங்கேயாவது தர்மம் மலினமடையும்போது அங்கு தர்மத்தைப் பாதுகாத்து அபிவிருத்திக்குக் கொண்டுவருவதற்காக ஈசுவரன் தனது அவதார புருஷனை அனுப்புகிருன்.

137. அனேக காலமாக உபயோகத்திலிராததினல் தூர்ந்துபோன கிணற்றின் மேல்பாகத்திலிருந்து மண்ணையும் குப்பையையும் எடுத்துவிட்டு அக்கிணற்றை வெளிப்படுத்தும் சிற்பியைப் போன்றவர் ஸித்தபுருஷர். அவதார புருஷரோவெனில், முன்னல் ஜலமே இராத இடத்தில் புதிதாகக் கிணற்றை வெட்டும் இன்ஜினீர் போல்வர்; முன்னவர், உஜ்ஜீவன ஜலத்தைச் சமீபத்தில் உடையவர்களை மட்டுமே பந்தங்களினின்றும் விடுவிப்பார்கள். அவதார புருஷர்கள், பாலைவனம்போல மிகவும் வறண்டு, பக்தி லவலேசமுமில்லாத மனத்தை யுடையவனையும் விடுவிப்பார்கள்.

138. கங்கையில் ஓடும் பெரிதும் வலிதுமான நீராவிக் கப்பலொன்று, அதன் பின்னே இணைக்கப்பட்டுள்ள சிறுபடகு

களையும் தோணிகளையும் இழுத்துக்கொண்டு ஜலத்தின்மீது வெகு வேகமாகப் போவதுபோல, லோக ஸம்ரக்ஷகர் அவதரிக்கும் போது, ஆயிரக்கணக்கான ஜனங்களை, மாயையாகிற ஸமுத்திரத்தைத் தாண்டுவித்து முக்தியாம் கரையைச் சேர்ப்பிக்கிறார்.

139. கடல் பொங்கும்போது, ஆறுகளும் ஓடைகளும் நிறைந்து அருகிலுள்ள பூமியெல்லாம் ஜலமயமாகின்றது. ஆனால் மழைஜலமோ வழக்கமான வாய்க்கால்கள் வழியே ஓடிப்போய் விடுகின்றது. லோகஸம்ரக்ஷகர் அவதரிக்கும்போது அவருடைய அருளால் அனைவரும் கிருதார்த்தராகின்றனர். ஸித்தபுருஷர் களோவெனில், தங்களைமட்டுமே சிரமத்தாலும் தவத்தாலும் காப்பாற்றிக் கொள்ளக்கூடும்.

140. பெரிய மரமொன்று ஆற்றில் மிதந்துபோகும்போது, அதன்மீது அனேகமாயிரம் பக்ஷிகள் இருந்தபோதிலும், அது தண்ணீரில் அமிழ்ந்துபோவதில்லை. ஆனால், மிதந்து செல்லும் நாணல் ஒன்று ஒரே ஒரு காக்கையின் கனத்தாலும் அமிழ்ந்து போம். அதுபோல, லோக ஸம்ரக்ஷகர் அவதரிக்கும்போது அவரைச் சரணமடைந்து கடைத்தேறுபவர் கணக்கற்றவர். ஸித்தரோவெனில் தம்மைமட்டும் வெகு சிரமப்பட்டு உய்வித்துக் கொள்வர்.

141. ஒரு ரயில்வே இஞ்சின் தான் நகர்ந்து போய்ச் சேர வேண்டிய இடத்தையடைகின்றதல்லாமல், தன்பின்னால் நீளமாய் இணைக்கப்பட்டிருக்கும் சுமையேற்றிய அனேக வண்டிகளையும் இழுத்துச் செல்கின்றது. அவதார புருஷர்களும் அப்படியே தான்; பாபமூட்டைகளைச் சுமக்கும் மனிதர்கள் ஆயிரக் கணக்கானவர்களை ஸர்வேசுவரனுடைய ஸந்நிதானத்தில் கொண்டு சேர்க்கின்றனர்.

142. அவதார புருஷர் ஒருவரை அவருடைய உற்றார் உறவினர் கண்ணியப்படுத்தாததற்குக் காரணம் என்ன? செப்படிவித்தைக்காரனுடைய ஜாலவேடிக்கைகளைக் காண அவனுடைய உற்றார் உறவினர் வந்து கூடுவதில்லை. அவனுடைய விநோதங்களைக் கண்டு அதிசயித்து நிற்பவர்கள் அந்நியர்களேயாவர்.

143. வஜ்ரவாதூல விருக்ஷத்தின் விதைகள் அம்மரத்தின் அடியிலேயே விழுவதில்லை. அவைகள் காற்றினால் வெகு தூரத்துக்கு அப்பால் கொண்டுபோகப்பட்டு, அங்கே முளைக்கின்றன. அதுபோல ஒரு அவதார புருஷரின் உபதேசங்கள் அவருடைய ஜனன ஸ்தானத்துக்குச் சற்று தூரத்தில் உள்ளவர்களால்தான் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அங்குள்ளவரே அவரைப் பாராட்டுகின்றனர்.

144. அவதார புருஷரால் ஆகாத காரியம் ஒன்றுமேயில்லை. ஜீவனையும் ஆத்மாவையும் பற்றின சூக்ஷ்மமான பிரச்னைகளை யெல்லாம் அவர் வெகு சுலபமாகத் தீர்த்துவிடுகிறார். அவருடைய போதனைகளை ஒரு சிறு குழந்தைகூடத் தெரிந்து கொள்ளும். அவர், கற்பகோடி காலங்களாகச் சேர்ந்துள்ள அக்ஞானத்தை அகற்றும் ஒளியையுடைய திவ்ய ஞானஸூர்யராவார்.

145. சிற்சில வேளைகளில் "சந்திர சூரிய ஜோதி" யென்று சொல்லக்கூடிய ஒருவகைக்கலவை வெளிச்சம் தோன்றுகிறது. சுத்த பக்தியும் சுத்த ஞானமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற சைதன்ய ஸ்வாமியைப்போன்ற அபூர்வமான அவதார புருஷர்களை இந்த வெளிச்சத்துக்குச் சமானமாகச் சொல்லலாம். இது சூரியனும் சந்திரனும் ஒரே சமயத்தில் ஆகாயத்தில் தோன்றுவதுபோலாகும். ஒரே மனிதனிடத்தில் ஞானமும் பக்தியும் கூடியிருப்பது மேற்கூறிய உதாரணத்தை முற்றிலும் ஒத்திருக்கும்.

146. இராமபிரான், ஸீதாதேவி, கிருஷ்ணன், ராதை இவர்கள் சரித்திர பூர்வமானவர்க ளல்லரென்றும் சும்மா உருவகப்படுத்திக் கூறப்பட்டவர்களே யென்றும், சாஸ்திரங்கள் வெறும் அத்யாத்மிக அர்த்தங்களை மட்டுமே உடையன என்றும் நினைக்காதே. அவர்கள், உன்னைப்போலவே, ஊனும் உதிரமும் பெற்ற சரீரத்தையுடையவர்களாக விருந்தனர். ஆனால் அவர்கள் தெய்வீகம் வாய்ந்தவர்களாதலால் அவர்களுடைய வாழ்க்கைகளைச் சரித்திர பூர்வமாகவும் ஆத்மீய உண்மைகளை விளக்குவனவாகவும் கொள்ளலாம். ஸமுத்திரமும் அதன் அலைகளும் போல, பிரம்மமும் அவதாரங்களுமாகும்.

147. வாண வேடிக்கையில் ஒருவிதமான சட்டியிலிருந்து முதலில் ஒருவகைப் புஷ்பமும் பின்னர் அடுத்தடுத்து வேறு வேறுவகைப் புஷ்பங்களும் வெளிவருவதனால் அச்சட்டியில் கணக்கற்ற வகைப் புஷ்பங்கள் உள்ளன போலத் தோன்றுகிறது. அதுபோல அவதார புருஷர்களும் பல மகிமைகளை உடையவர்கள். நிற்க, கொளுத்தினவுடன் சற்று நேரம் எரிந்து, பின்னர் அவிந்துவிடுகிற இன்னொருவகைப் புஷ்பச் சட்டியுமுண்டு. இதைப்போல, ஸாதாரண ஜீவர்கள் நெடுநாள் தவத்தின் பயனாய் சமாதியைஅடைந்து,அதினின்றும்திரும்பி வராமலிருக்கின்றனர்.

148. அவதார புருஷரோடு வருபவர்கள் நித்யமுக்தர்களாயாவது கடைசி ஜன்மம் எடுத்தவர்களாயாவது இருப்பார்கள்.

149. ஈசுவரன் அனந்தன்; ஸர்வசக்திமான். அவன் அருள் மயமான தனது தெய்வீக சக்தியை மானிட சரீரத்தில் தோற்றுவித்து, நம்மிடையே ஒரு அவதார புருஷனாகத் தோன்றத் திருவுளங் கொள்ளலாம். ஈசுவராவதாரத்தினின்றும் அருள் வெள்ளம் பெருகி பக்தர்களை இன்புறுத்துகின்றது.

வார்த்தைகளால் இவ்விஷயத்தை விளக்கமுடியாது. ஞானக் கண்ணால்தான் இந்த உண்மையைப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும். இதை நம்பவேண்டுமானால், ஈசுவரனை நேரில் காண வேண்டும்.

ஆயினும் உவமை மூலமாக இவ்விஷயத்தை ஒருவாறு தெரிந்துகொள்ளலாம். ஒருவன் ஒரு பசுவின் கொம்பு, கால், வால், மடி இவைகளில் ஒன்றைத் தொடுவதாக வைத்துக்கொள்வோம். இப்படித் தொடுவது அந்தப் பசுவைத் தொடுவதாகாதா? மானிடர்களான நமக்குப் பசுவினிடத்து முக்கியமானது அதன் மடியிலிருந்து வரும் பாலே. திவ்ய பிரேமையாகிற பாலானது நமக்கு ஈசுவராவதாரத்தினிடமிருந்து பெருகுகின்றது.

150. ஈசுவரனை யாரால் முற்றிலும் அறியக்கூடும்? அந்த பாக்கியம் நமக்கு இல்லை; நாம் அவனைப் பூர்ணமாக அறியவேண்டுமென்பதுமில்லை. அவனைக் கண்டு, அவன் ஒருவனே உண்மைப் பொருள் என்று உணர்ந்தால் போதுமானது.

151. ஒருவன் புண்ணியநதியான கங்கைக்கு வந்து அதன் ஜலத்தைத் தொடுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது அவன் "கோமுகியிலிருந்து கங்காஸாகரம் வரையிலுள்ள (அதாவது உற்பத்தி முதல் சங்கமம் வரையிலுள்ள) புண்ணிய நதியின் தர்சனத்தாலும் ஸ்பர்சத்தாலும் கிருதார்த்தனானேன்" என்று சொல்வான்.

152. நீ ஈசுவரனைத் தேடுகிறாயா? அப்படியானால் அவனை மனிதனிடம் தேடு. அவனுடைய தெய்வீகம் மற்றைய பொருள்களிடத்துக்காட்டிலும் மனிதனிடமே விசேஷித்துள்ளது. ஈசுவர ப்ரேமையால் கரைகடந்தோடும் உள்ளத்தையுடைய மனிதனைத் தேடிப்பார்; ஈசுவரனிடத்திலேயே வாழ்ந்து உழன்று நிலைபெறும் மனிதனை, அதாவது ஈசுவர ப்ரேமையால் பித்தேறிய ஒருவனைத்தேடு. அப்படிப்பட்டவனிடத்தில் ஈசுவரன் தோன்றுவான்.

153. ஈசுவரன் அகண்டாகாரன். லீலையும் அவனுடையதே: லீலையானது ஈசுவரலீலை, தேவலீலை, ஜகத்லீலை, நரலீலை என் நால்வகைப்படும்.

ஈசுவராவதாரம் நரலீலையில் சாத்யமாகிறது. இந்த நரலீலையின் சுபாவத்தை நீ அறிவாயா? அது, விசாலமான உயர்விடத்திலிருந்து பெருகும் ஜலமானது அகன்ற கால்வாய் மூலம் வெள்ளமாக ஓடுவதற்குச் சமானமாகும். சச்சிதானந்தத்தின் சக்தியானது மனித ரூபத்தில் வெளிப்பட்டுத் தோன்றுவது நரலீலை. அவதார புருஷர்களை அனைவரும் அறிந்து கொள்ளமாட்டார்கள். ஸ்ரீராமபிரான் அவதார புருஷரென்பதை பரத்வாஜர் போன்ற எழு ரிஷிகள் மட்டுமே தெரிந்துகொண்டனர். மனிதனுக்கு உண்மை ஞானத்தையும் பக்தியையும் போதிப்பதற்காக ஈசுவரன் மனுஷ்ய ரூபனாக அவதாரம் செய்தருளுகிறான்.



## 5. ஈசுவரனும் ஜீவனும்

154. ஈசுவரன் ஒருவனே நித்யமானவன். ஜீவனும் ஜகத்துமான அவன் தோற்றங்கள் அநித்யமானவை.

155. பந்தப்பட்ட ஆத்மா மனுஷ்யனாகும்; மாயையாகிய சங்கிலியிற் கட்டுப்படாத ஆத்மா ஈசுவரனாகும்.

156. பிரகிருதியின் பஞ்ச பூதங்களோடு சேர்வதால் பிரம்மத்துக்குக் கஷ்டமுண்டாகின்றது.

157. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள சம்பந்தம் எப்படிப்பட்டது?

ஒரு நீரோட்டத்தில் ஓரப்பாரிசமாக ஒரு பலகையைப் பிடித்தால், அந்நீரோட்டம் இரண்டாகப் பிரிந்ததுபோலத் தோன்றுகிறது. அதுபோலவே, மாயையின் உபாதியால் பிரிவற்ற ஒரே பொருள் இரண்டாகப் பிரிந்ததுபோலத் தோன்றுகிறது.

158. நீரும் நீர்க்குமிழியும் ஒன்றேயாம்; அக்குமிழி, ஜலத்திலேயே தோன்றி ஜலத்திலேயே மிதந்து, கடைசியில் ஜலத்தோடேயே இரண்டறக் கலந்து போகின்றது. அதுபோல ஜீவாத்மா பரமாத்மா என்ற இரண்டும் ஒன்றேயாம். அளவுமாத்திரத்தால்தான் அவைகளுக்குள் வித்தியாசம் ஏற்படுகின்றது; ஒன்றுக்கு அளவுண்டு; மற்றொன்று அளவற்றது. ஒன்று பிற பொருள்மீது சார்ந்துள்ளது; மற்றொன்று சுயேச்சையை யுடையது.

159. எண்ணெய் இல்லாது போனால் விளக்கு எரியாது. அதுபோல, ஈசுவரனில்லாமற் போனால் மனிதன் ஜீவித்திருக்க முடியாது.

160. ஈசுவரனுக்கும் மனிதனுக்கும் உள்ள சம்பந்தம் காந்தத்துக்கும் இரும்புக்குமுள்ள சம்பந்தத்தைப் போன்றது. ஆயினும் மனிதர்களை ஏன் ஈசுவரன் ஆகர்ஷிப்பதில்லை? கனமாக மண்

மூடிய இரும்புத் துண்டைக் காந்தம் இழுக்காது. அதுபோல, மாயையால் கனமாக மூடுண்ட ஜீவன் ஈசுவரனுடைய ஆகர்ஷண சக்தியை உணர்வதில்லை. ஜலத்தை விட்டு மண்ணைக் கழுவிப் போக்கிவிட்டால் இரும்பு இழுக்கப்படும். அதுபோல, ஜீவனை உலகத்தில் ஆழ்த்துகின்ற மாயையாகிற மண்ணை இடைவிடாத பிரார்த்தனையாலும் வணக்கத்தாலும் கசிந்துருகும் கண்ணீராலும் போக்கினால், அந்த ஜீவன் உடனே ஈசுவரனால் ஆகர்ஷிக்கப்படும்.

161. ஈசுவரன் அனந்தன். ஜீவனோ அந்தமுள்ளது. ஆகவே, அந்தமுள்ள வஸ்து அனந்தமான வஸ்துவை எவ்வாறு கிரகிக்கமுடியும்? அப்படிக் கிரகிக்கப்பார்ப்பது, உப்பினால் ஆக்கப்பட்ட பிரதிமை யொன்று சமுத்திரத்தின் ஆழத்தைக் காண முயல்வதுபோலாம். அப்படிச் செய்தால், உப்புப் பிரதிமை ஜலத்தில் கரைந்து, மறைந்துவிடும். அதுபோல, ஈசுவரனை அளந்து அறியவேண்டுமென முயல்கிற ஜீவன் தனது தனித் தன்மையை இழந்து, அவனுடன் கலந்து ஒன்றுகின்றது.

162. ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டும் சேர்வதானது, ஒரு கடிகாரத்தில் மணிக்கொருதரம், மணியைக்காட்டும் முள்ளும் நிமிஷத்தைக் காட்டும் முள்ளும் சேர்வதை ஒக்கும். அவைகள் ஒன்றோடொன்று சம்மந்தப்பட்டவை. ஒன்றன்மீது மற்றொன்று சார்ந்துமுள்ளது. சாதாரணமாக அவை தனித்திருப்பினும், தகுதியான சந்தர்ப்பங்கள் வாய்க்கும்போதெல்லாம் ஒன்றுசேரும்.

163. ஒன்று (1) என்ற லக்கத்தின் பின்னால் பூஜ்யங்களைச் சேர்த்தால் அந்த லக்கத்தை எவ்வளவு பெரியதாக வேண்டுமானாலும் அதிகரிக்கலாம். ஆனால், அந்த ஒன்று என்ற லக்கத்தை எடுத்துவிட்டால், பூஜ்யங்களுக்கு மதிப்பே இராது போகின்றது. அதைப்போல, ஜீவனானது, ஒன்றாகிற ஈசுவரனை ஒட்டிக் கொண்டிராதவரையில் மதிப்பைப் பெறுவதில்லை. ஏனெனில் இவ்வுலகத்துள்ள எல்லாப் பொருள்களும் ஈசுவர சம்பந்தத்தால்தான் மதிப்பைப்பெறுகின்றன.

164. ஒன்று என்ற லக்கத்தைப் போன்ற ஈசுவரனை ஜீவன் சார்ந்துநின்று எல்லாக் காரியங்களையும் அவன் பொருட்டுச் செய்து வந்தால் மேலும்மேலும் நற்பயன் எய்துவான். அவ்விதமின்றி ஈசுவரனைப் புறக்கணித்து, தன்னுடைய திருப்திக்கென்றே செய்துகொண்ட பல காரியங்களை ஒரு ஜீவன் சிந்தித்துப் பெருமை யடைந்துகொண்டிருக்கும் பக்ஷத்தில் யாதொரு பலனும் உண்டாகாது.

165. மனித ரூபமாக விளையாடுபவன் ஈசுவரனே: அவன் ஒரு செப்படி வித்தைக்காரன் போல்வான். ஜீவன் ஜகத் என்ற மாயைத் தோற்றமெல்லாம் அவனுடைய பெரிய வித்தைகள். செப்படி வித்தைக்காரன் மட்டுமே உண்மை; வித்தைகள் எல்லாம் மாயை.



# 6. ஈசுவரனும் பக்தர்களும்



166. ஜமீன்தார் ஒருவர் மிகப்பணக்காரராக விருக்கலாம். என்றாலும் ஏழைக்குடியானவன் ஒருவன் ஏதேனும் அற்பமான தோர் காணிக்கைப்பொருளைப் பிரியத்துடன் கொண்டுவந்தால், அவர் மிகுந்த சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்கிறார். அது போல, ஸர்வேசுவரன் மிகப்பெரியவனும் சக்திமானு மானபோதி லும் பக்தியோடு ஸமர்ப்பிக்கப்படும் அற்ப நிவேதனத்தையும் அத் தியந்த சந்தோஷத்துடனும் திருப்தியுடனும் அங்கீகரிக்கின்றான்.

167. மண்ணாலும் புழுதியாலும் தன்னை அழுக்காக்கிக் கொள்வது குழந்தையின் சுபாவம். என்றாலும் அதன் தாயார் அதை எப்போதும் அழுக்குடம்பாகவே இருக்கும்படி விடுவ தில்லை. அடிக்கடி, அவள் அக்குழந்தையைக் குளிப்பாட்டுகிறாள். அதுபோல பாபம் செய்வது மனிதனுடைய சுபாவம். மனிதன் பாபம் செய்யும் சுபாவமுடையவன் என்பது வாஸ்தவமானால், அவனுடைய கதிமோக்ஷத்துக்கு ஈசுவரன் ஒரு வழிவிடுகிறான் என்பது அதைவிடப் பன்மடங்கு வாஸ்தவமாகும்.

168. ஒரே மீன் பல்வேறு விதமாகச் சமைக்கப்பட்டு ஒவ் வொருவனுடைய ருசிக்குத் தகுந்த உணவாவதைப்போல, ஒரே மூர்த்தியான ஸர்வேசுவரன் பக்தர்களுடைய பல்வேறு விருப் பப் பிரகாரம் வேறு வேறு உருவங்களில் தோன்றுகிறான். ஒவ் வொரு பக்தனும் தான் விசேஷித்துக் கொண்டாடும் மூர்த்தி யைத்தான் தரிசிக்கிறான். ஈசுவரன் சிலர்க்குத் தயாளுவான எஜமானனாயும், சிலர்க்குப் பிரிய பிதாவாயும், சிலர்க்குப் புன் னகை புரியும் மாதாவாயும், சிலர்க்கு அன்புமிகுந்த துணைவனா யும், சிலர்க்கு அந்தரங்க கணவனாயும், சிலர்க்குக் கீழ்ப்படியும் புத்திரனாயும் இருக்கிறான்.

169. தெய்வீகம் வாய்ந்த ரிஷிகள், ஈசுவரனுடைய நெருங் கிய உறவினரைப் போன்றவர்கள். அவர்கள் அவனுடைய நண்

பர்கள் போலவும், ஸஹாக்கள் போலவும், உறவினர்கள் போலவும் இருக்கின்றனர். சாதாரண மனிதர்கள் எல்லோரும் எட்டிய உறவினர் போன்றவர்கள். அவர்கள் கேவலம் ஈசுவர சிருஷ்டிகள் மாத்திரமே.

170. ஒரு மனிதனுடைய எண்ணத்துக்கும் நோக்கத்துக்கும் தக்கபடி அவனுக்குச் சன்மானம் கிடைக்கின்றது. ஈசுவரன் பக்தர்கள் விரும்புவனவற்றை யெல்லாம் கொடுக்கும் கற்பக விருக்ஷம் போன்றவன். ஒரு ஏழை மனிதனுடைய மகன் சிரமப்பட்டு, உயர்ந்த நீதி ஸ்தலத்தில் நியாயாதிபதியானதும், "இப்போது நான் சந்தோஷமுள்ளவனுனேன். உன்னத பதவியை அடைந்து விட்டேன். எல்லாம் ஒழுங்காகத்தானிருக்கிறது" என்று நினைக்கிறுன். அவனுக்கு ஈசுவரன் "நீ இந்த நிலைமையிலேயே இருப்பாயாக" என்று சொல்கிறுன். ஆனல் அந்த நியாயாதிபதி உபகாரச் சம்பளம் பெற்று வேலையைவிட்டு நீங்கும் போது, சென்றுபோன நாட்களைப்பற்றிச் சிந்தித்து, "ஐயோ! நான் சாதித்தது என்ன என்று அலற்றித் தனது வாணுள் வீணுயினதற்குத் துன்புறுகிறுன். அப்போது ஈசுவரனும் "ஐயோ! நீ சாதித்தது ஒன்றுமில்லையே!" என்றுதான் சொல்கின்றுன்.

171. சூரிய வெளிச்சம் எங்கும் சமமாய் வீழ்கிறது. ஆனல், ஜலம், கண்ணுடி, மெருகிட்ட உலோகம் இவைபோன்ற வஸ்துக்களில் அவ்வெளிச்சம் நன்ருகப் பிரதிபலிக்கின்றது. அது போலத்தான் தெய்வீக ஒளியும். அது எல்லாரிடத்தும் சமமாயும் பாரபக்ஷமின்றியும் வருகின்றது. என்றுலும் நல்லாருடைய தூய மனமும், ஸாதுக்களுடைய இருதயமுமே அவ்வொளியை நன்ருய்ப் பிரதிபலிக்கச் செய்கின்றன.

172. பகவான், பாகவதம் (சாஸ்திரங்கள்), பக்தர்கள் இவை யாவும் ஒன்றேயாம்.

173. உண்மையான பக்தன் ஒருவன் ஈசுவரனை எவ்விதம் காண்கிறுன்? பிருந்தாவனத்துள்ள கோபஸ்திரீகள், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை ஜகந்நாதனுகக் காணுமல் அவர்களுடைய பிரிய கோபிநாதனுகவே கண்டதைப்போல, பக்தனும் ஈசுவரனைத் தனது நெருங்கிய பிரிய பந்துவாகவே காண்கிறுன்

174. ஜீவாத்மாவால் பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்க முடியும். அப்போதுதான் ஒருவன் "அவனே நான்", என்று உணர்ந்து சொல்லக்கூடும். ஒரு வீட்டில் நெடுநாளாக வேலை செய்து வந்த வேலைக்காரன் ஒருவன், காலக்கிரமத்தில் அவ்வீட்டார்களுள் ஒருவனுகவே பாவிக்கப்படலாம். வீட்டு எஜமானன், இவனுடைய வேலைத்திறமையைக் கண்டு மகிழ்ந்து, ஒருநாள் அவனைத் தன்னுடைய ஆஸனத்தில் உட்காரச்செய்து தன்னைச் சுற்றியுள்ளவர்களை நோக்கி "இந்த க்ஷணமுதல் எனக்கும் இவனுக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லை. நானும் இவனும் ஒன்று. எனது கட்டளைக்குக் கீழ்ப்படிவதைப்போல இவனுடைய கட்டளைக்கும் நீங்கள் கீழ்ப்படிய வேண்டும். இல்லாவிட்டால் தண்டிப்பேன்" என்று சொல்லலாம். அப்போது அந்த வேலைக்காரன் ஸங்கோசத்தினல் இந்தப் புதிய கவுரவத்தைக் காட்டிக் கொள்ளத் தயங்கலாமாஞலும், எஜமானன் அவனைக் கட்டாயப் படுத்தி கவுரவ ஸ்தானத்தில் வைப்பான். ஈசுவரனை நெடுங் காலம் வழிபட்டு அவனுடன் ஐக்கியமான தன்மையை உணர்ந்த ஜீவன்களுடைய நிலைமையும் இப்படிப்பட்டதுதான். அவன், தனது மஹிமையையும் குணங்களையும் இவர்களுக்கு அருளி, இவர்களைத் தனது ஒப்பற்ற ஸ்தானத்துக்கு உயர்த்துகிருன்.

175. பக்தனுக்கு ஈசுவரனைத் "தாயே!" என்று அழைப்பதில் உண்டாகும் பேரானந்தத்துக்குக் காரணமென்ன? குழந்தையானது தனது தாயிடத்தில் அத்தியந்த பிரியத்துடன் கொஞ்சிக் குலாவுவதைப்போல மற்றையோரிடத்தில் குலாவுவதில்லை



# 7. குரு

176. யார் யாருடைய குரு? ஈசுவரன் ஒருவனே ஜகத் குருவும் வழிகாட்டியுமாவான்.

177. தனது குருவைக் கேவலம் மனுஷனாகக் கருதுபவனுக்குப் பிரார்த்தனையாலும் பக்தியாலும் என்ன பலனுண்டாகக் கூடும்? நமது குருவைக் கேவலம் மனுஷ்யரெனக் கருதக் கூடாது. ஈசுவரனைக் காண்பதற்கு முன்னால், அத்திவ்ய தரிசனத்தின் முதல் அங்கமாக குருவைத்தான் சிஷ்யன் காண்கிறான். பிறகு அந்தக்குருவே ஈசுவரனாகமாறி, ஈசுவரசொரூபத்தைக் காட்டுகிறார். அப்பால் ஈசுவரனும் குருவும் ஒருவரேயென்று சிஷ்யன் தெரிந்து கொள்கிறான். அவன் விரும்பும் வரங்களையெல்லாம் திவ்ய குரு அருளுவர். இம்மட்டோ! அவனை நிர்வாணமாகிய பரமானந்த சுகத்துக்கும் அழைத்துச் செல்வர். அன்றி, பக்தன் ஈசுவரன் என்ற சம்பந்தமுள்ள த்வைத நிலைமையில் அவன் இருக்கவேண்டினும் அங்ஙனமே இருக்கலாம். சிஷ்யன் எதைக்கேட்டாலும் குரு அதை நிச்சயமாகத் தருகிறார்.

178. சிஷ்யனானவன் தனது குருவின் குணதோஷங்களைப் பரிசீலனை செய்யக்கூடாது. குருவின் வார்த்தையின்படி அவன் நடக்கவேண்டும். "எனது குரு கள்ளுக்கடைக்குப் போகிறவரானாலும் அவர் எனக்குப் பவித்ரரான நித்யானந்தரே; எனது குரு குடிகாரரும் பாபிகளும் கூடுமிடங்களுக்குப் போகிறவரானாலும் அவர் எனக்குக் குற்றமற்ற பவித்ர குருவாகவே இருக்கிறார்," என்பது ஒரு வங்கதேசப் பழமொழி.

179. "நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் குருக்களைப் பெறலாம். ஆனால் உண்மையான சிஷ்யன் ஒருவனைப் பெறுவது அரிது" என்பது பழமொழி. இதன் பொருள் என்னவெனில், ஸத். உபதேசம் செய்யக்கூடியவர்கள் பலர் இருக்கின்

றனர். ஆனால் அவ்வுபதேசத்தைப் பின்பற்றி ஒழுகுவோர் வெகு சிலர் என்பதாம்.

180. குருவை ஒரு மத்தியஸ்தராகச் சொல்லலாம். நாயகி நாயகர்களைக் கடகன் சேர்த்துவைப்பதுபோல, ஈசுவரனையும் மனிதனையும் குரு சேர்த்து வைக்கிறார்.

181. தனது குருவின் குணதோஷங்களைப்பற்றி வாதாடிக் கொண்டிருந்த ஒருவனை நோக்கிப் பகவான் சொன்னதாவது:- "ஏன் இந்தப் பிரயோசனமற்ற வாக்குவாதத்தில் காலத்தை வீணாகக் கழிக்கிறாய்? முத்தை எடுத்துக்கொண்டு சிப்பியை அப்பால் எறிந்து விடு. குரு உனக்கு உபதேசித்த மந்திரத்தை மட்டும் தியானம் பண்ணு. அவருடைய குற்றங் குறைகளைப்பற்றிச் சிந்தியாதே" என்பதாம்.

182. நமக்குக் கொஞ்சம் கொஞ்சம் விஷயங்களைக் கற்பிக்கும் ஒவ்வொருவரையும் குருவென்று சொல்லாமல், ஒரே ஒருவரை மட்டும் குருவென்று சொல்லவேண்டிய அவசியமென்ன? முன்பின்னறியாத தேசத்திற்கு நீ போனால் அவ்விடங்களில் பரிசயமுள்ள ஒரு வழிகாட்டி சொல்கிறபடி நீ கேட்டு நடக்கவேண்டும். அப்படியில்லாமல் அங்குப் பலபேர் சொல்கிறபடி நீ கேட்கிறதாயிருந்தால் நிச்சயமாக நீ தடுமாறிப் போவாய். அதுபோல ஈசுவரனை அடையவேண்டிய முயற்சியில், அவரிடம் போகும் வழியைத் தெரிந்துகொண்ட ஒரு குருவினுடைய புத்திமதியைக் கடைப்பிடித் தொழுகவேண்டும்.

183. மனங்கசிந்த பிரார்த்தனை, ஆழ்ந்த பக்தி, தீவிரமான மனம் இவைகளோடு எவன் ஈசுவரனிடம் போகமுடியுமோ அவனுக்குக் குரு வேண்டியதில்லை. ஆனால் இவ்வித அருள் தாகம் உடையவர் அருமையிலும் அருமை. ஆதலால்தான் குரு அவசியம் வேண்டியிருக்கிறது. குரு ஒருவராக இருப்பினும் உப குருக்கள் பலர் இருக்கலாம். கண்ட விஷயங்களை யெல்லாம் கற்பிப்பவர் உபகுருக்களாவர். மஹானான அவதூதருக்கு அப்படிப்பட்ட உபகுருக்கள் இருபத்து நான்கு பேரிருந்தனர்.

184. மேள தாளம் முதலிய படாடோபங்களோடு, மைதானத்தின் வழியே ஓர் கல்யாண ஊர்கோலம் போவதை அவ

தூதர் ஒருநாள் கண்டார். இவ்வூர்கோலம் போகும் பாதைக்குச் சமீபத்தில், இந்தப் படாடோபத்தைக் கண்ணெடுத்துக்கூடப் பாராமலும், அதன் சப்தத்தினுல் கொஞ்சங்கூட தன் கவனம் குறையாமலும் ஒரு பக்ஷியைக் குறி வைப்பதிலேயே கருத்தாயிருந்த வேடன் ஒருவனையும் அவர் பார்த்தார். அவதூதர் வேடனை வணங்கி, “ஸ்வாமி ! நீர்தாம் எனக்குக் குரு. பக்ஷியின் மீது கவனமாக விருக்கையில் உமது மனம் ஒருமித்திருந்ததைப் போல நான் தியானத்தில் உட்காரும்போது என் மனமும் ஏகாக்கிரமாய் ஒருமித்து அமரட்டும்” என்ருர்.

185. ஒரு தூண்டிற்காரன் ஒரு குளத்தில் மீன் பிடித்துக் கொண்டிருந்தான். அவதூதர் அவனிடம் போய் “தம்பி ! காசிக்குப் போகும் வழி யெது?” என்று கேட்டார். தூண்டிலில் உள்ள இரையை மீன் கவர வந்ததென்பதை ஜலத்தின்மேல் மிதக்கும் நெட்டி அப்போதுதான் குறிப்பித்தது. ஆதலால் அவன் யாதொரு பதிலும் சொல்லாமல் மிதப்பின் மேலேயே கண்ணுக விருந்தான். தூண்டிலில் மீன் சிக்கிக்கொண்டதும் அவன் திரும்பிப் பார்த்து, “என்ன சொன்னீர் ஐயா ?” என்ருன். அவதூதர் அவனை வணங்கி “ஸ்வாமி ! எனக்கு நீர்தாம் குரு. பரமாத்மாவைத் தியானிக்கும்போது நான் உமது திருஷ்டாந்தத்தைப் பின்பற்றுவேனுக ; தியானம் முடியும்வரையில் நான் வேறொன்றையும் கவனியாமலிருப்பேனுக” என்ருர்.

186. ஒரு கொக்கு, மீன் ஒன்றைப் பிடிப்பதற்கு ஒரு குளக்கரையை நோக்கி மெதுவாய்ப் போய்க்கொண்டிருந்தது. அதன் பின்னுல், அப்பறவையை அம்பெய்வதற்கு ஒரு வேடன் குறிபார்த்துக் கொண்டிருந்தான். ஆனுல், அந்தப் பக்ஷி இதைக் கொஞ்சமேனும் கவனிக்கவில்லை. அவதூதர் அக்கொக்கை வணங்கி “நான் தியானத்தில் அமரும்போது உனது திருஷ்டாந்தத்தைப் பின்பற்றுவேனுக. என் பின்னுல் என்ன இருக்கிறது அல்லது யாரிருக்கின்றனர் என்று பார்க்க நான் ஒருபோதும் திரும்பாமலிருப்பேனுக” என்ருர்.

187. ஒரு பருந்து, மூக்கில் ஒரு மீனைக் கௌவிக்கொண்டிருந்தது. அதைப் பிடுங்கிக்கொள்வதற்காகச் சில காக்கைகளும்

பருந்துகளும் அப்பருந்தைப் பின்தொடர்ந்து கொத்தி ஆரவாரித்தன. அது எந்தத் திக்கில் சென்றாலும் காகங்களும் பருந்துகளும் கூடவே வந்தன. இந்தத் தொந்தரவைப் பொறுக்கமாட்டாமல் அந்தப் பருந்து மீனை அப்பால் போட்டுவிட்டது. உடனே அதை வேறொரு பருந்து கௌவிக்கொள்ள காகங்களும் மற்றப் பருந்துகளும் இந்தப் புதிய பருந்தைத் தொந்தரவு செய்யத் தொடங்கின. தொந்தரவினின்றும் நீங்கிய முதல் பருந்து சாந்தமாய் ஒரு மரக்கிளையில் உட்கார்ந்திருந்தது. இப்படிச் சாந்தமாக விருக்கும் பக்ஷியைப்பார்த்து வணங்கிய அவதூதர், "பருந்தே! நீ எனக்கு குருவாகிறாய். உலகப்பற்றுக்களாகிய சுமையை மனிதன் கீழே போடாதவரையில் அவனால் உலகச் சஞ்சலங்களினின்றும் தப்பித்துக்கொள்ள முடியாதென்றும், அவனுக்கு மனச்சமாதானமே இராதென்றும் நீ எனக்குக் கற்பித்தாய்" என்றார்.

188. ஈசுவரனுடைய ரகஸியங்களை அறியவேண்டுமென்ற தீவிரபுத்தி உனக்கு இருக்குமானால், அவ்வீசுவரனே ஸத்குரு ஒருவரை உன்னிடம் அனுப்புவார். பக்தனே! குருவைத் தேடவேண்டிய விஷயத்தில் உனக்குக் கவலையே வேண்டாம்.

189. குருவானவர் மஹிமை வாய்ந்த கங்காநதிக்குச் சமானமாகிறார். அந்நதியில் ஜனங்கள் குப்பை கூளங்களையும் அசங்கியங்களையும் எறிந்தபோதிலும் அதன் பவித்ரம் ஒருபோதும் குறைவதில்லை. அதுபோல நிந்தனைகளாலும் வசைகளாலும் குரு பாதிக்கப்படுவதில்லை.

190. உனது குருவைப்பற்றிய நிந்தனை மொழியை நீ கேட்டுக்கொண்டிராதே. அவர் உனது தாய் தந்தையருக்கும் மேற்பட்டவர். உன் எதிரிலேயே உனது தாய் தந்தையரை யாரேனும் நிந்தித்தால் நீ பொறுத்துக் கொண்டிருப்பாயா? அவசியமானால், சண்டைபோட்டாயினும் உனது குருவின் புகழைக் காப்பாற்று.

191. மனுஷ்ய குருவானவர் மஹாமந்திரத்தை உனது காதில் மட்டும் உபதேசிக்கிறார். தெய்வகுருவோ, ஆத்மாவுக்குள் சைதன்யத்தைச் செலுத்துகிறார்.

192. சமுத்திரத்தின் அடித்தரையில் கிடக்கும் முத்துச் சிப்பி, தனது இடத்தை விட்டு மேலே கிளம்பி ஸ்வாதி நக்ஷத்திரம் உச்சமாகும் ஸமயத்தில் பெய்யும் மழைத்தண்ணீரைக் கிரஹிக்க வருகிறது. அதியாச்சரியமான ஸ்வாதி மழையின் ஒரு துளியாவது தன்மீது விழும்வரையில், அது தனது வாயை நன்ருய்த் திறந்துகொண்டு ஜலத்தின்மீது மிதக்கிறது. அப்பால், அது சமுத்திரத்தின் அடித்தரைக்கு மூழ்கிப்போய், அம் மழைத் துளி ஒரு அழகிய முத்தாகப் பரிணமிக்கும் வரையில் அங்கேயே கிடக்கின்றது. அதைப்போல உண்மையான சிரத்தையையுடைய சிலர் நித்யானந்தமாகிய கதவைத் திறக்கக்கூடிய மூலமந்திரத்தை ஸத்குருவிடமிருந்து கிரஹிக்கவேண்டுமென்று ஊரூராய்ப் போய்க்கொண்டிருக்கின்றனர். இப்படிப் போகும் ஒருவனுக்கு அதிர்ஷ்டவசத்தில் குரு எதிர்ப்பட்டு, அவர் மூலமாக பந்தங்களை யறுக்கக்கூடிய மூலமந்திரப் பிராப்தியானுல், உடனே அவன் ஜன ஸமூகத்தைத் துறந்து, தன் மனமாகிய குகைக்குள் நுழைந்து, நித்ய சாந்தத்தைப் பெறும்வரையில் அங்கேயே இருப்பான்.

193. அப்படிப்பட்ட குருவுக்கு சாஸ்திர ஞானம் இல்லாததாகத் தோன்றினுலும் நீ பயப்படவேண்டாம். அவர் பண்டிதர் அல்லரெனவும் நீ கிலேசிக்கவேண்டாம். ஆத்ம ஞானத்தில் அவருக்கு ஒருபோதும் தாழ்ச்சியிராது. ஏட்டுக்கல்வியை யெல்லாம் விட மிக மேம்பட்ட திவ்ய ஞானத்தில் அவருக்குப் பூர்ணமான பாண்டித்யமிருக்கும்.

194. சதுரங்க விளையாட்டில் ஆடிக்கொண்டிருப்பவர்களை விட ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவர்கள், எந்தக் காயை நகர்த்துவது சரியான ஆட்டமாகுமென்பதைச் சொல்லக் கூடும். உலகத்திலுள்ள மனிதர்கள் தாங்கள் வெகு சமர்த்தர்கள் என்று எண்ணுகின்றனர். ஆனுல், பண ஆசை, கவுரவ ஆசை, விஷய சுகங்கள் இவைபோன்ற உலகப்பற்றுக்கள் அவர்களை விட்டபாடில்லை. விளையாட்டில் கலந்திருப்பதனுல் சதுரங்கக் காயைச் சரியானபடி நகர்த்துவதற்குச் சாத்தியமில்லாது போகின்றது. உலகத்தைத் துறந்த பவித்ர புருஷர்கள் அத

னுள் சம்பந்தப்பட்டிருப்பதில்லே. அவர்கள் சதுரங்க ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவர்கள் போல்வர். விஷயங்களின் உண்மைச் சுபாவம் அவர்களுக்குத் தெரிகின்றது. உலகத்தில் உழலும் மனிதர்களைக் காட்டிலும் அவர்களே நன்ருக விஷயங்களைத் தீர்மானிக்கக் கூடும். ஆதலால் நல்வாழ்க்கையை விரும்புகிறவர்கள் ஈசவரனைத் தியானித்து அவனே நேரில் கண்டவர்களுடைய வார்த்தைகளில் நம்பிக்கை வைக்கவேண்டும். ஒரு விவகார விஷயமாக ஆலோசனை கேட்கவேண்டுமானுல் நீ அந்தத் தொழிலைக் கைப்பற்றும் வக்கீல்களிடம் போவாயல்லவா? தெருவில் போகிறவன் சொல்லும் வார்த்தையை நீ கேட்கமாட்டாய் என்பது நிச்சயமன்ரே?

195. பௌதிக சாஸ்திரம் அளவுக்குட்பட்ட விஷயங்களைப்பற்றி மட்டுமே கூறுகின்றதென்பதை மனிதர்கள் தெரிந்துகொள்ளவில்லை. அளவுக்கு அப்பாற்பட்ட இடத்திலிருந்து அது யாதொரு செய்தியையும் கொண்டுவருகிறதில்லை. ஈசுவரனை அறிந்து தரிசித்த பிராசீன ரிஷிகள்போன்ற புண்ணிய புருஷர்களால்தான் அவ்விதச் செய்தி கொணரப்பட்டிருக்கின்றது. ஈசுவரனுடைய சுபாவம் இப்படிப்பட்டது என்று சொல்லக்கூடிய அர்ஹதை (பாத்தியம்) அவர்களுக்கு மட்டும் உண்டு.



# 8. தர்மப் பிரசாரகர்

196. பிரசாரகனே, உனது அதிகாரத்துக்கு எற்ற அடையாளம் உன்னிடமிருக்கிறதா? ஒருவன் மிகத் தாழ்ந்தவனுனாலும், ராஜனுடைய அதிகாரத்துக்குரிய அடையாளத்தை உடையவனுகவிருந்தால், அவன் வார்த்தையை ஜனங்கள் பயந்து மரியாதையுடன் கேட்பார்கள். அவன் தனது அதிகாரத்தைக் காட்டுகிற மாத்திரத்திலேயே கலகம் ஒன்றை அடக்கக்கூடும். அதைப்போல, பிரசாரகனே, உனது காரியம் கைகூட வேண்டுமானல், ஈசுவரனிடமிருந்து தெய்வ சக்தியையும் அதிகாரத்தையும் முதலில் பெற்றுக்கொள். இந்தச் சக்தியை நீ பெறுதவரையில், வாணுள் முழுவதும் நீ தர்மப்பிரசாரம் பண்ணினுலும் அதெல்லாம் வீணுய் முடியும்.

197. நன்ருய் மலர்ந்த புஷ்பத்தின் சுகந்தம் காற்றினுல் அடிக்கப்பட்டு வரும்போது அப்புஷ்பத்தினிடம் தேனீ தானே வருகின்றது. சர்க்கரைப் பணியாரம் வைக்கப்பட்டிருக்குமிடத்துக்கு எறும்புகள் தாமே வருகின்றன. தேனீயையோ எறும்பையோ 'வா' என்று இரந்தழைக்கவேண்டிய சிரமம் ஒருவருக்கு மில்லை. அதுபோல, ஒரு மனிதன் தூயனுய்ப் பரிபூரணமடைந்தால் அவனுடைய இனிய குணுதிசயம் எங்கும் பரவுகிறது. உண்மையை அறிய ஆவலுள்ளவர்களெல்லோரும் அவனிடம் இயற்கையாகவே வருகின்றனர். ஆகவே, தான் சொல்லும் வார்த்தைகளைக் கேட்கக்கூடியவர்களைத் தேடிக்கொண்டு போகவேண்டிய அவசியம் அவனுக்கு இல்லை.

198. பனிக்கட்டியைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பவர்களில் பலர் அதைப் பார்த்திருக்கமாட்டார்கள். அதுபோல, அநேக தர்மப்பிரசாரகர்கள் ஈசுவரனுடைய குணுதிசயங்களைப் பற்றிப் புஸ்தகங்களில் படித்திருப்பார்களேயன்றி, தங்களுடைய வாழ்க்கையில் அனுபவரீதியாக அவ்வீசுவரனைத் தெரிந்துகொண்

டிருக்கமாட்டார்கள். இன்னும் பனிக்கட்டியைக் கண்ணால் பார்த்தவர்களில் பலர் அதை நாவால் ருசி பார்த்திருக்கமாட்டார்கள். அதுபோல தர்மப்பிரசாரகர்களில் பலர், ஈசுவரனுடைய மஹிமையில் ஒருசிறிது மட்டும் அறிந்திருப்பரேயன்றி அதனுடைய உண்மையான ஸாரத்தை அறிந்திருக்கமாட்டார்கள். பனிக்கட்டியை ருசி பார்த்தவன் மட்டுமே அது எப்படி யிருக்கிறதென்பதைச் சொல்லக்கூடும். ஈசுவரனுக்கு ஒரு ஸமயம் தாஸனாயும், ஒருசமயம் சகாவாயும் ஒருசமயம் விரகனாயும், ஒருகால் அவனுள் ஐக்கியமானவனாயும், இப்படிப் பலவிதத்திலும் ஈசுவரனோடு எவன் கூடியிருக்கிறானோ அவனால்தான் ஈசுவரனுடைய குணங்கள் இப்படிப்பட்டவை யென்பதைச் சொல்லமுடியும்.

199. வீட்டுக் கூரையின் மேல்ருந்து விழும் மழை ஜலம், புலித்தலைபோன்ற குழாயின் மூலமாகக் கீழே தரையில் விழும் போது, பார்வைக்குப் புலித்தலையினின்றும் விழுவதாகத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் ஆகாயத்திலிருந்து விழுகிறது. அதுபோல தெய்வீகம் வாய்ந்த மனிதர்கள் கூறும் உபதேச மொழிகள் பார்வைக்குக் கேவலம் மனிதர்களிடமிருந்து வருவனவாகத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் ஈசுவர ஸன்னிதியினின்றே வருகின்றன.

200. இப்போதைய தர்மப் பிரசாரகர்கள் கைக்கொண்டிருக்கும் முறைகளைப்பற்றித் தங்கள் அபிப்பிராயமென்ன?

அவர்களுடைய முறை, ஒரே ஒருவனுக்கு மட்டும் போதுமான ஆகாரத்தை வைத்துக்கொண்டு நூறுபேரைச் சாப்பாட்டுக்கு அழைப்பது போலாகும். ஆத்ம விஷயமாக அற்ப அனுபவத்தைப் பெற்று, தான் பிரபல ஆசாரியன் என்று பாசாங்கு பண்ணுவதேயாகும்.

201. உண்மையான உபதேசம் எப்படியிருக்கும்?

பிறர்க்கு உபதேசம் செய்வதை விட்டு, அப்படி உபதேசம் செய்யும் காலத்தை ஈசுவர ஆராதனையில் செலவிட்டால் அதிலேயே போதுமான உபதேச மிருக்கும். தன்னைத் தானே விடுவித்துக்கொள்ள முயல்பவன்தான் உண்மையான பிரசாரகன். இப்படி விடுதலை யடைந்தவனைத் தேடிக்கொண்டு பல

விடங்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான ஜனங்கள் வந்து அவ னல் உபதேசம் பெறவேண்டு மென்று எதிர்பார்க்கின்றனர். ரோஜாப் புஷ்பம் நன்ருய் மலரும்போது தேனீக்கள் அழைக் கப்படாமலேயே நாலா பக்கங்களிலிருந்தும் வருகின்றன.

202. சுடுகாட்டில் பிணம் அசைவற்றுக்கிடக்கிறது. ஆனல் நூற்றுக்கணக்கான கழுகுகளும் காகங்களும் தாமாகவே அங்குக் கூடுகின்றன. அவைகளை அழைப்பதற்காக ஒருவரும் போகிற தில்லை.

203. தீ எரியும்போது, விட்டிற்பூச்சிகள் எங்கிருந் தோ வந்து விழுந்து நசித்துப்போகின்றன. விட்டில்களை அழைக்க நெருப்புப் போகிறதில்லை. பூர்ணர்களுடைய உபதேச ரீதியும் இப்படிப்பட்டதுதான். தங்களுடைய உபதேசத்தைக் கேட்க வரவேண்டுமென்று அவர்கள் பிறரைத் தேடிப்போவ தில்லை. ஆனல், நூற்றுக்கணக்கான ஜனங்கள் இவர்களிடம் உபதேசம் பெறுவதற்காக எங்கெங்கிருந்தோ வருகின்றனர்.

204. சர்க்கரையோ, பணியாரமோ விழுந்தவிடத்துக்கு எறும்புகள் தாமாகவே வருகின்றன. ஆத்மீய இனிமையாகிய கற் கண்டாக நீ மாறினல், பக்தர்களாகிய எறும்புகள் உன்னிடம் தாமே வரும். ஈசுவரனுடைய ஆதேசம் இல்லாமல் நீ உபதேசம் பண்ணிக் கொண்டே போவாயானல், அது பயனற்றதாக முடி யும். ஒருவரும் உனது வார்த்தைகளைக் கேட்கமாட்டார்கள். பக்தி மூலமாகவோ, வேறு வழிகளாலேயோ, ஒருவன் முதலில் ஈசுவரனை அடையவேண்டும். அப்பால் அவன் ஈசுவரனுடைய ஆதேசத்தைப் பெறுவானுனல் எல்லா விடங்களிலும் தர்மப் பிர சாரம் செய்ய வல்லவனுவான். இப்படியாகத்தான் ஈசுவரனிட மிருந்து ஒருவன் அருளும் ஆற்றலும் பெறுகிருன். இதற்கு மேல்தான் அவனல், தர்மப்பிரசாரத் தொழிலை மேற்கொண்டு பொறுப்புடன் சரியாகச் செய்யமுடியும்.

205. ஆத்ம ஞானமாகிய தீபத்தினல் பிரகாசிக்கப்படுபவன் எவனே அவன் மட்டுந்தான் வாஸ்தவமான ஆசாரியன் ஆவான்.

206. இவ்வுலகத்தில் பரிபூரண மடைந்தவர்கள் இருவகை யினர் ஆவர். உண்மையை அறிந்து, பின், பிறரைப்பற்றிய

சிந்தனையே யில்லாமல், தாம் மட்டும் அவ்வுண்மையை அனு பவித்துக்கொண்டு மௌனமாக விருப்பவர்கள் ஒருவகையினர். பெற்ற உண்மையைத் தாம் மட்டும் அனுபவிப்பதில் சந்தோஷ மடையாமல், "எம்மோடு உண்மையை அனுபவிக்க வாருங்கள்" என்று மற்றவர்களையும் உச்சஸ்வரத்தில் கூவி அழைக்கும் சுபாவ முடையவர் மற்றொரு வகையினர்.

207. நிறைகுடம் நீர் ததும்பி ஒலிப்பதில்லை. அது போல், கடவுளை யறிந்தவன் அதிகம் பேசுவதில்லை. ஆனால் நாரதர் போன்ற மஹான்களுடைய விஷயம் என்ன? நாரதர், சுக தேவர் போன்ற சிலர், ஸமாதி நிலைமையை அடைந்த பிறகு அநேகம் படிகள் கீழே இறங்கி வந்தனர். ஜன ஸமூகத்தி னிடம் அவர்களுக்கிருந்த கிருபையாலும் அன்பாலுமே அவர்கள் உபதேசம் செய்ய வந்தனர்.

208. முதலில் உன் உள்ளமாகிய கோவிலில் ஈசுவரனைப் பிரதிஷ்டை செய். முதன் முதலில் அவனை உள்ளபடி அறிந்து கொள். பிரசங்கம், உபதேசம் முதலியவை யெல்லாம் பிற்பாடு ஆகட்டும். அதாவது, ஈசுவரனைக் கண்ட பிறகு இவைகளை நீ கைக்கொள்ளலாம். அதற்கு முன் வேண்டாம். ஈசுவரனைப் பற்றியும் பிரம்மத்தைப் பற்றியும் ஜனங்கள் வெகு தாராளமாய்ப் பேசுகிறார்கள்; அப்படிப் பேசும்போதெல்லாம் அவர்களுடைய மனம் உலகப் பற்றுக்களிலேயே உழல்கின்றது. இது எதை ஒக் கும்? ஆராதனைக்கு விக்ரகமே இல்லாத கோவிலில் பூஜைக்காகச் சங்க முழக்கம் செய்வதை இது ஒக்கும்.

209. முன்னொரு காலத்தில் ஒரு கிராமத்தில் பத்மலோச னன் என்ற இளைஞன் ஒருவன் இருந்தான். கிராமத்தார்கள் அவனை "பதன்" என்று விளையாட்டுப் பேரிட்டழைப்பது வழக் கம். அக்கிராமத்தில் பழையதாய் இடிந்த கோவில் ஒன்றிருந்தது. அதனுள் பூஜாவிக்ரகம் இல்லை. கோவில் முழுவதிலும் புல் பூண்டு கள் நிறைந்து, பக்ஷிகளுக்கும் வௌவால்களுக்கும் வாசஸ்தான மாக விருந்தது. ஒரு நாள் சாயந்திரம், திடீரென்று அந்தப் பாழ்ங்கோவிலிலிருந்து மணியோசையும் சங்கத்வனியும் வரு வதை ஜனங்கள் கேட்டு, பக்தர் ஒருவர் புதிதாக் விக்ரஹப் பிர

திஷ்டை செய்து ஆராதனம் செய்கிறாராக்கும் என்று எண்ணி புருஷர்கள், ஸ்திரீகள், குழந்தைகள் அனைவருமாக வெகு ஆவலுடன் கோவிலை நோக்கி ஓடினர். அவர்கள் கோவில் வாசலில் கூப்பிய கையினராய் உள்ளிருந்துவரும் ஆராதனைச் சப்தத்தைக் கேட்டுக்கொண்டு மூர்த்தியைத் தரிசிக்க ஆவலுடையவராய் நின்றனர். அப்படி நின்றவர்களுள் ஒருவன் மற்றையோரைக் காட்டிலும் அதிக ஆசையுடையவனாகி, கதவுகளின் இடுக்குவழியாகக் கோவிலுக்குள்ளே நோக்கினான். மணியை அடித்துச் சங்கநாதம் செய்தவன் 'பதன்' என்பதை அவன் தெரிந்துகொண்டதும் அவனுக்கிருந்த ஆச்சரியத்துக்கு அளவில்லை. கோவில் தரை பழைய படியே அசுத்தமாக விருந்தது. ஆராதனத்துக்கு மூர்த்தியுமில்லை! "அடே, பதா! உள்ளே விக்ரஹம் இல்லை. கோவிலைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தமாக்கவும் நீ சிரமப்படவில்லை. இரவும் பகலும் பதினொரு வௌவால்கள் கூச்சலிடுகின்றன. அடே, சங்கை ஊதி, இப்படி நீ ஆரவாரம் செய்ததெல்லாம் வீணாயிற்றே!" என்று அவன் சொன்னான். அதுபோல, உனது உள்ளமாகிய கோவிலில் ஈசுவரனுடைய திவ்ய விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்ய நீ விரும்புவாயானால்—அதாவது அவ்வீசுவரனை நீ தெரிந்துகொள்ளப் பிரியப்படுவாயானால்—வீணாகச் சங்கைமட்டும் முழக்குவதில் என்ன பிரயோசனம்? முதலில் உன் உள்ளத்தைத் தூய்மையாக்கிக்கொள். அது தூய்மையடைந்தால் ஈசுவரன் தானே அங்கு வந்து வசிப்பான். அசுத்தமானவிடத்தில் ஈசுவர விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்ய முடியாது. மேல்சொன்ன பதினொரு வௌவால்களும் பதினொரு இந்திரியங்களைக் குறிக்கின்றன. (ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, மனம் ஒன்று.) முதன் முதலில் உன்னுள்ளேயே மூழ்கி மணிகளைப் பெறுவாயாக. அப்பால் மற்றவை. முதலில் உன் இருதயத்தில் மாதவனைப் பிரதிஷ்டை செய்துகொள். அப்பால் பிரசங்கம், பிரசாரம் இரண்டையும் வேண்டியமட்டில் நீ கைக்கொள்ளக்கூடும்.

210. ஈசுவரப்ரேமையில் ஆழ்ந்திருக்கவேண்டுமென்ற ஆவலும் பொறுமையும் ஒருவருக்குமில்லை. விவேகத்தையும்

வைராக்யத்தையும் கவனிப்பார் எவருமில்லை; பக்திமார்க்கங்களில் (ஸாதனையில்) ஒழுகுவாருமில்லை. ஆனால் புஸ்தகங்களிலிருந்து பெற்ற அற்ப ஞானத்தைக்கொண்டு எல்லாரும் பிரசங்கம் பண்ணவும் பிரசாரம் செய்யவும் அவசரப்பட்டு ஓடுகின்றனர். இது அதியாச்சரியம்! பிறருக்கு உபதேசிப்பது வெகு சிரமசாத்தியமான காரியம். ஈசுவரனை அடைந்து அவனுடைய அனுமதியைப் பெற்றவனால்தான் பிறருக்கு உபதேசம் செய்ய முடியும்.

211. மின்சார விளக்கானது ஓரிடத்தில் வெளிச்சமுள்ளதாயும் இன்னோரிடத்தில் மங்கலாயும் இருக்கின்றது. ஆயினும், அவ்விளக்கின் உயிர் நிலையான மின்சாரமோ ஒரே இடத்திலிருந்துதான் வருகிறது. காலங்கள் தோறும் வேறு வேறிடங்களில் தோன்றும் உண்மையான தர்மாசாரியர்களும் இப்படிப்பட்டவர்களே. அவர்கள் ஸர்வேசுவரனாகிய ஒரே இடத்திலிருந்து இடைவிடாமல் பெருகும் ஆத்மப் பிரகாசத்தை வெளிவிடும் அனேக தீபங்களைப் போன்றவ ராவார்கள்.

212. பிரபல வர்த்தகன் ஒருவனுடைய களஞ்சியத்திலிருந்து தானியத்தை விற்பனைக்கு அளக்கும்போது, அளவுகாரன் இடைவிடாது அளக்கிறான். வர்த்தகனின் வேலைக்காரர்கள் ஓயாமல் தானியத்தை அளவுகாரன் முன்னால் குவித்துக் கொண்டே யிருக்கின்றனர். ஆனால் ஒரு சிறிய கடைக்காரனுடைய பண்டசாலையோ வெகு சீக்கிரத்தில் செலவழிந்து போகின்றது. இம்மாதிரியாகவே, பக்தர்களுடைய மனத்தில் இடையறாமல் உதிக்கும் எண்ணங்கள் ஈசுவரானுக்கிரகத்தால் உண்டாகின்றனவாதலால், அவர்கள் எப்போதும் புதிது புதிதான எண்ணங்களையும் அபிப்பிராயங்களையும் வெளியிடக் கூடியவர்களாகின்றனர். சிறிய கடைக்காரனைப் போன்ற, புஸ்தக ரூபமாக ஞானத்தைக் கிரகித்தவர்களுடைய அபிப்பிராயங்களும் எண்ணங்களும் வெகு சீக்கிரத்தில் செலவழிந்து போகும்.

213. ஒருநாள் நான் பஞ்சவடி வழியாகப் போய்க்கொண்டிருக்கையில் ஒரு தவளை பரிதாபகரமாகக் கத்துவதைக் கேட்டேன். அது ஒரு பாம்பினால் பிடிபட்டிருக்கவேண்டுமென்று எண்ணி

னேன். வெகுநேரம் கழித்து அவ்வழியாகத் திரும்பிவருகையிலும் அந்தச் சப்தம் கேட்டது. புதர்களின் வழியே பார்க்கும்போது, வாயில் ஒரு தவளையைக் கௌவிக்கொண்டிருந்த தண்ணீர்ப்பாம்பு ஒன்று தென்பட்டது. பாம்புக்குத் தவளையை விழுங்கமுடியவுமில்லை ; வெளியில் விட்டுவிடவும் முடியவில்லை. தவளையின் வேதனையோ சொல்லிமுடியாது. அது ஒரு விஷமுள்ள சர்ப்பத்தின் வாயில் அகப்பட்டிருந்தால் மூன்று கத்தலோடு உயிரிழந்திருக்கும். ஆனால் இங்கோ அத்தவளையின் வேதனையும் பாம்பின் வேதனையும் சமானமாகவே இருந்தன. அது போல, ஞான சூன்யனான ஒருவன் அசட்டுத்தனத்தில் வேறொருவனை உய்விக்கும் பொறுப்பான காரியத்தில் தலையிட்டுக் கொள்வானானால் இருவருடைய துன்பத்துக்கும் முடிவிராது. சிஷ்யனுடைய அகங்காரம் அகல்வதில்லை. அவனுடைய உலகப்பற்றுக்களும் அறுபடுவதில்லை. யோக்யதையில்லாத ஆசாரியனை ஒரு சிஷ்யன் அடைந்தால் அவனுக்கு ஒருபோதும் விடுதலை யுண்டாகாது. ஆனால் தகுந்த ஆசாரியன்கீழ் ஜீவனுடைய அஹங்காரம் மூன்று கத்தல்களுடன் நசித்துப் போகும்.

214. வைத்தியர்களில் மூன்று வகையினர் இருப்பதைப் போல ஆசாரியர்களிலும் மூன்று வகையினர் இருக்கின்றனர். கூப்பிட்டபோது வந்து நோயாளியைக் கண்டு, நாடியைப் பார்த்து மருந்தைச் சொல்லிச் சாப்பிடும்படி கட்டளையிட்டுப் போகும் வைத்தியர்கள் ஒருவகையினர். நோயாளி அம்மருந்தைச் சாப்பிட மறுத்தால், அவ்வைத்தியர்கள் அவ்வ் விஷயமாக யாதொரு சிரமமும் எடுத்துக்கொள்வதில்லை. இவர்கள் அதம வைத்தியர்கள். இவர்களைப்போல சில ஆசார்யர்கள், தங்களுடைய உபதேச மொழிகளைக்கேட்டு அவைகளின்படி ஜனங்கள் நடந்தாலும் நடக்காவிட்டாலும் தாங்கள் யாதொரு கவலையுமற்றிருப்பார்கள்.

இரண்டாவது வகை வைத்தியர்கள், மருந்தைச் சாப்பிடும்படி நோயாளிக்குச் சொல்வதோடு நிற்காமல், அவன் சாப்பிட மறுத்தால், அவனோடு வார்த்தையாடி, அவனைத் தம் வழிக்குக் கொண்டுவரப் பார்ப்பார்கள். இவர்களைப்போல ஜனங்கள்

நல்வழியிலும், பகவத்ப்ரேமையிலும், ஸத்யத்திலும் நடந்தொழுக வேண்டுமென்பதற்காக நயமான வார்த்தைகளால் அவர்களைப் பல விதத்திலும் திருத்த முயலும் ஆசார்யர்கள் இரண்டாவது வகையினர்.

உத்தமர்களும் மூன்றாவது வகையினருமான வைத்தியர்கள் நோயாளி தங்களுடைய வார்த்தைகளைக் கேட்டு அதன்படி நடக்காவிட்டால் பலவந்தமாயாவது அவனைத் தம் வழிக்குக் கொண்டு வருவார்கள். அவர்கள் நோயாளியின் மார்மீது மண்டி போட்டு உட்கார்ந்து கொண்டாயினும், அவன் தொண்டை வழியாக மருந்தைச் செலுத்துவார்கள். இதைப்போல, வேண்டுமானால் பலாத்காரத்தாலும் தமது சிஷ்யர்களைச் சன்மார்க்கத்தில் நடக்கச்செய்யும் ஆசார்யர்கள் சிலர் இருக்கின்றனர். இவர்கள் தாம் உத்தம ஆசார்யர்கள்.

215. ஒரு பேர்போன பிரசங்கி ஒரு ஸமயம் பக்தி மார்க்க ஸபையில் பேசிக்கொண்டிருக்கையில், "ஈசுவரனிடம் ரஸமே (இனிமையே) இல்லை. நமது மனத்திலுள்ள ரஸத்தினால்தான் அவனை ரஸமுள்ளவனாக்கவேண்டும்" என்றார். ரஸம் என்ற வார்த்தையின் பொருள் ஆனந்தம் அன்பு முதலிய திவ்விய குணங்களென்று அவர் எண்ணியிருந்தார் போலும். இதை நான் கேட்டதும், தனது மாமனுடைய பசுத் தொழுவம் நிறையக் குதிரைகள் இருந்தனவென்று சொல்லிய ஒரு சிறுவனின் கதை எனது ஞாபகத்துக்கு வந்தது. விஷயம் தெரிந்தவர்கள், குதிரைகளைக் கட்டிவைக்கும் இடம் பசுத்தொழுவம் அல்லவென்பதை அறிந்துகொண்டு, சிறுவன் பொய் சொல்கிறானென்று அதாவது அவன் மாமனிடம் குதிரைகளே இருந்ததில்லையென்று தீர்மானிப்பார்கள்.

ஈசுவரனிடம் ரஸமே இல்லையென்று சொல்வது மதியீனம். இதினின்றும், அந்தப் பிரசங்கிக்குத் தாம் சொல்வது இன்னதென்று கொஞ்சமேனும் தெரியவில்லையென்பதும், பிரேமை ஆனந்தம் ஞானம் இவைகளின் உற்பத்தி ஸ்தானமாகிற ஸர்வேசுவரனை அவர் ஒருபோதும் அறிந்ததில்லையென்பதுமே வெளியாகின்றன.

216. பிரசங்கம் பண்ணும்போதெல்லாம், கேட்போருடைய மனத்தை உருக்கக்கூடிய சக்திவாய்ந்த பிரசாரகர் ஒருவர் இருந்தார். ஆனால் அவரிடம் யோக்யதை மட்டும் இல்லை. அவருடைய வாழ்க்கைநிலையைக்கண்டு இரங்கி நான் ஒருநாள் "அனேக ஜனங்களுடைய மனத்தை உருக்கக்கூடிய நீர் ஏன் இப்படித் தகாத காரியங்களைச் செய்கிறீர்?" என்று கேட்டேன். அவர் என்னை நமஸ்கரித்து, "ஸ்வாமி! துடைப்பக்கட்டை எல்லாராலும் புறக்கணிக்கப்படுவதானாலும் தரையிலும் தெருவிலும் உள்ள குப்பை கூளங்களைக் கூட்டி அப்புறப்படுத்துகிறதல்லவா?" என்று சொன்னார். அவருடைய வார்த்தைக்கு என்னால் தகுந்த பதில் சொல்லமுடியவில்லை.



# 9. சமய ஒழுக்கமும் சாஸ்திர ஞானமும்



217. கிரந்தங்களைப் படிப்பதினால் பகவத்ப்ரேமை யுண்டாகுமா? நாட்டில் இன்னின்ன தேதிகளில் இவ்வளவு மழை பெய்யுமென்று, வருஷவாரி மழையைப்பற்றிய முன்னறிவிப்பு இந்துக்களுடைய பஞ்சாங்கங்களில் இருக்கிறது. மழையைப் பற்றி இவ்விதம் தெரிவிக்கும் அப்பஞ்சாங்கத்தைக் கசக்கிப் பிழிந்தால் ஒரு துளி ஜலங்கூட வராது. அதைப்போல, அனேக நல் விஷயங்கள் கிரந்தங்களில் உள்ளன. ஆனால் அவைகளைப் படித்தால்மட்டும் ஒருவன் தர்மவானாகி விடமாட்டான். ஈசுவரனுடைய ப்ரேமையைப் பெறவேண்டுமானால், அக்கிரந்தங்களில் சொல்லிய நன்னெறிகளின்படி நடந்தொழுகவேண்டும்.

218. "கீதா, கீதா, கீதா" என்று அடுத்தடுத்து அவசரமாக 'கீதா' என்ற வார்த்தையை அனேகந்தரம் சொன்னால், 'த்யாகம் செய்' என்று பொருள்படும் "தாகி, தாகி" என்ற சப்தம் வருவதுபோலக் கேட்கும். "உலகப் பற்றுள்ளவர்களே, துறவு கொள்ளுங்கள், எல்லாவற்றையும் விட்டு ஈசுவரனிடம் இருதயத்தை நிலைநிறுத்துங்கள்," என்று கீதையானது ஒரே வார்த்தையில் போதிக்கின்றது.

219. "பகவானே, பகவானே" என்று ஒருவன் உரத்துக் கூவிக்கொண்டிருப்பதைக் காணும் வரையில், அவன் ஈசுவரனைக் காணவில்லை என்று நீ நிச்சயிக்கலாம். ஏனெனில் ஈசுவரனைக் கண்டவன் அமைதியை அடைந்து முற்றிலும் சாந்தனாகிறான்.

220. இரண்டு நண்பர்கள் ஒரு தோட்டத்திற்குள் சென்றனர். உலக விஷயங்களில் ஊன்றிய கவனம் உள்ளவனான ஒருவன் சிநேகிதன் உடனே அங்குள்ள மாமரங்களை எண்ணி ஒவ்வொரு மரத்திலும் எத்தனை காய்கள் இருக்கின்றனவென்று பார்த்து, அந்தத் தோட்டத்தின் சுமார் மதிப்பு எவ்வளவிருக்குமென்று திட்டம்

போடத் தொடங்கினான். அவனுடைய துணைவனோ, தோட்டக் காரனிடம் சிநேகம் செய்துகொண்டு ஒரு மரத்தடிக்குப் போய்ச் சில பழங்களைப்பறித்துத் தின்னத் தொடங்கினான். இவ்விருவரில் அதிக ஞானம் உள்ளவன் எவன்? மாம்பழங்களைச் சாப்பிடு; அதனால் உன் பசியடங்கும். மரங்களையும் இலைகளையும் எண்ணி வீண் கணக்குப் பார்ப்பதில் என்ன பிரயோஜனம்? புத்தி வன்மையால் கர்வம் அடைந்தவன் ஈசுவர சிருஷ்டி எப்படி, எங்கிருந்து உண்டாயிற்று, என்பதைக் கண்டுபிடிப்பதில் வீணாய்ப் பாடுபடுகிறான். ஞானத்தினால் அடக்கமுள்ளவனோ ஈசுவரனோடு உறவுகொண்டாடி நிரதிசயானந்தமாகிற அவனுடைய வரப்பிரஸாதத்தை அனுபவிக்கிறான்.

221. கிரந்தங்களைப் படித்துவிட்டு மட்டும், ஈசுவரனை விவரிக்க முயல்வது தேசபடத்தில் மட்டும் காசியைப் பார்த்து விட்டு, அந்நகரைப்பற்றி இன்னொருவனுக்கு விவரிக்க முயல்வதை ஒக்கும்.

222. 'ஸ, ரி, க, ம, ப, த, நி,' என்று வாயால் சொல்வது எளிது. ஆனால் ஒரு வாத்தியத்தில் இந்த ஸ்வராவளி வரும்படி செய்வது சிரமமானது. அதுபோல, தர்மத்தைப் பற்றிப் பேசுவது எளிது; அதை வாழ்க்கையில் நடத்திக் காட்டுவது சிரமமானது.

223. தேனீயானது, புஷ்பத்தின் உள்ளே இருக்கும் தேனை அடையாமல் இதழ்களுக்கு வெளியே இருக்கும் வரையில் ரீங்காரம் பண்ணிக்கொண்டு பூவைச் சுற்றிச் சுற்றி வரும்; ஆனால் பூவுக்குள் நுழைந்துவிட்டால், அமிருதத்தைச் சப்தம் செய்யாமல் குடிக்கிறது. கொள்கைகளையும் சித்தாந்தங்களையும்பற்றி ஒருவன் சண்டையிடும் வரையில் அவன் உண்மைப் பக்தியாகிய அமிருதத்தைச் சுவை பார்க்கமாட்டான். ஆனால் அவன் அதை வாஸ்தவத்தில் ருசிபார்ப்பானானால், வெகு சாந்தனாய் மனச்சமாதானமுடையவனாவான்.

224. ஒரு மனிதன் சந்தைக்கடைக்கு வெகு தூரத்திலிருக்கும்போது உருத்தெரியாத "ஹோ" என்ற சப்தத்தை மட்டும் கேட்கிறான். ஆனால் அவன் சந்தைக்குள் நுழைந்தவுடன்

ஒருவன் உருளைக் கிழங்குக்கும் மற்றொருவன் கத்தரிக்காய்க்கும் இம்மாதிரியாக மனிதர்கள் பேரம் பண்ணுவதை ஸ்பஷ்டமாகக் கேட்கிறான். ஒருவன் ஈசுவரனிடமிருந்து வெகு தூரத்துக் கப்பாலிருக்கும் வரையில் அவன் குழப்பத்திலும் காரண காரியவாதப் பிரதிவாத அமளியிலுமே இருப்பான். ஆனால் அவன் ஈசுவரனை நெருங்குங்கால் காரண காரிய வாதம், வாதப்பிரதிவாதம் எல்லாம் நின்றொழிகின்றன. தெய்வீக ரகஸ்யங்களெல்லாவற்றையும் வெகு தெளிவாயும் ஸ்பஷ்டமாயும் அறிந்துகொள்கிறான்.

225. சுடாத மாப்பலகாரம் ஒன்றைக் காய்ந்து கொண்டிருக்கும் நெய்யில் போட்டால், முதலில் படபடவென்ற சப்தமுண்டாகும். அப்பலகாரம் பொரியப் பொரிய அதன் சப்தம் குறைகின்றது. முற்றிலும் பொரிந்துவிட்டால் சப்தமெல்லாம் நின்றொழியும். ஒருவனிடம் ஞானம் அற்பமாய் இருக்கும் வரையில் அவன் வாதம் புரிந்து, பிரசங்கமும் பிரசாரமும் செய்து கொண்டு போகிறான். ஆனால் ஞானம் பூர்த்தியடைந்ததும் இவ்விதமான வீண் படாடோபங்களில் அவன் மனம் செல்வதில்லை.

226. ஆத்ம ஞானம் அடையப் பெறாத ஒருவன் நல்ல பிரசாரகனும் பிரசங்கியாயும் இருந்தால் அவனைப்பற்றி என்ன நினைப்பாய்? அவன், தன் பொறுப்பில் வைக்கப்பட்டிருக்கும் பிறருடைய பொருளை வீண் விரயம் பண்ணுபவன் போலாவான். அவன் பிறரிடமிருந்து கேட்டவற்றை அப்படியே மற்றவர்க்கு எளிதாய்ப் போதிப்பான். அவன் வெளியிடும் அபிப்பிராயங்களெல்லாம் அவனுடையன வல்ல.

227. "ராதாகிருஷ்ணா" என்ற பகவந்நாமத்தை நெட்டுருப் போட்டு நெடுநேரம் ஒரு கிளி சொல்லும். ஆனால் அது ஒரு பூனையின் கையிலகப்படுமானால், தன் சுய பாஷையை வெளிப்படுத்தி "கா, கா" என்று கத்தும். உலகப் பற்றுள்ளவர்கள் லௌகிக வெகுமானங்களை எதிர் பார்த்தவர்களாய், சிலவேளைகளில் ஹரி ஸ்மரணை பண்ணியும் தான தர்மங்களைச் செய்தும் வருகின்றனர். ஆனால், துரதிருஷ்டம், துக்கம், தரித்திரம், மரணம் இவைகள் நெருங்கும்போது, ஈசுவர ஸ்மரணையும் தான தர்மமும் அவர்களுடைய ஞாபகத்திலிருப்பதில்லை.

228. 'கஞ்சா' என்ற வார்த்தையை ஆயிரம் தரம் உச்சரித்தாலும் கஞ்சா மயக்கம் வராது. அதைக் கொணர்ந்து கசக்கிக் குழாயிலிட்டு நெருப்பு வைத்துப் புகையை இழுத்தால்தான் மயக்கம் வரும். "ஈசுவரா, ஈசுவரா" என்று உரத்துக் கத்துவதனால் பயன் என்ன? பக்தி மார்க்கத்தில் இடைவிடாது சென்றால் ஈசுவரனை நிச்சயமாகக் காணலாம்.

229. சாதாரண ஜனங்கள் மூட்டை மூட்டையாகத் தர்மத்தைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் எள்ளளவேனும் அதன்படி நடக்கமாட்டார்கள். ஞானியோ, தனது வாழ்நாள் முழுவதும் தர்மத்தையே கடைப்பிடித்து நடப்பினும் அதைப்பற்றிச் சிறிதும் வெளியே பேசமாட்டான்.

230. என்து திவ்ய மாதாவாகிற ஸரஸ்வதி தேவியினிடமிருந்து வரும் ஒரே ஒளிக்கிரணம் மஹாமேதாவியான பண்டிதனை நசுங்கிப்போன புழுவுக்குச் சமானமாக்கி அடக்கிவிடும்.

231. ஈசுவரனை அறியும் வித்தை பர வித்தை எனப்படும். சாஸ்திரங்கள், தத்வம், தர்க்கம், இலக்கணம் முதலியன்வெல்லாம் மனத்தில் பெருங் குழப்பத்தை யுண்டாக்கும். கிரந்தங்கள் எல்லாம் கிரந்தி (முடிச்சு)களைப் போன்றுள்ளன. பரவித்தையைக் கற்பிக்குமானால்தான் அவைகள் பயன்படுவனவாகும்.

232. நமது பண்டிதர்கள் வெகு தாட்டியாகப் பேசுவார்கள். பிரம்மம், ஞானயோகம், தத்வம், பதார்த்த ஞானம் இன்னும் என்ன வேண்டுமானாலும் அவைகளைப்பற்றி யெல்லாம் அவர்கள் பேசுவார்கள். ஆனால் தாங்கள் அவ்விதம் உபந்யாஸம் செய்வனவற்றை அநுபவித்தறிந்தவர் வெகு சிலர்தாம். அவர்கள் ஒன்றுக்கும் உதவாத சாரமற்றவர்கள்.

233. ஸ்ரீ சைதன்யஸ்வாமி, தக்ஷிண தேசத்தில் தீர்த்தயாத்திரை செய்தபோது, ஒரு பண்டிதர் கீதை வாசிக்கும்போதெல்லாம் அங்கிருந்து கண்ணீர் விட்டுக்கொண்டிருந்த பக்தன் ஒருவனைக் கண்டார். இந்தப் பக்தனுக்கு எழுத்து வாஸனையே தெரியாது. கீதையில் ஒரு சுலோகத்தின் அர்த்தத்தைக்கூட அவன் அறியமாட்டான். அப்படியிருக்க 'என் கண்ணும் கண்ணீருமாக இருக்கிறு'யெனக் கேட்டதற்கு, அவன், "எனக்குக் கீதை

யில் ஒரு வார்த்தைகூடத் தெரியாது என்றாலும், அது படிக்கப் படும்போதெல்லாம், குருக்ஷேத்ர யுத்த களத்தில், ரதத்தில் அர்ஜுனனுக்கு முன்னால் வீற்றிருந்து, கீதையென்று சொல்லப் படும் மேலான உபதேசங்களை வெளியிட்ட அந்த பிரபுவான கிருஷ்ண பரமாத்மாவின் சௌந்தர்ய ரூபம் என் மனக்கண் முன் னால் தோன்றிய வண்ணமாகவே இருக்கிறது. இதனால்தான் என் கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பெருகுகின்றது," என்றான்.

எழுத்து வாஸனையே இல்லாத இவனுக்குப் பூர்ண ஞான மிருந்தது ; ஏனெனில், இவனிடம் வாஸ்தவமான ஈசுவரப்ரேமை இருந்தது. அவ்வீசுவரனைத் தெரிந்துகொள்ளக் கூடியவனாகவு மிருந்தான்.

234. இந்த ஈசுவர ஞானம் கல்விச் செருக்கும் செல்வச் செருக்கு முள்ளவனுக்கு வருவதில்லை. "இங்கு ஒரு மஹானிருக் கிறார். அவரைப் பார்க்க வருகிறாயா?" என்று அப்படிப்பட்ட செருக்குள்ளவனைக் கேட்டால், அவன், தான் வரமுடியாதென்ப தற்கு ஏதாவது சாக்குப்போக்கைச் சொல்வான். தான் பெரிய மனிதன் என்றும், பிறரைப் பார்க்கப்போனால் அந்தஸ்துக்குக் குறைவுண்டாகும் என்றும் அவன் எண்ணிக்கொள்கிறான். அஞ் ஞானத்திலிருந்துதான் கர்வமுண்டாகிறது.

235. ஈசுவர ஞானம் புஸ்தகங்களின் மூலமாயல்லாமல் உண்டாகாதென்று பலர் எண்ணுகின்றனர். ஆனால், சாஸ்திரங் களைப் படிப்பதைக் காட்டிலும் கேட்பது நல்லது. அவைகளைப் பார்ப்பது, அதாவது உண்மையை அனுபவித்தறிவது உத்தம மானது. படிப்பதைக் காட்டிலும் ஆசாரியன் வாயினின்றும் உண்மையைக் கேட்பதால் விஷயம் நன்றாக மனத்தில் பதியும். பார்ப்பதோ இன்னும் நன்றாக விஷயத்தை மனத்தில் பதியச் செய்யும். காசியைப்பற்றிய விவரத்தைப் படிப்பதைக்காட்டிலும் அந்நகரத்தைப் பார்த்தவன் ஒருவன் சொல்வதைக் கேட்பது நல் லது. உத்தமமானது யாதெனில் அந்நகரை நேரில் போய்ப் பார்ப்பதுதான்.

236. ஈசுவரன் பிரத்யக்ஷ ஸ்வரூபியாக இருப்பதை நான் எனது கண்களாலேயே பார்க்கிறேன். ஆகவே, நான் ஏன் விசா

ரணை செய்யவேண்டும்? பிரம்மமே நம்மைச் சுற்றிலுமுள்ள வஸ்துக்களாக இருக்கின்றதென்பதை நான் கண் கூடாகக்காண்கிறேன். அந்தப் பிரம்மமே ஜீவனும் பிரத்யக்ஷ உலகமுமாகத் தோன்றுகின்றது. இந்த உண்மையைக் காணவேண்டுமானால் ஒருவனுக்கு ஞானக்கண் திறக்கவேண்டும். ஈசுவரன் ஒருவன்தான் வாஸ்தவத்தில் உள்ளவன் என்ற உண்மையைத் தெரிந்து கொள்ளாதவரையில், ஒருவன் "இதல்ல, இதல்ல" என்று சொல்லிக்கொண்டு சர்ச்சை செய்யவேண்டும். "எல்லாம் அவனே என்பதைச் சந்தேகமறத் தெரிந்துகொண்டேன்" என்று ஒருவன் சொல்வது மட்டும் போதாது. வெறும் வார்த்தைகளால் பயன் இல்லை. ஈசுவர கடாக்ஷத்தினால் ஆத்ம போதம் ஏற்படவேண்டும். அதன் பிறகு ஸமாதிநிலை வரும்; இந்நிலையில் ஒருவன் தனக்கு ஒரு தேகம் இருக்கிறதென்பதை மறக்கிறான். காமமும் பண ஆசையுமாகிற இவ்வுலகப் பற்றுக்களையெல்லாம் கைவிடுகிறான். ஈசுவரனைப் பற்றிய வார்த்தைகளைத் தவிர மற்ற வார்த்தைகளில் அவனுடைய மனம் செல்வதில்லை. உலக விஷயங்களைக் கேட்கும்படி சொன்னால் அவனுக்கு அதிக கஷ்டமுண்டாகிறது. ஆத்ம போதம் உண்டானால் அடுத்தபடி பரமாத்மானுபவமே; ஆத்மாவை ஆத்மாவே அறிந்தனுபவிக்கும்.

237. ஒரு வீட்டில் நடக்கும் விருந்துக்கு அநேகரை அழைத்தால், முதன் முதலில் அவர்கள் போடும் சப்தம் வெகு மும்முரமாகக் கேட்கும். சாப்பிட உட்காரும் வரையில் அச்சப்தம் இருக்கும். இலையில் அன்னம் பரிமாறி, விருந்தினர்கள் சாப்பிடத்தொடங்கியதும் முக்கால்வாசி சப்தம் நின்றொழியும். பக்ஷணம் வரும்போது, அது பரிமாறப்படப்பட இரைச்சல் குறைகின்றது. கடைசியாக தயிர் பரிமாறும்போது, அதைப் புசிக்கும் "உஸ், உஸ்" என்ற சப்தம் ஒன்றுதான் கேட்கும். விருந்து முடிந்ததும், விருந்தினர்கள் நித்திரைக்குப் போவார்கள்.

ஈசுவர ஸமீபத்தில் போகப்போக, விசாரணையும் கேள்வியும் குறைகின்றன. அவனை யணுகியதும், அவனை உண்மை ஸ்வரூபியென நேரில் கண்டதும், எல்லாச் சப்தமும் எல்லா விவாதமும் முற்றிலும் நின்றொழியும். அப்போதுதான் நித்திரை செய்யும்

காலம் வருகிறது. அதாவது, ஈசுவரனுடைய திவ்ய ரூபத்தில் திளைக்கக்கூடிய ஸமாதி நிலைமையில் ஆனந்தம் அனுபவிக்கும் காலம்.

238. சாஸ்திரங்கள் எல்லாம் ஈசுவரனை அடையவேண்டிய வழியைத்தான் காட்டுகின்றன. ஒருதரம் வழி தெரிந்துவிட்டால் அப்பால் சாஸ்திரங்களினால் என்ன உபயோகம்? அப்போது, ஈசுவரனுடன் ஏகாந்தத்தில் லயித்து ஆத்மாபிவிருத்தியைச் செய்துகொள்ளும் காலம் வருகின்றது.

239. ஒரு மனிதனுக்கு அவனூரிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அவன் உறவினன் ஒருவன் தனக்குச் சில சாமான்களை வாங்கியனுப்ப வேண்டுமென்று அக்கடிதத்தில் எழுதியிருந்தான். கடைக்குப்போக விருக்கையில், 'என்னென்ன சாமான்கள் வாங்கவேண்டுமென்பதைத் தெரிந்துகொள்ளக் கடிதத்தைப் பார்க்கப்போனான். ஆனால் அது காணாமல் போய்விட்டது. நெடு நேரம் தேடியபிறகு அகப்பட்டது. அதை வெகு ஆவலுடன் எடுத்துப் படித்துப் பார்க்கையில் "ஐந்து சேர் பக்ஷணமும் நூறு ஆரஞ்சுப் பழமும் எட்டு வேஷ்டியும் அனுப்பு" என்று எழுதியிருந்தது. சமாசாரத்தைத் தெரிந்துகொண்டதும், கடிதத்தைத் தூரப்போட்டுவிட்டு, வேண்டிய சாமான்களை வாங்கப் புறப்பட்டான்.

அப்படிப்பட்ட கடிதத்துக்கு ஒருவன் எவ்வளவு காலம் கவலைப்படுவான்? அதன் சமாசாரம் தெரியாமலிருக்கும் வரையில் தானே. சங்கதி தெரிந்துவிட்டால், அதன்படி செய்யப் பிரயத்தனப்பட வேண்டியதுதான் அடுத்த காரியம்.

இதைப் போலவே, கிரந்தங்கள் எல்லாம் ஈசுவரனிடம் போகும் வழியை, அதாவது ஈசுவரனை அறிந்து அனுபவிக்கும் மார்க்கத்தைத்தான் சொல்லுகின்றன. ஒரு தரம் மார்க்கம் தெரிந்துவிட்டால், ஈசுவரானுபவமான அந்த முடிவு ஸ்தானத்துக்குப் போகவேண்டிய முயற்சி செய்வதுதான் அடுத்துச்செய்ய வேண்டிய காரியம்.

240. சாஸ்திர ஞானத்தால் மட்டும் என்ன பயன்? பண்டிதர்களுக்கு கிரந்தங்களிலும் சுலோகங்களிலும் நல்ல பரிச்சய

யிருக்கலாம். ஆனால் அவைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்வதில் பிரயோசனமென்ன? கிரந்தங்களில் சொல்லியவற்றை யெல்லாம் அனுபவத்துக்குக் கொண்டுவரவேண்டும். ஒருவனுக்கு உலகப் பற்றுள்ள வரையில், அதாவது காமமும் காசாசையும் இருக்கும் வரையில், கேவலம் படிப்பு மட்டும் ஞானத்தையாவது மோக்ஷத்தையாவது தராது.

241. தப்பு வழியையும் மூடபக்தியையும் பற்றிப் பலர் பேசிக்கொண்டு வித்யா கர்வமடைகின்றனர். ஆனால் உண்மை யான பக்தன், தனக்கு ஈசுவரன் எப்போதும் உதவி புரிவதைக் காண்பான். அவன் சிலகாலம் வரையில் தப்புவழியில் போயிருந் தாலும் பாதகமில்லை. அவனுக்கு என்ன வேண்டுமென்பதை ஈசுவரன் அறிகிறான். கடைசியில் அவ்வீசுவரன் பக்தனுடைய இஷ்ட பூர்த்தியையும் செய்து வைக்கிறான்.

242. மாம்பழங்களைச் சாப்பிடு. தோட்டத்தில் எத்தனை யாயிரம் மரங்கள் இருக்கின்றன, எத்தனை ஆயிரம் கிளைகள், எத்தனை கோடி இலைகள் என்று கணக்கிடுவதில் பயன் என்ன? நீ இங்கே மாம்பழங்களைச் சாப்பிட வந்திருக்கிறாய்; சாப்பிட்டு விட்டுப் போ. சாதனைகள் மூலமாக ஈசுவரனை அடைய வேண் டியதற்காகத்தான் நீ இவ்வுலகில் மனிதனாகப் பிறந்திருக்கிறாய். இங்கு உனது கடமை யென்னவெனில் பக்தியைக் கூடுமான வரையில் பெறப் பார்ப்பதுதான். வீண் வாக்குவாதங்களில் ஏன் நீ தலையிட்டுக் கொண்டு சிரமப்படுகிறாய்? தத்வ வாதங்கள் உனது வாழ்க்கையை மாற்றுமா? யோசித்துப்பார். நாலு அவுன்ஸ் சாராயம் உனக்கு மதிமயக்கத்தைத் தருவதற்குப் போதுமான தாகவிருந்தால், சாராயக்காரன் கடையில் எத்தனை பீப்பாய்கள் இருக்கின்றன வென்பதைக் கணக்கிடுவதில் நீ அடையும் பயன் என்ன?

243. காலஞ்சென்ற கேசவ சந்திரஸேனர், ஒருநாள் தக்ஷி ணேசுவரம் ஆலயத்திலிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் வந்து, "ஸ்வாமி, பண்டிதர்கள் தர்ம கிரந்தங்கள் பலவற்றைப் படித்தபோதிலும், உண்மையான ஆத்ம தத்வத்தைப்பற்றி ஏன் ஒன்றுமே தெரிந்து கொள்ளாதவர்களாக இருக்கின்றனர்?"

என்று கேட்டார். அதற்குப் பரமஹம்ஸ தேவர், "பருந்தும் கழுகும் ஆகாயத்தில் வெகு உயரத்தில் பறக்கிறதை நீர் பார்க்கிறீர். ஆயினும் அவைகள், எந்தக் குழிகளில் அழுகிய பிணங்கள் கிடக்கின்றன வென்று கண்களைக் கீழே நோக்கிய வண்ணமாகவே இருக்கின்றன. அதுபோல, பண்டிதர்கள் எனப்படுகிறவர்கள், சாஸ்திரங்களைக் கற்றவர்களாக இருப்பினும் காமகாஞ்சனங்களாகிற (காமமும் பண ஆசையும்) உலகப்பற்றுக்களால் பந்தப்பட்ட மனமுடையவராக இருக்கின்றனர். ஆதலால்தான் அவர்கள் மெய்ஞ் ஞானத்தைப் பெறுவதில்லை" என்று பதில் சொன்னார்.

244. குடத்தில் தண்ணீர் மொள்ளும்போது "பக், பக்" என்ற சப்தம் உண்டாகிறது. குடம் நிரம்பியதும், அச்சப்தம் நின்று விடுகிறது. அதுபோல, ஈசுவரனைக் காணாதவன், அவ்வீசுவரனைப்பற்றிய வீண் வாதங்கள் நிரம்பியவனாக விருக்கிறான். ஆனால் அவன் ஈசுவரனைக் கண்டதும், மௌனமாகி, அந்தத் திவ்யானந்தத்தையே அனுபவிக்கிறான்.



## 10. சாதகர்களின் வகை

245. சட்டியில் வறுபடும் நெல்லில் அச்சட்டியினின்றும் குதித்தெழுந்து வெளியே வெடிக்கும் நெற்கள்தாம் நன்ருக வறுபட்டவை. அவைகள் மீது கருகிப்போன அடையாளங்களே இரா. 'சட்டியிலேயே வறுபட்ட நெற்கள் ஒவ்வொன்றுக்கும் கொஞ்சமாவது கருகிய அடையாளமிருக்கும். அதுபோல நல்ல பக்தர்களில், உலகத்தை முற்றிலும் துறந்து, வெளியே போகும் சிலர்தாம் மாசுமறுவற்ற பூர்ணர்களாவார்கள். உலகத்திலேயே கிடந்துழலும் பக்தர்களில் உத்தமமானவர்களிடமும் ஏதாவது குற்றங்குறைகள் அவர்களுடைய யோக்கியதாம்சத்தில் காணப்படும்.

246. சாதகர்கள் குரங்குக் குட்டிகளைப் போன்றவரும், பூனைக்குட்டிகளைப் போன்றவருமென இருவகைப் படுவார்கள். குரங்குக்குட்டி தன் தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகிறது. பூனைக் குட்டியோ, தாயைப்பிடித்துக்கொள்ளச் சக்தியற்ற தாய், பரிதாபகரமாகக் கத்திக்கொண்டு விட்ட இடத்திலேயே கிடக்கிறது. குரங்குக்குட்டி, தன் பிடிப்பை விடுமானல் கீழே விழுந்து காயமுறும். தன்னுடைய சொந்தச் சக்தியை நம்பிக் கொண்டிருப்பதே இதன் காரணம். பூனைக்குட்டியோ இவ்வித அபாயத்துக்கு ஆளாவதில்லை. ஏனெனில், அதன் தாயே அதை ஓரிடம் விட்டு மற்ருேரிடத்துக்குத் தூக்கிச் செல்கின்றது. இதைப்போல, ஞான மார்க்கத்தைக் கைப்பற்றிய ஆத்மார்த்தி, மோக்ஷமடைவதற்குச் சுயப்பிரயத்தனத்தையே நம்பியிருக்கிருன். பக்திமார்க்கத்தைக் கைப்பற்றிய ஆத்மார்த்தியோ எல்லாம் ஈசுவரனுடைய இச்சைப் பிரகாரம் நடக்குமென்பதைத் தெரிந்து கொள்கிருன். ஆகவே அவனுடைய கிருபைக்குப் பாத்திரனுகவேண்டுமென்று சரணுகதி பண்ணுகிருன். முன்னவன் குரங்குக்குட்டியைப் போன்றவனும், பின்னவன் பூனைக்குட்டியைப் போன்றவனுமாகிருர்கள்.

247. அதிகாலையில் கடைந்தெடுக்கும் வெண்ணெய்தான் சிலாக்கியமானது. சூரியோதயத்துக்குப் பிறகு கடையப்படும் வெண்ணெய் அவ்வளவு சிறந்ததாகாது. பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர் தமது இளஞ் சந்நியாஸிச் சிஷ்யர்களை நோக்கி, "நீங்கள் அதிகாலையில் கடைந்தெடுக்கப்பட்ட வெண் ணெய்க்குச் சமானமானவர்கள். கிரகஸ்த சிஷ்யர்களோ வெனில், பகலில் கடையப்படும் வெண்ணெய்க்குச் சமானம்," என்று சொல்லுவர்.

248. "ஹோமா" என்ற ஒருவகைப் பக்ஷி இருப்பதாக ஐதிகமுண்டு. அது எப்போதும் ஆகாயத்தில் வெகு உயரத்தி லேயே வெகு பிரியமாக வசிப்பதாயும், தரைக்கு ஒருபோதும் வருவதில்லையெனவும் கூறப்படுகிறது. அது முட்டையிடுவதும் ஆகாயத்தில்தான். பூமியின் ஆகர்ஷண சக்தியால் அம்முட்டை கள் கீழே இழுக்கப்பட்டு விழும்போது, நடுவழியிலேயே அதா வது மத்ய ஆகாயத்திலேயே அவைகளினின்றும் குஞ்சுகள் வெளிப்படுகின்றனவாம். அவ்விளங் குஞ்சுகள், கீழே விழு வதைத் தெரிந்துகொண்ட உடனே, இயற்கை உணர்ச்சியினால், மார்க்கத்தை மாற்றிக்கொண்டு, யதா ஸ்தானமாகிய ஆகாயத்தை நோக்கி மேலே பறந்து போகின்றனவாம். சுகதேவர், நாரதர், இயேசு கிறிஸ்து, சங்கராசாரியர் முதலியோர் இப்பக்ஷிகளுக்குச் சமானம். இளம்பிராயத்திலேயே அவர்களுக்கு உலகப்பற்று விட் டுப் போகின்றது. ஆதலால், உண்மை ஞானமும், திவ்வியப் பிர காசமுமாகிய உயர்ந்த பிரதேசங்களுக்கு அவர்கள் போகின்றனர்.



# 11. பகவத் ப்ரேமை



249. மாயையின் கட்டுகளினின்றும் விடுபடுவதற்கு நாம் செய்யவேண்டிய உபாயங்கள் எவை? அதன் கட்டுகளினின்றும் விடுபடவேண்டுமென்ற ஆவலுள்ளவனுக்கு ஈசுவரனே வழியைக் காட்டி யருள்கிறான். இடைவிடாத ஆவல்தான் அவசிய மானது.

250. புத்திர ஸந்தானம் கிடைக்கவில்லையென்று கண்ணீர் ஆறாகப் பெருகவிடும் மாந்தர் பலர்; செல்வத்தைப் பெறவில்லை யென்று மனம் புழுங்குபவர் பலர்; ஆனால் ஈசுவரனைக் காண வில்லையென்று துக்கித்து அழுபவர் எத்தனை பேர்? வெகு சிலரே தாம்! தேடுகிறவனுக்குத்தான் கிடைக்கும். ஈசுவரனுக்காக அழு பவன்தான் அவனைக் காண்பான்.

251. உண்மையாகவே சொல்கிறேன். ஈசுவரனை அடைய வேண்டுமென்னும் ஆவல் எவனுக்கு இருக்கிறதோ அவன் அவ் வீசுவரனைக் காண்பான். இதை உனது வாழ்க்கையிலேயே கண்டு தெரிந்துகொள்; வாஸ்தவமான பக்தியுடன் மூன்று நாள் முயற்சி செய். நிச்சயமாக நீ வெற்றி பெறுவாய்.

252. இந்தக் கலியுகத்தில் ஈசுவரனுடைய கிருபையைப் பெறுவதற்கு மூன்று நாள் தீவிரமான பக்தி செய்தால் போது மானது.

253. பண ஆசை பிடித்து அலையும் உலோபியைப்போல, உன் மனம் ஈசுவரன் மீது ஆசைகொண்டு அலையட்டும்.

254. எவனிடம் அருள் தாகமும் தியானமும் அதிகமாக விருக்கின்றனவோ அவன் ஈசுவரனை வெகு சீக்கிரத்தில் காண் பான்.

255. மனமே! ஸர்வேச்வரியாகிய ஜகன்மாதாவைப் பரி வோடு அழை. அப்போது அவள் எவ்வளவு சீக்கிரமாக உன் னிடம் ஓடி வருகிறாளென்பதைத் தெரிந்து கொள்வாய். முழு

மனதோடும் ஒருவன் ஈசுவரனை அழைப்பானானால், அவ்வீசுவரன் ஏனென்று கேளாமலிருக்க மாட்டான்.

256. "அம்மா! எனக்குப் பசிக்கும்போது என்னை எழுப்பு" என்று குழந்தை சொல்லிற்று. அதற்கு, "குழந்தாய்! உனது பசியே உன்னை யெழுப்பிவிடும்," என்று அதன் தாய் சொன்னாள்.

257. மாறாத அன்பையும், கொஞ்சமேனும் சலிக்காத திட பக்தியையும் தந்தருளவேண்டுமென்று திவ்ய மாதாவைப் பிரார்த்தித்துக் கேள்.

258. ஒரு தாய்க்கு அநேக குழந்தைகளிருக்கின்றன. ஒன்றின் கையில் ஒரு பவளத்தையும், இன்னொன்றின் கையில் ஒரு மரப்பாவையையும், மற்றொன்றினிடம் பக்ஷணங்களையும் கொடுத்திருக்கிறாள். ஆகவே, அக்குழந்தைகள், தாயை மறந்து தங்கள் தங்களுடைய விளையாட்டுப் பொருள்களில் கருத்தூன்றியிருக்கின்றன. தாயோ, தனது காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறாள். ஆயினும் பொம்மைகளைத் தூரப்போட்டு விட்டு, "அம்மா, அம்மா," என்று அழும் குழந்தையிடம் அவள் உடனே ஓடிவந்து லாலனை பாலனை செய்கிறாள். அதுபோல, ஓ மனிதனே! நீ உலக விஷயங்களில் அழுந்தியவனாய் ஜகன்மாதாவை மறந்திருக்கிறாய். அவைகளைத் தூர அகற்றி விட்டு அவளைப் பரிவுடன் அழைப்பாயானால், அவள் உடனே வந்து உன்னைத் தனது திருக்கைகளில் எடுத்துக் கொள்வாள்.

259. 'இந்த ஜன்மத்திலேயே நான் ஈசுவரனை அடைய வேண்டும்; அன்று, மூன்று நாட்களில் நான் அவனைக் காண வேண்டும்; அப்படியும் அல்ல; ஒரே ஒருதரம் அவனுடைய திவ்ய நாமத்தைச் சொன்ன மாத்திரத்திலேயே அவன் என்னிடம் வருவான்' என்று கூறும் இவ்விதத் தீவிர பக்தி யாரிடம் இருக்குமோ அவருக்கு வெகு சீக்கிரத்தில் ஈச்வர தரிசனமும் ஈசுவரானுபவமும் உண்டாகின்றன. ஆனால், சிரத்தையற்ற பக்தியுடையவர்கள், ஈசுவரனைக் காணவேண்டுமென்று ஆசைப்பட்டாலும், எளிதில் காண்பதில்லை.

260. தண்ணீரில் மூழ்கி விடுபவன், மூச்சு விடுவதற்கு மிகவும் தவிப்பதைப் போல, ஈசுவரனைக் காண்பதற்கு முன்னால்,

ஒருவனுடைய மனம் அதற்காக மிகவும் ஆசைகொள்ள வேண்டும்.

261. சாதகனுக்குப் பலம் எது! அவன் ஈசுவரனுடைய குழந்தையாகையால், கண்ணீர்தான் அவனுக்குப் பிரதானமான பலம். அழும் குழந்தையின் மனோரதத்தை அதன் தாய் பூர்த்தி பண்ணிவைப்பதைப் போல, அழுதுகொண்டிருக்கும் குமாரன் கேட்பனவற்றை யெல்லாம் ஈசுவரன் கொடுத்தருள்கிறான்.

262. ஈசுவரனைப் பற்றி ஸதா ஆவலுடன் சிந்தித்திருப்பவனுக்கு அன்னபானம் முதலிய சில்லறை விஷயங்களில் மனம் செல்வதில்லை.

263. தண்ணீர்த் தாகமுள்ளவன், ஆற்று நீர் வண்டலாக இருக்கிறதென்று அதைத் தள்ளிவிடுவதில்லை. தெளிந்த ஜலத்துக்காகக் கிணறுவெட்டத் தொடங்குவதுமில்லை. அதுபோல மத விஷயத்தில் வாஸ்தவமான தாகமுள்ளவன் தனக்கு வாய்த்த மதம் இந்து மதமாகவோ வேறு மதமாகவோ இருந்தாலும் அதைப் புறக்கணிப்பதில்லை. தனக்கென்று புதிதாக ஒரு மதத்தை எற்படுத்திக் கொள்வதுமில்லை. உண்மையிலேயே தாகமுள்ளவனுக்கு இப்படி யெல்லாம் சிந்திப்பதற்கு நேரம் கிடையாது.

264. "ஜகன் மாதாவே! மனிதர்களிடமிருந்து நான் யாதொரு கவுரவத்தையும் விரும்பவில்லை. இந்திரிய சுகங்கள் ஒன்றும் எனக்கு வேண்டாம். கங்கையும் யமுனையும் இரண்டறக் கலப்பதுபோல எனது ஆத்மாவானது உன்னிடம் வந்து புகும்படி மட்டும் கிருபை புரிவாயாக. தாயே! என்னிடம் பக்தியுமில்லை, யோகமுமில்லை. எனக்குச் செல்வமுமில்லை, துணைவர்களுமில்லை. ஒருவரிடமிருந்தும் நான் புகழ்ச்சியை விரும்புவதுமில்லை. எனதுமனம் எப்போதும் உனது பாத கமலங்களில் நித்யவாசம் பண்ணும்படி மட்டும் கிருபைபுரிவாய்."

265. "ஈசுவரனை நான் பதினன்கு வருஷங்களாகத் தேடிக்கொண்டிருக்கிறேன். ஒவ்வொருவர் சொன்ன புத்திமதிகளையும் கேட்டு அவைகளின்படி நடந்திருக்கிறேன். புண்ய க்ஷேத்ரங்கள் எல்லாவற்றுக்கும் போய் வந்திருக்கிறேன். அனேக

ஸாதுக்களையும் மஹாத்மாக்களையும் தரிசித்திருக்கிறேன். எனக்கு இப்போது ஐம்பத்தைந்து வயது ஆகிவிட்டது. என்றாலும் நான் இன்னும் ஒன்றையும் பெறவில்லை" என்றான் ஒருவன். இதைக் கேட்ட பரமஹம்ஸர், "உண்மையாகவே ஈசுவரனிடம் தீவிரமான அன்புடையவன் அவனைக் காண்பான் என்று உறுதி கூறுகிறேன். என்னைப் பார்த்து மனத்தேறுதலடை" என்று பதில் சொல்லியருளினார்.

266. விளையாட்டுப் பொருள்களையும் காசுகளையும் வேண்டும் குழந்தை, அழுது தொந்தரை பண்ணித் தன் தாயாரை வருந்திக் கேட்பதுபோல, தனக்குச் சமீபமாயும் பிரியமாயும் ஈசுவரன் இருப்பதாகத் தெரிந்துகொண்டவனும் அவ்வீசுவரனைக் காண வேண்டுமென்று உள்ளன்புடன் மனங்கசிந்து உருகுவதும் கடைசியில் திவ்ய தரிசனத்தைப் பெறுவதும் நிச்சயம். தன்னை அவ்விதம் அன்போடும் திடபக்தியோடும் தேடுப்வனுடைய திருஷ்டிக்குப் புலப்படாமல் ஈசுவரன் மறைந்திருப்பதில்லை.

267. கண்ணபிரானுடைய சரித்திரத்தையும் திருவிளையாடல்களையும் நடித்துக்காட்டும் நாடகசாலைகளில், நாடகம் ஆரம்பமாகும்போது, மேளத்தைக்கொட்டி "ஏ, கிருஷ்ணா! பிரியா, ஓடிவா," என்ற பாட்டை வாய்விட்டு உரத்துச் சொல்லுகிறார்கள். ஆனால் கிருஷ்ண வேஷத்தைப் போட்டுக் கொண்ட மனிதன் இந்தச் சப்தத்தைக் கொஞ்சமேனும் கவனிக்காதவனாய் திரைக்குள்ளே வம்பளந்துகொண்டும் சுருட்டுப் பிடித்துக்கொண்டுமிருப்பான். ஆனால், இந்தச் சப்தம் நின்றுபோய், இனிமையான மிருது கானத்துடன் நாரதபகவான் நாடகமேடையில் பிரவேசித்து, பக்தி பரவசராய் கிருஷ்ணனை அழைக்கும்போது, கிருஷ்ண வேஷதாரி, இனிமேல் அசட்டையாக விருக்கக் கூடாதென்று உணர்ந்து அவசரமாக நாடகமேடையில் பிரவேசிக்கிறான். ஈசுவரா! ஈசுவரா! என்று வாயால்மட்டும் கூவும் பக்தர்களிடம் அவன் வருவதில்லை. அவன் வரும்போது, பக்தனுடைய இருதயம் திவ்ய பிரேமையினால் இளகிப்போகும். பேச்சு அடங்கிவிடும். மிகுந்த பக்தியோடும் உள்ளன்போடும்

அழைக்கும் பக்தர்களிடம் வருவதற்கு ஈசுவரன் ஒருபோதும் காலஹரணம் செய்வதில்லை.

268. ஜகன் மாதாவிடம் தமக்கிருந்த அத்யந்த ஆவலைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னதாவது :—“ தக்ஷிணேசுவரம் ஆலயத்தில் அம்பிகையின் சாயங்கால பூஜா சமயத்தில் முழங்கும் மணி, தாளம் முதலியவற்றின் சப்தத்தைக் கேட்டவுடன் நான் கங்கைக் கரைக்கு ஓடி மனங்கசிந்து அழுது, ‘ தாயே ! இன்னொரு நாள் கழிந்து விட்டது. இன்னும் உனது தர்சனம் எனக்குக் கிடைக்கவில்லை ’ என்று சொல்லி ஜகன் மாதாவை விளித்து முறையிடுவேன் ” என்பதாம்.

269. ஈசுவரனிடம் நமக்கு எவ்வளவு தீவிரமான பக்தியிருக்கவேண்டு மென்பதை நீ அறிவாயா? தனது கணவனிடம் ஒரு கற்புடைய ஸ்திரீக்கு இருக்கும் அன்பு, தான் புதைத்து வைத்த பணத்தினிடம் ஒரு லோபிக்கு இருக்கும் ஆசை, உலகப் பொருள்களைப் பெறவேண்டுமென்று பற்றுள்ளவர்கள் கொள்ளும் ஆவல் இந்த மூன்றும் ஒன்று கூடினாற்போன்ற தீவிரபக்தியானது ஈசுவரனைக் காணவேண்டியதற்காக உன் மனத்தில் உதிக்குமானால் அப்போது அவனை நீ நிச்சயமாக அடைவாய்.

270. இயேசுகிறிஸ்து, ஒருநாள் கடற்கரை யோரமாய் உலாவிக் கொண்டிருக்கும்போது, ஒரு பக்தன் அவரிடம் வந்து “ கர்த்தரே ! ஈசுவரனை ஒருவன் எப்படி அடையக்கூடும்?” என்று கேட்டான். இயேசுகிறிஸ்து, அப்படிக் கேட்டவனோடு சமுத்திரத்தில் இறங்கி, அவனைத் தண்ணீரில் அமிழ்த்தினர். கொஞ்சநேரத்துக் கெல்லாம் அவனை விடுவித்து, கைகளைப் பிடித்துத் தூக்கி, “ உனக்கு எப்படியிருந்தது?” என்றார். பக்தன், “ எனது ஸ்திதி வெகு பரிதாபகரமாகவிருந்தது ; எனக்கு அந்தியகாலமே வந்து விட்டது போலத் தோன்றியது ” என்று பதில் சொன்னான். இதைக் கேட்ட இயேசுகிறிஸ்து, “ இப்போது தண்ணீருக்குள் இருக்கும்போது மூச்சுவிடுவதற்கு உனக்கு இருந்தது போன்ற ஆவல் ஈசுவரனைக் காண்பதற்கு இருக்குமானால் நீ அவனை நிச்சயமாகத் தரிசிப்பாய் ” என்றார்.



## 12. ஸாதன மார்க்கங்கள்



271. பழங்கள் நிறைந்த மரம் எப்போதும் கனத்தினுல் தாழ்ந்துவளையும். நீ பெருமை அடைய வேண்டுமானுல் அடக்கத்தோடும் பணிவோடும் இரு.

272. கனமான தராசுத்தட்டுக் கீழே போகிறது. லேசான தட்டோ மேலே செல்கின்றது. அதுபோல, உயர்குணமும் சாமர்த்தியமும் உள்ள மனிதன் எப்போதும் பணிவாயும் பவ்யமாயும் இருக்கிருன். முட்டாளோ வீண் அகம்பாவத்தால் கர்வம் படைத்தவனுக இருக்கிருன்.

273. குழந்தையைப் போன்ற ஸாதுக்குணம் ஒருவனுக்கு இல்லாத வரையில் திவ்ய தரிசனம் உண்டாகாது. நீ கற்ற உலக ஞானத்தை யெல்லாம் மறந்துவிட்டு, குழந்தையைப்போல களங்கமற்றவனுக இரு. அப்போது உனக்கு உண்மை ஞானம் உண்டாகும்.

274. ஒருவரும் வராத மூலையிலோ, காட்டில் தன்னந் தனியனுகவோ, உனது உள்ளமாகிய நிச்சப்தமான கோவிலிலோ ஈசுவரனைப் பற்றிச் சிந்தனை செய்.

275. காற்றில் பறந்தோடும் காய்ந்த சருகு போல நீ வீண் கர்வம் இல்லாதவனுக இரு.

276. அழுக்கடைந்த கண்ணுடியில் சூரியகிரணம் பிரதிபலிப்பதில்லை. அதுபோல, மாயைக்கு உட்பட்ட அசுத்தாத்மாக்களின் இருதயத்தில் ஈசுவர தேஜஸ் தோன்றுவதில்லை. ஆனல் ஸ்பஷ்டமான கண்ணுடியில் சூரியன் பிரதிப்லிப்பதைப் போல, சுத்தர்களுடைய மனத்தில் ஈசுவரன் தோன்றுகிருன். ஆதலால் சுத்தனுகவிரு.

277. தன்னை ஜீவனென்று நினைத்துக்கொள்பவன் ஜீவனுகவே இருந்துவிடுகிருன். தான் ஈசுவரன் என நினைத்துக்கொள்பவன் ஈசுவரனுக ஆவான். ஒருவன் தான்நினைக்கிறபடியே ஆவான்:

278. இச்சையானது கடுகளவு இருந்தாலும் ஈசுவரனைக் காண முடியாது. ஆதலால், உனது சிறிய இச்சைகளைத் திருப்தி செய்துகொண்டு, விஷயாதிகளிலுள்ள பெரிய இச்சைகளை விவேகத்தாலும் விசாரத்தாலும் ஒழித்து விடு.

279. ஒருவன் எப்போதும் ஸத்யத்தையே பேசுகிறவனாக இருந்தாலல்லாமல் ஸத்ய ஸ்வரூபியாகிய ஈசுவரனைக் காண முடியாது.

280. உயிர் வாழும்போது எவன் இறந்தவனைப்போல இருக்கிறானோ, அதாவது எவனுடைய ஆசாபாசங்கள் பிணத்தினிடத்திற் போல முற்றிலும் நசித்துப்போ யிருக்கின்றனவோ, அவன்தான் உண்மையான மனிதன்.

281. வேதங்களையும் புராணங்களையும் படிக்கவும் கேட்கவும் வேண்டும். அச்சாஸ்திரங்களில் சொல்லியபடி நடந்தொழுகவும் வேண்டும். ஹரியின் நாமத்தை வாயால் உச்சரிக்கவும் காதால் கேட்கவும் வேண்டும். சில வியாதிகளுக்கு வெளியே மருந்து தடவுவதோடு உள்ளுக்கும் மருந்து கொடுப்பது அவசியம்.

282. உனது மனப்பான்மைகளையும் கொள்கைகளையும் உன்னுள்ளேயே வைத்துக்கொண்டிரு. அவைகளைப்பற்றி வாய் விட்டுப் பேசாதே. பேசினால் உனக்குத்தான் நஷ்டம் உண்டாகும்.

283. உனது நெஞ்சுக்குத் துரோகம் செய்யாதே. மனச்சாக்ஷியின்படி நட. நிச்சயமாக உனக்கு ஜயம் உண்டாகும். கள்ளம், கபடம் அற்ற உள்ளத்தோடு பிரார்த்தனை செய். அதை ஈசுவரன் கேட்பான்.

284. அத்வைத ஞானம் முடிவானது. ஆயினும் சேவகன் எஜமானனைப் பூஜிப்பது போலவும், பக்தன் பூஜ்யனை வணங்குவது போலவும் ஈசுவரனை முதலில் ஆராதிக்கவேண்டும். இதுதான் வெகு சுலபமான வழி. இவ்வழியே சென்றால் சீக்கிரத்தில் உயர்ந்த அத்வைத ஞானத்தைப் பெறலாம்.

285. ஒரு பெரிய சக்கரவர்த்தியிடம் போகவேண்டுமானால் வாசல் காப்போனையும், ஏனைய அதிகாரிகளையும் நயந்துகொள்ள

வேண்டும். ஸர்வேசுவரனுடைய ஸந்நிதானத்தை அடையவேண்டு மானால் வெகுவாகப் பக்தி செய்து, அனேக பக்தர்களுக்குத் தொண்டுபூண்டு, நெடுநாள் ஸாது ஸஹவாஸம் செய்யவேண்டும்.

286. அகத்திக்கீரையும் தண்டுக்கீரையும் ஒன்றாகா. கற் கண்டுக் கட்டியும் சாதாரண பக்ஷணமும் ஒன்றே யாகா. முன் னவை தேகாரோக்கியத்துக்கு ஏற்றவை. பின்னவை கெடுத லானவை. வியாதியஸ்தன்கூட முன்னவையை உட்கொள்ள லாம். மஹாமந்திரமாகிய பிரணவம், வெறும் வார்த்தையல்ல; அது ஈசுவர ஸ்வரூபத்தின் ஒலி வடிவம். இதுபோல, தூய்மை யில் ஆசை, பக்தி இவை சாமான்ய லௌகீக ஆசைக்குச் சமான மெனக் கருதக்கூடாது.

287. ஆழமுள்ள கிணற்றின் விளிம்பில் நிற்பவன் அத னுள் விழுந்துவிடாமல் எப்போதும் ஜாக்கிரதையாக இருப்ப தைப்போல, உலகத்தில் வாழ்பவன் ஒருவன் அதனுடைய ஆசா பாசங்களுக்கு உட்படா வண்ணம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவ்வாசா பாசங்கள் நிரம்பிய கிணற்றில் ஒரு தரம் விழுந்து விட்டால் காயம் படாமலும் அழுக்குப் படாமலும் வெளிவருவது அசாத்தியம்.

288. மீன் பிடிப்பதில் ஆசை கொண்டவன், ஒரு குளத் தில் நல்ல மீன் அகப்படுமா என்பதைத் தெரிந்துகொள்வதற் காக, அதில் ஏற்கனவே மீன் பிடித்தவர்களிடம் போய் "இந்தக் குளத்தில் பெரிய மீன்கள் இருப்பது வாஸ்தவம்தானா? மீனைப் பிடிப்பதற்கு என்ன இரை போடுகிறீர்கள்?" என்று ஆவலுடன் கேட்கிறான். விஷயங்களைத் தெரிந்து கொண்டதும், அவன் தூண்டிற்கோலுடன் அக்குளத்துக்குச் சென்று, தூண்டிலைச் சாமர்த்தியமாகப் போட்டு, பொறுமையுடன் காத்திருக்கையில் அழகிய பெரிய மீனைப்பிடித்து விடுகிறான். அதைப்போல, ஞானிகளும் ரிஷிகளும் சொல்லும் வார்த்தையில் முழு நம் பிக்கையுடன் பக்தியாகிய இரையினாலும் மனமாகிய தூண்டிற் கோலாலும் ஈசுவரனைப் பிடித்து மனத்தில் இருத்தவேண்டும். மிக்க பொறுமையுடன் நெடுநாள் காத்திருக்கவேண்டும். அப் போதுதான் அந்தத் தெய்வமாகிய மீனைப் பிடிக்க முடியும்.

289. இந்தச் சரீரம் உபயோகமற்றதும் அழிந்து போகக் கூடியதுமானால், பக்தர்களும் ஸாதுக்களும் ஏன் அதை ஜாக்கிரதையுடன் காப்பாற்றுகிறார்கள்? உள்ளே ஒன்றுமிராத வெறும் பெட்டியை ஒருவரும் ஜாக்கிரதையாகப் பாதுகாப்பதில்லை. விலையுயர்ந்த நகைகளும், பணமும், பொருள்களும் உள்ள பெட்டியை எல்லாரும் பத்திரமாகக் காப்பாற்றுகிறார்கள். அதுபோல, பக்தர்கள், ஈசுவரன் வாசம் செய்கின்ற இந்தச் சரீரத்தைக் கவலையுடன் காப்பாற்றாமலிருக்கமாட்டார்கள். நமது சரீரங்களெல்லாம் ஈசுவரனாகிய பொக்கிஷம் நிறைந்த பெட்டிகளாம்.

290. ஆழமில்லாத குளத்தில் தேங்கியிருக்கும் ஜலத்தைக் குடிக்கவேண்டுமானால், அதைக் கலக்காமல் மெதுவாக மேல் ஜலத்தைமட்டும் எடுத்துக்கொள்ளவேண்டும். கலக்கி விட்டால், அடியிலுள்ள சேறு மேலே கிளம்பி தண்ணீர் முழுவதையும் அசுத்தமாக்கிவிடும். அதுபோல, நீ பரிசுத்தனாக இருக்கவேண்டுமானால் திடமான நம்பிக்கையுடன் அமைதியாக பக்தி மார்க்கத்தில் இடைவிடாது ஒழுகவேண்டும். சாஸ்திரங்களைப்பற்றிப் பயன்படாத தர்க்கங்கள் செய்துகொண்டு சக்தியை வீண் ஆக்காதே. அப்படிச் செய்தால் உனது சிறிய மூளை கலங்கிவிடும்.

291. வாய்விட்டு உரக்கத் தான் ஈசுவரனைப் பிரார்த்திக்க வேண்டுமோ? உனக்கு எப்படி இஷ்டமோ, அப்படிப் பிரார்த்தனை செய்யலாம். அவன் எப்போதும் உன் பிரார்த்தனையை நிச்சயமாகக் கேட்பான். எறும்பின் காலடிச் சப்தம் கூட அவனுடைய காதுகளில் கேட்கும்.

292. ஆடு மாடுகளாலும் சிறுவர்களுடைய சேஷ்டைகளாலும் கெடுதி உண்டாகாதபடி சிறு செடிகளுக்கு வேலியிட்டுக் காப்பாற்றவேண்டும். ஆனால் அச்செடி பெரிய மரமாகி விட்டால் அநேக ஆயிரம் ஆடுமாடுகள் அதன் கிளைகளின் நிழலில் தங்கி, இலைகளை வயிறு கொண்டமட்டும் தின்னலாம். அதுபோல உன்னிடம் ஈசுவர விசுவாசம் அற்பமாக இருக்கும்போது, துர் ஸஹவாசத்தினாலும் உலகப்பற்றினாலும் அதற்குக் கெடுதியுண்டாகாதபடி காப்பாற்றவேண்டும். திட நம்பிக்கை ஏற்பட்ட பிறகு, உலகப்பற்றும் கெட்ட எண்ணமும் உன்னிடம் வரப் பயப்

படும். உனது பரிசுத்த ஸஹவாஸத்தினால் அநேக கெட்டவர்கள் கூட பக்தி உடையவர்கள் ஆவார்கள்.

293. "நான் இடும் கட்டளைகளையெல்லாம் முற்றிலும் உன்னால் நிறைவேற்றமுடியுமா? உண்மையாகவே, நான் சொல்வதில் வீசம் பங்கு காரியத்தையேனும் நீ நிறைவேற்றுவாயானால் உனக்கு மோக்ஷம் நிச்சயம்," என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வதுண்டு.

294. வண்ணாத்திப் புழு, தான் கட்டும் கூண்டுக்குள்ளேயே சிக்கிக்கொள்கிறது. அதுபோல, உலகப்பற்றுள்ள ஆத்மா அதனுடைய ஆசைகளாகிய வலையில் சிக்கிக்கொள்கிறது. ஆனால் அந்தப் புழு ஒரு அழகிய வண்ணாத்திப் பூச்சியாகப் பரிணமிக்கும் போது, கூட்டை உடைத்துக்கொண்டு வெளியே வந்து வெளிச்சத்தையும் காற்றையும் ஆனந்தமாய் அனுபவிக்கிறது. அது போல, விவேகம், வைராக்கியம் என்ற இரண்டு சிறகுகளால், உலகப்பற்றில் உழலும் ஆத்மாவானது, மாயையாகிய வலையைக் கிழித்துக்கொண்டு வெளிப்படக்கூடும்.

295. விளக்கின் ஒளிப்பிழம்பைப்பற்றி ஒரே மனதாய்ச் சிந்திப்பதுதான் ஏகாக்கிர சித்தனாவதற்குச் சுலபமான மார்க்கம். அப்பிழம்பின் உள்ளே நீலவர்ணமாகத் தோன்றும் பாகம் நமது காரண சரீரத்துக்குச் சமானம். மனதை அதனிடம் நிலை நிறுத்துவதால் ஏகாக்கிர சித்த சக்தி சீக்கிரம் உண்டாகிறது. இந்த நீலமான பாகத்தைச் சுற்றியிருக்கும் பிரகாசமான பாகம் நமது சூக்ஷ்ம சரீரத்துக்குச் சமானம். இதற்கு வெளியே ஸ்தூல சரீரத்தைத் தெரிவிக்கும் பாகமுள்ளது.

296. உள்ளே இருக்கும் ஜனங்கள் விழித்துக்கொண்டிருக்கும் வீட்டில் திருடர் நுழைவதில்லை. அதுபோல, எப்போதும் நீ ஜாக்கிரதையுள்ளவனாக விருந்தால், உனது தூய்மையைக் கொள்ளை கொள்ளக்கூடிய கெட்ட எண்ணங்கள் உன் மனத்தில் நுழையமாட்டா.

297. குளத்தின் ஜலத்திலுள்ள பாசியைக் கொஞ்சம் ஒதுக்கினால், மறுபடியும் அது பரவி ஜலத்தை மறைத்துவிடும். ஆனால் மூங்கில் தட்டியால் தடுத்துவிட்டால், பாசி மறுபடியும்

வந்து மூடாது. அதுபோல, ஏதோ ஒருவேளை மாயையை அப்புறப்படுத்தினல், அது மறுபடியும் வந்து நம்மைத் துன்பப் படுத்தும். ஆனல் பக்தியாலும் ஞானத்தாலும் மனதுக்கு வேலி கட்டினல் மாயை மறுபடியும் திரும்பிவராமல் நின்றொழியும். வாஸ்தவமாக இப்படிச் செய்வதால்தான் ஈசுவரன் மானிட திருஷ்டிக்குப் புலப்படுவான்.

298. ஒரு குடும்பத்திலுள்ள சிறு நாட்டுப்பெண் (மருமகள்) தனது மாமன் மாமிக்கு மரியாதையுடன் சிஸ்ருஷை செய்து இகழாது கீழ்ப்படிந்து வந்தாலும், தனது புருஷனையே வெகு பிரியமாகக் கொண்டாடுவாள். அதுபோல உனது இஷ்ட தேவதையிடம் பூரண பக்தியோடிருந்தாலும் மற்ற தேவதைகளை இகழாதே. அவர்களைக் கவுரவமாகக் கொண்டாடு. அவர்கள் அனைவரும் ஒரே சக்தியையும் ஒரே அன்பையுமே தெரிவிக்கின்றனர்.

299. தயிரைக்கடைந்து வெண்ணெயை எடுத்தபின் அவ்வெண்ணெயை அதே பாத்திரத்தில் மோருடன் வைக்கக் கூடாது. அப்படி வைத்தால் அதன் ருசி குறைவதுடன் குழைந்தும் போகும். அதை வேறு பாத்திரத்தில் சுத்த ஜலத்தில் வைக்கவேண்டும். அதுபோல, உலகவாழ்க்கையில் இருக்கும் போது ஒருவாறு பக்குவம் அடைந்த ஒருவன், இன்னும் உலக ஜனங்களுடன் கலந்து உலகப் பாசங்களினிடையே இருந்தால், மாசுமறுவுக்கு உள்ளாகக்கூடும். உலகத்தைத் துறந்து விட்டால் மட்டுமே அவன் சுத்தனகக் கூடும்.

300. அவிழ்த்து விடப்பட்ட யானையானது மரங்களையும் செடிகளையும் வேரோடு பிடுங்கிக்கொண்டு போகிறது. ஆனல் அதன் பாகன் அங்குசத்தால் அதன் தலையில் குத்தினதும் அது சாந்தமாகி விடுகிறது. அதுபோல, அடக்கியாளாத மனம் வீண் எண்ணங்களில் ஓடுகின்றது. விவேகம் என்ற அங்குசத்தால் இடிக்கப்பட்டதும் அது சாந்தமாக அமைகின்றது.

301. பிரார்த்தனையால் வாஸ்தவமான பலன் உண்டா? உண்டு; மனமும் வாக்கும் ஒன்று சேர்ந்து ஊக்கத்தோடு ஏதேனும் ஒரு பொருளைப் பிரார்த்தித்துக் கேட்குமானல் அந்தப்

பிரார்த்தனைக்குப் பலன் கிடைக்கும். "ஈசுவரா! இவையெல்லாம் உன்னுடையவை" என்று வாயால்மட்டும் சொல்லி அவையெல்லாம் தன்னுடையவை யென்று மனத்தால் நினைக்கிறவனுடைய பிரார்த்தனைக்குப் பலன் உண்டாகாது.

302. காமம், குரோதம் முதலிய சத்துருக்களை எப்போது நாசம் செய்யமுடியுமெனக் கேட்டதற்கு, பரமஹம்ஸர் சொன்னதாவது :—இவ்வித ஆசாபாசங்கள் உலகத்தையும் உலக விஷயங்களையும் பற்றிமட்டும் இருக்கிறவரையில் சத்துருக்களாகத்தானிருக்கும். அவைகள் ஈசுவர விஷயமாக மாறினால், மனிதனுக்கு நற்றுணைகளாகும். ஏனெனில் அவைகள் அவனை ஈசுவரனிடம் அழைத்துச் செல்கின்றன. உலக விஷயங்களிலுள்ள ஆசையைக் கடவுளிடத்து ஆசையாக மாற்றவேண்டும். சகோதர ஜனங்களிடம் உண்டாகும் கோபத்தை, ஈசுவர தரிசனம் கிட்டவில்லையே யென்று கடவுளிடம் காட்டவேண்டும். இம்மாதிரி எல்லா ஆசாபாசங்களையும் மாற்ற வேண்டும். அவைகளை அழிக்கமுடியாது ; ஆனால் நல்வழியில் திருப்ப முடியும்.

303. சன்யாஸிக்குரிய காஷாய வஸ்திரத்தைத் தரித்துக் கொள்வதின் நன்மை என்ன ? உடையில் என்ன இருக்கிறது ? காஷாய வஸ்திரத்தைத் தரிப்பதால் சுத்தமான நினைவுகள் வருகின்றன. கிழிந்த வஸ்திரங்களையும் தேய்ந்த செருப்பையும் தரிப்பதால் தாழ்மைத்தனம் மனத்தில் உதிக்கின்றது. கால் சட்டை, சட்டை, பூட்ஸ் முதலியன தரித்தால் ஒருவனுக்கு இயற்கையாகவே கர்வ புத்தி உண்டாகின்றது. கருப்புக்கோடு போட்ட அங்கவஸ்திரத்தைத் தரித்தால் இன்பவாழ்க்கையின் ஞாபகம் உண்டாகி, காம ரஸமான பாட்டுக்களும் வாயினின்று வரும் ; சன்யாஸிக்குரிய காஷாயத்தைத் தரித்தால் தூய சிந்தனைகள் மனத்தில் தோன்றுகின்றன. பொதுவாக உடைக்கென்று ஒரு விசேஷணமுமில்லை ; என்றாலும், ஒவ்வொருவிதமான உடையும் ஒவ்வொரு எண்ணத்தை உண்டாக்கும்.

304. ஊசியில் நூலைக்கோர்க்க வேண்டுமானால், நூல் முனையைக் கூராக்கி, நீட்டிக் கொண்டிருக்கும் பஞ்சுத்துண்டுகளை எடுத்தெறிய வேண்டும். அப்பால், ஊசியின் காது வழி

யாக நூல் எளிதாகப் போகும். அதுபோல, ஈசுவரனிடம் உனது மனத்தையும் இருதயத்தையும் ஒருமிக்கப் பண்ண வேண்டுமானால், அடக்கத்தோடும் பணிவோடும் வீண் கர்வமில்லாதவனாய் இருந்து, ஆசைகளாகிய பரந்து நிற்கும் துரும்புகளைக் களைந்தெறியவேண்டும்.

305. "எட்டுக் கட்டம்" என்னும் காயாட்டத்தில், நடுக் கட்டத்துக்குக் காய்கள் சென்றுவிட்டால் அவை மறுபடியும் திரும்புவதில்லை. ஆயினும் அப்படிப் போவதற்கு முன்னால் காய்கள் பலகையிலுள்ள ஒவ்வொரு கட்டத்தையும் தாண்டிச் செல்லவேண்டும். நடுக்கட்டத்துக்குப் போகும் ஒற்றைக் காய், வழியில் வெட்டுப்பட்டு அடிக்கடி ஆரம்பக் கட்டத்துக்கு வரக் கூடும். ஆனால் இரண்டு காய்கள் சேர்ந்து சென்றால், இன்னொரு காயால் அவை வெட்டுப்பட்டுத் திரும்பா. அதுபோல, இவ்வுலகத்தில் குருவோடும் இஷ்ட தேவதையோடும் சேர்ந்து பக்தி மார்க்கத்தில் செல்கிறவர்களுக்கு இடைவழியில் கஷ்டமோ துக்கமோ நேருமென்ற பயமில்லை. அவர்கள் சுலபமாகச் செல்வார்கள். வழியில் சங்கடமே இராது. திரும்பி வரவுமாட்டார்கள்.

306. உலகத்தைப் பற்றிய எண்ணங்களும் கவலைகளும் உன் மனத்தைச் சஞ்சலப்படுத்தும்படி செய்து கொள்ளாதே. செய்யவேண்டிய காரியங்கள் ஒவ்வொன்றையும் அதனதன் காலத்தில் செய். ஆயினும் உன் மனம் எப்போதும் ஈசுவரனிடம் நிலைத்திருக்கட்டும்.

307. நெஞ்சில் உள்ளதையே வாயால் சொல்லு. உனது சொல்லுக்கும் நினைவுக்கும் அத்தியந்த ஒற்றுமை இருக்கட்டும். உன் மனம் உலகத்திலேயே உழன்றுகொண்டிருக்கும்போது, எல்லாம் ஈசுவரனே என்று வாயால் மாத்திரம் சொல்லிக்கொண்டிருந்தால் உனக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது.

308. பக்தன் ஏதேனும் ஒரு பிரத்யேகமான வஸ்திரத்தைத் தரிக்கவேண்டுமா? தகுந்த உடையைத் தரித்துக்கொள்வது நல்லது. ஒருவன் சன்யாஸிக்குரிய காஷாய வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், அல்லது பக்தனுக்குரிய தாளம் தம்புராக்

களைக் கைக்கொண்டிருந்தால், காமாதுரமான வார்த்தைகளைப் பேசவோ, அப்படிப்பட்ட பாடல்களைப் பாடவோ முடியாது. பகட்டான உடையைத் தரித்துக்கொண் டிருப்பவனுக்குத் தாழ்ந்த நினைவும் தாழ்ந்த பாட்டும் மனத்தெழலாம்.

309. ஈசுவரப்ரேமையுள்ளவன், ஏன் தான் அன்பு செலுத்தும் ஈசுவரன்பொருட்டுத் தனக்குள்ள எல்லாவற்றையும் தியஜிக்கிறான்? விளக்கு வெளிச்சத்தைப் பார்த்த விட்டில் பூச்சி, மறுபடியும் இருட்டான இடத்துக்குப் போகப் பிரியப்படுவதில்லை. எறும்பு சர்க்கரைக் குவியலில் இறக்குமே தவிர அதைப் புறக்கணிக்கவோ, அப்பால் போகவோ செய்யாது. அதுபோல ஈசுவர ப்ரேமையுள்ளவன் திவ்யானந்தத்தை அடைவதற்காகத் தனது வாழ்நாளைத் தியஜிக்கிறான். வேறொன்றையும் அவன் கவனிப்பதில்லை.

310. நீ அடைய விரும்பும் லக்ஷியத்துக்குத் தகுந்த ஸாதனங்களைக் கைக்கொள். "பாலில் வெண்ணெய் இருக்கிறது" என்று தொண்டை கம்மிப்போகும்படி கத்தினால் மட்டும் வெண்ணெய் கிடைக்காது. வெண்ணெயைப் பெறவேண்டுமானால், பாலைத் தயிராக்கிக் கடையவேண்டும். அதுபோல, ஈசுவரனைக் காண விரும்புவாயானால், அதற்கேற்ற ஸாதனங்களைக் கைப்பற்று. "ஈசுவரா! ஈசுவரா!" என்று சொல்வதினால்மட்டும் என்ன பிரயோஜனம்?

311. ஆத்ம சுத்திக்காக ஏற்பட்ட ஸாதனங்களின் படிகளாவன:—

1. ஸாது ஸங்கம். 2. சிரத்தை. 3. நிஷ்டை. 4. பாவம். (ஈசுவர சிந்தனையில் மூழ்கியிருக்கும் மௌன நிலை) 5. மஹாபாவம். பாவம் முதிர்ந்தால் மஹாபாவ நிலைமை வரும். அப்போது பக்தன் பித்தனைப்போலச் சில வேளைகளில் சிரிப்பான்; சில வேளைகளில் அழுவான். அவன் சரீரத்தை முற்றிலும் வசப்படுத்தி விட்டவனாதலால், அவனுக்குச் சரீரஸ்மரணையே இராது. இந்த நிலைமை, ஸாதாரணமாக ஜீவர்களுக்கு வராது. மஹாபுருஷர்களுக்கு, அதாவது, ஈசுவராவதார மஹான்களுக்கு மட்டுமே இது ஸித்திக்கும். 6. 'ப்ரேமை' அதாவது ஈசுவரனிடம் அதி-

தீவிர அன்பு. இது மஹாபாவத்துடன் சேர்ந்தே இருக்கும். இந்த நிலைமையின் இரண்டு அடையாளங்களாவன :—1. உலகத்தைப்பற்றிய ஞாபகம் இல்லாதிருத்தல். 2. சரீரமுள்பட தன்னைப்பற்றிய ஞாபகம் இல்லாதிருத்தல். இது, பக்தனையும் ஈசுவரனையும் நேருக்கு நேரே கொண்டு சேர்க்குமாதலால், பக்தன் தனது வாழ்க்கையின் லக்ஷியத்தை அடைகிறான்.



# 13. ஸத் ஸங்கம்

312. ஆத்ம சாதன அபிவிருத்திக்கு அவசியமானவை களில் ஸத் ஸங்கம் ஒன்ருகும்.

313. ஒரு பணக்கார ஜமீன்தாருடைய காரியஸ்தன் கிரா மங்களுக்குப் போகும்போது, குடிஜனங்களைப் பலவிதத்திலும் துன்பப் படுத்துகிருன். ஆனுல் அவன் யதாஸ்தானத்துக்குத் திரும்பிவந்து எஜமானன் கண்ணெதிரில் இருக்கும்போது, தனது குணத்தை மாற்றிக்கொண்டு, ஸாத்வீகம் உள்ளவன்போல நடித்து, குடி ஜனங்களைப் பிரியத்துடன் நடத்தி, அவர்களுடைய குறைகளை யெல்லாம் தீர விசாரித்து, பாரபக்ஷமின்றி நியாயம் செலுத்துவதற்கு முயல்கிருன். எஜமானரின் முன்னிலையிஞ லும் அவரிடமுள்ள பயபக்தியினுலும் குரூர காரியஸ்தன் குணவாஞகிருன். அதுபோல, ஸாது ஸங்கமானது, துஷ்டர்க ளுடைய மனத்தில் பயபக்தியைத் தோற்றுவித்து அவர்களை நல் வழிக்குக் கொண்டுவருகிறது.

314. நெருப்பில் போடப்பட்ட ஈர விறகும் சீக்கிரத்தில் உலர்ந்து எரியத்தொடங்குகிறது. அதுபோல, ஸாது ஸங்க மானது உலகப்பற்றுள்ள ஜனங்களின் மனத்திலுள்ள காமமும் ஆசையுமாகிய ஈரப்பசையை வற்றச் செய்கிறது. அப்பால் அவர் களிடம் விவேகமாகிய நெருப்பு நன்ருக எரியும்.

315. ஒருவன் எப்படித் தனது வாழ்நாளைக் கழிக்கவேண் டும்? அடுப்பில் உள்ள நெருப்பு, நன்ருய் எரிவதற்கும், அணைந்து போகாமலிருப்பதற்குமாக அடிக்கடி ஒரு இரும்புக் கம்பியால் தூண்டி விடப்படுவதைப்போல மனமும் அடிக்கடி ஸாது ஸங் கத்திஞல் தூண்டி விடப்பட வேண்டும்.

316. கொல்லன், துருத்தியால் ஊதி, தனது உலை நெருப்பு அணைந்து போகாமல் பார்த்துக் கொள்வதைப்போல, ஸத் ஸங் கத்தால் மனமானது சுத்தமாய் ஜொலிக்கும்படி பார்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

317. ஒரு யானையை நன்றாகக் குளிப்பாட்டி, அதனிஷ்டப்படி போகும்படி விட்டுவிட்டால், அது வெகு சீக்கிரத்தில் தன்னை அழுக்காக்கிக் கொள்வது நிச்சயம்; ஆனால் குளிப்பாட்டிய பிறகு, அதனுடைய தொழுவத்திலேயே அதைக் கட்டிவைத்தால் அது அழுக்காக்கிக் கொள்ளாது. அதுபோல, ஸாது ஸங்கத்தால் ஒருதரம் தூயனான நீ உலகத்தாரோடு தாராளமாகப் பழகினால் உனது தூய்மையை இழப்பது நிச்சயம். ஆனால் ஈசுவரனிடம் உனது மனத்தை நிறுத்துவாயானால், ஆத்ம விஷயமாக உனக்கு ஒருபோதும் அசுத்தமுண்டாகாது.

318. ஸத் ஸங்கமானது, அரிசி களையப்பட்ட ஜலத்துக்குச் சமானம். இந்தக் கழுநீர் போதையைத் தவிர்க்கும் குணமுடையது. அதுபோல, ஸாது ஸங்கமானது வீண் ஆபாசங்களாகிற மதுவைக் குடித்துப் போதைக்குள்ளாகியவர்களுடைய மயக்கத்தைத் தவிர்க்கிறது.

319. ஜகன்மாதாவான உமாதேவி, ஹிமவானின் புத்திரியாக அவதரித்தபோது, அந்த ஹிமவானுக்கு ஸர்வேசுவரியின் திவ்யரூபங்களை யெல்லாம் காட்டியருளினள். ஆனால், கிரிராஜன், வேத ஸ்வரூபியான பிரம்மத்தைக் காட்டும்படி அவளைக் கேட்டபோது அவள், "பிதாவே! பிரம்மத்தைக் காணவேண்டுமானால் நீர், உலகத்தை முழுவதும் துறந்தவர்களான ஸாதுக்களுடைய ஸங்கத்தில் வாழவேண்டும்" என்று சொன்னதாகப் புராணங்கள் கூறுகின்றன.



# 14. சரணாகதி



320. பொன்னையும் பித்தளையையும் உரைகல்லில் தேய்த்தால், இது பொன், இது பித்தளை என்பதைத் தெரிந்துகொள்ளலாம். அதுபோல, வாஸ்தவமான ஸாதுவையும் கபட ஸாதுவையும் இம்சை, அவதூறு ஆகிய உரை கல்லினால் கண்டுபிடித்துவிடலாம்.

321. இவ்வுலகத்திலிருக்கையில் நீ என்ன செய்யவேண்டும்? எல்லாவற்றையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்துவிடு. நீயும் அவனைச்சரணமடை; அப்பால் உனக்குத் துன்பமே இராது. எல்லாக் காரியங்களும் அவனுடைய ஆக்ஞைப் பிரகாரமே நடக்கின்றதென்பதை நீ தெரிந்து கொள்வாய்.

322. மைதானத்தில் உள்ள ஆழமில்லாத குட்டையின் ஜலத்தை ஒருவரும் உபயோகிக்காத போதிலும், அது சீக்கிரம் வற்றிப்போகும். அதுபோல, ஈசுவரனுடைய கிருபையும் அனுக்ரகமுமே கதியென்று பரிபூர்ணமாகச் சரணமடைகிற பாபியும் சில வேளைகளில் கிருதார்த்தனாவான்.

323. "வகாலமா" என்ற மார்க்கத்தைக் காட்டிலும் சுலபமானதும் சௌகரியமானதும் வேறொன்றில்லை. 'வகாலமா' என்றால் இங்கே ஸர்வேசுவரனுடைய இச்சைக்குப் பரிபூரணமாகச் சரணமடைந்து, 'எனது' என்ற அபிமானமே இல்லாதிருத்தலாம்.

324. பரிபூர்ண சரணாகதியின் தன்மை எப்படிப்பட்டது? களைப்படைந்தவன், அன்றைய வேலை முடிந்தபிறகு, தலையணையின் மீது சாய்ந்துகொண்டு, நிம்மதியாய்ப் புகைச் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருக்கும் ஆனந்த நிலைமையைப் போன்றது. துயரமும் துன்பமும் இல்லாத நிலைமையாம் அது.

325. உலர்ந்த இலைகள் காற்றினால் அங்குமிங்கும் அடித்துக்கொண்டு போகப்படுகின்றன. அவைகளுக்குச் சுயேச்சையே

கிடையாது; தாமாக ஓரிடத்துக்குப் போகவேண்டுமென்று பிரயத்தனப்படுவதில்லை. அதுபோல, ஈசுவரனைச் சார்ந்திருப்பவர்கள் அவனுடைய இச்சையின்படியே நடந்து, தமக்கென்று சுயேச்சையையும் சுயமுயற்சியையும் கொள்ளாதிருக்கின்றனர்.

326. இவ்வுலக வாழ்க்கையில் இருப்பதும் அதனைத் துறப்பதும் ஈசுவர இச்சையைப் பொறுத்திருக்கின்றன. ஆதலால், எல்லாவற்றையும் ஈசுவரனிடம் ஒப்புவித்துவிட்டு உன் வேலையைச் செய். அதைத் தவிர உன்னால் வேறு என்ன செய்ய முடியும்?

327. குரங்குக்குட்டி அங்குமிங்கும் அலையும் தன் தாயைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறது. பூனைக்குட்டியோ அப்படிச் செய்வதில்லை; பரிதாபகரமாய்க் கத்துகிறது. அதன் தாய் அதன் கழுத்தைக் கவ்வித் தூக்கிக்கொண்டு போகிறது. குரங்குக் குட்டி, தன்னுடைய பிடிப்பை விடுமானால் கீழே விழுந்து காயமடையும். ஏனெனில் அது தன் பலத்தையே நம்பியிருக்கிறது. பூனைக் குட்டியோ அப்படிப்பட்ட ஆபத்துக்குள்ளாவதில்லை. ஏனென்றால், ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்கு அதன் தாயே அதைத் தூக்கிக்கொண்டு போகிறது. தன் பலத்தையே நம்பியிருப்பதற்கும் ஈசுவரனைச் சரணமடைவதற்கும் உள்ள வித்யாசமும் இப்படிப்பட்டதுதான்.

328. ஸ்ரீமதி ராதை, தன் பதிவிரதாத்தன்மையை நிரூபிப்பதற்கு ஆயிரம் துவாரங்கள் உள்ள ஒரு பாத்திரத்தில் ஜலங்கொண்டு வரும்படி கட்டளையிடப்பட்டாள். ஒரு துளி ஜலம் கூடக் கீழே விழாமல் அவள் கொண்டுவந்தவுடன், அங்கிருந்தவர்கள் எல்லாரும் அவளைப்போல் கற்புடைய ஸ்திரீ ஒருத்தி இதுவரையில் இருந்ததுமில்லை, இனி இருக்கப்போவதுமில்லை என்று வெகுவாகச் சிலாகித்தனர். அப்போது ராதை "என் என்னைச் சிலாகிக்கின்றீர்கள்? 'கீர்த்தியெல்லாம் கிருஷ்ணனுடையதே' என்று சொல்லுங்கள். நான் கேவலம் அவருடைய பணிப்பெண்" என்றாள்.



# 15. வைராக்யம்



329. "பாம்புக்கு முன்னால் தவளை கூத்தாடட்டும். ஆனால் பாம்பு தவளையை விழுங்காமலிருக்கும்படி பார்த்துக் கொள்" என்ற பழமொழியைப்போல, நீ உலகத்தில் வாசம் பண்ணு. ஆனால் கேவலம் உலகப் பற்றுள்ளவனாக இராதே.

330. படகு தண்ணீரில் இருக்கலாம். ஆனால் தண்ணீர் படகில் இருக்கக்கூடாது. ஆத்மார்த்தி உலகத்தில் இருக்கலாம். ஆனால் உலக ஆசை அவனிடத்தில் இருக்கக்கூடாது.

331. உனது குடும்ப விஷயங்களெல்லாம் உன்னுடையன அல்லவென்றும், அவை ஈசுவரனுடையவை என்றும், நீ அவனுடைய கட்டளைப்படி நடக்கவேண்டிய தாஸனென்றும் எப்போதும் நினைத்துக்கொண்டிரு. இந்த எண்ணம் உன் மனத்தில் நிலைத்துவிடும்போது, 'உனது' என்று சொல்லக்கூடியது ஒன்றுமே இராது.

332. வேலைக்காரி எஜமானனுடைய வீட்டை "எங்களுடைய வீடு" என்கிறாள். என்றாலும் அவ்வீடு அவளுடையதல்லவென்றும், அவள் வீடு வெகு தூரத்துக்கப்பால் ஓர் குக்கிராமத்தில் இருக்கிறதென்றும் அவளுக்கு நன்றாய்த் தெரியும். அவளது நினைவெல்லாம் அவளுடைய சொந்த வீட்டைப்பற்றியேயுள்ளன. இன்னும், அவள் தன் கையில் வைத்துக்கொண்டிருக்கும் தன் எஜமானனுடைய குழந்தையை, "என் ஹரி வரவரப் பொல்லாதவனாய்விட்டான். என் ஹரி இதையெல்லாம் சாப்பிடுவான்," என்கிறாள். என்றாலும் ஹரி அவளுடைய குழந்தை யல்லவென்பது அவளுக்குத் தெரியும். என்னிடம் வருபவர்களை, இந்த வேலைக்காரியைப்போல பந்தமற்ற வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று சொல்கிறேன். இவ்வுலகத்தில் அவர்கள் வாழ்ந்தபோதிலும் அதனுடன் சம்பந்தப்படாமல் எல்லாருடைய

வும் உறைவிடமாகிய ஈசுவரனிடம் சித்தத்தைத் திருப்பவேண்டு மென்று சொல்கிறேன். பக்தியின்பொருட்டுப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று நான் அவர்களுக்குக் கூறுகிறேன்.

333. மீன்குத்திக் குருவி தண்ணீருக்குள் நன்றாய் முழுகு கிறது. என்றாலும் அதன் சிறகுகள் தண்ணீரால் நனைவதில்லை. அதுபோல, ஜீவன் முக்தரான மகான்கள் இவ்வுலகத்தில் வாழ்ந்த போதிலும் உலக விஷயங்களால் பந்தப்படுவதில்லை.

334. இவ்வுலகத்தில் இருந்தாலும் அதன் பாசங்களுள் அகப்படாத மனிதனுடைய சுபாவம் எப்படிப்பட்டது? அவன் தண்ணீரிலுள்ள தாமரை இலையைப்போலும், சேற்றில் உள்ள மீனைப்போலும் ஆகிறான். இவை யிரண்டும் அதனதன் இட விசேஷத்தால் அசுத்தமடைவதில்லை. தண்ணீரால் தாமரை இலை நனைவதில்லை. சேற்றினால் மீனினுடைய பளபளப்பான சரீரம் அழுக்காவதில்லை.

335. எச்சில் இலையைப்போல இவ்வுலகத்தில் வாழ். அது காற்றின் வசப்பட்டுளது. சில வேளைகளில் வீட்டுக்குள்ளேயும் வரும். சில வேளைகளில் அசுத்தமான இடங்களுக்கும் போகும். இப்போது நீ இங்கிருக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. சரி என்று திருப்தியோடு இரு. ஈசுவரன் உன்னை இதைக் காட்டிலும் நல்ல தான வேறிடத்தில் கொண்டுபோய் வைத்தால், அப்போது, "சித்தம்" என்று அங்கு மிருக்கவேண்டும். கொஞ்சங் கூடப் பந்தப்படாமல் அவனுடைய இச்சைப் பிரகாரமே நடக்க உட்படு. எல்லாக் காரியங்களும் யதாக்ரமம் போல நிகழட்டும்.



# 16. விக்ரக ஆராதனை



336. விளையாட்டுப் பழமும் விளையாட்டு யானையும் வாஸ்தவமான பழத்தையும் யானையையும் நினைப்பூட்டுவதைப் போல, ஆராதிக்கப்படும் விக்ரகங்கள், நித்யனும் அரூபியுமான ஈசுவரனை நினைப்பூட்டுகின்றன.

337. பிரபல விக்ரக நிக்ரகரான கேசவ சந்திர ஸேனரை நோக்கி பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னதாவது :—இந்த விக்ரகங்கள் ஏன் உமது மனத்தில் கேவலம் மண், கல் முதலிய அசேதனப் பொருள்களின் பாவனையை உண்டு பண்ணுகின்றன? நித்யையும், ஆனந்த மயியும், சர்வக்ஞையுமான லோக மாதா இந்த உருவங்களிலும் இருப்பதான மனோபாவனை ஏன் உமக்கு உண்டாகக் கூடாது?

338. தான் ஆராதிக்கும் தேவதைகளின் விக்ரகங்கள் வாஸ்தவத்தில் தெய்வீகம் வாய்ந்தவை என்று ஒருவன் நம்புவானானல் அவன் தெய்வீகத் தன்மையை அடைவான். ஆனல் அவ்விக்ரகங்கள் கேவலம் கல்லும் செம்புமே எனக் கருதுபவனுக்கு விக்ரகாராதனையால் யாதொரு பயனுமுண்டாகாது.

339. முதன் முதலில் பெரிய எழுத்துக்களாக எழுதிக் கற்றுக் கொண்ட பிறகு சிறிய எழுத்துக்களாக எழுத ஒருவன் கற்றுக்கொள்வதைப்போல, உருவமுள்ள வஸ்துவின் மீது மனத்தைச் செலுத்தி ஏகாக்ர சக்தியை ஒருவன் அடைய வேண்டும். அதில் அவனுக்குத் தேர்ச்சி உண்டான பிறகு உருவமற்ற வஸ்துவினிடம் மனத்தைச் சுலபமாகச் செலுத்தலாம்.

340. குறிபார்த்துச் சுடுபவன், முதலில் பெரிய பொருள்களைக் குறியாகக் கொண்டு சுடக் கற்றுக் கொள்ளுகிறான். அனுபவம் பெறப் பெற, சிறு குறிகளை நோக்கிச் சுடுகிறான். அது போல, உருவமுள்ள விக்ரகத்தினிடம் மனம் நிற்கும்படியான

பயிற்சி யுண்டான பிறகு உருவமில்லாத வஸ்துவினிடம் அது நிலைத்திருப்பது சுலபமாகும்.

341. பசுவினிடமுள்ள பாலானது, வாஸ்தவத்தில் அதன் சரீர முழுவதிலும் ரக்த ரூபமாய்ப் பரவியுள்ளது. என்றாலும் அப் பசுவின் காதுகளையோ கொம்புகளையோ பிசைந்தால் பால் வராது. அதற்கு அதன் முலைக்காம்புகளைப் பிடித்துக் கறக்க வேண்டும். அதுபோல, ஈசுவரன் இவ்வுலகத்தில் எல்லாவிடங் களிலும் பரவி யிருக்கிறான். ஆயினும் எல்லாவிடத்தும் அவனை உன்னால் காணமுடியாது. பூர்வ பக்தர்களுடைய குணவிசேஷம் நிரம்பிய புண்ய ஸ்தலங்களாகிய கோவில்களில்தான் அவன் சுலப மாய்த் தென்படுகிறான்.

342. குருதேவர் ஒருநாள் சிஷ்யர் ஒருவரை நோக்கிச் சொன்னதாவது :—"நீ மண்ணாலான விக்ரகங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தாய். அதற்கும்கூட ஒரு அவசியம் உண்டு. ஆத்ம பரிபக்குவத்தில் வெவ்வேறு நிலையிலுள்ள மனிதர்களுக் குத் தக்கபடி, இப்படிப்பட்ட பலவிதமான ஆராதனை மார்க்கங் கள் அமைக்கப்பட்டுள்ளன."

343. குழந்தைகளுக்கு ஆகாரம் கொடுக்கும் விஷயத்தில், ஒவ்வொரு குழந்தைக்கும் ஒத்துக்கொள்ளுகிற ஆகாரத்தையே தாய் கொடுக்கிறாள். ஒரு குழந்தைக்குக் கஞ்சி, ஒன்றுக்குச் சாதம், இன்னொன்றுக்குப் பால் இப்படியாகக் குழந்தைகளின் உடலுக்கும் ஜீரண சக்திக்கும் தக்கபடி ஆகாரம் கொடுப்பாள். அதுபோல ஜனங்களின் நிலைமைகளுக்குத் தக்கபடி பல மார்க் கங்கள் காட்டப்பட்டுள்ளன.

344. ஒரு சிஷ்யன் :—ஈசுவரனுக்கு உருவம் இருக்கிற தென்பதை ஒருவன் நம்பலாம். ஆனால் ஆராதிக்கப்படும் கல் அல் லவே அவ்வீசுவரன்?

பகவான் :—ஏன் அதைக் கல் என்கிறாய்? திவ்ய விக்ரகம் சின்மயமானது.

345. விக்ரகாராதனையில் ஏதாவது தவறுகள் இருக்கு மானாலும், அவ்வித ஆராதனையெல்லாம் தன்னைக்குறித்தே என் பது அவ்வீசுவரனுக்குத் தெரியாதா? அவைகள் தனக்கே என்ப

தைத் தெரிந்துகொண்ட ஈசுவரன், அவைகளை வெகு பிரியத்துடன் அங்கீகரிப்பான். ஈசுவரனை பக்தி செய். அதுதான் நீ உடனே செய்யவேண்டிய கடமை.

346. ஒருவன் ஈசுவரனைக் காணும்போது, விக்ரகம் முதலிய எல்லாப் பொருள்களும் ஆத்மாவின் தோற்றங்களென்பதைத் தெரிந்துகொள்வான். அப்படிப்பட்டவனுக்கு, விக்ரகம் கல்லால் " ஆக்கப்பட்டதாகத் தோன்றாமல், சின்மயமாகவே தோன்றும்.



## 17. ஈசுவர விசுவாஸம்

347. பிறரைக் கொல்வதற்குக் கத்தி முதலிய ஆயுதங்கள் வேண்டும். ஆனால் தன்னைத்தானே கொல்வதற்கு ஒரு ஊசி கூடப் போதுமானதாக விருக்கும். பிறருக்கு உபதேசம் செய்ய வேண்டுமானால் அனேகம் கிரந்தங்களையும் சாஸ்திரங்களையும் படிக்கவேண்டும். ஆனால் ஆத்மஞான மடையவேண்டுமானால், ஒரே ஒரு உபதேசத்தில் திடமான நம்பிக்கை யிருந்தால் போது மானது.

348. நன்றாய் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பில் சர்க்கரையைக் காய்ச்சவேண்டும். அதில் மண்ணும் அழுக்கும் இருக்கும் வரையில், பாகு புகைந்து சப்தமிட்டுப் பொங்கும். அழுக்கை யெல்லாம் எடுத்தெறிந்த பிறகு, புகையும் சப்தமும் இரா; பாகு வெகு சுத்தமாக மேலே வரும். பிறகு அது உறைந்து கட்டி யானாலும் அல்லது உறையாமலே இருந்தாலும் அது மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் இனிய உணவாகும். தீயைப்போன்று விசுவாசம் மனிதனைத் தூய்மைப் படுத்துகிறது.

349. ஹிந்துக்களுக்குள் பலவிதமான சமயப் பிரிவினைகளும் சம்பிரதாயங்களும் உள்ளன. நாம் அவற்றில் எதைப் பின் பற்றுவது ?

ஒருநாள் பார்வதிதேவி பரமேசுவரனை நோக்கி, "பிரபுவே ! நித்யானந்தத்துக்கு மூலகாரணமா யிருப்பது எது ?" என்று கேட்டனள். அதற்கு மகாதேவர், "விசுவாசம் தான்" என்று விடையளித்தார். ஆதலால் சமய வேறுபாடுகளைப்பற்றிக் கருதவேண்டியதில்லை. ஒவ்வொருவனும் தனது சம்பிரதாயத்துக்கு ஏற்பட்ட கடமையையும் பக்திமார்க்கத்தையும் சிரத்தையோடு செய்யட்டும்.

350. கள்ளங் கபடமற்ற ப்ரேமையோடும் சிரத்தையோடும் எவனொருவன் ஈசுவர் இச்சைக்குத் தன்னை அர்ப்பணம்

பண்ணுகிறானோ அவன் சீக்கிரத்தில் ஈசுவர சன்னிதானத்தை யடைவான்.

351. குருவின் சக்தியில் திடமான நம்பிக்கை கொண்ட சிஷ்ய னொருவன், அந்தக் குருவின் பெயரைச் சொல்லிக் கொண்டிருந்த மாத்திரத்தினாலேயே ஒரு ஆற்றின்மீது நடந்து தாண்டிப்போனான். இதைக்கண்ட குரு, “என் பெயருக்கே இவ்வளவு மகிமை இருக்கிறதா? எனது சக்தி இவ்வளவு அபா ரம் என்பதை நான் இதுவரையில் தெரிந்துகொள்ளவில்லையே” என்று நினைத்தார். மறுநாள், குருவானவர் “நான், நான், நான்” என்று சொல்லிக்கொண்டு ஆற்றின்மீது நடக்கப் பார்த்தார். ஆனால் தண்ணீரில் கால் வைத்தவுடன் அமிழ்ந்து மூழ்கிப்போய் விட்டார். அவருக்கு நீந்தத் தெரியாதாகையால் இறந்து போனார். சிரத்தையால் அபூர்வமான செய்கைகளைச் சாதிக்க லாம். ஆனால் தற்புகழ்ச்சியோ மரணத்தைத்தான் தரும்.

352. ஒரு மனிதன் ஒரு ஆற்றைக் கடக்க எண்ணினான். ஒரு ரிஷி அவனுக்கு ஒரு ரக்ஷாபந்தனத்தைக் கொடுத்து “இது உன்னை அக்கரைகொண்டு சேர்க்கும்” என்று சொன்னார். அம் மனிதன் அதை எடுத்துக்கொண்டு நீர்மேல் நடக்கத் தொடங்கி னான். பாதி ஆறு போனதும் அந்த ரக்ஷாபந்தனத்தில் என்ன இருக்கிறது என்று பார்க்க ஆவல்கொண்டு அதைப் பிரித்துப் பார்த்தான். ஒரு துண்டுக் கடிதத்தில் ஈசுவரனுடைய பெயர் எழுதப்பட்டிருந்ததைக் கண்டு “இரகசியம் எல்லாம் இது தானா?” என்று ஏளனமாய்ச் சொல்லிக் கொண்டான். அப்படிச் சொன்னவுடன் அவன் தண்ணீருக்குள் அமிழ்ந்து மூழ்கிவிட் டான். அற்புதக் காரியங்களைச் செய்வதெல்லாம் ஈசுவர நாமத்திலுள்ள விசுவாஸமே. ஏனெனில் விசுவாஸமே உயிர், சந்தேகமே மரணம்.

353. தான் செய்த பிரம்மஹத்திக்குப் பிராயச்சித்தம் எது வென்று கேட்கும் பொருட்டு ஒரு அரசன் ஒரு ரிஷி யாசிரமத் துக்குச் சென்றான். ரிஷி எங்கேயோ வெளியில் போயிருந்தார். ஆனால் அவருடைய குமாரர் அங்கிருந்தார். அரசனுடைய விஷ யங்களைத் தெரிந்துகொண்ட அவர் “பகவந் நாமத்தை மூன்று

தரம் சொல்லும். உமது பாபம் போய் விடும்" என்று சொன்னார். ரிஷி திரும்பி வந்து, தம் குமாரனால் அரசனுக்கு விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தைக் கேட்டதும், "ஒரே ஒருதரம் பகவந் நாமத்தைச் சொன்ன மாத்திரத்தில் ஜன்மாந்தரங்கள் தோறும் செய்த பாபங்களெல்லாம் நசித்து விடுமே. அப்படியிருக்க அந்த நாமத்தை மூன்று தரம் சொல்லும்படி நீ விதித்தபடியால் உனக்கு அதில் அதிக நம்பிக்கை இல்லை என்று தோன்றுகிறது. இதற்காக நீ சண்டாளனைப் போகக் கடவாய்," என்றனர். அந்தக் குமாரன் ஸ்ரீமத் ராமாயணத்தில் பிரஸ்தாபிக்கப்படும் குஹனென்.

354. ஈசுவரனைக் காணவேண்டுமானல் பகவந் நாமோச்சாரண மஹிமையில் திடமான விசுவாசம் வைத்திரு. மாயை இது, உண்மை இது என்ற விவேகத்தைப் பெற முயல்.

355. சிரத்தை உள்ளவனுக்கு எல்லாம் உண்டாகும். அது இல்லாதவனுக்கு ஒன்றும் இல்லை.

356. ஸ்ரீராமபிரான், இலங்கைக்குப் போய்ச் சேருவதற்கு முன்னல் சமுத்திரத்தில் அணைபோட வேண்டியிருந்தது. ஆனல் அவருடைய பரமபக்தனன ஹனுமான், ராமபிரானிடம் வைத்திருந்த திடபக்தியினல் சமுத்திரத்தை ஒரே தாண்டாய்த் தாண்டிவிட்டான். இங்கு எஜமானனைக் காட்டிலும் ஸேவகனே அதிகமான காரியத்தைச் சாதித்தான். காரணம் விசுவாஸம்.

357. இந்தியாவிலுள்ள "நம்பிக்கை வைத்தியர்கள்" நோயாளிகளிடம் 'எனக்கு வியாதியே இல்லை' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கும்படி கட்டளை யிடுகின்றனர். நோயாளிகள் அப்படிச்சொல்வதனல் வியாதி அகல்வதற்குச் சாதகமுண்டாகிறது. அதுபோல, ஸன்மார்க்கத்தில் நீ தாழ்ந்தவன் என்று நினைத்துக் கொண்டால் சீக்கிரத்தில் தாழ்ந்தவனகவே ஆய்விடுவாய். உன்னிடம் அளவிடப்படாத மஹிமை இருப்பதாகவே நினைத்துக்கொள். அந்த மஹிமை கடைசியில் உனக்கு வந்தே தீரும்.

358. கல்லானது தண்ணீரில் அநேக வருஷங்கள் கிடந்தாலும் அத்தண்ணீர் அதனுள் நுழையாது. ஆனல் களிமண்ணே ஜல

ஸம்பந்தத்தால் வெகு சீக்கிரத்தில் மிருதுவாகி விடுகிறது. அது போல பக்தனுடைய திடமான மனம் இம்சையாலும் சோதனையாலும் தடுமாற்றமடைவதில்லை. திடபக்தி யில்லாதவனுடைய மனமோ வெகு அற்பமான காரணத்தைக்கொண்டும் சலனமடையும்.

359. சிக்கிமுக்கிக் கல், கற்பகோடி காலம் தண்ணீரில் கிடந்தாலும் தன் உள்நெருப்பை ஒருபோதும் இழப்பதில்லை. எப்போது வேண்டுமானாலும் சரி, அதை இரும்பால் தட்டினால், நெருப்புப் பொரிபறக்கும். அதுபோலத்தான் திடசித்தமுள்ள பக்தனும். அவன், உலக பாசங்களினிடையே கலந்திருந்தாலும், அவனுடைய பக்தியும் ப்ரேமையும் குறைவுபடா. ஈசுவரனுடைய நாமத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே அவன் தன்னை மறந்தவனாய்விடுகிறான்.



# 18. வைராக்யம்



360. விவேகமும் வைராக்யமு மில்லாமல் கிரந்தங்களையும் தர்ம சாஸ்திரங்களையும் படிப்பதில் பிரயோஜனமில்லை. விவேகமும் வைராக்யமும் இல்லாவிட்டால் ஆத்மாபிவிருத்தி உண்டாகாது.

361. வெருளுகிற குதிரைக்குக் கண்மூடி போடாவிட்டால் அது நேரான வழியில் போகாது. அதுபோல, விவேக வைராக்யங்களாகிற தடைகளால் மறைக்கப்பட்ட லௌகிகனுடைய மனம் தீயவழியில் செல்லாது.

362. ஈசுவரனை எப்படி அடையலாம்? அவனைக் காண்பதற்கு உனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் நீ தியஜிக்க வேண்டும்.

363. ஈசுவரனுடைய திருவடியில் சரணமடைவது அவ்வளவு சுலபமானதா? அதைக் கைகூடாதபடி மகா மாயை தடுக்கின்றது. பிள்ளைகளில்லாத ஒருத்தி ஒரு பூனைக்குட்டியையாவது வளர்க்க ஆரம்பித்து, அதனுல் உலகப்பற்றுள்ளவள் ஆகிருள். அந்தப் பூனைக்குப் பாலும் வேறு பிரியமான ஆகாரங்களும் தேடித் திரிந்து காலம் போக்குகிருள். 'ஐயோ, பாலைத் தவிர ஒன்றையும் பருகமாட்டேன் என்கிறதே; என் செய்வேன்?' என்று முறையிடுகிருள்.

364. வைராக்யத்தில் எத்தனை விதங்கள் உள்ளன? பொதுப்படக் கூறுமிடத்து, அது தீவிரமெனவும் மிதமெனவும் இருவகைப்படும். தீவிர வைராக்யமென்பது, ஒரே ராத்திரியில் ஒரு பெரிய குளத்தை வெட்டி, உடனே அதில் தண்ணீரை நிரப்புவதற்குச் சமானமாம். மிதவைராக்யமோ, மெதுவாயும் காலம் நீடித்தும் வளரும் சுபாவமுடையது. அது எப்போது பூர்த்தியாகுமென்பதைச் சொல்லமுடியாது.

365. ஒருவன் ஸ்நானம் செய்ய ஆற்றுக்குப் போய்க்கொண்டிருக்கையில், சில நாட்களாக வேறொருவர், உலகத்தைத் துறந்து ஸந்யாஸியாவதற்குப் பிரயத்தனப்படுகிறாரென்பதைக் கேட்டான். இவ்விஷயம், ஸந்யாஸந்தான் உத்தமமான வாழ்க்கையென்னும் மனோபாவத்தை எப்படியோ இவனுக்குத் தந்தது. உடனே தான் ஸந்யாஸியாகி, உடுத்திருந்த பாதி வஸ்திரத்துடனேயே போய்விட்டான். அப்பால் அவன் திரும்பி வீட்டுக்கு வரவேயில்லை. இதுதான் தீவிர வைராக்யத்துக்குத் திருஷ்டாந்தம்.

366. ஈசுவரானுக்ரகத்தினால், துறக்கக்கூடிய சித்தம் ஒருவனுக்குச் சீக்கிரம் உண்டாகுமானால், அப்போதுதான் அவனுக்குப் பெண்ணாசை பொன்னாசை அகன்று, உலகப் பற்றுக்களின் பந்தங்களினின்றும் விடுதலை உண்டாகும்.

367. ஈசுவரன் வஸிக்கிற அறையின் திறவுகோல் எதிர்ப்புறமாகத் திரும்பும் சுபாவமுள்ளது. அவனை அடைவதற்கு உலகத்தையும் மற்றுமுள்ள எல்லாவற்றையும் தியஜிக்க வேண்டும்.

368. ஆசைகளாகிய காற்றினால் சித்தமாகிய ஆகாசம் அலைக்கப்படும் வரையில், ஈசுவரனாகிய ஒளியை அங்குக் காண்பது துர்லபமாகும். ஈசுவரனுடன் ஐக்கியமாகி சாந்தமாக இருக்கும் மனத்தில்தான் அந்தத் திவ்ய தரிசனம் தோன்றும்.

369. எண்ணெய் ஊறிய கடிதாசியில் ஒன்றும் எழுதமுடியாது. அதுபோல, துன்மார்க்கமும் பெருமித வாழ்க்கையுமாகிற எண்ணெய்ப் பசையால் கெட்டுப்போன ஆத்மாவானது பக்திக்கு உதவாது. எண்ணெய்க் கடிதாசியின்மீது சுண்ணாம்புப் பொடியைப் பரப்பினால், எழுதுவதற்கு உபயோகப்படும். அதுபோல வைராக்கியமென்னும் சுண்ணாம்புப் பொடியை அந்த ஆத்மாவின் மீது பரப்பினால், அது மறுபடியும் பக்திக்கு உரியதாகும்.

370. விஷமுள்ள ஒருவகைச் சிலந்திப் பூச்சி யிருக்கிறது. அதனால் உண்டாகும் கடி எந்த மருந்தினாலும் எளிதில் குணமடைவதில்லை. மஞ்சள் வேரினால் கடியின்மீது குழையடித்த பிறகுதான், எந்த மருந்தும் குணங்கொடுக்க ஆரம்பிக்கும். அதுபோலப் பெண்ணாசையும் பொன்னாசையுமாகிய சிலந்திப்பூச்சி

ஒருவனைக் கடித்துவிட்டால், வைராக்கியமென்னும் மனோசக்தி அவனிடம் முதன் முதலில் உதிக்க வேண்டும். அப்பால்தான் அவன் ஆத்மாபிவிருத்திக்கு அருகனாவான்.

371. தினவெடுக்கும் கடியைச் சொறிந்து கொடுக்கும் போது வெகு இன்பமாகத்தா னிருக்கிறது. ஆனால் அப்பால் உண்டாகும் உணர்ச்சியோ வெகு துன்பத்தைத் தருவதாயும் பொறுக்கக் கூடாததாயும் இருக்கும். அதுபோல உலக விஷயங்கள் முதலில் வெகு மனோகரமாகத்தா னிருக்கும். ஆனால் பிற்பட்டு உண்டாகும் பலனோ நினைப்பதற்கும் அனுபவிப்பதற்கும் பயங்கரமானதாக விருக்கும்.

372. முள்ளும் புதரும் நிரம்பிய காட்டில் பாதரக்ஷையில்லாமல் வெறுங்காலோடு நடப்பது முடியாத காரியம். ஆனால் காடு முழுவதையும் தோலால் மூடினாலாவது, தன் காலுக்குச் செருப்புப் போட்டுக்கொண்டாலாவது ஒருவன் நடக்கலாம். காடு முழுவதையும் தோலால் மூடுவது முடியாத காரியம். ஆதலால் தன் காலுக்குச் செருப்புப் போட்டுக் கொள்வதே நியாயமானது. அதுபோல, இவ்வுலகத்தில் மனிதனுக்கு அளவற்ற தேவைகளும் ஆசைகளும் உண்டாகித் துன்பத்தைக் கொடுக்கின்றன. அவைகளினின்றும் தப்பித்துக்கொள்ள இரண்டே மார்க்கங்கள்தான் உள்ளன. அவ்விதத் தேவைகளைப் பெற்றுத் திருப்தி யடைதல் ; அல்லது அவைகளை வேண்டாதிருத்தல். ஆனால் மனிதனுக்கு உண்டாகும் இச்சைகளை யெல்லாம் திருப்தி படுத்துவது முடியாத காரியம். ஏனெனில் ஒன்று திருப்தியானதும் இன்னொன்று தோன்றும். ஆதலால் கிடைத்தவற்றால் திருப்தியடைதல், உண்மை ஞானத்தைப் பெறுதல் ஆகிய இவ்விரண்டினாலும் மனிதன் தனது இச்சைகளையும் தேவைகளையும் குறைக்க வேண்டியதுதான் நியாயமான காரியம்.



# 19. ஸாதன பரிசிரமம்



373. பெரிய மீனைப்பிடிக்க வேண்டுமென்ற ஆவலுடைய தூண்டிற்காரன் இரையை முள்ளில் கோர்த்துத் தண்ணீரில் போட்டுவிட்டு, அவ்விரையை மீன் கவ்வும் வரையில் வெகு பொறுமையுடன் கவனமாய்க் காத்துக்கொண் டிருக்கிறான். அது போல, பொறுமையுடன் ஸாதன மார்க்கங்களை அனுஷ்டிக்கும் பக்தன் கடைசியில் ஈசுவரனைக் காண்பது நிச்சயம்.

374. புதிதாகப் பிறந்த கன்றுக்குட்டி, நிற்கக் கற்றுக் கொள்வதற்கு முன்னால், தட்டித் தள்ளாடிப் பலதடவை கீழே விழுகின்றது. அதுபோல ஸாதன மார்க்கத்தில் கடைசியாக ஜயம் பெறுவதற்கு முன்னால் அநேகம் தவறுகள் அடிக்கடி நேரிடும்.

375. காளிதேவியைப் பிரத்யக்ஷமாகக் காணவேண்டிய இருவர் ஓர் அமாவாசை இருட்டில் சுடுகாட்டுக்குச் சென்று "சவ ஸாதனம்" என்ற ஒரு பயங்கரமான கிரியையைத் தொடங்கினராம். ராத்திரியின் பூர்வபாகத்தில் உண்டான பயங்கரமான காட்சிகளைக் கண்டு ஒருவன் பயந்து பித்துக்கொண்டவனாகி விட்டான். ராத்திரியின் முடிவில், மற்றவனுக்குத் தேவி தரிசனம் கொடுத்தருளினள். அவன் அப்போது தேவியை நோக்கி "தாயே! என் மற்றவன் பித்துக்கொண்டவனானான்?" என்று கேட்டான். அதற்குத் தேவி "குழந்தாய்! நீயும் இதற்குமுன் பல பிறவிகளில் பல தடவை இப்படிப் பித்துக்கொண்டவனானாய். இப்போதுதான் கடைசியாக என்னைத் தரிசித்தாய்" என்று பதில் சொல்லி யருளினாள்.

376. பாத்திரத்தின் அடியில் நெருப்பு எரிந்துகொண் டிருக்கும் வரையில், அதிலுள்ள பால் கொதித்துப் பொங்கும்.

நெருப்பை எடுத்துவிட்டாலோ, பொங்குதல் நின்றுவிடும். அது போல ஸாதன மார்க்கத்தில் இருக்கும்வரையில்தான் புதிய ஆத்மார்த்தியின் மனம் குதூஹலத்தால் பொங்கும்.

377. கருமானின் பட்டரையைப் பார். எவ்வளவு பலமாக அடிபட்ட போதிலும் அது தன் இடம் விட்டு நகருவதில்லை. அதைப் பார்த்துப் பொறுமையையும் உறுதியையும் மனிதர்கள் கற்றுக்கொள்ளட்டும்.

378. திசையறி கருவியின் நுனி எப்போதும் வட திசையையே காட்டும்வரையில் கப்பலானது தனது மார்க்கத்தைவிட்டு விலகிப்போய் ஆபத்துக்குள்ளாவதில்லை. வாழ்க்கையாகிய கப்பலின் திசையறி கருவியாகிய மனிதனுடைய மனமானது பரப்பிரம்மத்தையே எப்போதும் நோக்கி அசைவற்றிருக்குமாகில் அது ஒவ்வொரு ஆபத்தையும் தாண்டிப்போகும்.

379. கல்கத்தாவுக்குச் செல்வதற்கு அனேகம் பாதைகள் இருக்கின்றன. ஸந்தேஹ ஆஸாமி ஒருவன், வெகு தூரத்துக்கப்பாலுள்ள கிராமத்திலிருந்து அத்தலைநகர்க்குப் போகப் புறப்பட்டான். வழியேசென்று ஒருவனைப் பார்த்து, "கல்கத்தாவுக்குச் சீக்கிரம் போகவேண்டுமானால் எந்தப் பாதை வழியாகப்போகவேண்டும்?" என்று கேட்டான். "இந்தப் பாதை வழியே போ" என்று அம்மனிதன் ஒரு வழியைக் காட்டினான். ஸந்தேஹ ஆஸாமி அவ்வழியே கொஞ்ச தூரம் சென்றதும், அங்கொரு மனிதனைக் கண்டு, "இதுதானா கல்கத்தாவுக்குச் சீக்கிரமாகப் போகும் மார்க்கம்?" என்று கேட்டான். அவன், "இது அன்று, திரும்பிப்போய் இடது பக்கமாகப் பிரியும் பாதை வழியே செல்," என்றான். ஸந்தேஹி அப்படியே அந்தப் புதிய வழியில் கொஞ்ச தூரம் சென்றதும், இன்னொரு மனிதனைக் கண்டு கல்கத்தாவுக்கு வழியைக் கேட்க, அவன் வேறொரு பாதையைக் காட்டினான். இப்படி நமது ஸந்தேஹி முன்னோக்கிப் போகாமல் ஒரு பாதையிலிருந்து மற்றொரு பாதைக்கு மாறுவதிலேயே பகற்போதைக் கழித்துவிட்டான். கல்கத்தாவுக்குப் போகவேண்டுமென்று வாஸ்தவமாக விரும்புகிறவன் யோக்கியன் ஒருவன் காட்டும் வழியொன்றைப் பின்பற்றிப் போகவேண்டியதைப்போல, ஈசு

வரனை அடையவேண்டுமெனப் பிரியப்படுகிறவர்கள் ஒரே ஒரு வழிகாட்டியைப் பின்பற்றிச் செல்லவேண்டும்.

380. நீந்தக் கற்றுக்கொள்ள விரும்புகிறவன், கொஞ்ச நாட்கள் நீந்துதலை அப்பியசிக்கவேண்டும். ஒரே ஒருநாள் அப்பியசித்த பிறகு கடலில் நீந்துவதற்கு ஒருவனும் துணியமாட்டான். அதுபோல, பிரம்மமாகிய கடலில் நீந்தப் பிரியப்பட்டால் முதலில் அனேகம் தரம் பயன்படாத பிரயத்தனங்கள் செய்து தீரவேண்டும். அப்போதுதான் அங்கு நீந்தக்கூடிய சக்தி உனக்கு உண்டாகும்.

381. கிழிந்த மூட்டையிலிருந்து சிதறி நாலா பக்கங்களிலும் ஓடிய கடுகைப் பொறுக்கியெடுப்பது சிரம சாத்தியம். அதுபோல, பல திசைகளிலும் ஓடி உலக விஷயங்கள் பலவற்றிலும் உழலும் மனத்தைக் குவியச்செய்து ஒருமைப்படுத்துவது சுலப சாத்தியமன்று.

382. பன்னிரண்டு வருஷங்களாக மழை பெய்யாது போனாலும் பரம்பரைக் குடியானவன் நிலத்தைச் சாகுபடி செய்யாமல் தவிர்ந்திருப்பதில்லை. ஆனால் கிருஷித் தொழிலைப் புதிதாகக் கைக்கொண்ட வாணிபனை அதைரியப்படுத்துவதற்கு ஒரே வருஷம் மழை இல்லாவிட்டாலும் போதும். ஆயுளளவும் பக்தி செய்தும் ஈசுவர தரிசனத்தைப் பெறாதிருந்தாலும், உண்மையான பக்தி உள்ளவனுக்கு ஒருபோதும் மனத் தளர்ச்சி உண்டாவதில்லை.

383. பதியே தெய்வமாகக்கொண்ட கற்புடைய ஸ்திரீ ஒருத்தி, இறந்த பிறகும்கூடத் தன் கணவனுடன் ஸதா ஸர்வ காலமும் உடனுறைவதைப்போல, தனது இஷ்ட தேவதையையே முற்றிலும் நம்பியிருப்பவன் நிச்சயமாக ஈசுவரனுடன் ஐக்கியமாவான்.

384. "பித்தளைப் பாத்திரத்தைத் தினந்தோறும் தேய்க்காமற் போனால் களிம்பு ஏறிவிடும். அதுபோல தினமும் தேவதா உபாஸனை செய்யாத மனிதனுடைய மனம் மாசடையும்," என்று தோதாபுரி சொல்வதுண்டு. இதற்குப் பதிலாக இராமகிருஷ்ணர் ஒருசமயம் சொன்னதாவது:—" அப்பாத்தி

ரம் பொற் பாத்திரமாக விருந்தால் தினந்தோறும் சுத்தம் பண்ணவேண்டிய அவசியமிராது. ஈசுவரனை யடைந்த மனிதனுக்குப் பிரார்த்தனையும் தபசும் வேண்டியதில்லை.''

385. பக்தியையும் ப்ரேமையையும்பற்றிய ரகஸியங்களைத் தினந்தோறும் உன் ஆயுள் உள்ளளவும் கற்றுக்கொள். அது உனக்கு எப்போதும் பலனைத் தரும்.

386. நமது உள்ளத்தில் சிற்சில வேளைகளில்தான் சாந்தி உண்டாகிறது. ஆனல் என் அது நிலைத்திருப்பதில்லை?

மூங்கிலைப் போட்டு எரிக்கும் நெருப்பு, இடைவிடாது தூண்டப்படாது போனல், சீக்கிரத்தில் அணைந்துபோம். ஆத்மீய நெருப்பு எப்போதும் ஜ்வலித்துக்கொண்டிருக்க வேண்டுமானல் இடையறாத பக்தி அவசியம்.

387. மனம் நீக்ரோவின் தலையிலுள்ள சுருட்டை மயிருக்குச் சமானம். அதை இழுத்துப் பிடித்திருக்கும் வரையில் நீளமாயிருக்கும். ஆனல் பிடிப்பை விட்டதும், பழையபடி அது சுருண்டுவிடுகிறது. அதுபோல, மனம் பலவந்தமாக அடக்கி நிறுத்தப்பட்டிருக்கும்வரையில் நன்ருய் வேலை செய்து நற்பயன் விளைவிக்கும். ஆனல் சற்று ஜாக்கிரதைக் குறைவு ஏற்படுமானல், உடனே அது ஸன்மார்க்கத்தைவிட்டு விலகிவிடும்.

388. ஒரு மண் பாத்திரத்தில் ஜலத்தை நிரப்பி, அதை வெளியே ஓரிடத்தில் வைத்திருந்தால் சில நாளில் அந்த ஜலமெல்லாம் வற்றிப்போய்விடும். ஆனல் அப் பாத்திரத்தை ஜலத்துக்குள்ளேயே அமிழ்த்தி வைத்தால், அது அங்கிருக்கும்வரையில் ஜலமும் அதில் இருக்கும். ஈசுவரனிடம் உனக்கிருக்கும் ப்ரேமையும் அப்படிப்பட்டதுதான். கொஞ்ச காலத்துக்கு உன் மனத்தை ஈசுவர ப்ரேமையால் நிரப்பிவிட்டு, பின் உலக விஷயங்களில் பிரவிர்த்தித்து அவனை முழுவதும் மறந்திருந்தால் உன் மனம் பழையபடி பக்தியற்றுச் சூன்யமாவது நிச்சயம். ஆனல் திவ்யப்ரேமையிலும் விசுவாசத்திலும் உன் மனம் எப்போதும் அமிழ்ந்திருக்குமானல், அது ஸதா ஸர்வகாலமும் அந்த சிலாக்யமான ப்ரேமையால் கரை புரண்டு கொண்டேயிருக்கும்.

389. ஆழமான கடலில் முத்துக்கள் இருக்கின்றன. ஆனால் அவைகளை எடுப்பதற்கு ஒருவன் எல்லாவித ஆபத்துக் களுக்கும் துணியவேண்டும். கடலில் ஒருதரம் மூழ்கியதில் உனக்கு முத்துக்கள் அகப்படாதுபோனால், அக்கடலில் முத்துக் களே இல்லையென்று தீர்மானித்து விடாதே. அடிக்கடி முழுகு; கடைசியில் உனக்குப் பலன் கிடைக்கும். உலகத்தில் ஈசுவர தரி சனமும் அப்படிப்பட்டதேயாம். அவனைக் காண வேண்டு மென்று நீ செய்யும் முதல் பிரயத்தனம் பயனற்றதாகுமானல் நீ அதைரியப்படக்கூடாது; அம்முயற்சியால் இன்னும் பரிசிரமப் படு. கடைசியில் நீ ஈசுவரனை நிச்சயமாகக் காண்பாய்.

390. ஞானத்தை யெல்லாம் ஒரே சமயத்தில் உபதேசிக்க முடியாது.



# 20. ஸாதன விக்னம்

391. அதைரியம், த்வேஷம், பயம் இவைகள் குடிகொண்டிருக்கு மிடத்துக்கு ஈசுவரன் வருவதில்லை.

392. எப்படிப்பட்ட மன நிலைமையில் ஈசுவரதரிசனம் உண்டாகும்? மனம் அமைதியுற்றிருந்தால் ஈசுவரனைக் காணலாகும். மனமாகிய கடல் ஆசைகளாகிய காற்றால் சலனமடைந்திருந்தால், அதில் ஈசுவரனுடைய பிரதிபிம்பம் தோன்றாது. அப்போது ஈசுவர தரிசனமும் கிட்டாது.

393. தீயவழியில் செல்லும் மனம், நீசர்கள் மத்தியில் வசிக்கும் பிராம்மணனையும், பெரிய நகரத்தின் அசுசியான இடத்தில் குடியிருக்கும் கனவானையும் ஒக்கும்.

394. அதிக வணக்கமுள்ளவர்களைப்போலக் காட்டிக்கொள்ளும் அநேகர் "நான் மண்ணில் புரளும் புழுவைப் போன்றவன்" என்று சொல்லுகின்றனர். தங்களைப் புழுவெனவே நினைத்துக்கொள்வதனால் அவர்கள் நாளடைவில் புழுவைப்போல திடசித்த மில்லாதவர்களாகி விடுகின்றனர்.

395. நூலின் நுனியில் சிறிதளவு பிளவு இருந்தாலும் ஊசியின் காது வழியே செல்லாது. அதைப்போல, ஆசைகள் அற்ப மிருந்தாலும் ஒருவன் ஈசுவர ஸந்நிதானத்தை அடைய மாட்டான்.

396. வயிறு நிறைந்து அஜீரணத்தால் அவஸ்தைப்படும் போதுகூட, இன்சுவைப்பண்டங்களைக் கண்டதும் நோயாளியின் நாக்கில் ஜலம் ஊறும். அதுபோல மனிதன் ஆசைகள் லவலேசமு மில்லாத தூயனாக விருந்தாலும், அவனுடைய மனம் செல்வத்தையும் மற்றைய சுகானுபவப் பொருள்களையும் காணும்போது தடுமாறுவது ஸஹஜம்.

397. பிறருடைய குண தோஷங்களைப்பற்றிப் பேசுவதில் காலத்தைச் செலவிடுபவன் தன் காலத்தை வீணிலே கழிப்பவ

ஞகிறன். ஏனெனில் அப்படிச் செலவிடப்பட்ட காலம் தன்னை யாவது ஈசுவரனையாவது பற்றிச் சிந்திக்கப்படாமல் பிறரைப் பற்றி யாதொரு பிரயோசனமுமில்லாமல் சிந்திக்கப்பட்ட கால மாகும்.

398. பெரிய களஞ்சியங்களின் வழிக்கதவு முன்னால் எலி களைப் பிடிப்பதற்காக நெற்பொரிவைத்த யந்திரங்கள் வைக்கப் பட்டிருக்கும். எலிகள், பொரியின் வாசனையை நுகர்ந்து, களஞ் சியத்தின் அரிசியைத்தின்று களிக்கும் சுகத்தை மறந்து, யந்திரத் தில் அகப்பட்டுச் சாகின்றன. ஆத்மாவும் அவ்வெலிகளைப் போலத்தான். அது திவ்யானந்தத்தின் வாசற்படியில் நிற்கிறது. அந்தத் திவ்யானந்தமோ, கோடிக்கணக்கான விஷய ஸுகங்கள் ஒன்றுகத் திரண்டன போன்றுள்ளது. என்றாலும், ஆத்மா வானது அந்தப் பேரின்பத்தை அனுபவியாமல் உலக விஷய மாகிய சிற்றின்பத்தின் வசப்பட்டு, மாயையாகிய வலையில் வீழ்ந்து, அதிலேயே இறந்தொழிகின்றது.



# 21. *பெண்ணாசை பொன்னாசை

399. ஈசுவரனை அடைய விரும்புவோரும் ஸாதன மார்க்கத்தில் அபிவிருத்தியைக் கோருவோரும் பெண்ணாசை பொன்னாசையாகிய வலையில் விழாமல் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் ஒருபோதும் பரிபூர்ணர்களாகார்.

400. விஷப்பாம்புகள் நடமாடும் வீட்டில் வசிப்பவர்கள் எப்போதும் வெகு ஜாக்ரதையாக இருப்பதைப்போல, உலகத்தில் வாழும் மக்கள் காமத்துக்கும் காசு ஆசைக்கும் உட்படாமல் எப்போதும் ஜாக்கிரதையுடனிருக்க வேண்டும்.

401. நீர்ப்பானையின் அடியில் வெகு சிறிய துவாரமொன்று இருந்தாலும் அதன் வழியாக ஜலமெல்லாம் ஒழுகிவிடும். அது போல சாதகன் ஒருவனது மனத்தில் உலகப்பற்று வெகு அற்பமாக விருந்தாலுங்கூட அவனது பிரயத்தனங்களெல்லாம் வீணாய் முடியும்.

---

* பெண்ணாசையை மனிதர்கள் விட்டொழிக்க வேண்டுமென்று பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் உபதேசிப்பதிலிருந்து, பெண்களெல்லாம் கொடியவர்களென்றாவது, அவர்களின்மேல் வெறுப்புக்கொள்ள வேண்டுமென்றாவது சொல்வதாகக் கொள்ளுதல் கூடாது. அவர் தமது வாழ்க்கையிலும், உபதேச மொழிகளிலும் பெண் மக்களை சக்தி—ஜெகன்மாதாவின் அவதார ரூபங்களாகவே கருதியுள்ளார். ஆண், பெண் இருபாலரும் சிற்றின்ப விஷயங்களில் அகப்பட்டு பகவானை மறக்கக்கூடாதென்பதை வற்புறுத்தவே, ஆத்ம லாபமடைய விரும்புபவன் பெண்ணாசையை யொழித்தல் வேண்டுமெனக் கூறினார். ஆண் மக்களைப்போன்று பெண் மக்களுக்கும், இவ்வுபதேசம் இன்றியமையாததென்க் கொள்ளல் வேண்டும்.

402. தர்பஜுரத்தினுல் பிதற்றுகிறவன் சமீபத்தில் குளிர்ந்த ஜலத்தையும் இனிமையான தின்பண்டங்களையும் வைத்திருந்தால் அவன் அத் தண்ணீரை அருந்தாமலும் தின்பண்டங்களை ருசி பார்க்காமலும் இருப்பானு? அதுபோல, காமஜுரத்தினுல் வாதைப்பட்டு சிற்றின்பங்களில் ஆசைவைத்த உலகப்பற்றுள்ளவன் ரூபலாவண்யங்களின் வனப்பினிடையும் செல்வத்தின் கவர்ச்சியின் மத்தியிலும் இருந்தால் அவனுல் ஆசையை அடக்க முடியாது. அவன் பக்தி மார்க்கத்தை விட்டுப் புறம்பே போவது நிச்சயம்.

403. பெண்ணுசையும் பொன்னுசையும் உலகமுழுவதையும் பாபத்தில் அமிழ்த்திவிட்டன. ஸ்திரீகளை, லோகமாதாவின் தோற்றங்களென்று கருதுவாயாஞல், உனக்கு அவர்களால் துன்பமுண்டாகாது.

பெண்ணுசையும் பொன்னுசையும் நசிக்காதிருக்கும் வரையில் ஈசுவரனைக் காணமுடியாது.

404. நித்யானந்தர் ஸ்ரீ சைதன்ய ஸ்வாமியை நோக்கி "ஸ்வாமி! பகவத்ப்ரேமை விஷயமாக நான் உபதேசித்தவையெல்லாம் என் மனிதர் மனத்தில் யாதொரு பலனையும் கொடுக்கவில்லை?" என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ சைதன்யர் "அவர்கள் ஸ்திரீகளோடு சேர்ந்திருப்பதால், உயர்ந்த உபதேசங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளச் சக்தியற்றிருக்கின்றனர். நித்யானந்தரே! உலகப்பற்றுள்ளவர்களுக்கு மோக்ஷமே கிடையாது" என்று பதில் சொன்னுர்.

405. எல்லாவற்றையும் விழுங்கியது மாயையோ அல்லது மாதோ?

406. பெண்ணுசை பொன்னுசைகளைப் பூர்த்தி செய்துகொள்வதில் அனேகந்தரம் அவமானமடைந்தாலும், உலகப்பற்றுள்ளவர்கள் அவைகளை வெறுத்து ஈசுவரனைத் தியானம் செய்யச் சக்தியற்றவர்களாகவிருக்கின்றனர்.

407. தீவிர வைராக்யத்தினுல் ஒருவன் ஈசுவரனை அடைந்துவிட்டால் அவனிடம் உள்ள பெண்ணுசை தானே நசித்துப்போகிறது. அப்போது அவனுடைய மனைவியினிடமிருந்துங்

கூட ஆபத்து உண்டாவதில்லை. சிறிதும் பெரிதுமான இரண்டு காந்தத் துண்டுகள் ஒரு இரும்புக்குச் சமதூரத்திலிருந்தால் அதை எந்தக் காந்தம் அதிக பலத்துடன் இழுக்கும்? பெரிய காந்தந்தான். ஈசுவரன் பெரிய காந்தம் போன்றவன். அதன் முன்னர், பெண்ணாசையாகிய சிறிய காந்தம் என்ன செய்யச் சக்தியுள்ளதாகும்?

408. புகையடைந்த அறையில் எவ்வளவு ஜாக்கிரதையுடன் நீ இருந்தாலும் உனது சரீரத்தில் கொஞ்சமாவது கரியேறத்தான் செய்யும். அதுபோல, ஒருவன் எவ்வளவு சாமர்த்தியமாயும் ஜாக்கிரதையாயும் இருந்தாலும், ஸ்திரீ சங்கத்தினால் அவனுக்குக் காம இச்சை கொஞ்சமாவது உண்டாவது நிச்சயம்.

409. ஒரு வாலிபச் சிஷ்யனைக் குறிப்பிட்டு, பகவான் சொன்னதாவது:—"அவன் முகத்தில் மாறுதல் ஒன்று ஏற்பட்டிருக்கிறது. ஏதோ கருப்பான நிழல் படர்ந்திருப்பது போற் காண்கிறது. இதெல்லாம் உத்தியோகத்தால் நேர்ந்த விளைவு. கணக்குகளும் இன்னும் எத்தனையோ அலுவல்களும் கவனிக்கப்பட வேண்டுமல்லவா?

410. பணத்தினால் உணவை மட்டும்தான் பெறக்கூடும். ஆகவே அதுவே உன் புருஷார்த்தமெனக் கருதாதே.

411. குருமகராஜ் ஒரு வாலிபச் சிஷ்யனை நோக்கிச் சொன்னதாவது:—"உலகத்திலுள்ள மனுஷ்யர்களைப்போல நீயும் தாஸவிருத்தியை மேற்கொண்டிருக்கிறாய். ஆனால் நீ உன் தாய்க்குத் தொண்டு செய்கிறாய். இல்லாவிட்டால் 'உனக்கு இது வெட்கமாக இருக்கவில்லையா?' என்று நான் கேட்டிருப்பேன்." இப்படி அவர் நூறுதரம் சொல்லி "ஈசுவரனுக்கு மட்டும் தொண்டு செய்வாய்" என்று உபதேசித்தார்.

412. பெண்ணாசையும் பொன்னாசையும் மனிதர்களை உலகப்பற்றில் அழுத்தி, ஈசுவரனிடமிருந்து விலகியிருக்கும்படி செய்கின்றன. தன் மனைவி நல்லவளாகவோ கெட்டவளாகவோ இருந்தாலும் அவளைப்பற்றி ஒவ்வொருவனும் புகழ்ந்தே பேசுவது ஆச்சரியமாக விருக்கிறது.

413. பெண்ணாசைபொன்னாசைகளில்அழுந்திய மனம் பச்சைப் பாக்குக்குச் சமானம். அது பச்சையாக இருக்கும்வரையில் மேல்தோலோடு ஒட்டிக் கொண்டிருக்கும். உள் ஈரம் வற்றியதும் தோல் வேறு பாக்கு வேருகப் பிரிந்துவிடுகிறது. ஆட்டிப் பார்த்தால் உள்ளே பாக்குக் குலுங்கும். அதுபோல பெண்ணாசையும் பொன்னாசையும் உள்ளே வற்றிப்போனால் ஆத்மா வேறு, சரீரம் வேறு என்பது தெளிவாகும்.

414. தராசுத் தட்டில் எந்தப் பக்கம் கனமாகஇருக்கிறதோ அந்தப் பக்கத்தில் தராசு முள்ளானது மையத்தை விட்டுச் சாய்ந்து விலகியிருக்கும். அதுபோல, பெண்ணாசை பொன்னாசைகளால் கனத்த மனம் ஈசுவரனை விட்டு விலகித் தடுமாறுகிறது.

415. கிருகஸ்தர்களே, ஜாக்கிரதையாக இருங்கள். ஸ்திரீகளிடம் அதிக நம்பிக்கை வைக்கவேண்டாம். அவர்கள் வெகு தந்திரமாய் உங்களை வசப்படுத்தி விடுவார்கள்.

416. வேடன் காலடியில் குரங்கு தன் பிராணனை விடுவது போல, அழகிய ஸ்திரீயின் காலடியில் மனிதனும் தன் பிராணனை விடுகிறான்.

417. ஒருநாள் ஒரு மார்வாரி கனவான், பரமஹம்ஸரிடம் வந்து, அவருக்கு நேரக்கூடிய செலவுகளுக்காகத் தான் இனமாகக் கொடுக்கும் அனேக மாயிரம் ரூபாயை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று கேட்டார். அதற்குப் பரமஹம்ஸர் கூடவே கூடாதென்று மறுத்துவிட்டார். "உன் பணம் எனக்கு வேண்டாம். அதை அங்கிகரித்தால் என் மனம் எப்போதும் அதிலேயே இருக்கும்" என்றார்.

பிறகு அந்தக் கனவான் அப்பணத்தை அதே உபயோகத்துக்காகப் பரமஹம்ஸருடைய உறவினர் ஒருவர் பேரில் வட்டிக்குப்போட்டு வைக்கலாமாவென்று கேட்டார். அதற்கும் பரமஹம்ஸர் மறுத்துவிட்டார். "அது இன்னும் கெட்டதாகும். என் பணத்தை இன்னாரிடம் கொடுத்து வைத்திருக்கிறேன் என்ற சிந்தனையே எப்போதும் என் மனத்தில் உண்டாகும்" என்றார்.

"மனம் எண்ணெயைப் போலிருந்தால் அது பெண்ணாசை பொன்னாசைகளாகிய தண்ணீரின் மீது மிதக்கும்" என்று பரம

ஹம்ஸர் சொல்லியிருப்பதைச் சுட்டிக் காட்டி மறுபடியும் அக் கனவான் பணத்தை ஏற்றுக்கொள்ளும்படி அவரைப் பிரார்த் தித்துக் கொண்டார்.

பகவான் பதில் சொன்னதாவது :—“வாஸ்தவந்தான். ஆனால் எண்ணெயானது ஜலத்தின்மீது நெடுநாள் மிதக்குமானால் இரண்டும் சேர்ந்திருக்கும் பாகம் நாற்றமெடுத்து விடும். அது போல பெண்ணாசை பொன்னாசையாகிய ஜலத்தின்மீது நெடு நாள் ஏற்படும் ஸம்பந்தம் நிச்சயமாக அழுகித் துர்நாற்றத்தைக் கொடுக்கும்.”

418. ஒருநாள் ஒருவர் பரமஹம்ஸரிடம் வந்து, “குருமக ராஜ்! நான் எல்லாவற்றையும் தியாகம் பண்ணிவிட்டேன். என்றா லும் ஈசுவரனைக் காணவில்லையே. அது ஏதனால்?” என்று கேட் டார்.

பரமஹம்ஸர் “எண்ணெய் வைக்கும் தோல் குடத்தை நீ பார்த்திருப்பாய். அதிலிருந்து எண்ணெயை எல்லாம் ஊற்றி விட்டாலும் அக்குடத்தின் அடியிலும் பக்கங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் எண்ணெய் ஒட்டிக்கொண்டே யிருக்கும். ஆதலால் எண்ணெய் வாஸனை கடைசி வரையில் இருக்கும். அதுபோல, உன்னிடம் உலகப்பற்று இன்னும் கொஞ்சம் கொஞ்சம் இருக் கிறது” என்று பதில் சொன்னார்.

419. பாம்பைக் கண்டதும் “மானஸ தேவி! வாலைக்காட் டித் தலையை மறைத்துக்கொண்டு ஒதுங்கிப் போ” என்று ஜனங் கள் சொல்வது வழக்கம். அதுபோல இந்திரிய சுகங்களைத் தூண் டும் விஷயங்களினின்றும் விலகியிருப்பது நல்லது. அவைகளில் அழுந்தி வருந்துவதனால் உண்டாகும் அனுபவத்தைக் காட்டி லும், அவைகளுடைய ஸஹவாஸமே இல்லாது செய்துகொள்வது வெகு மேலானது.

420. விஷய சுகங்களில் அழுந்திச் சம்பந்தப்படாத மனம் ஈசுவரனிடம் சென்று அவனிடம் ஒற்றுமைப் படுகின்றது. இப் படித்தான் பந்தத்தினின்று ஆத்மாக்கள் முக்தி யடைகின்றன. ஈசுவரனிடம் போகும் பாதைக்கு எதிராகச் செல்லும் ஆத்மா பந்தப்படுவதாகும்.

421. ஒரு சிஷ்யன் ஒரு நாள் பரமஹம்ஸரிடம் வந்து காமத்தை எப்படி ஜெயிப்பது என்று கேட்டான். தான் ஜபதபங்கள் செய்து வந்த போதிலும் தன் மனத்தில் அடிக்கடி கெட்ட சிந்தனைகள் உண்டாவதாகத் தெரிவித்தான். அதற்குப் பகவான் பதில் சொன்னதாவது:—"ஒரு மனிதன் ஒரு நாயை வெகு பிரியமாக வளர்த்து வந்தான். அவன் அதனோடு கொஞ்சுவான்; விளையாடுவான்; அதைக் கைகளில் தூக்கிக்கொண்டு போவான். அதை முத்தமிடுவான். இந்த முட்டாள்தனத்தைக் கவனித்த ஒரு அறிஞர் நாய்க்கு அப்படி இடம் கொடுக்கக் கூடாதென்றும், அது பகுத்தறிவற்ற பிராணியாதலால் என்றைக்காவது ஒருநாள் அவனைக் கடித்து விடுமென்றும் கூறிப்போயினர். நாயின் எஜமானன் இதைக்கேட்டு அதன்படி நடக்க எண்ணித் தன் மடிமீதிருந்த அந்நாயைத் தூர எறிந்துவிட்டு, அதனோடு இனிமேல் ஒருபோதும் கொஞ்சிக் குலாவுவதில்லை என்று தீர்மானம் பண்ணினான். தன் எஜமானனுடைய மாறிய சிந்தையை நாய் அறியவில்லையாதலால், அது அடிக்கடி அவனிடம் ஓடி வந்து குலாவத் தலைப்பட்டது. நன்றாய்ப் பல தடவை அடிபட்ட பிறகுதான் அது தன் எஜமானனைத் தொந்திரவு செய்வதை விட்டது. உனது நிலைமையும் அப்படிப்பட்டதே. உன் மனத்தில் இது வரையில் வைத்துப் போற்றி வந்த நாயை நீ விடவேண்டுமென்றாலும் அது உன்னை எளிதில் விடாது. இருந்தாலும் பாதகமில்லை. அந்த நாயோடு இனிமேல் கொஞ்சிக் குலாவாது, உன்னிடம் அது குலாவ வரும்போதெல்லாம் அதை நன்றாய் அடி. காலக்கிரமத்தில் அதனுடைய தொந்திரைகள் உனக்கு முற்றிலும் இல்லாமலே அகன்றொழியும்.

422. உனது காம இச்சைகளை நன்றாய் அடக்கியாளப் பிரயத்தனப்படு. அதில் ஜயமடைந்தால் சரீரத்தில் ஒரு வித மாறுபாடு உண்டாகும். அதாவது இந்திரிய சக்திகளை ஆத்ம விஷயத்தில் பிரவர்த்திப்பிக்கும் "மேதை" என்ற ஓர் நாடி வளருகிறது. இந்த 'மேதை' நாடி வளர்ச்சியடைந்த பிறகுதான் ஆத்ம விஷயமான உயர்ந்த ஞானம் உண்டாகும்.

423. பாம்புகள் விஷ ஜந்துக்கள். பிடிக்கப்போனால் அவைகள் உன்னைக் கடித்துவிடும். ஆனால் வசியப்பொடியால் பாம்பை மயக்கி அதை ஆட்டக் கற்றுக் கொண்டவனுக்கு அதைப் பிடிப்பது சிரமமல்ல. ஏழு பாம்புகளை வேண்டுமானாலும் அவன் பிடித்துத் தன் கழுத்தில் சுற்றிவிட்டு விளையாடக்கூடும். அது போல மனதை அடக்கக் கற்றுக் கொண்டவனுக்கு ஆபத்தில்லை.

424. பாலத்தின் கீழே ஜலம் தங்கி நில்லாமல் எப்போதும் ஓடிக்கொண்டே இருக்கிறது. அதுபோல, பணமானது பற்றற்றவர்கள் கையினின்றும் செலவாய்க் கொண்டிருக்குமே யல்லாது, அவர்களால் ஒருபோதும் சேமித்து வைக்கப்படுவதில்லை.

425. பணம் எவனுக்கு அடிமையோ அவன்தான் வாஸ்தவமான மனிதன். பணத்தை எப்படி உபயோகிக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளாதவர்கள் மனிதர்கள் என்ற பெயருக்கு அருகரல்லர்.

426. தங்கள் தங்களுடைய செல்வம், செல்வாக்கு, பெயர், கீர்த்தி, அந்தஸ்து இவைகளைப் பற்றிப் பெருமை பேசிக் கொள்பவர்கள் சிலர் இருக்கின்றனர். இவைகள் எல்லாம் சில நாள்களுக்கு மட்டுந்தான். இறந்த பிறகு இவைகளில் ஒன்றுகூட அவர்களைப் பின்தொடர்ந்து வருவதில்லை.

427. செல்வவானென்று பெருமை பேசிக்கொள்வதில் ஒரு காரியமுமில்லை. நீ பணக்காரன் என்பாயானால் உன்னைக் காட்டிலும் அதிக பணக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்களோடு உன்னை ஒப்பிடும்போது நீ கேவலம் பிச்சைக்காரனாகத்தான் தோன்றுவாய். சூரியாஸ்தமனமானதும், மின்மினிப் பூச்சிகள் கிளம்பி, 'உலகத்துக்குப் பிரகாசம் எங்களால்தான் உண்டாகிறது' என்று நினைத்துக் கொள்கின்றன. ஆனால் நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கத் தொடங்கியதும் மின்மினியின் கர்வம் அடங்கி விடுகிறது. அப்போது 'உலகத்துக்கு நாங்கள்தாம் வெளிச்சத்தைக் கொடுக்கிறோம்' என்று நக்ஷத்திரங்கள் நினைக்கத் தொடங்குகின்றன. ஆனால் சற்று நேரம் கழித்து, சந்திரன் ஆகாயத்தில் கிளம்பிவர, அவனுடைய பால்போன்ற பிரகாசத்தில் நக்ஷத்திரங்கள் மங்கிப் போகின்றன. அப்போது தன்னால்

தான் உலகத்துக்கு வெளிச்சமும் சோபையும் சந்தோஷமும் உண்டாகின்றன வென்று சந்திரன் நினைத்துக் கர்வ மடைகிறான். ஆனால் கீழ்த்திசையில் சூரியன் உதித்ததும் சந்திரன் எங்கே போகிறான்? தாங்கள் பணக்காரர்கள் என்று நினைப்பவர்கள் இயற்கை புகட்டும் இந்த உண்மைகளைச் சிந்திப்பார்களானால் தங்களுடைய செல்வம் செல்வாக்கைப்பற்றி ஒருபோதும் கர்வ மடைய மாட்டார்கள்.

428. பெண்ணையும் பொன்னையும் மனத்தை விட்டகலும்போது ஆத்மாவினிடம் வேறு என்ன தங்கியிருக்கும்? பிரம்மானந்தமே அங்குக் குடி கொண்டிருக்கும்.



# 22. அகங்காரம்

429. அகங்காரம் இருக்கும் வரையில் ஞானமும் முக்தியும் கைகூடா. ஜனன மரணமும் நீங்கா.

430. இந்தத் துணியை என் முகத்துக்கு எதிரே பிடித்துக் கொள்வேனானால், நான் முன்போலவே உன்னருகில் இருந்தாலும் என்னை நீ காணமாட்டாய். அதுபோல ஈசுவரன் மற்றெல்லாப் பொருள்களைக் காட்டிலும் உன்னிடம் நெருங்கியே இருக்கிறான். என்றாலும் உனது அகங்காரமாகிய திரை காரணமாக உன்னால் அவனைக் காணமுடியவில்லை.

431. "ஸ்வாமி! நமக்கு என் பந்தம் ஏற்பட்டுள்ளது? நம்மால் என் ஈசுவரனைக் காணமுடியவில்லை?" என்று ஒருவர் பரமஹம்ஸரைக் கேட்டார். அதற்குப் பகவான் பதில் சொன்னதாவது:—"அகங்கார மென்பது ஜீவனுக்கேற்பட்ட மாயை. ஞானோதயம் உண்டாகாமல் தடுப்பது அவ்வகங்காரமே. "நான்" என்பது இறந்தால் துன்பமெல்லாம் தொலையும். ஈசுவர கிருபையால், "என் செயலாலாவது யாதொன்று மில்லை" என்னும் கொள்கை மனத்தில் ஸ்திரமாக நிலைக்குமானால், மனிதனுக்கு இந்த ஜன்மத்திலேயே முக்தியுண்டாகும். அப்பால் அவனுக்கு வேறொரு பயமுமிராது.

432. கீர்த்தியைத் தேடுபவர்கள் மாயைக்குட்பட்டவர்கள். ஒவ்வொரு காரியமும் ஸர்வேசுவரனான ஸர்வ நியந்தாவால் ஆகின்றதென்பதையும் ஸகல கீர்த்திக்கும் அவனைத் தவிர வேறொருவரும் பாத்தியப்பட்டவரல்ல ரென்பதையும் அவர்கள் மறந்து போகின்றனர். "ஈசுவரனே! எல்லாம் உனது செயல்," என்று எப்போதும் சொல்பவர்கள் ஞானிகள். அக்ஞானிகளோ, "நான் செய்தேன், நான் செய்தேன்," என்று மதிமயங்கிக் கூறுகின்றனர்.

433. "எனக்குத் தெரியும்," "எனக்குத் தெரியாது," என்று நீ சொல்லிக் கொண்டிருக்கும் வரையில் உன்னை ஒரு ஜீவனாகவே நீ மதிக்கிறாய். லோகமாதாவானவள், "உன்னிடமிருக்கும் அகங்காரத்தை முற்றிலும் நான் அழித்த பிறகுதான் ஸமாதியில் நிர்க்குணப் பிரம்மத்தை நீ காண்பாய்," என்று சொல்கிறாள். அதுவரையில் "நான்" என்னும் மனோபாவம் உனக்குள்ளும் உன் முன்னும் இருக்கும்.

434. வெள்ளைப் பூண்டின் சாறு வைக்கப்பட்டிருந்த பாத்திரம் எத்தனை தரம் கழுவித் துடைக்கப்பட்ட போதிலும் நாற்றத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். அகங்காரமானது வெகு பிடிவாதமுள்ள அக்ஞானம். எவ்வளவுதான் சிரமப்பட்ட போதிலும் அதை முற்றிலும் போக்குவது முடியாத காரியம்.

435. மனிதனுக்கு எப்போது முக்தியுண்டாகும்? அவனுடைய அகங்காரம் அழியும்போதுதான்.

436. ஸமாதியை அடைந்து அகங்காரத்தை ஒழித்துவிடக் கூடியவர்கள் சிலரே. பொதுவாக அது அழிவதில்லை. விவேகத்தோடு இடைவிடாது விசாரணை செய். அப்போதும் இவ்வகங்காரம் அடிக்கடி உன்னிடம் வரும். அரச மரத்தை இன்றைக்கு நீ வெட்டு; அது நாளைக்குத் துளிர்விட்டிருப்பதைக் காண்பாய்.

437. ஒருவன் தாழ்ந்த சுபாவத்தோடு நெடுங்காலம் போராடியும் ஆத்ம ஞானத்தின் பொருட்டு இடைவிடாது உழைத்தும் ஸமாதி நிலைமையை அடையும்போது அகங்காரம் அடியோடு அகலும். ஆனால் ஸமாதி நிலைமையை அடைவது மிகவும் கஷ்டம். அகங்காரமானது எளிதில் நீங்குவதில்லை. அதனால்தான் நாம் இவ்வுலகில் மறுபடியும் மறுபடியும் பிறவித் துன்பத்தை அனுபவிக்கிறோம்.

438. "நான் ஈசுவரதாஸன்" என்று சொல்லக்கூடிய அகங்காரம், அதாவது பக்தனுடைய அகங்காரமாகிய வித்யா அகங்காரம் கனிந்த அகங்காரம் என்று பேர் பெறும்.

439. "துஷ்ட அகங்காரம்" என்பது யாது?

"என்னைத் தெரியாதா?" "எனக்கு அவ்வளவு செல்வமிருக்கிறது," "என்னைப்போலப் பணம் படைத்தவர் யாவர்?"

"என்னிலும் மேம்பட்டவர் யாவர்?" என்று சொல்கிற அகங்காரம் தான்.

440. அக்ஞானத்தில் பிறந்து அதிலேயே வளரும் அகங்காரமானது தாமஸ குணத்தின் சுபாவமாகும்.

441. நான் எப்போது முக்தியடைவேன்?—"நான்" என்பது உன்னிடமிருந்து அழியும்போது. 'நான்,' 'எனது' என்பது அக்ஞானம். 'நீ,' 'உனது' என்பது ஞானம். உண்மையான பக்தன் எப்போதும், "ஈசுவரா! நீ தான் கர்த்தா. எல்லாவற்றையும் செய்தருள்பவன் நீயே. நான் ஒரு கருவி. நீ எதைச் செய்விக்கிருயோ அதையேதான் நான் செய்கிறேன். இவையெல்லாம் உனது புகழ். இந்த வீடும் இந்தக் குடும்பமும் உன்னுடையவை. என்னுடையவையல்ல. நீ கட்டளை யிடுகின்றபடி உழைக்க மட்டும்தான் நான் கடமைப்பட்டவன்" என்கிருன்.

442. ஒருவனுக்கு எவ்வளவு காலம் திவ்ய சக்ஷுஸ் உண்டாகவில்லையோ, எவ்வளவு காலம் பொற்குளிகையால் பித்தளை பொன்னுக மாறவில்லையோ அவ்வளவு காலம் வரையில் "நான் தான் கர்த்தா" என்ற மதிமயக்கம் இருக்கும். அதுவரையில் "இந்த நற்காரியத்தை நான் செய்தேன். அந்தக் கெட்ட காரியத்தை நான் செய்தேன்" என்ற வித்யாச மனேபாவம் இருந்து தீரும். இந்த வேறுபாடுற்ற மனேபாவந்தான் சம்ஸாரம் நீடித்திருப்பதற்குக் காரணமாகிய மாயை. நல்வழியில் செலுத்துவதும் ஸத்வகுணம் மேலோங்கி நிற்பதுமாகிய 'வித்யா மாயை'யில் சரணம் புகுந்தாலோ ஒருவன் ஈசுவரனை அடைவான். ஈசுவரனை நேரில் கண்டு அவனுடைய ஸ்வரூபத்தை அறிபவன்தான் உண்மையான முக்தன்; மாயையாகிய ஸமுத்திரத்தைத் தாண்டுபவன். ஈசுவரனே கர்த்தா; தான் அல்லன் என்று உணர்பவன் சரீரத்தோ டிருப்பினும் அவன் முக்தனே.

443. அகங்காரம் வெகு கெடுதலானது. அது அழியாமல் இருக்கும் வரையில் ஒருவனுக்கு விமோசனம் உண்டாகாது. கன்றுக் குட்டியைப் பார். பிறந்ததும் அது 'ஹம்' 'ஹாய்'—'நான், நான்' என்று கத்துகிறது. இந்த அகங்காரத்தின் பலன் என்ன? அது ஒரு காளையாக வளர்ந்ததும் அதை நுகத்தடியில்

பூட்டி கனமான பாரவண்டிகளை இழுக்கும்படி செய்கிறார்கள். பசுமாட்டைத் தொழுவத்தில் கட்டிவைத் திருப்பதன்றி, சில சமயங்களில் கொன்றும் தின்கிறார்கள். இந்தத் தண்டனை யெல்லாம் இருந்தாலும் அதன் அகங்காரம் மட்டும் அழிவதில்லை. ஏனெனின் அதன் தோலால் செய்யப்படும் முரசமும் 'ஹம்'—நான்—என்ற சப்தத்தைத் தான் கொடுக்கிறது. அதன் நரம்பைப் பருத்திச் சிக்கெடுக்கும் வில் நாணியாகச் செய்யும் வரையில் அது பவ்யதையை அடைவதில்லை. அப்போதுதான் அதன் நரம்பு 'துஹாய்'—'நீ' என்று தொனி செய்கிறது. 'நான்' என்பது அகன்று, அதன் ஸ்தானத்தில் 'நீ' என்பது வரவேண்டும். இப்படி வருவது மனிதனுக்கு ஆத்மஞானம் உண்டான பிறகுதான்.

444. அகங்காரம் ஒருபோதும் முற்றிலும் நசித்துப் போகாதா? அல்லிப்பூவின் இதழ்கள் காலக்கிரமத்தில் உதிர்ந்து போனாலும் அவைகளின் வடு மட்டும் இருக்கும். அதுபோல, மனிதனுடைய அகங்காரம் முழுவதும் நசித்துப் போகுமானாலும் அதன் பூர்வ அடையாளங்கள் இருந்தே தீரும். என்றாலும் அவை கெடுதியை உண்டாக்கக் கூடியனவல்ல.

445. 'நான்' என்பதை உன்னிடமிருந்து போக்கமுடியாதென்று நீ கண்டால், 'தாசனான நான்' என்ற தன்மையோடு அது உன்னிடம் இருக்கட்டும். நான் 'ஈசுவர தாஸன்' நான் 'ஈசுவர பக்தன்' என்று உணர்கிற அகங்காரத்தினிடமிருந்து அதிக தீங்கு உண்டாகாது. சர்க்கரைப் பண்டங்கள் அஜீர்ணத்தைத் தரும். ஆனால் கற்கண்டுக் கட்டி இந்த விதிக்கு ஓர் விலக்காகும். அதற்கு அத்தோஷமில்லை. "தாஸனான நான்" "பக்தனான நான்" "குழந்தையான நான்" என்ற மனோபாவமெல்லாம் கோலால் ஜலத்தில் கிழிக்கப்பட்ட கோடுபோலாகும். அது நீடித்திருப்பதில்லை.

446. 'நான்' என்பதைப் பற்றிச் சிந்தனை செய்து அது இன்னதென்பதைக் கண்டுபிடிக்க முயன்றால், அது அகங்காரத்தைக் குறிக்கும் வார்த்தைதான் என்பது தெரியவரும். அதை அகற்றுவது கடினம். அப்போது "ஏ! துஷ்ட 'நானே'! நீ ஒரு வழியாலும் தொலையாவிட்டால் ஈசுவர தாஸனான 'நான்' என்று

இருந்து தொலை" என்று ஒருவன் சொல்கிறான். இதற்குத்தான் 'கனிந்த அகங்காரம்' என்று பெயர்.

447. உனக்குக் கர்வ முண்டாகுமானால், "நான் ஈசுவர தாஸன். நான் ஈசுவரன் குமாரன்" என்ற நினைவால்கர்வமடை. மஹான்களுக்குக் குழந்தைகளின் சுபாவம் இருக்கும். அவர்கள் எப்போதும் ஈசுவர ஸந்நிதானத்தில் குழந்தைகளாகவே இருக்கின்றனர். ஆதலால் அவர்களிடம் அகங்காரமே இருப்பதில்லை. அவர்களுடைய சக்தியெல்லாம் ஈசுவரனுடையதே. அவனிடமிருந்துதான் அது அவர்களுக்கு வந்தது. சுயமாக அவர்களுக்கு ஒன்றுமே கிடையாது.

448. எல்லாம் ஈசுவரனுடைய ஆக்ஞையால் நடக்கின்றனவென்றும், தான் ஈசுவரன் கையிலகப்பட்ட கருவியென்றும் எவனுடைய மனத்தில் பதிகின்றதோ அவன் ஜீவன் முக்தனாவான். ஈசுவரா! உனது காரியத்தை நீயே செய்தருள்கிறாய். ஆனால் "நான் செய்கிறேன்" என்று ஜனங்கள் சொல்கின்றனர்.

449. அகங்காரம் மறைந்து தெய்வீகத்தில் நீ ஐக்கியமானதும் முக்தியுண்டாகும்.

450. ஜீவனின் உண்மை ஸ்வபாவம் சச்சிதானந்தமே. இவ்வளவு உபாதிகள் எல்லாம் அகங்காரத்தினால் உண்டாயின. ஆதலின் ஜீவனுக்குத் தன் உண்மைச் சுபாவமே மறந்துபோய்விட்டது.

451. எல்லாருடைய தற்பெருமையும் காலக்கிரமத்தில் அழிந்துபோம். ஆனால் தான் ஒரு ஞானி என்று தற்பெருமை கொள்ளும் ஞானியின் ஆணவம் சுலபத்தில் அழிவதில்லை.

452. "தாயே! 'நான் பெரியவன், பிராம்மணன்; மற்றவர்கள் தாழ்ந்தவர்கள், பறையர்கள்' என்ற எனது மனோபாவத்தை யெல்லாம் அடியோடு அழித்துவிடுவாயாக. அவர்கள் எல்லாரும் உனது பல்வேறு உருவங்களைத் தவிர வேறு யாவர்?"

453. "தாயே! நான் ஒரு யந்திரம், நீ யந்திரி; நான் ஒரு அறை, நீ அதில் குடியிருப்பவள்; நான் உறை, நீ அதனுள் போடப்படும் வாள்; நான் ரதம், நீ ஸாரதி. நீ ஆட்டிவைக்கிறபடி நான் ஆடுகிறேன். நீ பேசுவிக்கிறபடி நான் பேசுகிறேன். என்

செயலாவது என்னுள்ளிருக்கும் உன் செயலே. நான் அல்லேன், நான் அல்லேன், எல்லாம் நீதான்."

454. முற்றியதும் முற்றாததுமென அகங்காரம் இருவகைப் படும். "என்னுடையது ஒன்றுமேயில்லை. என் கண்ணால் காண் பதும், காதால் கேட்பதும், சரீரத்தால் ஸ்பரிசிப்பதும், இந்தச் சரீரமும் என்னைச் சேர்ந்தவையல்ல. நான் எப்போதும் நித்ய முக்த சுத்தன்," என்ற மனோபாவத்தைக்கொண்ட அகங்காரம் முற்றியது; அதாவது கனிந்ததாகும். "இது என் வீடு; இவள் எனது மனைவி; இது என் சரீரம்; இது என் குழந்தை" என்று நினைக்கும் அகங்காரம் முற்றாதது. அதாவது கனியாததாகும்.

455. "தாஸனான நான்" என்ற மனோபாவத்தைக் கொண்டவருடைய உணர்ச்சியும் ஊக்கமும் எப்படிப் பட்டவை?

அந்த மனோபாவம் வாஸ்தவமும் தீவிரமுமானதானால், அவ னிடம் உணர்ச்சியும் ஊக்கமும் வெளித் தோற்றத்தி னளவாகவே இருக்கும். ஈசுவரப் பிராப்தியான பிறகு ஒருவனிடம் "தாஸ" அகங்காரமாவது "பக்த" அகங்காரமாவது இருக்கு மானால் அவன் ஒருவருக்கும் கெடுதி செய்யமாட்டான். அகங் காரத்தின் விஷம் முழுவதும் மறைந்துபோகிறது. சுவர்ண குளிகையின் ஸ்பரிசத்தால் முழுவதும் பொன்னாக மாறிவிடுகிற கத்தியானது பழைய உருவத்தைப் பெற்றிருந்தாலும் பிறரைத் துன்புறுத்தக்கூடிய தன்மை அதற்கில்லை.

456. சங்கராசாரியருக்கு வெகுகாலம் பணிவிடை செய்து வந்த சிஷ்யன் ஒருவன் இருந்தான். ஆனால் அவனுக்கு அவர் யாதொரு உபதேசமும் செய்யவில்லை. ஒருநாள் சங்கரர் தனித்து உட்கார்ந்திருக்கையில் அவருக்குப் பின்னால் யாரோ வருகிற கா லடிச் சத்தம் கேட்டது. "யார் அங்கே?" என்று அவர் கேட் டார். சிஷ்யன், "நான்தான்" என்று பதில் சொன்னான். உடனே ஆசாரியர், "நான் என்னும் வார்த்தை உனக்கு அவ் வளவு பிரியமானதாக இருந்தால் அதை அகண்டமாக்கிக்கொள். (அதாவது அனைத்தும் நீயே எனத் தெரிந்துகொள்) அல்லது அதை அடியோடே விட்டுவிடு," என்றார்.

457. மனிதனை உலகப்பற்றுக்குள்ளாக்கி, பெண்ணாசை பொன்னாசைகளை உண்டு பண்ணச் செய்யும் "நான்" என்பது கொடியது. ஜீவனுக்கும் பரம்பொருளுக்கும் நடுவே யிருந்து அவ் விரண்டையும் வேறு படுத்துவதும் இந்த 'நான்' தான். ஜலத்தில் ஒரு கோலைப்போட்டால், அக்கோலால் ஜலம் இரண்டு பட்டதாகத் தோன்றும். இந்தக் கோல்தான் 'அகம்'; கோலை எடுத்துவிட்டால் ஜலம் ஒன்றுபட்டு விடுகிறது.

458. மழைத் தண்ணீர் மேட்டு நிலத்தில் தங்கி நிற்ப தில்லை. பள்ளமான இடத்துக்கு ஓடிவந்து விடுகிறது. அது போல, ஈசுவர கிருபையானது தற்பெருமையும் கர்வமுமுள்ள வர்களுடைய உள்ளத்தில் தங்கி நிற்பதில்லை. பணிவுள்ளவர் களின் உள்ளத்தில்தான் தங்கி நிற்கும்.

459. அரிசி, பருப்பு, உருளைக்கிழங்கு முதலியவற்றைக் குளிர்ந்த ஜலத்துடன் ஒரு பானையில் போட்டால் கையால் தொடலாம். நெருப்பின்மீது பானையை வைத்தபிறகு அவை களைக் கையால் தொட முடியாது. இந்த உபமானம் ஜீவனுக் கும் பொருந்தும். சரீரம் பானையாகும். செல்வம், ஞானம், குலம், ஜாதி, அந்தஸ்து, செல்வாக்கு எல்லாம் அரிசி, பருப்பு, உருளைக்கிழங்கு முதலியவற்றுக்குச் சமானம். அகங்காரம் நெருப்பாகும். அகங்காரத்தால்தான் ஜீவன் அவ்வளவு உஷ்ண அணவமுடையதாகின்றது.

460. சூரியன் உலக முழுவதுக்கும் உஷ்ணத்தையும் வெளிச்சத்தையும் கொடுக்கக்கூடியது என்றாலும் ஆகாயத்தில் மேகங்கள் தோன்றி சூரியனை மறைக்குமானால் அதன் பிரகாச மும் மறைந்துபோகும். அதுபோல மனத்தில் அகங்காரம் குடி கொண்டிருக்கும் வரையில் அதில் ஈசுவர ஜோதி பிரகாசிக் காது.

461. அகங்காரத்தை மேகத்துக்குச் சமானமாகச் சொல்ல லாம். ஈசுவரனைப் பார்க்கவொட்டாமல் நம்மை மறைப்பது அதுவே. ஸத்குரு கடாக்ஷத்தால் அகங்காரம் அழியுமானால், பூர்ண ஜ்யோதியுடன் கூடிய ஈசுவரனைக் காணலாகும். உதாரண மாக ஈசுவராவதாரமான ஸ்ரீராமசந்திரன், (ஜீவனாகிய) லக்ஷ்மண

ருக்கு முன்னால் இரண்டு மூன்று தப்படி தள்ளி இருந்தாலும் இடையே வரும் (மாயையாகிய) ஸீதையால் லக்ஷ்மணருடைய பூர்ண திருஷ்டிக்குப் புலப்படுவதில்லை யென்பதை நீ படத்தில் காணலாம்.

462. ஜீவனுடைய சுபாவம் ஒவ்வொரு உபாதி சேருந் தோறும் மாறுபடும். அலங்காரமான ஆடை யணிந்துகொண்ட மனிதனுக்கு காமாதுரமான பாட்டு அவனை யறியாமலேயே வரு கிறது. „காலில் பூட்ஸ் போட்டுக்கொண்டால் மனிதனுக்குச் சற்று கர்வம் உண்டாகிறது;' உடனே சீட்டி அடிக்கிறான். அவன் மாடிப்படி ஏறினால் ஐரோப்பியனைப்போலக் குதித்துக் குதித்து ஏறுகிறான். கையில் பேனா இருந்தால் ஒருவன் கிடைத்த கடிதாசியிலெல்லாம் எதையாவது கிறுக்குவான்.

463. பணம் வெகு பலம்படைத்ததோர் உபாதி. ஒருவன் செல்வத்தைப் பெற்றதும் முற்றிலும் மாறிவிடுகிறான்.

464. வணக்கமும் அமரிக்கையும் உள்ள பிராம்மணன் ஒரு வன் தக்ஷிணேசுவரத்துக்கு அடிக்கடி வருவதுண்டு. கொஞ்ச நாள்களுக்குப் பின் அவன் வரவேயில்லை. அவனுக்கு என்ன நேர்ந்ததென்பதும் எங்களுக்குத் தெரியவில்லை. ஒருநாள் நாங் கள் பொன்னகருக்குப் படகு மார்க்கமாகச் சென்றோம். படகி லிருந்து கீழே இறங்கும்போது, அந்தப் பிராம்மணன் பிரபுக் களைப்போல, கங்கைக் கரையில் உட்கார்ந்துகொண்டு காற்று வாங்குவதைக் கண்டோம். அவன் என்னைக் கண்டதும், "என்ன சுவாமி சௌக்கியமா?" என்று கம்பீர த்வனியுடன் கேட்டான். அவனது குரலில் இருந்த மாறுபாட்டைக் கவனித்ததும் நான் ஹிருதயனிடம் 'இவனுக்கு ஏதோ பணம் கொஞ்சம் கிடைத் திருக்கிறதுபோலிருக்கிறது. என்ன மாறுதல் உண்டாகி இருக் கிறது பார்த்தாயா!' என்றேன். ஹிருதயன் விலாவலிக்கச் சிரித் தான்.

465. கர்வியாக இருப்பது கேவலம் தாழ்ந்த சுபாவம். காக்கையைப் பார். தான் சாமர்த்தியமுள்ள பக்ஷியென அது நினைத்துக் கொண்டிருக்கிறது. ஒருபோதும் அது வலையில் அகப் படுவதில்லை. ஆபத்து வருமென்பதைச் சற்று தெரிந்து கொண்

டதும் பறந்தோடிவிடுகிறது. வெகு தந்திரமாக ஆகாரத்தைத் திருடுகிறது. என்றாலும் மலம் தின்பதில் மட்டும் அதற்கு அருவெறுப்பில்லை. அதிகச் சமர்த்தாக இருப்பதின் பலன் இதுதான்.

466. தண்ணீர் விழுந்ததும் சுவறச் செய்யும் சாம்பல் குவியலுக்குத் தற்பெருமையைச் சமானமாகச் சொல்லலாம். தற்பெருமை கொண்டவன் மனத்தில் ஜபதபங்கள் யாதொரு பலனையும் தருவதில்லை.

467. ஈசுவரன் இரண்டு சமயங்களில் புன்னகை புரிகின்றனன் :—

முதலாவது, ஒருவன் கொடும் வியாதியால் அவஸ்தைப் பட்டு மரணத் தருவாயிலிருக்கும்போது, வைத்தியன் உள்ளே வந்து நோயாளியின் தாயைப் பார்த்து, "பயப்படவேண்டாம், உன் மகனுடைய உயிரைக் காப்பாற்ற நான் இருக்கிறேன்" என்று சொல்லும்போது.

இரண்டாவது, இரண்டு ஸகோதரர்கள் தங்களுடைய நிலத்தைப் பங்கிட்டுக்கொள்ள அளவு கோலைக் கையில் எடுத்துக் கொண்டு கோடு கிழித்து, "அந்தப் பக்கம் உன்னுடையது, இந்தப் பக்கம் என்னுடையது" என்று சொல்லும்போது.

468. அரைப்படிப்புப் படித்தவர்கள் கர்வத்தில் மதிமயங்கிப் போகின்றனர். ஒரு மனிதனுடன் நான் ஈசுவரனைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அவன் "ஓ அதெல்லாம் எனக்குத் தெரியும்" என்றான். "டில்லிக்குப் போனவன் ஒருவன் தான் அங்குப் போனதைப்பற்றிச் சொல்லிக்கொண்டு திரிவதுண்டா? பெரிய மனிதன் ஒருவன் தான் பெரியவன் என்று சொல்லிக் கொள்வதுண்டா?" என்று நான் கேட்டேன்.

469. அஜீர்ணக்காரனுக்குப் புளிப்பான பண்டங்கள் ஒத்துக்கொள்ளா வென்பது தெரியும்; என்றாலும் அவைகளைக் கண்டதும் அவனுடைய நாக்கில் ஜலம் ஊறுகின்றது. அது போல 'நான்' 'எனது' என்ற மனோபாவங்களை ஒருவன் அடக்கியாள முயன்றாலும், செய்கையில் அவனுடைய முதிராத அகங்காரம் தலையெடுக்கின்றது.

470. 'இந்தக் குடும்ப வியாபாரங்கள் எல்லாம் என்னுடையனவல்ல. ஈசுவரனுடையவை. நான் அவனுடைய தாஸன். அவனுடைய ஆணைப்படி நான் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவன்' என்றே எப்போதும் சிந்தித்திரு. இந்த மனோபாவம் ஸ்திரமாகும் போது, மனிதனுக்குத் தன்னுடையது என்று சொல்லக்கூடிய பொருள் ஒன்றுமிருப்பதில்லை.

471. ஏழாவது பூமியை அதாவது வெகு உயர்ந்த ஸமாதி நிலைமையை அடைந்து, அப்படி அடைந்ததனால் சைதன்யத்தில் இரண்டறக் கலந்த மஹான்களில் சிலர் மனிதர்களுடைய நன்மைக்காக அந்த ஆத்மீய உயரத்திலிருந்து கீழே இறங்கி வருகின்றனர். அப்போது, அவர்கள் வித்யா அகங்காரத்தைக் கொண்டவர்களாக இருக்கின்றனர். என்றாலும் இவ்வகங்காரம் வெளித்தோற்றத்தில் மட்டுமே இருக்கும். அது ஜலத்தில் கிழிக்கப்பட்ட கோடுபோலாகும்.

472. உருவமுள்ளவனாயும் உருவமில்லாதவனாயும் ஈசுவரன் ஹனுமானுக்குத் தரிசனம் தந்தருளினான். என்றாலும் ஹனுமான் தான் 'ஈசுவரதாஸன்' என்ற அகங்காரத்தைக் கொண்டவனாகவே இருந்தான். நாரதர், ஸனகர், ஸனந்தனர், ஸனத்குமாரர் ஆகியவர்களுடைய 'விஷயமும்' இப்படிப்பட்டது தான்.

[நாரதர் முதலியோர் கேவலம் பக்தர்கள் மட்டுமா அல்லது ஞானிகளும் கூடவா என்ற கேள்வியுண்டாயிற்று.]

அவர்கள் பிரம்மக்ஞானத்தை அடைந்தவர்கள் என்றாலும் அவர்கள் ஆற்றோட்டத்தின் சப்தத்தைப்போல ஈசுவரனைப்பற்றிப்புகழ்ந்து பாடிக்கொண்டு சென்றனர். இதனால் அவர்களிடத்தும் சிறிது அகங்காரம் இருந்ததென்று தெரிகிறது. உலகத்தாருக்கு தர்மப்பிரசாரம் செய்வதற்குத்தான் இந்த அகங்காரம்.

473. எரிந்து கருகிப்போன கயிறு, தன் பழைய உருவத்தோடிருந்தாலும், ஒன்றையும் கட்டுவதற்கு உதவாது. பிரம்மக்ஞானத்தால் எரிக்கப்பட்ட அகங்காரமும் அப்படிப்பட்டதே.

474. தென்னைமட்டை கீழே விழுந்த பிறகு, மரத்தில் அது முன்னால் இருந்த இடத்தில் ஓர் வடு காணப்

படும். அதுபோல ஈசுவரனை அடைந்தவனுக்கும் அகங்காரத்தின் அடையாளம் இருக்கும். அவனுடைய சுபாவம் குழந்தையின் சுபாவத்தைப்போலிருக்கும். ஸத்வ, ரஜோ, தமோ குணங்களில் எதுவும் மேம்பட்டிருப்பதில்லையாதலால் ஏதாவதொன்றை எளிதில் பற்றவும் விடவும் கூடும். ஒரு தம்பிடி பெறுமான விளையாட்டுப்பொருளை ஒரு குழந்தையிடம் கொடுத்துவிட்டு அதனிடமிருந்து ஐந்து ரூபாய் பெறுமான வஸ்திரத்தை வாங்கிவிடலாம். முதலில் அக்குழந்தை "தரமாட்டேன்; இதை எனக்கு அப்பா வாங்கிக் கொடுத்தார்" என்னுமாயினும் அதை எளிதில் வாங்கிவிடலாம். குழந்தைக்கு எல்லாரும் ஸமம். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வித்தியாசம் அதற்குக் கிடையாது. ஆதலால் ஜாதி பேதமும் இல்லை. "அவன் உன் தம்பி," என்று தாயார் சொல்வாளானால், அப்படிப்பட்டவன் எவ்வளவு தாழ்ந்தவனாக இருந்தபோதிலும் அவனிடமிருந்து அக்குழந்தை சோறு பெற்று உண்ணும். அதற்கு த்வேஷம், சுசி, அசுசி என்பனவும் கிடையா.

475. யாரோ தன்னைத் துண்டு துண்டாக வெட்ட வருவதாக ஒருவன் கனவு காண்கிறான். பயந்துபோய் உளறிக்கொண்டு அவன் எழுந்திருக்கிறான். கதவைப்பார்க்கிறான். அது உள்பக்கமாகவே தாளிடப்பட்டிருப்பதையும் உள்ளே ஒருவருமில்லையென்பதையும் தெரிந்துகொள்கிறான். என்றாலும் அவன் நெஞ்சு சற்றுநேரம் வரையில் படபடவென்றடித்துக் கொண்டேயிருக்கும். அதுபோல அபிமானம் அழிந்துபோன பிறகும் அதன் அடையாளம் கொஞ்சகாலமிருக்கும்.

476. ஸ்வாமி! தாங்கள் ஸமாதியிலிருக்கையில் அகங்காரம் கொஞ்சமாவது இருக்கிறதா?

ஆம், பொதுவாய்க் கொஞ்சம் இருக்கிறது. அது பொன் கட்டியின்மீது உரைக்கப்பட்டாலும் முற்றிலும் தேய்வடையாத பொற்பொடியைப் போன்றதாகும். வெளி ஞாபகமெல்லாம் போய்விடுகின்றது. ஆனாலும், ஈசுவரனை அனுபவித்து ஆனந்தமடைவதற்காகவே ஒரு சிறிது அகங்காரம் அவனால் வைக்கப்பட்டிருக்கிறது. சிற்சில வேளைகளில் இந்த அற்ப அகங்காரத்தையும் அவன் அழித்து விடுகிறான். இதுதான் மகா

மேலான ஸமாதி நிலையாம். அந்நிலை எப்படிப்பட்டதென்பதை ஒருவராலும் வர்ணித்துச் சொல்ல முடியாது. மனிதன் கடவுளாகவே முற்றிலும் மாறிய நிலைதான் அது. உப்பினால் செய்யப்பட்ட பிரதிமை யொன்று சமுத்திரத்தின் ஆழத்தை அளந்தறிவதற்குத் தண்ணீரில் இறங்கிற்று. இறங்கியதும், உப்பெல்லாம் ஜலத்தில் கரைந்துபோயிற்று. சமுத்திரத்தின் ஆழம் இவ்வள . வென்பதைச் சொல்வதற்கு மேலே வருபவர் யாவர்? .

477. ஒரு நாள் பரமஹம்ஸர் ஒரு சிஷ்யரைப் பார்த்து, "என்னிடம் ஏதாவது அபிமானம் இருப்பதாகத் தெரிகிறதா? எனக்கு ஏதாவது அபிமானமுண்டா?" என்று வேடிக்கையாகக் கேட்டார்.

சிஷ்யர்:—"ஆம் கொஞ்சம் இருக்கிறது. அது தேக ஸம்ரக்ஷணம், பக்தி, ஸாதுஸங்கம், ஸத் உபதேசம் என்ற நான்கு காரியங்களின் பொருட்டாகவே இருக்கின்றது. என்றாலும் இந்த அற்ப அபிமானமும் நெடுநாள் தாங்கள் செய்த பிரார்த்தனையின் பயனாக அது தங்களிடம் தங்கியிருக்கிறது என்றும் சொல்லவேண்டும். தாங்கள் அடைந்துள்ளது ஸமாதி நிலை என்றுதான் சொல்லக்கூடும். ஆதலால், தங்களிடம் இருக்கும் அபிமானம் வேண்டுமென்று செய்த பிரார்த்தனையின் பயனெனவே நினைக்கிறேன்."

பரமஹம்ஸர்:—"ஆமாம்; ஆனால் இந்த அபிமானத்தை நான் வேண்டுமென்று வைத்துக் கொண்டிருக்கவில்லை. திவ்ய மாதாவின் சித்தம் அது. பிரார்த்தனைக்குப் பயன் அளிப்பது அவளுடைய இஷ்டம்."

478. ஈசுவரனைக் கண்டவனே ஞானி. அவன் அப்போது குழந்தையின் சுபாவமுடையவனாகிறான். குழந்தைக்குத் தனி வியக்தித்வம் ஒன்று இருக்கிறதென்றாலும் அது வாஸ்தவமானதல்ல; வெளித்தோற்ற மட்டுமே. குழந்தையின் இயல்பு வயது வந்தவனுடையதைப் போன்றதன்று.

479. ஸமாதி நிலைமையை அடைந்தபிறகும் சிலர் 'நான் பக்தன்' அல்லது 'நான் தாஸன்' என்ற அபிமானத்தை வைத்

திருக்கின்றனர். சங்கராசாரியார், பிறருக்கு உபதேசம் செய்வதற்காக வித்யாபிமானத்தை வைத்திருந்தார்.

480. எல்லாம் ஈசன் செயல் என்ற திடநம்பிக்கையுள்ளவன் ஜீவன் முக்தனாகிறான். "தாயே! உனது காரியங்களை நீயே செய்தருளுகின்றாய். என்றாலும் 'நான் செய்தேன்' என்று மனிதன் சொல்கிறான்."

481. தான் ஆசாரியனென்றும் தர்மஸ்தாபகனென்றும் நினைப்பவன் கனியாத அபிமானமுள்ளவன். ஆனால் ஈசுவரானுபவமடைந்து அதன்பின் அவன் அருளால் பிறருடைய நன்மைக்கு ஒருவன் உபதேசம் செய்யத் தொடங்கினால் பாதகமில்லை. பரீக்ஷித்து மகாராஜாவுக்குப் பாகவதத்தை உபதேசிப்பதற்காக அவ்வித அனுக்கிரகத்தைச் சுகதேவர் பெற்றிருந்தார்.

482. இனிப்புத் தின்பண்டங்களுக்கிருக்கும் கெட்ட குணம் கற்கண்டுக்கு இல்லை. அதுபோல, தாஸாபிமானம், பக்தாபிமானம் இருப்பதில் தீங்கொன்றுமில்லை. அவை ஒருவனை ஈசுவர சமீபத்தில் கொண்டு சேர்க்கும். இதுதான் பக்தியோகமெனப்படும்.



# 23. ஆஹாரமும் ஆத்மீயமும்



483. பகற்பொழுதில் திருப்தியாகப் போஜனம் செய். ஆனால் இரவில் உட்கொள்ளும் உணவு குறைவாயும் லேசாயு மிருக்கட்டும்.

484. ஒருநாள் ஒரு சிஷ்யன் பரமஹம்ஸரைப் பார்த்து "ஸ்வாமி! எல்லாருடைய இருதயத்திலும் ஒரே ஈசுவரன் இருக் கிறானென்றால், என் கண்டவர் கையிலிருந்தெல்லாம் சாதம் வாங்கிச் சாப்பிடக்கூடாது?" என்று கேட்டான்.

பகவான் :—"நீ பிராம்மணன் தானா?"

சிஷ்யன் :—"ஆம்."

"அதனால்தான் நீ இந்தக் கேள்வி கேட்கிறாய். ஒரு நெருப் புக் குச்சியைக் கொளுத்தி வைத்து அதன் மீது விறகுக் கட்டை களைக் குவித்தாயானால் நெருப்பு என்னவாகும்?"

"கட்டைக் குவியலால் நெருப்பு அவிந்துவிடும்."

"நல்லது, நன்றாக எரிந்து கொண்டிருக்கும் பெருநெருப் பில் வாழை மரங்களைப் போட்டால் என்ன வாகும்?"

"ஒரு நிமிஷத்தில் வாழை மரங்கள் கருகிச் சாம்பலாய் விடும்."

"அதுபோல உன்னிடமிருக்கும் ஆத்மீய சக்தி பலமில்லாத தாக விருந்தால், கண்டவர் கையிலிருந்தெல்லாம் உணவு பெற்று உண்பதினால் அவ்வாத்மீய சக்தி அவிந்து விடுமென்று நீ பயப்பட வேண்டும். ஆனால் அது பலமுள்ளதாக விருக்குமானால் எவரிட மிருந்து உணவைப் பெற்றாலும் உனக்கு ஒரு தீங்கும் உண்டா காது."

485. சரீரத்துக்கு உஷ்ணத்தையும் மனத்துக்குச் சஞ்சலத் தையும் எந்த உணவு கொடுக்காதோ அந்த உணவைத்தான் சாத கன் உட்கொள்ள வேண்டும்.

486. மூர்க்கத்தைத் தராத மரக்கறி போஜனத்தை ஒருவன் உண்டபோதிலும் அவன் ஈசுவரனையடையப் பிரியப்படாமற்போனல் அவ்வுணவு மாமிசத்தைக் காட்டிலும் கெட்டதாகும். ஆனல் மாமிசத்தைச் சாப்பிடுபவன் ஒருவன் ஈசுவரனை அடையப் பிரியப்படுவானுனல் அவனுட்கொள்ளும் உணவு தேவாமிருதத்துக்குச் சமானமாகும்.

487. கருமாதி காரியங்கள் நடக்கும் இழவு வீடுகளில் நடக்கும் விருந்துக்குப் போய்ச் சாப்பிடாதே. ஏனெனில் அவ்வுணவு பக்தியையும் அன்பையும் தொலைத்துவிடும். பிறருக்கு வைதீக கர்மங்களைச் செய்துவைப்பதினுலேயே பிழைக்கும் புரோகிதர்கள் வீட்டிலும் சாப்பிடாதே.

488. சாப்பிடும் விஷயத்தில், ஒருவன் கிடைப்பதைச் சாப்பிடவேண்டாமா?

பரமஹம்ஸர்:—“அது ஆத்மீய நிலைமையைப் பொறுத்துள்ளது. ஞான மார்க்கத்தில் அது கெடுதியைச் செய்யாது. ஞானியானவன் சாப்பிடும்போது, ஆகாரத்தைக் குண்டலினியின் அக்னிக்கு நிவேதனமாகச் சமர்ப்பிக்கின்றுன். பக்தன் விஷயம் வேறு. அவன், தனது பிரிய ஈசுவரனுக்குச் சமர்ப்பிக்கக்கூடிய சுத்த ஆகாரத்தைத்தான் சாப்பிடவேண்டும். மாமிசாகாரம் பக்தனுக்கு ஏற்றதன்று.

“ஆனல் ஒருவன், பன்றி யிறைச்சியைத் தின்பவனுயினும் ஈசுவரப்ரேமை கொண்டவனுக விருந்தால், கிருதார்த்தனுவான். பால் கலந்த அன்னம் அல்லது ஹவிஷ்யான்னம் இவைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருப்பவனுயினும், பெண்ணுசை பொன்னுசை கொண்டவனுக விருந்தால், மிகவும் இழிந்தவனுகிறுன்.”

489. ஒரு முகம்மதிய குரு எனக்கு அல்லாவின் பெயரை உபதேசித்தார். நான் முகம்மதியர்களுடைய முறைகளைக் கண்டிப்பாய் அனுசரித்து, நெடுநாள் அல்லாவின் பெயரையே ஓதி வந்தேன். அப்போதெல்லாம் என்னுல் காளி கோவிலுக்குப் போகமுடியவில்லை. ஹிந்துக்களுடைய தேவதைகளின் பெயரைச் சொல்லவும் முடியவில்லை.



# 24. தியானம்



490. ஆழ்ந்து தியானம் செய்வதனால், தியான மூர்த்தியின் உண்மைச் சுபாவம் வெளியாகும். அது பக்தனுடைய உள்ளத்தில் நன்றாய்ப் பதியும்.

491. ஸத்வகுண முடையவன் எவ்விதம் தியானம் செய்வானென்பது உனக்குத் தெரியுமா? பிறரால் பார்க்கப் படாமல் நடுராத்திரியில் படுக்கையின் மீது உட்கார்ந்து தியானம் செய்வான்.

492. ஆரம்பத்தில் ஒருவன் தன்னந்தனியனாக உட்கார்ந்து கொண்டு மனதை ஒருமுகப்படுத்த, அதாவது ஏகாக்ரசித்தத்தை யடைய முயலவேண்டும். இல்லாவிட்டால் மனம் பற்பல விஷயங்களில் ஓடிச் சஞ்சலத்துக் குள்ளாகும். பாலையும் ஜலத்தையும் ஒன்றாக்கி வைத்தால் இரண்டும் நன்றாகக் கலந்து விடுவது நிச்சயம். ஆனால், பாலைக் கடைந்து வெண்ணெயை எடுத்து ஜலத்தில் போட்டு வைத்தால் அவ்வெண்ணெய் ஜலத்துடன் கலக்காமல் அதன் மேலே மிதக்கும். அதுபோல இடைவிடாத பழக்கத்தினால் ஒருவனுக்கு ஏகாக்ரசித்தம் நிலைக்குமானால், அவன் எங்கிருந்தபோதிலும் சரியே, அவனுடைய மனம் சுற்றிலுமுள்ள பொருள்களின்மீது செல்லாமல் ஈசுவரன் மீதிலேயே செல்லும்.

493. தியானக்கிரமத்தில் புதியதாக முயலுபவனுக்குச் சிற்சில வேளைகளில் 'யோகநித்திரை' என்னப்படும் ஒருவிதத் தூக்கம் உண்டாகக்கூடும். அப்போது அவனுக்கு ஏதாவதொரு திவ்ய தரிசனம் உண்டாகும்.

494. "தியானத்தில் முதிர்ந்தவனுக்கு முக்தி வெகு சமீபம்" என்பது ஒரு பழமொழி. தியானத்தில் ஒரு மனிதனுக்கு எப்போது முதிர்ச்சி உண்டாகிறது தெரியுமா? அவன் தியானத்துக்கு உட்கார்ந்தவுடன், திவ்யதேஜஸ் அவனைச் சுற்றிக் கொள்கிறது. அவனுடைய ஆத்மா, ஈசுவரனுடன் கலந்து கொள்கிறது.

495. திராவகத்தில் மருந்து கலந்துவைக்கப் பட்டிருப்பதைப்போல, நீயும் ஈசுவரனிடம் கலந்திரு.



# 25. பக்தி

496. பராபக்தி என்பது என்ன?

பராபக்தியில், பக்தன் ஈசுவரனைத் தனக்கு அத்யந்தம் நெருங்கிய அன்பனாகக் கருதுகிறான். அது கிருஷ்ண பரமாத்மாவிடம் கோபஸ்திரீகளுக்கு இருந்த பக்திபோன்றது. அவர்கள் அவரை எப்போதும் கோபிகாநாதன் என்று கருதி யழைத்தனரே தவிர ஜகந்நாதன் என்று கருதி அழைத்ததில்லை.

497. வெறுங் கண்ணாடியில் யாதொரு உருவமும் பதிவதில்லை. ஆனால் தகுந்த ரசாயனப் பொருளை அக்கண்ணாடியின் மேல் பூசிய பிறகு, படங்களை எழுதலாம். அது போல பக்தியாகிய ரசாயனப் பொருளை ஹிருதயத்தின் மீது தடவினால் அங்கு ஈசுவரனுடைய ரூபத்தைப் பதியச் செய்யலாம்.

498. குளத்தில் மீன்கள் எவ்வளவு தூரத்திலிருந்தாலும், ஒரு இரையைப் போட்டதும், நாலாபக்கங்களினின்றும் அதனிடம் ஓடி வருகின்றன. அதுபோல, பக்தியும் சிரத்தையும் நிரம்பிய ஹிருதயத்தையுடைய பக்தனிடம் ஈசுவரன் வெகு வேகமாக வருகின்றனன்.

499. பகவந் நாமத்தைக் கேட்டதும் ஆனந்த பாஷ்பம் உண்டாகாதிருக்கும் வரையில், பக்தி மார்க்கத்தை அவசியம் கைக்கொள்ள வேண்டும். பகவந் நாமத்தைக் கேட்டவுடன் கண்ணீர் விட்டு உருகுபவனுக்குப் பக்தி சாதனை அவசியமில்லை.

500. ஈசுவரன் ஒரு சர்க்கரைக் குன்றுக்குச் சமானம். அக்குன்றிலிருந்து, ஒரு சிறிய எறும்பு வெகு அற்பமான அளவு சர்க்கரையைக் கொண்டு வருகிறது. இன்னும் கொஞ்சம் பெரிய எறும்பு சற்றுப் பெரியதான அளவு சர்க்கரையைக் கொணருகிறது. ஆனால் சர்க்கரைக் குன்றோ முன் போலவே அளவு குறையாமலிருக்கிறது. ஈசுவரப்ரேமை கொண்டவர்களும் அப்படிப்

பட்டவர்களே. திவ்யானந்தத்தில் ஒரு சிறிது அநுபவித்ததும் அவர்கள் உன்மத்தர்களாகின்றனர். ஈசுவரனுடைய கல்யாண குணங்கள் எல்லாவற்றையும் அனுபவிப்பது ஒருவராலும் முடியாத காரியம்.

501. கொஞ்சம் சாராயத்தைக் குடித்ததும் சிலருக்குப் போதை உண்டாகிறது. இன்னும் சிலருக்குப் போதையுண்டாக இரண்டு மூன்று புட்டிகள் வேண்டியிருக்கிறது. ஆயினும் இருவகையின்ரும் அடையும் ஆனந்தம் ஒன்றுதான். அதுபோல, ஈசுவர மகிமையில் திணையளவைக் கண்டதும் சிலருக்கு ஆனந்தமுண்டாகிறது. வேறு சிலருக்கு, ஈசுவர ஸந்நிதானத்தில் நேருக்கு நேராக வந்த பிறகுதான் ஆனந்த முண்டாகிறது. ஆயினும் இருவரடையும் ஆனந்தமும் ஒன்றே.

502. ஞானம் புருஷனுக்கும், பக்தி ஸ்திரீக்கும் சமானமாகும். ஞானமோ ஈசுவர மாளிகையின் முன் மண்டபம் வரையில்தான் செல்லும்; பக்தி அவரது அந்தப்புரத்தினுள்ளும் போகும்.

503. பக்தி ஸாகரத்தில் ஆழ்ந்து முழுகு. பயப்படாதே. அது மரணத்தைப் போக்குவது. நான் நரேந்திரனிடம், "குழந்தாய்! ஈசுவரன் ஒரு அமிர்த ஸாகரம். அச்சாகரத்தில் நீ ஆழ்ந்து முழுக மாட்டாயா? சர்க்கரைப்பாகு வைக்கப்பட்ட வாயகன்ற பாத்திரம் ஒன்றிருப்பதாயும் நீ அதைப்பருக ஆசைப்படும் ஈயாகவும் நினைத்துக்கொள். எங்கே உட்கார்ந்துகொண்டு நீ பருகுவாய்?" என்று கேட்டேன். "அதற்குள் விழுந்தால் முழுகி இறந்து போவேனாதலால், பாத்திரத்தின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு குடிப்பேன்" என்று நரேந்திரன் பதில் சொன்னான். அதன்மேல், "குழந்தாய்! திவ்ய ஸாகரத்தில் ஆழ்ந்து மூழ்கினால் ஆபத்தாவது மரணமாவது நேருமென்று நீ பயப்படவேண்டியதில்லை. சச்சிதானந்தக் கடல் சிரஞ்சீவித்வத்தைக் கொடுக்கும் கடல் என்பதை ஞாபகப் படுத்திக்கொள். ஈசுவரப்ரேமையில் அளவுக்கு மிஞ்சிப்போய் விடுவோம் என்று அஞ்சும் சில முட்டாள்களைப்போல நீயும் பயப்படாதே" என்றேன்.

504. ப்ரேமையை வெகு சிலரால்தான் பெறமுடியும். அவர்கள் அபாரசக்தியையுடையவர்களும் ஈசுவராக்ஞையை நிறைவேற்றுகிறவர்களுமாவர். அவர்கள், திவ்ய தேஜஸுக்கும் சக்திக்கும் பாத்திரராதலால், ஒரு தனிக் கோஷ்டியினராகவே இருக்கின்றனர். சைதன்ய தேவர் போன்ற ஈசுவராவதார புருஷர்களும் ஈசுவராம்சர்களான அவர்களுடைய பக்தர்களில் உயர்ந்தோரும் இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவராவர்.

505. ப்ரேமையின் இரு குணங்களாவன:—முதலாவது, வெளிப்பிரக்ஞையில்லாதிருத்தல். இரண்டாவது, தேக புத்தி இல்லாதிருத்தல்.

506. சரியான மார்க்கந் தெரியாத ஒருவனுக்கு ஈசுவர பக்தியும் அவ்வீசுவரனைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலும் இருக்கலாம். அப்படிப்பட்டவன் கேவலம் பக்தியினாலேயே ஈசுவரனை யடைவான். ஜகந்நாத க்ஷேத்திரத்தைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்பிய பக்தன் ஒருவன், அந்த நகரத்துக்கு எந்த வழியாகப் போகிற தென்பதைத் தெரியாதவனைபடியால் அதற்கு எதிர்ப்புறமான வழியில் புறப்பட்டுப் போனான். கொஞ்சதூரம் சென்றதும், வழியில் போவாரை நோக்கி, 'இதுதானா ஜகந்நாதத்துக்குப் போகும் வழி?' என்று ஆவலோடு கேட்டான். அவர்கள் "இது வழியன்று அது வழி" என்று காட்டிப்போயினர். கடைசியில் பக்தன் பூரி (ஜகந்நாதம்)யை அடைந்து இஷ்டபூர்த்தி செய்துகொண்டான். அதுபோல, ஒருவனுக்கு வழி தெரியாமலிருந்தாலும், மனம் மட்டும் இருக்குமானால், வழியைக் காட்டக் கூடியவர் ஒருவர் நிச்சயமாக வருவார். முதலில் அவனுக்குத் தவறுதல் ஏற்படக் கூடும். ஆனால் கடைசியில் சரியான பாதைக்கு வந்து விடுவான்.

507. பக்தி சந்திரனுக்கும் ஞானம் சூரியனுக்கும் சமானம். வடக்கிலும் தெற்கிலும் நெடுந்தூரத்துக்கப்பால் ஸமுத்திரங்கள் இருக்கின்றன என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அங்கு குளிர் வெகு ஜாஸ்தியாதலால், சமுத்திர ஜலம் ஆங்காங்கு உறைந்து பெரும் பெரும் பனிப்பாறைகள் ஆகின்ற தென்றும், அப்பாறைகளின் இடையில் கப்பல்கள் அகப்பட்டுக்கொண்டு வெளியே

போக முடியாமல் நின்றுவிடும் என்றும் கேள்வி. அதுபோல, பக்தி மார்க்கத்தின் இடைவழியில் மனிதர்களும் இம்மாதிரி அகப்பட்டுக்கொண்டு திகைப்பார்களா?

ஆமாம்; அகப்பட்டுக் கொள்கிறார்கள். ஆனால் அதனால் பாதகம் ஒன்றுமில்லை. ஏனெனில் இந்தப் பனிக்கட்டி சச்சிதானந்த ஸாகரத்தின் ஜலஸ்வரூபத்தைத் தவிர வேறொன்றுமில்லை. "பிரம்மம் மட்டும் வாஸ்தவம், உலகம் மாயை" என்று நீ நினைப்பாயானால் இந்தப் பனிக்கட்டியானது ஞானமாகிய சூரியனால் உருகிக் கரைந்துபோம். அப்பால் என்ன எஞ்சி நிற்கும்? சச்சிதானந்த ஸாகரத்தின் ஜலந்தான்.

508. நாரதரும் மற்றைய ஆசார்யர்களும் ஞானமடைந்த பின்னரும் மனித கோடிகளின் உஜ்ஜீவனார்த்தமாகப் பக்தியைக் கைக்கொண்டிருந்தனர்.

509. காரணமின்றியும் ஈசுவரனிடம் பக்தி கொள்வதென்பதொன்றுண்டு. இந்த நிலையை அடைந்துவிட்டால், அப்பால் வேண்டப்படுவது ஒன்றுமில்லை. அப்படிப் பட்ட பக்தியையுடையவன், "பகவானே! எனக்குச் செல்வம் வேண்டாம்; புகழ் வேண்டாம்; சுகம், சந்தோஷம் முதலிய மற்றெதுவும் வேண்டாம். உனது பாதார விந்தங்களில் கலப்பற்ற பக்திமட்டும் இருக்கும்படி கிருபை புரிய வேண்டும்," என்பான்.

510. பக்தியில் 'வைதிபக்தி' என்பது ஒன்று. அதாவது சாஸ்திரங்கள் விதிக்கிறபடி பக்தி பண்ணுதலாம். பகவந் நாமத்தைப் பல தடவை உச்சாரணம் பண்ணுதல், உபவாசமிருத்தல், தீர்த்த யாத்திரை போதல், வேண்டிய ஸாமக்கிரியைகளைக் கொண்டு பூஜை செய்தல், முதலியன வைதிபக்தியின் பாற்படும். இப்படி நெடுங்காலம் பக்தி செய்தால் ஈசுவர பக்தியில் இன்னும் உயர்ந்த நிலைமையான, 'ராக பக்தி'யைப் பெறக் கூடும். எல்லாவற்றிற்கும் ப்ரேமைதான் முக்கியம். உலகப் பற்று முற்றிலும் அகலவேண்டும். முழு மனதும் ஈசுவரனிடம் பொருந்த வேண்டும். அப்போதுதான் அவனை அடையமுடியும். ராக பக்தியில்லாமல் அவனை அடையமுடியாது.

511. சிலருக்குச் சுபாவத்திலேயே பால்ய முதற்கொண்டு இந்த ராகபக்தியிருக்கிறது. அவர்கள், பிரஹ்லாதரைப்போல, குழந்தைப் பிராய முதற்கொண்டே ஈசுவரனைக் காண வேண்டுமென்று கதறுகின்றனர். அவர்கள் 'பிறவிப் பூரணர்' என்னும் நித்யஸித்தர் வகுப்பைச் சேர்ந்தவராவார்கள்.

512. ஈசுவரனுக்காகப் பக்தர்கள் தங்களுடைய செல்வமெல்லாவற்றையும் என் தியஜிக்கின்றனர்?

தீபத்தைக் கண்டதும் பூச்சி இருட்டிலிருந்து ஓடி வருகின்றது. சர்க்கரைப்பாகிலேயே எறும்பு பிராணனை விடுமென்றி அதினின்றும் திரும்பிப் போகிறதில்லை. அதுபோல, பக்தனும் ஈசுவரனையே எப்போதும் பற்றி நிற்பானுகையால் மற்றப் பொருள்களை யெல்லாம் கைவிட்டுவிடுகிருன்.

513. ஈசுவரபக்தி இருவகைப்படும். முதலாவது சாஸ்திரங்கள் விதிக்கும் பக்தி; இன்னவிதமாகப் பூஜை செய்யவேண்டும், பகவந்நாமத்தை இத்தனை தரம் ஜபிக்கவேண்டும் என்று ஏற்பட்டுள்ள விதிகளின்படி செய்யும் இந்த பக்தி 'வைதிபக்தி' எனப்படும். இதனுல் பிரம்மக் ஞானத்தையடையலாம். இப்படி ஸமாதியில் லயித்த ஆத்மா மறுபடியும் திரும்பி வருகிறதில்லை. இது சாதாரண பக்தர் விஷயத்தில் மட்டும்தான் ஏற்படும்.

அவதார புருஷர்கள், ஈசுவராம்சமுடையவர்கள் முதலிய மஹான்களுடைய விஷயம் முற்றிலும் வேறுபட்டது. அவர்களுக்கு ஈசுவரனிடமிருக்கும் பக்தி கேவலம் விதிகளால் உண்டானதன்று. உள்ளிருந்தே ஊற்றெடுத்துப் பெருகுகின்றதென்னலாம். சைதன்யர் போன்ற அவதார புருஷர்களும், ஈசுவராக்ஞையைப் பெற்றவர்களும் ஸமாதியில் அடையக்கூடிய பிரம்மக் ஞானத்தை எளிதில் அடைவார்கள். அவர்களுக்கு அந்த உன்னதப் பதவியிலிருந்து கீழே இறங்கி வரவும் கூடும். அப்போது அவர்களுடைய வியக்தித்வம் போவதில்லை. ஈசுவரனைத் தாயெனவும் தந்தையெனவும் நேசிப்பார்கள். 'இதன்று, இதன்று' என்று சொல்லிக்கொண்டு அவர்கள் ஒவ்வொரு படியாக ஏறி உச்சிக்குச் செல்லுகின்றனர். அங்கே போனதும் 'இதுதான்' என்கின்றனர். ஆனல் சீக்கிரத்தில், படிக்கட்டுக

ளும், உச்சியைப்போலவே கல் சுண்ணும்பு மண் முதலிய பொருள்களால்தான் ஆனவை யென்பதைக் கண்டு கொள்கின்றனர். ஆகவே அவர்கள் சிலவேளை உச்சியில் தங்கியும் சில சமயம் படிக்கட்டுகளில் இறங்கியும் இவ்வாறு மேலும் கீழுமாகப் போய்க் கொண்டிருக்கின்றனர்.

இந்திரிய உணர்ச்சி முற்றிலும் அழிந்துபோகும் தன்மையுடைய ஸமாதியில் அடையக்கூடிய பிரம்மஸ்வரூபந்தான் அந்த உச்சிஸ்தானம். படிக்கட்டோ பௌதிக உலகம். உச்சியை அடைந்த பிறகு, நாம ரூபங்களைப் பெற்ற இவ்வுலகம் மானிட அறிவுக்குப் புலப்படும் பிரம்ம ஸ்வரூபமாகத் தோன்றும்.

514. கண்களை மூடினுலொழியப் பழகாத குதிரைகள் ஓரடி கூட எடுத்துவைக்கா. ஆசைகளை அடக்கா விட்டால் ஈசுவரனைக் காணமுடியாது.

ஆனல் ஞான மார்க்கத்திற் செல்பவர் தாம் ஆசைகளை அடக்கப் பிரயத்தனப் படுவார். ஞானியானவன், "ஈசுவரனைக் காணவேண்டுமானல், முதலில் ஒருவன் சுத்தனக விருக்கவேண்டும். ஆசைகளை அடக்கவேண்டும்" என்கிறன். முதலில் பொறியடக்கம். அப்பால் ஈசுவர ஞானம்.

ஈசுவரனை யடைவதற்கு பக்தியோகம் என்ற இன்னெரு மார்க்கமும் உண்டு. மனிதனுக்கு ஈசுவர பக்தி ஒருதரம் வருமானல்,—ஒருதரம் பகவந் நாமத்தைக் கேட்டதும் பக்தனுக்கு அத்தியந்த ஆனந்த 'முண்டாகுமானல்,—அப்பால் ஆசைகளை யடக்குவதற்குப் பெருமுயற்சிகள் தேவையில்லை. அவ்வடக்கம் தானேவந்துவிடும்.

மிகுந்த துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் ஒருவன் சண்டைக்குப் போகவாவது, விருந்து சாப்பிடவாவது, சிற்றின்ப சுகத்தில் இச்சை வைக்கவாவது மனங் கொள்வான? அதுபோல ஈசுவர பக்தியில் ஆழ்ந்த ஒருவன் இந்திரிய சுகங்களைப் பற்றிச் சிந்திக்கவே மாட்டான்.

515. வெளிச்சத்தைப் பார்த்துவிட்ட விட்டில்பூச்சி மறுபடியும் இருட்டைத் தேடிப் போகுமா? போகாது. அது ஒளிச் சுடரில் விழுந்து இறந்தாலும் இறக்குமே தவிர இருட்டைத்

தேடிப் போகாது. உண்மைப் பக்தன் விஷயம் அப்படிப்பட்டதன்று. அவனை இழுக்கும் திவ்யச் சுடர் அவனைக் கொளுத்திக் கொல்வதில்லை. அது ஒரு மணியின் ஒளியைப்போலப் பிரகாசம் பொருந்தியதும், குளிர்ச்சியானதும், சாந்தியை அளிப்பதும், இனியதுமாம். அது தகிக்காது. ஹிருதயத்தை சாந்தி, ஆனந்தம் இவைகளால் பிரகாசிப்பிக்கும்.

516. உலகப்பற்றுள்ளவர்கள் உபயோகமற்ற பொருள்களைத் தேடுகின்றவராவர். உலகப் பற்றற்ற சுத்தாத்மாக்கள் ஈசுவரனை விசுவாசித்து அவனையே சதா சர்வ காலமும் சிந்தித்திருப்பார்கள்.

517. விசுவாசம் அதிகரிக்க அதிகரிக்க ஈசுவர ஞானமும் அதிகரிக்கும். விசுவாசம் அற்பமாக விருக்குமிடத்தில் ஞானம் அதிகமாக இருக்குமென்று பார்ப்பது வீண்.

518. உலக விஷயங்களில் ஆசை குறையும் அளவுக்கு ஈசுவர பக்தி அதிகரிக்கும்.

519. அருட்பிரவாகமானது ஞானியின் ஹிருதயத்தினூடே அலையற்றுச் சாந்தமாகப் பாய்கின்றது. அவனுக்கு இவ்வுலகம் ஒரு கனவு போலாம். அவன் தனது ஆத்மாவிலேயே லயித்திருப்பான். பக்தன் விஷயமோ அப்படிப்பட்டதன்று. அவனுள்ளத்தில் பாயும் அருள் வெள்ளம் வடிவும் பெருக்கும் உடையது. வேறுபட்ட உணர்ச்சிகளுக்கேற்ப அவன் அழுவான், சிரிப்பான், ஆடுவான், பாடுவான். ஈசுவர ஸந்நிதானமாகிற ஆனந்த ஸாகரத்தில் பக்தன் வாழப் பிரியப்படுகிறான். அதிலேயே இறங்கி, நீரில் மிதக்கும் பனிக்கட்டி மேலும் கீழுமாக அசைந்து ஆடுவதைப் போல சில வேளைகளில் நீந்தியும், சில வேளைகளில் மூழ்கியும், மறுபடியும் மிதந்தும் ஆனந்திக்கிறான்.

520. மனத்தில் ஈசுவர பக்தி பெருகி வரும்போது கர்மத் தியாகமும் தானே வரும். இறைவனால் வேலை செய்விக்கப் படுபவர்கள் மட்டும் அவ்வாறு வேலை செய்யட்டும். தகுந்த காலம் வந்ததும் ஒருவன் எல்லாவற்றையும் தியஜித்துவிட்டு "மனமே, வா! ஹிருதயத்தில் உறையும் ஈசுவரனை நாம் இருவருமாகக் கண்டு களிப்போம்," என்று சொல்லவேண்டும்.

ஈசுவரனைச் சரணமடை. சங்கோசம் பயம் என்பவைகளை யெல்லாம் உதறிவிடு. "பகவந் நாமத்தைச் சொல்லிக்கொண்டு தான் கூத்தாடினால் ஊரார் என்ன நினைப்பார்களோ ?" என்ற எண்ணத்தைத் தூர அகற்றிவிடு.

521. பகவத் பக்தி அபூர்வமானது. புருஷனிடம் கற்புடைய மனைவிக்கு இருக்கும் அத்யந்த ஆசையைப்போல, ஈசுவரனிடம முழுமனதுடன் ஆசையுண்டாகும்போதுதான் பக்தியும் தோன்றும். உண்மையான பக்தியைப் பெறுவது சிரம சாத்யம். பக்தியில் மனமும் ஆத்மாவும் ஈசுவரனிடம் லயிக்க வேண்டும். அப்போது பக்திமார்க்கத்தில் இன்னும் உயர்ந்ததான "பாவ" நிலைமை வரும். குறிபார்த்து அம்பெய்பவனுக்குப் பேச்சடங்கி மூச்சு நிற்பதைப்போல, பாவ நிலைமையிலும் ஒருவனுக்குப் பேச்சு அடங்கி விடுகிறது. மூச்சு நின்றுவிடுகிறது. கும்பகம் தானே உண்டாகிறது.

522. பரமஹம்ஸர் ஒரு சிஷ்யரைப் பார்த்து, "கோபஸ்திரீகளுடைய அனுராகம் எவ்வளவு ஆச்சரியமானது ! புன்னை மரத்தைக் கண்டமாத்திரத்தில் அவர்கள் ப்ரேமோன்மத்தர்களாயினர்" என்றார்.

சிஷ்யர் :—கௌரங்கர் விஷயமும் அப்படிப்பட்டதுதான். தம்முன் தோன்றிய ஒரு காட்டை அவர் பிருந்தாவன மென்று கருதினர்.

பரமஹம்ஸர் :—ஆஹா ! இந்த ப்ரேமையில் ஒரு அணுவளவாவது ஒருவருக்குக் கிடைக்குமா ! என்ன பக்தி ! இப்படிப்பட்ட பக்தி அவர்களிடம் நிரம்ப இருந்ததென்று மட்டும் சொல்வது போதாது. அது மிதமிஞ்சி ஓடி வழிந்ததென்றே சொல்ல வேண்டும்.

523. ராதையும் கிருஷ்ணனும் ஈசுவராவதாரங்களென்று நினைத்தாலும் நினைக்காவிட்டாலும் பாதகமில்லை. ஈசுவராவதாரத்தில் நம்பிக்கை யுள்ளவர்களாயினும் இல்லாதவர்களாயினும் கடவுளின் அன்பைப் பெற வேண்டுமென்ற அனுராகத்தை மாத்திரம் கைக்கொள்ளட்டும். இது ஒன்றுதான் அவசியமானது.

524. குழந்தையின் ஸரஸம் எவ்வளவு இனிமையானது! உலக ஐசுவரியங்கள் எல்லாவற்றையும் திரஸ்கரித்துவிட்டு அது ஒரு மரப்பாவையை வைத்துக்கொண்டு கொஞ்சும். உண்மை பக்தனுடைய சுபாவமும் அப்படிப்பட்டதே. செல்வம் கௌரவம் எல்லாவற்றையும், திரஸ்கரித்துவிட்டு, ஈசுவரன் ஒருவனையே சரணமடைபவன் அப்பக்தனே.

525. பக்தியுடன் பகவந் நாமத்தைப் பாடு. அப்போது மலைபோலக் குவிந்திருக்கும் உனது பாபங்களெல்லாம், நெருப்புப் பொறி ஒன்றினால் மலைபோலக் குவிந்த பஞ்சுப் பொதிகள் எரிந்து சாம்பலாவதைப்போல, நசித்துப்போய்விடும்.

526. நரகப் பிராப்திக்குப் பயந்து பக்தி பண்ணுவது ஆரம்ப நிலையைக் காட்டுவது. பாபத்தைப் பற்றிய உணர்ச்சியே சமயமென சில ஜனங்கள் கருதுகின்றனர். சமய ஒழுக்கத்தில் அது தாழ்ந்ததும் ஆரம்பப் படியுமென்பதை அவர்கள் மறந்து போகின்றனர். இதைக் காட்டிலும் உயர்ந்த பதவியும் மனோபாவமும் இருக்கிறது. அதுதான் ஈசுவரனைத் தாயாகவும் தந்தையாகவும் கருதும் பக்தி.

527. பக்தியில் பாவம் என்னும் நிலை மாங்காய்க்குச் சமானம்; ப்ரேமையோ மாம்பழத்துக்குச் சமானமானது.

528. ப்ரேமையென்பது ஸச்சிதானந்தமாகிய ஈசுவரனைக் கட்டக்கூடிய பக்தன் கையிலுள்ள கயிறாகும். பக்தன் ஈசுவரனைத் தன் கையில் அடக்கிக் கொண்டிருக்கிறான் என்று சொல்லலாம். அவன் கூப்பிடும் போதெல்லாம் ஈசுவரன் அவனிடம் வருகிறான்.

529. சதையின் பின்னால் எலும்பும், எலும்பின் பின்னால் அதன் ஸத்தும் என்று இப்படியே நெடுகப் பாரஸீக கிரந்தங்கள் பலவற்றைப் பற்றிக் கூறுகின்றன. இவை யெல்லாவற்றுக்கும் பின்னால் ப்ரேமையுள்ளது.

530. ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் "திரிபங்கி," அதாவது, மூன்று கோணலாக வளைந்தவன், என்று பெயர். மிருதுவான வஸ்துக்களைத்தான் வளைக்க முடியும். ஆகவே ஸ்ரீ கிருஷ்ணனுடைய திரிபங்கி ரூபம், ஏதோ ஒரு விதத்தினால் அவர் மிருதுவாக்கப்

பட்டிருப்பதைக் குறிக்கின்றது. இப்படி அவர் பிருதுவானதற்குக் காரணம் ப்ரேமை என்று சொல்லப்படுகின்றது.

531. பரமஹம்ஸர், கேசவசந்திரஸேனரை நோக்கி, பிரம்ம ஸமாஜத்தவரெல்லாரும் ஈசுவர ஸிருஷ்டியின் மகிமையைப்பற்றி மட்டும் என் அதிகமாகச் சிலாகித்துக் கொண்டாடுகின்றனர் என்று கேட்டார். "ஈசுவரனே! சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் முதலியவற்றை நீர் படைத்தருளி யிருக்கிறீர்!" என்று மட்டும் சொல்வானேன்? அழகும் வாஸனையுமுள்ள புஷ்பங்கள் நிரம்பிய தோட்டத்தின் சோபையைக் கண்டு களிப்படைபவர் பலர். ஆனால் அந்தத் தோட்டத்தின் அதிபதியைத் தேடித் தெரிந்துகொள்பவர் வெகுசிலரே! தோட்டம் பெரியதா, அதை உண்டாக்கியவன் பெரியவனா? நம்மிடையே எமன் நடமாடும் வரையில் தோட்டம் அநித்தியம் என்பது நிச்சயம். அத்தோட்டத்தின் அதிபதியாகிய ஒருவனே நித்யன்.

கள்ளுக்கடையில் ஒருவன் சில கலயங்களை வாங்கிக் குடித்துவிட்டால், அப்பால் விற்பனைக்கு வைத்திருக்கும் பீப்பாய்களில் எவ்வளவு கள் இருக்கிறதென்பதை விசாரிக்கப் போவதுண்டா? அளக்கவேண்டியது அவசியமா? ஒருவனுக்கு ஒரு மொந்தையே போதும்.

நரேந்திரனைக் கண்டதும் ஆனந்தத்தில் மூழ்கிவிடுகிறேன். "உன் பிதா யார்? அவருக்கு வீடு வாசல்கள் எத்தனை யுண்டு?" என்று ஒருபோதும் நான் அவனைக் கேட்டதில்லை.

532. மனிதர்கள் தங்களிடம் இருக்கும் பொருள்களை அதிகமாய் மதிப்பது வழக்கம். பணம், வீடு வாசல், தட்டு முட்டு சாமான் இவைகளை அவர்கள் மிகுதியும் பெருமையாக மதிப்பார்கள். ஆதலால், ஈசுவரனும் தன்னுடைய ஸிருஷ்டிப்பொருள்களாகிய சந்திரன், சூரியன், நக்ஷத்திரங்கள் முதலானவைகளை அம்மாதிரியே மதிப்பவர் என்று ஜனங்கள் நினைக்கின்றனர். ஆகவே அவனுடைய ஸிருஷ்டிப்பொருள்களைச் சிலாகித்துப் பேசினால் ஈசுவரனுக்குச் சந்தோஷமுண்டாகுமென்று எண்ணுகின்றனர்!

533. பக்தியின் உக்கிரமான ஸ்வரூபம் யாது?

"ஜெயகாளி!" என்று எப்போதும் ஓலமிட்டுக்கொண்டு உன்மத்தனுவதும், ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு உயரத் தூக்கிய கைகளோடு பித்தனைப்போலக் குதிப்பதும் அதன் ஸ்வரூபமாம். இந்தக் கலியுகத்தில், தியானம் முதலான அமைதியான வழிகளைக் காட்டிலும் உக்கிர பக்திதான் சிறந்ததும் சீக்கிரத்தில் பலன் அளிக்கக் கூடியதுமாகும். ஈசுவரனுடைய கோட்டையைப் பிடிப்பதற்கு அதனை முற்றுகை போட்டுத் தாக்க வேண்டும்.

534. உலக விஷயங்களில் ஸத்வ, ரஜோ, தமோ குணங்களின் சாயைகள் இருப்பதுபோல பக்தியிலும் அக்குணங்களின் சாயைகள் இருக்கின்றன. ஸத்வ குணத்தினதான அடக்கமும், ரஜோ குணத்தினதான ஆரவாரமும், தமோ குணத்தினதான மூர்க்கமும் பக்தியில் உண்டு.

ஸாத்வீக பக்தன் பிறர் அறியாதபடி பக்தி பண்ணிக்கொண்டிருப்பான். ராத்திரியில் கொசுவலைக்குள் படுக்கையின்மீது உட்கார்ந்து தியானம் பண்ணுவான். ஆதலால் காலையில் படுக்கையை விட்டு எழுந்து வருவதற்கு அவனுக்குக் காலதாமதம் ஆகும். இதையறியாத ஜனங்கள் அவனுக்கு நல்ல தூக்கம் வராததனுல் அப்படி நேரங்கழித்து எழுந்திருக்கிறுன் என்று நினைக்கின்றனர். சரீர சம்ரக்ஷணை விஷயத்திலும், அவன் ஏதோ கிடைத்த வரையில், கொஞ்சம் சோற்றையும் காய்கறியையும் தின்று திருப்தியடைகிறுன். சாப்பாட்டிலாகட்டும், ஆடையிலாகட்டும் அவனிடம் பெருமித வாழ்க்கையே கிடையாது. அவனுடைய வீட்டில் ஆடம்பரத்தைக் காட்டக் கூடிய சாமான்கள் இரா. பிறரால் முகஸ்துதி செய்யப்பட்டு அதனுல் தான் மேன்மை அடைய வேண்டுமென்ற எண்ணம் அவனிடம் ஒரு போதும் உண்டாவதில்லை.

ரஜோகுண பக்தனே, துவாதச நாமம் அல்லது விபூதி ருத்ராக்ஷம் முதலான புண்டரங்களைத் தரித்துக் கொண்டும், ஒரு வேளை இடையிடையே பொன்மணிகள் கோர்க்கப்பட்ட ஜபமாலைகளைக் கழுத்தில் போட்டுக் கொண்டவனுகவும் விளங்குவான். பூஜா காலங்களில் பட்டுடை (மடி) கட்டிக்கொள்வது,

அதிகமான படாடோபத்துடன் பூஜை செய்வது முதலிய ஆடம்பரங்களில் அவன் கருத்துள்ளவனாக இருப்பான்.

தாமஸ பக்தன் மூர்க்கத்தன்மையுள்ள சிரத்தைகொண்டவனாக விருப்பான். கொள்ளைக்காரர்கள் பலவந்தப்படுத்திப் பொருள்களைக் கவர்வதுபோல இவனும் ஈசுவரனை பலவந்தப் படுத்துகிறான். "என்ன! நான் தான் பகவந் நாம ஸங்கீர்த்தனம் செய்கிறேனே; என்னிடம் பாவம் எப்படி நிலைத்திருக்கும்? நான் ஈசுவரனுடைய குமாரனல்லவா! அவனுடைய ஐசுவரியத்துக்கு நான் பாத்தியப்பட்டவனல்லவா?" என்று சொல்வது அவனுடைய மூர்க்க பக்தியின் திறன்.



## 26. ஈசுவரக் கிருபை

535. மலய மாருதம் வீசும்போது, வைரமுள்ள மரங்களெல்லாம் சந்தன மரங்களாக மாறுகின்றனவாம். பப்பாளி, மூங்கில், வாழை முதலிய வைரமில்லாத மரங்களோ அப்படி மாறுவதில்லை. அதுபோல, பகவத் கடாக்ஷம் பொங்கி வரும்போது பக்தியும் நற்குணமும் எவரிடமுள்ளனவோ, அவர் உடனே பரிசுத்தராகி தெய்வீகம் நிரம்பியவராகின்றார். உலகப் பற்றுள்ள உபயோகமற்றவர்களோ, எப்பொழுதும்போலவே இருப்பார்கள்.

536. அலைகளால் சலித்துக்கொண்டிருக்கும் நீர்த்தடத்தில் சந்திரனுடைய பிரதிபிம்பம் பூரணமாகத்தெரியாமல் விட்டு விட்டுத்தான் தெரியும். அதுபோல, உலகப்பற்றுக்களாலும் பாசங்களாலும் சலித்துக்கொண்டிருக்கும் மனத்தில் ஈசுவர ஜ்யோதி பூர்ணமாகப் பிரதிபலிக்காது.

537. ஒரு பக்தன் பகவந்நாமத்தை மனதுக்குள்ளேயே சொல்லிக்கொண்டு இடைவிடாது ஜபமாலை வைத்து ஜபம் செய்துவந்தான். பரமஹம்ஸர் அவனை நோக்கி, "ஏன் நீ ஓரிடத்திலேயே நிலைத்திருக்கிறாய்? முன்நோக்கிப்போ," என்றார். பக்தன், "அது ஈசுவர கிருபையாலன்றி முடியாதே," என்றான். அதற்குப் பரமஹம்ஸர், "அப்பா! ஈசுவரனுடைய கிருபா கடாக்ஷமாகிய காற்று உன் தலைமீது இரவும் பகலும் அடித்துக் கொண்டேயிருக்கிறது. வாழ்க்கைச் சமுத்திரத்தில் நீ வேகமாகப் போக விரும்புவாயானால் உன் மனமாகிய படகின் பாயைப் பிரித்துவிடு," என்றார்.

538. ஈசுவரனுடைய அருட்காற்று எப்போதும் அடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் ஸம்ஸார ஸாகரத்திலுள்ள சோம்பேறி மாலுமிகள் அதனால் பலனடையப் பார்ப்பதில்லை. சுறுசுறுப்பும் பலமுமுள்ளவர்கள் அந்த நற்காற்றைக் கிரகிக்க எப்போதும்

மனத்தை விரித்து வைத்துக்கொண்டிருக்கின்றனர். ஆகவே, போய்ச் சேரவேண்டிய இடத்துக்கு அவர்கள் சீக்கிரம் செல்கின்றனர்.

539. காற்றடிக்காமலிருக்கும் வரையில், உஷ்ணத்தைத் தணிக்க நாம் விசிறியைக் கொண்டு வீசிக்கொள்கிறோம். ஆனால் ஏழை பணக்காரர் என்ற பேதமில்லாது காற்றானது அடிக்கத் தொடங்கியதும் அனைவரும் விசிறியைக் கொண்டு வீசுவதை நிறுத்தி விடுகின்றனர். பகவானிடமிருந்து உதவி கிடைக்காதிருக்கும் வரையில் நாமே முக்தி அடையவேண்டிய முயற்சியில் இடைவிடாது பாடுபடவேண்டும். ஆனால் அதிருஷ்டவசத்தால் அந்த உதவி எவனுக்காவது கிட்டுமானால், அவன் தன் பிரயத்தனத்தை நிறுத்தி விடட்டும். இல்லையேல், நிறுத்தக்கூடாது.

540. காற்றடிக்கும்போது விசிறியை எறிந்து விடலாம். அதுபோல, பகவத் கடாக்ஷம் வரும்போது ஜப தபங்களை நிறுத்தி விடலாம்.

541. ஒருவகை மீன்களுக்கு அனேக வரிசை முட்களும் இன்னொருவகை மீன்களுக்கு ஒரே வரிசை முட்களும் இருக்கின்றன. சாப்பிடுபவர்கள் எல்லா முட்களையும் நீக்கிவிட்டு மீனை உண்கின்றனர். அதுபோல, சில மனிதர் அதிகமாகவும், சிலர் கொஞ்சமாகவும் பாபங்களை உடையவர்களாய் இருக்கின்றனர். ஆயினும் ரக்ஷிக்கவல்ல ஈசுவர கடாக்ஷமோ இவ்விருவகையினரையும் ஒரே மாதிரியாகத் தக்க காலத்தில் பரிசுத்த மாக்குகின்றது.

542. நடுக்கடலில் செல்லும் கப்பலின் பாய்மரத்தின் உச்சியில் உட்கார்ந்திருக்கும் பக்ஷி, அலுத்துப் போய், வேறோரிடம் தேடுவதற்காகத் தனது ஸ்தானத்திலிருந்து நெடுந்தூரம் பறந்து சென்று பார்த்து, ஓரிடமும் காணாமல் களைத்துத் திரும்பவும் யதாஸ்தானத்துக்கே வருகின்றது. அதுபோல, சாதாரண பக்தன் ஒருவன், அனுபவம் முதிர்ந்த தன்னுடைய சற்குருவினுடைய உபதேசங்களின்படி நடப்பதில் அலுப்படைந்தவனாய், நம்பிக்கையும் குருவினிடம் பக்தியும் இழந்து, தன்னுடைய முயற்சியினாலேயே ஈசுவரனை அடையலாம் என்று வெளிப்புறப்பட்டுப்

போவானாயின், பிரயத்தனம் முற்றுப் பெறாமல், திரும்பவும் அவன் தன் குருவினுடைய அருளையும் ஆசீர்வாதத்தையும் எதிர்பார்த்து அவரிடமே வருவது நிச்சயம்.

543. திடீரென்று ஒன்றும் சம்பவிப்பதில்லையா?

பொதுப்படக்கூறுமிடத்து, பரிபூரணநிலை அடைவதன் முன்னம் ஒருவன் நெடுங்காலம் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். பாபு துவாரகாநாத மித்திரர் திடீரென்று ஒரே நாளில் ஹைகோர்ட் ஜட்ஜாக ஆய்விடவில்லை. அந்த ஸ்தானத்தை யடைவதற்கு முன்னால் அவர் அனேக வருஷங்கள் கஷ்டப்பட்டு உழைக்கவும் படிக்கவும் வேண்டியிருந்தது. அப்படி அதிக சிரமப்பட இஷ்டமில்லாதவர்கள் வரும்படியற்ற சாதாரண வக்கீல்களாகவே இருக்கத் தயாராக இருக்க வேண்டும். என்றாலும், பகவத் கடாக்ஷத்தினால் ஒரொரு சமயம் திடீரென்று உயர்ந்த ஸ்தானம் லபிக்கலாம். கேவலம் எழுத்து வாசனையே தெரியாத இடையனாக விருந்த காளிதாஸன், ஸரஸ்வதி தேவியின் கிருபையால் ஒரு கணத்தில் கவிச் சிரேஷ்டனாக மாறியது இதற்கு உதாரணமாகும்.

544. பக்தன் எப்போதாவது ஈசுவரனுடன் ஐக்கியமாவதுண்டா? உண்டானால் அது எப்படி ஸாத்தியமாகும்?

பெருந்தன்மையுள்ள எஜமானன் ஒருவன் தனது நீண்ட நாள் காரியஸ்தன் ஒருவனுடைய யோக்கியதை, நன்னடக்கை, சிரத்தை முதலியவைகளைக் கண்டு திருப்தியடைந்து அவனைத் தனது ஸ்தானத்தில் கொண்டுபோய் வைக்கிறான். ஆனாலும் அவ்வேலைக்காரன் சங்கோசத்தினால் அந்த ஸ்தானத்தில் உட்கார மனமில்லாதவனாக இருப்பான். அதுபோல, பக்தனுடைய நெடுங்காலப் பக்தியாலும் சிரத்தையாலும் திருப்தி யடைந்த ஈசுவரன், அப் பக்தனைத் தனது ஸ்தானத்துக்கு அழைத்துப் போய்த் தெய்வீகத்தை அருளுகிறார். என்றாலும் பக்தனுக்குத் தன்னுடைய பணிவிடையை விட்டுவிட்டு ஈசுவரனுடன் ஒன்றாக விருப்பதற்கு மனம் வருவதில்லை.

545. நமக்கெல்லாம் உணவளிப்பதனால் மட்டும் ஈசுவரன் நம்மிடம் கிருபையுள்ளவன் என்று சொல்லிவிடக்கூடாது.

ஏனெனில் ஒவ்வொரு பிதாவும் தனது குழந்தைகளுக்கு உண வளிக்கக் கடமைப் பட்டவனாகவே இருக்கிறான். ஆனால் அவ் வீசுவரன் நம்மைக் கெட்ட வழிகளில் போகவிடாமலும் நாம் ஆசாபாசங்களுக்கு உள்ளாகாமலும் பார்த்துக் கொள்ளும்போது தான், வாஸ்தவமான கிருபையுள்ளவனாகிறான்.

546. ஒரு அறையில் அனேக ஆயிரம் வருஷங்களாக இருந்த இருட்டானது ஒரு தீபம் கொணரப்பட்டதும் உடனே அகன்று போகின்றது. அதுபோல, அளவில்லாத ஜன்மாந்தரங் கள் தோறும் செய்த பாபத்தொகுதிகள் ஒருதரம் உண்டாகும் ஈசுவரனுடைய கிருபா நோக்கத்தினாலேயே மறைந்து போகின் றன.

547. ஒரு கிருஹஸ்த சிஷ்யர்:—"பகவானே! தேவரீர் ஈசுவரனைக் கண்டிருக்கிறதாகக் கேட்டிருக்கிறோம். நாங்களும் அவ்வாறு ஈசுவரனைக் காணுமாறு கிருபை புரியவேண்டும். ஈசு வரனோடு உறவு கொண்டாடுவது எப்படி?"

பரமஹம்ஸர்:—ஒவ்வொன்றும் ஈசுவரனுடைய இச்சை யைப் பொறுத்துள்ளது. ஈசுவர தரிசனத்துக்குப் பாடுபட வேண்டியது அவசியம். ஏரிக்கரையில் உட்கார்ந்துகொண்டு, "இந்த ஏரியில் மீன் இருக்கிறது," என்று சொல்லிக்கொண்டு மட்டுமிருந்தால் உன் கையில் மீன் வந்து விடுமா? மீன் பிடிப் பதற்கு வேண்டிய சாமக்கிரியைகளான தூண்டிற்கோல், கயிறு, முள், பசை இவைகளைக் கொண்டுவா; தண்ணீரில் சிறிது சோற் றுப் பசையைப் போடு. அப்போது ஆழத்திலிருந்து மீன் மேலே கிளம்பி உன்னருகில் வரும். நீ அதைப் பார்த்துப் பிடிக்கலாம். நீ ஒரு பிரயத்தனமும் செய்யாமல் சாந்தமாக உட்கார்ந்து கொண்டிருப்பாய், உனக்கு ஈசுவரனை நான் காட்டவேண்டும்! நன்றாக இருக்கிறது! தயிரைத் தோய்த்து வெண்ணெயைக் கடைந்து உன் வாய்க்கு முன்னால் கொண்டுவந்து பிடித்துக் கொள்ள வேண்டுமாக்கும்! நான் மீனைப்பிடித்து உன் கைகளில் வைக்கவேண்டு மென்று கேட்கிறாய். உனது வேண்டுகோள் எவ்வளவு நியாயமில்லாதது என்பதைப் பார்.

548. அரசனை அவனுடைய அரண்மனையில் காண விரும்பு கிற ஒருவன், அரண்மனைக்குப் போய் அங்குள்ள வாசல்களை

யெல்லாம் தாண்டவேண்டும். வெளி வாசலைக் கடந்ததும், "அரசன் எங்கே?" என்று கேட்டால் காணமுடியாது. ஏழுவாசல்களையும் தாண்டிச் சென்றால்தான் ராஜாவைக் காணமுடியும்.

549. எப்படிப்பட்ட கைங்கரியத்தால் ஈசுவரனை அடையலாம்?

கைங்கரியத்தில் பேதமே கிடையாது. இந்தக் கைங்கரியந்தான் ஈசுவரனிடம் கொண்டுபோய்ச் சேர்க்குமென்றும் அது அப்படிச் சேர்க்காது என்றும் நினைக்காதே.

எல்லாம் ஈசுவரனுடைய கிருபையைப் பொறுத்துள்ளது. அந்தக் கிருபையைப் பெறவேண்டுமானால், நீ எந்தக் காரியத்தைச் செய்தாலும் சரியே, அதை முழுமனதோடும் அத்தியந்த விருப்பத்தோடும் செய். ஈசுவர கடாக்ஷத்தால் உனக்கு அனுகூலமான சந்தர்ப்பங்கள் உண்டாகும். உனது எண்ணம் பூர்த்தியாவதற்கு வேண்டிய அம்சங்கள் கைகூடும். உதாரணமாக, உலகத்தைத் துறக்க வேண்டுமென்று உனக்கு விருப்பமுண்டாகி, அதற்கு உனது குடும்பபாரம் இடையூறாக விருக்குமானால் உனக்காக உன் ஸகோதரன் அக்குடும்ப பாரத்தை ஏற்றுக்கொள்ள முன் வருவான். ஒருவேளை உனது மனைவியே உன் ஆத்ம வாழ்க்கைக்கு இடையூறாக நிற்காமல் உதவியும் செய்யலாம்; அல்லது நீ கல்யாணம் செய்துகொள்ளாமலேயே இருந்துவிடவும் எவ்விதத்திலும் உனக்கு உலகபந்தம் நேரிடாமலும் ஆய்விடக்கூடும்.



# 27. ஸமாதி நிலை

550. ஸமாதியில் ஒருவனுடைய மனநிலைமை எப்படிப் பட்டதாகவிருக்கும்? கொஞ்சநேரம் ஜலத்திலிருந்து வெளியேற்றப்பட்ட உயிருள்ள மீனென்றைப் பழையபடியே தண்ணீரில் போட்டால் அது எவ்வளவு ஆனந்தம் அனுபவிக்குமோ அதற்குச் சமானமான ஆனந்த நிலையில் இருக்கும்.

551. பொற் குளிகையின் ஸ்பர்ச மாத்திரத்தால் இரும்பினாலான கத்தி பொன்மயமாக மாறுகிறது. அதற்குப் பழைய உருவம் இருப்பினும், இரும்புக் கத்தியைப் போலத் தீங்கு செய்யும் சக்தி இப்போது அதற்கில்லை. அதுபோல, ஈசுவரனுடைய சரணாரவிந்தங்களை ஸ்பர்சிப்பவனுடைய ரூபம் மாறாமலிருந்தபோதிலும் அவன் பிறருக்குத் தீமைசெய்ய வல்லனல்லனாகிறான்.

552. அது போவதும் வருவதுமான நிலைமையாகும். நீ உள் முகமாகச் சென்று பரம் பொருளை அடையும்போது உனது ஸ்வரூபம் அதனுடைய ஸ்வரூபத்தில் ஐக்கியமாகிறது. இதுதான் ஸமாதி. நீ திரும்பி வருகிறாயென்று வைத்துக்கொள்வோம். அப்போது உன்னுடைய அகங்காரம் வந்து விடுகிறது. முதலில் நீ ஆரம்பித்த இடத்துக்கே வந்து விடுகிறாய். அப்போது, உன்னுடைய அகங்காரம் அப் பரம்பொருளிடத்திலிருந்தே வந்ததென்பதையும், ஈசுவரன், மனிதன், பிரகிருதி எல்லாம் ஒரே தத்துவத்தின் பேதங்களென்பதையும், அவைகளில் ஏதேனுமொன்றை நீ உறுதியாய்ப் பிடித்துக் கொண்டால், அவையெல்லாவற்றையும் அறியக்கூடுமென்பதையும் நீ தெரிந்து கொள்வாய்.

553. சமுத்திரத்தின் கீழுள்ள காந்தக் கல்மலை, தண்ணீரின்மீது போகும் கப்பலை இழுத்து, அதனுள்ளிருக்கும் இரும்பு ஆணிகளையெல்லாம் பிடுங்கி, பலகைகளை வெவ்வேறாக்கி, கப்பலைத் தண்ணீரில் மூழ்கச் செய்கின்றது. அதுபோல,

ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய தெய்விகக் காந்தத்தால் இழுக்கப்படும்போது அந்தக் காந்த சக்தியானது, மனிதனுடைய சுயாநலம் கருதும் தன்மையையும் ஜீவபோதத்தையும் ஒரு நொடிப் போதில் மாய்த்து ஆத்மாவைக் கடவுளினுடைய எல்லையில்லாத ப்ரேமையாகிய ஸாகரத்தில் ஆழ்த்துகின்றது.

554. பாலையும் ஜலத்தையும் சேர்த்தால் அவை சீக்கிரம் ஒன்றாய்க் கலந்து விடுகின்றன. ஆனால் பாலை வெண்ணெயாகப் பண்ணி அவ்வெண்ணெயை ஜலத்தோடு சேர்த்தால், அது தண்ணீருடன் கலக்காமல் அதன் மீது மிதக்கின்றது. அது போல, ஜீவனானது ஒருதரம் கடவுள்நிலையை அடைந்து விட்டால் பக்குவமடையாத கணக்கற்ற ஜீவர்களுடன் சதா பழகினாலும் அவைகளின் கெட்ட சகவாஸத்துக்கு ஒருபோதும் உட்படாது.

555. புதிதாகக் கல்யாணம் செய்துகொண்ட நங்கையொருத்திக்குக் குழந்தை பிறக்காமலிருக்கும் வரையில், அவள் எப்போதும் வீட்டு வேலைகளைக் கண்ணும் கருத்துமாகச் செய்வாள். ஆனால் அவளுக்கு ஒரு மகன் பிறந்தவுடன், அவள் சில்லறை வேலைகளைக் கவனிப்பதில்லை. அவைகளைச் செய்வதில் அவளுக்குப் பிரியம் இருப்பதுமில்லை. தன் குழந்தையை நாள் முழுவதும் சீராட்டித் தாலாட்டி அத்யானந்தத்துடன் அதை முத்தமிட்டுக் கொண்டிருப்பதிலேயே அவளுக்குப் பொழுது போகின்றது. அதுபோல, அக்ஞானத்தில் உழலும் மனிதன் கண்ட கண்ட வேலைகளையெல்லாம் செய்வதில் எப்போதும் ஈடுபட்டுக் கொண்டிருப்பான். ஆனால் தன்னுடைய உள்ளத்தில் ஈசுவரன் இருப்பதை அவன் கண்டுகொண்டதும் பழைய வேலைகளில் அவனுக்கு ஆனந்தமுண்டாவதில்லை. ஈசுவரஸேவை செய்வதிலும் அவனுடைய சித்தத்தின்படி நடப்பதிலுமே அவனுக்கு ஆனந்தமுண்டாகிறது. வேறெந்தக் காரியமும் அவனுக்கு இன்பந்தருவதில்லை. ஈசுவரானுபவத்தினால் உண்டாகும் ஆனந்தத்திலிருந்து அவனால் விலகியிருக்கவும் முடியாது.

556. தவளைக் குஞ்சினுடைய வால் விழுந்ததும் அது தண்ணீரிலும் தரையிலும் வாழக்கூடும். அக்ஞானமாகிய வால் மனிதனிடமிருந்து விழுந்துவிட்டால் அவனுக்கு முக்தியுண்டாகின்

றது. அப்போது அவன் கடவுளினிடத்தும் அதுபோலவே உலகததினிடத்தும் நன்கு வாழக் கூடியவனுகிருன்.

557. இயேசு கிறிஸ்துவைச் சிலுவையில் யூதர்கள் அறைந்தபோது தாம் அவ்வளவு துன்ப துயரங்களை யனுபவிக்கையிலும் ஏன் அம்மகான் அவர்கள் மன்னிக்கப் படட்டுமென்று பிரார்த்தித்தார்?

பச்சைத் தேங்காயை வெட்டினுல் கத்தியானது ஓட்டைப் பிளந்துகொண்டு உள் பருப்பில் பாயும். ஆனுல் முற்றின நெற்றுக்காயில் ஒடு வேறு, பருப்பு வேருகப் பிரிந்திருக்கும். ஓட்டைப் பிளந்தாலும் கத்தி பருப்பில் படாது. இயேசு கிறிஸ்து நெற்றுத் தேங்காய்க்குச் சமானம். அவரது அந்தராத்மா அவருடைய சரீரத்தைவிட்டு வேருகப் பிரிந்திருந்தது. ஆதலால் தான் சரீர வேதனைகள் அவரைத் துன்புறுத்தவில்லை. தேகத்திலனேக ஆணிகளை அறைந்த போதிலும் அவர் மிகுந்த சாந்தமுடையராய், தம்முடைய சத்துருக்களின் நன்மைக்காகப் பிரார்த்தனை செய்ய வல்லவராக விருந்தார்.

558. உலகத்தில் ஐந்துவகை ஸித்தர்கள் காணப்படுகின்றனர்:—

(1) ஸ்வப்பன ஸித்தர்:—கனவு மூலமாகத் தெய்வ அருளைப் பெற்றுப் பரிபூரண மடைபவர்கள்.

(2) மந்திர ஸித்தர்:—மந்திரோபதேசம் பெற்று அதன் மூலமாகப் பரிபூரண மடைபவர்கள்.

(3) ஹடாத் ஸித்தர்:—புதையல் கிடைப்பதினுலோ, அல்லது செல்வவான் வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதினுலோ, திடீரென்று பணக்காரனுகிற ஒரு ஏழையைப்போல, இருந்தாற்போல இருந்து பரிபூரண மடைபவர்கள் ஹடாத் ஸித்தர்கள் எனப்படுவர். பாபிகள் அனேகர் திடீரென்று எப்படியோ பரிசுத்தர்களாகி ஈசுவர ஸாம்ராஜ்யத்தில் புகுகின்றனர்.

(4) கிருபாஸித்தர்:—ஈசுவரனுடைய கிருபை மூலமாகப் பக்குவ மடைபவர்கள். காட்டை வெட்டித் திருத்துகிறவன் பழைய கிணற்றையோ கட்டடத்தையோ கண்டுபிடித்தால்

பொருள். செலவு செய்து சிரமப்பட்டுப் புதிதாக வேறொரு கிணற்றையோ கட்டடத்தையோ கட்டுவதில்லை. அதுபோல, சிலர் சிரமப்படாமலேயே பரிபூரணமடையும் பாக்கியசாலிகளாக இருக்கின்றனர்.

(5) நித்ய ஸித்தர் :—சதா பரிபூரணராக விருப்பவர். புடல், பூசுணி முதலிய கொடிகளில் காய் தோன்றிய பிறகு பூவின் இதழ்கள் வெளிவருவதைப்போல, நித்ய ஸித்தர் பிறக்கும்போதே பரிபூரணராய்ப் பிறப்பவர். முக்தியடைதற் பொருட்டு அவர்கள் செய்வதாகத் தோன்றும் பிரயத்தனங்கள் எல்லாம் மானிடவர்க்கத்துக்கு வழி காட்டுவதற்கேயாம்.

559. ஸித்தி அடைந்தவனுடைய நிலைமை எப்படிப்பட்டது?

(பரிபூரண நிலையை அடைந்தவனை ஸித்தி யடைந்தவன் என்றும், நன்றாய் வெந்து பக்குவமான பதார்த்தங்களை ஸித்தி யடைந்தவை யென்றும் வங்காளத்தில் சொல்வது வழக்கம்.) ஸித்தி அடைந்த உருளைக் கிழங்கோ, கத்திரிக்காயோ, மிருதுவாயும் சதைப் பற்றுள்ளதாயும் ஆவதைப்போல, ஸித்தி அடைந்த மனிதன் வெகு பணிவுள்ளவனும் இனிய தன்மை உடையவனுமாகிறான்.

560. பாதரஸம் வைக்கப்பட்டுள்ள பாத்திரத்தில் போடப்பட்ட காரீயம் சீக்கிரத்தில் கரைந்து போகிறது. அதுபோல ஜீவாத்மாவானது பிரம்மமாகிய ஸமுத்திரத்தில் மூழ்கும்போது தன்னுடைய எல்லையுட்பட்ட தனித்தன்மையை இழக்கின்றது.

561. தன் தலைமயிரில் குருவிகள் கூடு கட்டினாலும், அதைக்கூடத் தெரிந்து கொள்ளாதபடி தனக்குப் புறம்பான எல்லாவற்றையும் மறந்து ஸமாதியில் இருப்பவன் எவனோ அவன்தான் உண்மையான தியான பூர்த்தியைப் பெற்றவனாவான்.

562. ஸமாதி நிலைமையில் வெளியுலக ஞாபகம் அவருக்கு இருக்கிறதா என்று கேட்கப்பட்டபோது, பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர் பதில் சொன்னதாவது :—“ ஸமுத்திரத்தின் கீழே மலைகள், குன்றுகள், பள்ளத்தாக்குகள், சமதரைகள்

முதலியன இருக்கின்றன. என்றாலும் அவைகள் மேற்பரப்பில் காணப்படுவதில்லை. அதுபோல, ஸமாதி நிலைமையில் ஸச்சிதானந்தமாகிய பரந்த ஸாகரந்தான் ஒருவனுக்குத் தோன்றுகிறது. அப்போது, தான் என்ற தனித்தன்மை ஒடுங்கி மறைந்து நிற்கின்றது."

563. மனிதனுடைய ஹிருதயத்தில் ஈசுவரன் தோற்றமடைவதின் அடையாளங்கள் யாவை? அருணோதயத்தின் போது தோன்றும் பிரகாசம் சூரியனுடைய உதயத்தைத் தெரிவிக்கின்றது. அதுபோல ஈசுவரன் உள்ளத்தில் உதயமாவதற்கு முன்னால், சுயநலம் கருதாத்தன்மை, பரிசுத்தம், ஸன்மார்க்கம் ஆகிய குணங்கள் உண்டாகின்றன.

564. தனது வேலைக்காரன் வீட்டுக்கு அதிதியாகப் போவதற்கு முன்னால், அவ்வேலைக்காரன் தன்னைத் தகுந்த மரியாதையுடன் வரவேற்று உபசரிக்க வேண்டியதற்காக, அரசன் ஒருவன் தன்னுடைய பண்டக சாலையிலிருந்தே வேண்டிய ஆஸனங்கள், ஆபரணங்கள், ஆகாராதிகளை அவ்வேலைக்காரனுக்கு அனுப்புகிறான். அதுபோல ஈசுவரன் பக்தனிடம் செல்லுமுன்னால், ப்ரேமை, பக்தி, சிரத்தை ஆகிய இவைகளை அந்த பக்தனுடைய அவாவுற்ற ஹிருதயத்தில் புகும்படி அனுப்பியருள்கிறான்.

565. ஸ்வர்ண குளிகையால் பொன்னாக மாற்றப்பட்ட இரும்பைத் தரையில் புதைத்தாலும் குப்பைமேட்டில் எறிந்தாலும் அது எப்போதும் பொன்னாகவே இருக்குமேயன்றிப் பழைய நிலைமையை அடையாது. ஒருவன் ஈசுவர சரணாரவிந்தத்தை ஒருதரம் ஸ்பரிசித்த போதிலும் அவனுடைய நிலைமையும் அது போன்றதே. உலகச் சந்தடியில் வசித்தாலும் சரியே, காட்டில் தன்னந் தனியே வாழ்ந்தாலும் சரியே அப்படிப்பட்டவன் ஒருகாலும் எவ்வித அழுக்கும் அடைய மாட்டான்.



# 28. முக்தி

566. எல்லா மனிதர்களாலும் ஈசுவரனைக்காண முடியுமா? எப்போதும் பட்டினியாக ஒருவனும் இருக்கமாட்டான். சிலருக்குக் காலையில் 9-மணிக்கு ஆகாரம் கிடைக்கும். சிலருக்கு மத்தியான வேளையிலும், சிலருக்கு மாலைப்போதிலும், இன்னும் சிலருக்கு சூரியாஸ்தமன மான பிறகும் உணவு கிட்டும். அது போல், எப்போதாவது, இந்த ஜன்மத்திலோ அல்லது அனேக ஜன்மங்கள் கழிந்த பின்னரோ எல்லாரும் நிச்சயமாக ஈசுவரனைக் காண்பார்கள்; கண்டுதான் தீரவேண்டும்.

567. காமத்தோடும் காசாசையோடும் சம்பந்தப்பட்டுள்ள மனம் மேல்தோலோடு சம்பந்தப்பட்டுள்ள கொட்டைப் பாக்கைப் போன்றதாம். பாக்கு முற்றுதவரையில் அதனுள்ளிருக்கும் சாரத்தினுலேயே அது மேல்தோலோடு ஒட்டிக்கொண்டிருக்கும். காலக்கிரமத்தில் அந்த ஸாரமானது வற்றிப்போனல் பாக்கு வேறு, தோல் வேருகிவிடும். ஆட்டிப்பார்த்தால், உள்ளே பாக்கு 'குடுகுடு' என்று ஆடும் சப்தம் கேட்கும். அதுபோல, காமம், காசாசை யாகிற ஸாரம் வற்றிப்போமானல் மனிதனுக்கு முக்தியுண்டாகும்.

568. ஒருவன் ஒரு வஸ்துவின் சுபாவம் ஒருபோதும் மாருது என்ருன். அதற்கு மற்ருெருவன், "நெருப்பானது கரியைப்பற்றிக் கொண்டால் அக்கரியின் கருநிறத்தைப் போக்கிவிடுகிறது," என்று தடுத்துரைத்தான். அதுபோல, ஞானமாகிய நெருப்பால் மனம் பற்றியெரியும்போது அதன் சுபாவகுணமும் அழிந்துபோம். அப்போது பந்தம் உண்டாகச் செய்யும் தன்னுடைய தன்மையை இழந்து விடுகிறது.

569. ஆகாசத்தில் பறக்கவிடும் ஆயிரக்கணக்கான காற்ருடிகளில் இரண்டொன்றுதான் நூலை அறுத்துக்கொண்டு விடுதலை யடையும். அதுபோல நூற்றுக்கணக்கான ஸாதகர்களில்

இரண்டொருவர்தான் உலக பந்தத்தினின்று விடுதலையடைகின்றனர்.

570. பேய் பிடித்திருக்கும் ஒருவனுக்குத் தனக்குப் பேய் பிடித்திருக்கின்றதென்ற உணர்ச்சி வருமானல், உடனே அப்பேய் அவனை விட்டகலுகின்றது. அதுபோல, மாயையால் பந்தப்பட்ட ஜீவன், தான் அப்படிப் பந்தப்பட்டிருப்பதைத் தெரிந்து கொண்டவுடனே மாயையினின்றும் விடுபடும்.

571. வேகவைத்த நெல்லைப் பூமியில் விதைத்தால் அது மறுபடியும் முளைக்காது. வேகவைக்காத நெல்தான் முளைவிடும். அதுபோல ஸித்தனை பிறகு ஒருவன் இறப்பானானல் அவன் மறு ஜன்மம் அடைவதில்லை. அஸித்தனே தான் ஸித்தனாகும் வரையில் திரும்பத் திரும்பப் பிறவி யெடுக்கவேண்டும்.

572. மனந்தான் எல்லாம். அது தனது சுயேச்சையை இழக்குமானல் நீயும் உனது சுயேச்சையை இழப்பாய். மனம் சுயேச்சையோடு இருக்குமானல் நீயும் சுயேச்சையோடு இருப்பாய். மனத்தை, வண்ணனிடமிருந்து வந்த வெளுப்பு வஸ்திரத்தைப் போல, எந்தச் சாயத்திலும் தோய்த்தெடுக்கலாம். ஆங்கில பாஷையைப் படித்தால் உனது சம்பாஷணையில், நீ தடுக்க முயன்றாலும், ஆங்கிலச் சொற்கள் கலந்துவிடும். சம்ஸ்கிருதம் படித்த பண்டிதன் நிச்சயம் சுலோகங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுவான். துர்ச்சனரோடு சகவாசம் செய்தால் மனமும் வாக்கும் கெட்டுப்போம். பக்தர்களின் மத்தியிலிருந்தால் மனம் ஈசுவரனைப் பற்றிச் சிந்திப்பது நிச்சயம். சகவாசத்துக்கும் செய்கைக்கும் தக்கபடி மனத்தின் சுபாவம் மாறுபடும்.

573. மனந்தான் எல்லாம். மனைவியிடத்துள்ள பிரியம் ஒருவகையானது; குழந்தையிடத்துள்ள வாத்ஸல்யம் வேறொரு வகையானது. ஒரு பக்கத்தில் மனைவியும் மற்றொரு பக்கத்தில் குழந்தையும் இருக்கின்றனர். ஒருவன் அவ்விருவரையும் பாராட்டுகிறான்; ஆனல், வேறு வேறு உணர்ச்சியுடன்.

பந்தம் மனத்தை யொட்டியது; முக்தியும் அவ்வாறே. "நான் ஒரு முக்தாத்மா; நான் ஈசுவரனுடைய புத்திரன்; என்னை

யாரால் பந்தப்படுத்த முடியும்?" என்று நீ சொல்வாயானால் நீ முக்தனாக ஆவது நிச்சயம். பாம்பினால் கடிக்கப்பட்டவன் "விஷமில்லை, விஷமில்லை" என்று முழு நம்பிக்கையுடனும் மனோதிடத்துடனும் சொல்லக்கூடுமானால் அவனுக்கு விஷ உபத்திரவமே இராது.

574. ஏன் உன் ஆயுட்காலமெல்லாம் பாபத்தைப்பற்றியும் நரக வேதனையைப்பற்றியும் பேசிக்கொண்டிருக்கிறாய்? அவைகளை விட்டுவிட்டு, பகவந்நாம ஸங்கீர்த்தனம் பண்ணு. "ஈசுவரா! செய்யத்தகாத காரியங்களை நான் செய்துள்ளேன்; செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாமல் விட்டுவிட்டேன். ஸ்வாமி! என்னை க்ஷமித்தருள வேண்டும்" என்று ஒரு தரம் சொல்லு. சொல்வதுடன் நிற்காமல் அவனிடம் பூரண நம்பிக்கை கொண்டவனாயிரு. அப்போது உன் பாபங்களெல்லாம் அகன்று போம்.



# 29. ஞானியின் ஸமதிருஷ்டி



575. சந்தனத்தின் ஸுகந்தத்தையும் அழுகிய பிணத்தின் துர் நாற்றத்தையும் காற்று ஒருங்கே கொண்டு வீசுமாயினும், அவைகளுடன் அது கலந்து விடுவதில்லை. அம்மாதிரியாகவே முக்தியடைந்த ஜீவனும் உலகத்தில் வாழ்ந்தபோதிலும் அதனுடன் கலந்திருப்பதில்லை.

576. ஒரு ஸாதுவானவர் ஜன நெருக்கமுள்ள ஒரு தெரு வழியே போகும்போது ஏதோ தற்செயலாய் ஒரு துஷ்டனுடைய காலை மிதித்துவிட்டார். உடனே அந்தப் பொல்லாதவன் மிக்க கோபங்கொண்டு கொஞ்சமேனும் இரக்கங்காட்டாமல் ஸாதுவை அடித்தபடியால் அவர் பிரக்ஞையற்றுத் தரையில் விழுந்துவிட்டார். அவருடைய சிஷ்யர்கள் வெகுபாடு பட்டுப் பலவித சைத்யோபசாரங்களைச் செய்து அவருக்குத் தம் நினைவை உண்டு பண்ண முயன்றனர். கொஞ்சம் பிரக்ஞை வந்ததும், சிஷ்யர்களில் ஒருவர் அவரைப் பார்த்து, "ஸ்வாமி! இப்போது தங்களுக்கு உபசாரம் செய்கிறது யார் என்று தெரிகிறதா?" என்று கேட்டார். "என்னை அடித்தவன் தான்" என்று ஸாது பதில் சொன்னார். உண்மையான ஸாதுவுக்கு மித்ரனென்றும் சத்ருவென்றும் வித்தியாசமே கிடையாது.

577. உயர் குடும்பத்தில் உதித்த பதிவிரதா ஸ்திரீகளைக் காணும்போது, லோகமாதாவே அப்படி நாணம் முதலான நற்குணங்களுடைய கற்புள்ள ஸ்திரீயின் உருவத்துடன் வந்திருப்பதாகக் காண்கிறேன். வெட்கம் மானம் இவைகளை முற்றிலும் தவிர்த்து, வாசற்றிண்ணையில் உட்கார்ந்து கொண்டிருக்கும் வேசிகளைப் பார்க்கும் போதும் அதே லோகமாதாவானவள் வேறொரு விதத்தில் விளையாடுவதாகவே யான் காண்கிறேன்.

578. க்ஷமித்தல் சன்யாசியின் உண்மைச் சுபாவம்.

579. தண்ணீரில் அமிழ்த்தி வைக்கப்பட்டிருக்கும் ஜாடிக்கு உள்ளேயும் புறத்தேயும் ஜலமிருக்கும். அதுபோல கடவுளில் ஆழ்ந்த ஆத்மாவானது உள்ளும் புறமும் ஸர்வவியாபகமான சைதன்யத்தைத்தான் காணும்.

580. தர்ம மார்க்கத்தில் நிம்மதியாய் நீ வாழுங்காலத்தில் லோக ஜனங்களுடைய புகழையும் இகழையும் பொருள் படுத்தாதே.

581. ஒருவன் பூமியிலிருக்கையில் புல்லையும் வானுற ஓங்கி வளர்ந்த தேவதாரு மரத்தையும் கண்டு, "இந்த மரம் எவ்வளவு பெரியது, புல் எவ்வளவு சிறியது" என்கிறான். ஆனால் அவன் ஒரு மலைமீதேறி உச்சியிலிருந்து கீழே நோக்கும்போது, பெரிய தேவதாரு மரமும் சிறிய புல்லும் ஒருங்கே உருத்தெரியாத பச்சைப்பொட்டாகத் தோன்றுவதைக் காண்கிறான். அதுபோல, உலகப் பற்றுள்ளவர்களுடைய பார்வைக்கு ஒருவன் அரசனென்றும் மற்றொருவன் தெருப்பெருக்கும் தோட்டியென்றும், ஒருவன் தகப்பனென்றும் மற்றொருவன் மகனென்றும், இம்மாதிரியான ஸ்தான பேதங்களும் அந்தஸ்து வித்யாசங்களும் தோன்றும். ஆனால் தெய்வ தரிசனம் பெற்ற பிற்பாடு எல்லாம் ஒரேவிதமாய்த் தோன்றும். அப்போது, நல்லது கெட்டது, உயர்ந்தது தாழ்ந்தது என்ற வித்யாஸங்களே இருப்பதில்லை.

582. ஒரு சமயம் பகவத் ப்ரேமையில் ஈடுபட்ட ஸாது ஒருவர் பரமஹம்ஸர் தங்கியிருந்த ராணி ராஸ்மணியின் காளி கோவிலுக்கு வந்தார். அவருக்கு ஒரு தினம் ஆகாரமே கிடைக்கவில்லை. பசியோடிருந்த போதிலும் தமக்கு அன்னம் வேண்டும் என்று அவர் ஒருவரையும் கேட்கவில்லை. ஆனால் ஒரு மூலையில் எறியப்பட்ட எச்சில் சோற்றை ஒரு நாய் தின்பதைக் கண்டு அங்கே சென்று அந்நாயைத் தழுவிக்கொண்டு, "தம்பி! எனக்குப் பங்கிட்டுக் கொடுக்காமல் நீ மட்டும் தின்பதெப்படி?" என்று சொல்லி, அந்நாயுடன் கூடச் சாப்பிட ஆரம்பித்தார். இப்படிச் சாப்பிட்ட பிறகு அவர் காளி கோயிலுக்குள் நுழைந்து, மிகுந்த பக்தி பரவசத்துடன், கோயில் முழுவதும் ஆநந்த உணர்ச்சி நிரம்பும்படியாக ஸ்தோத்திரம் பண்ணினர். பிறகு அவர் வெளியே

செல்லும்போது, பரமஹம்ஸர், தமது உறவினரான ஹிருதய முகர்ஜியை அந்தச் சாதுவின் பின் போகும்படியும் அவர் சொல்வதை யெல்லாம் தம்மிடம் வந்து சொல்லும்படியும் சொல்லி அனுப்பினர். ஹிருதயர் அப்படியே அவர் பின்னே கொஞ்ச தூரம் சென்றார். அந்த ஸாது திரும்பிப்பார்த்து, "என் அப்பா நீ என் பின்னல் வருகிறாய்?" என்று கேட்டார். "ஸ்வாமி! எனக்கு ஒரு ஹிதோபதேசம் செய்தருளவேண்டும்," என்றார் ஹிருதயர். அதற்கு அவர், "அப்பா! இந்த அசங்கியமான குட்டைத்தண்ணீரும் அதோ பெருக்கெடுத்தோடும் ஸர்வ பாபநாசினியான கங்கையின் தீர்த்தமும் ஒன்றென உனக்குத் தோன்றும் போதும், வீணகானமும் அதோ கேட்கும் ஜனக் கூட்டத்தின் சந்தடியும் உனது காதுகளுக்கு வித்யாசமில்லாமல் கேட்கும் போதும்தான் உனக்கு உண்மையான ஞானோதயம் உண்டாகும்," என்றார். இதைக் கேட்டுவந்த ஹிருதயர் பகவானிடம் சொன்ன போது அவர், "அந்த ஸாது உண்மை ஞானத்தையும் ப்ரேமையையும் பெற்றிருக்கிறார்; ஸித்தர்கள் குழந்தைகளைப் போலவும், பேய்களைப் போலவும் அல்லது பைத்தியக்காரர்களைப் போலவும் இன்னும் பலவிதமான வேஷங்களோடும் அங்குமிங்கும் அலைந்து திரிவார்கள்," என்றார்.

583. பலிபீடம், பலியிடப்படும் உயிர், பலியிடுவோன் ஆகிய மூன்றும் ஒன்றெனவே நான் அறிகிறேன்.

584. இப்போது நான் அடைந்திருக்கிற ஞான நிலைமையில் ஈசுவரன் ஒவ்வொரு மானிட வடிவத்தோடும் நடப்பதாயும் நல்லவர் கெட்டவர் பாபிகள் தர்மாத்மாக்கள் என்ற வித்தியாசமின்றி எல்லாரிடத்தும் அவன் ஒரே விதமாய்த் தோன்றுவதாயும் காண்கின்றேன். ஆதலால், நான் வேறு வேறு வகையினரான ஜனங்களைக் காணும்போது, "பாபிஸ்வரூபனான ஈசுவரன், தர்மாத்மஸ்வரூபனான ஈசுவரன், ஸாது ஸ்வரூபனான ஈசுவரன் துஷ்ட ஸ்வரூபனான ஈசுவரன்," என்று சொல்லிக்கொள்கிறேன்.

585. ஈசுவரனிடம் வித்யை அவித்யை என்ற இரண்டும் உள்ளன. வித்யா மாயையானது மனிதனை ஈசுவரனிடம் சேர்க்

கும். அவித்யா மாயையோ அவனை ஈசுவரனிடமிருந்து புறம்பே போகச் செய்யும். ஞானம், பக்தி, வைராக்யம், பூததயை இவை யெல்லாம் வித்யா மாயையின் தோற்றங்களாம். இவைகளின் உதவியைக் கொண்டுதான் ஒருவன் ஈசுவரனை அடைய முடியும்.

ஆனால் இன்னும் ஒருபடி உயர்ந்தால் பிரம்ம ஞானத்தை அடையலாம். அந்நிலையில் அவனே எல்லாமாக விருப்பதை நான் உணர்கிறேன்; உண்மையாகக் காண்கிறேன். விரும்பத் தகுந்ததும் வெறுக்கத் தகுந்ததும் அங்கு இல்லை. எவருடனேயும் கோபங்கொள்வது எனக்கு முடியாத காரியமாகின்றது.

ஒருநாள் நான் வண்டியில் போய்க் கொண்டிருக்கையில் ஒரு வீட்டு மேல்மெத்தையின் மீது இரண்டு தாஸிகள் நிற்பதைக் கண்டேன். ஆனால் அவர்களிடத்து உண்மையில் திவ்ய மாதாவையே நான் கண்டேனதலால், அவர்களுக்கு நமஸ்காரம் பண்ணிப் போனேன்.

இந்த நிலைமையை நான் அடைந்ததும் என்னால் தக்ஷிணேசுவர ஆலயத்தில் காளிதேவிக்குப் பூஜை நைவேத்யம் முதலியன எதுவும் செய்ய முடியவில்லை. அதைக் கண்டு, கோவிலதிகாரிகள் என்னை வையத் தொடங்கினர். ஆனால் நான் அவர்களுடைய வசைக்குக் கொஞ்சங்கூட வருந்தாமல் சிரித்தேன்.



# 30. ஆத்மஞானமும் ஸமூக வாழ்க்கையும்



586. மரத்திலேயே பழுத்துத் தானே கீழே விழும் பழம் வெகு தித்திப்பாக இருக்கும்; ஆனால் காயைப் பறித்துப் பழுக்க வைத்தால் அது அவ்வளவு தித்திக்காது. சீக்கிரத்தில் சுருங்கி விடும். ஞான நிலையை அடைந்து எல்லாப் பொருளையும் ஒன்றாகக் காணும் ஒருவனுக்கு ஜாதிபேதமானது தானே நழுவி விடுகின்றது. இந்த உயர்ந்த நிலைமையை அடையாதவரையில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வித்தியாசம் கட்டாயம் தோன்றவே செய்யும். ஆதலால் அப்படிப்பட்டவர் அனைவரும் ஜாதி வித்தியாசம் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த அஞ்ஞான நிலைமையில் ஒருவன் ஜாதிபேதங்களைக் கவனியாது தன்னிஷ்டம் போல் நடந்து தான் பரிபூரணமடைந்து ஞானியாய் விட்டதாகப் பாசாங்கு செய்வானானால் அவன் செயற்கையால் பழுக்கவைத்த பழத்துக்குச் சமானமாவான்.

587. புயல் காற்றடிக்கும்போது அரசமரம் இன்னது ஆலமரம் இன்னது என்று வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. அதுபோல, உண்மை ஞானமாகிய புயற்காற்று ஒருவனுக்குள் அடிக்கும்போது அவனிடம் ஜாதி பேதம் இருக்க முடியாது.

588. பகவத் ப்ரேமையாகிய அமிர்தத்தை ஆழ்ந்து பருகினவனுடைய நிலைமையானது கட்குடியனுடைய நிலைமைக்குச் சமானமாகும். ஆதலால் அவன் இன்னாரிடம் இப்படி நடந்து கொள்ள வேண்டுமென்கிற நியதியை அனுசரிக்கக் கூடாதவனாகிறான்.

589. பிரம்மஞானத்தை அடைந்தவன் பூணூலைத் தரித்துக் கொண்டிருப்பது தகுதிதானா? ஆத்மஞானம் வந்தால் எல்லா பந்தங்களும் தாமே அறுகின்றன. அப்போது பிராம்மணன் இவன், சூத்ரன் இவன், இவன் தாழ்ந்தவன், இவன் உயர்ந்தவன் என்ற வித்யாசங்கள் இருப்பதில்லை. இந்த நிலைமையில் ஜாதியின் அடையாளமாகிய பூணூல் தானே நழுவி விடு

கிறது. ஆனால் உயர்வு தாழ்வும் வித்தியாசமும் காணக் கூடிய மனோபாவம் இருக்கும் வரையில், பலவந்தமாய் ஒருவன் பூணூலைக் கழற்றி எறிந்து விடக்கூடாது.

590. கட்குடியன் ஒருவன் தனது சட்டையைச் சில சமயம் தலையிலும் சிலசமயம் காலிலும் மாட்டிக் கொள்வதைப் போல, பகவத்ப்ரேமையில் ஈடுபட்டவன் ஒருவன் வெளியுலக விஷயங்களில் ஞாபகமில்லாதவனாக இருக்கிறான்.

591. புண் ஆறியதும் மேலிருக்கும் பொருக்குத் தானே விழுந்துவிடும். தானே விழுமுன்னால் அதைப் பலவந்தமாய்ப் பிய்த்து எடுத்தால் புண்ணிலிருந்து ரத்தம் வரும். அதுபோல ஞானோதயமுண்டாகும்போது, ஜாதிபேதங்கள் எல்லாம் அகன்று மறைகின்றன. ஆனால் அஞ்ஞானிகள் அப்படிப்பட்ட வித்தியாசங்களை அகற்றிவிடப் பார்ப்பது தகாது.

592. இக்காலத்தவர்கள் ஒவ்வொரு பொருளினுடைய ஸாரத்தை மட்டுமே கிரகிக்கிறவர்களாக இருக்கின்றனர். அவர்கள் மதவிஷயத்திலும் ஸாரமாயிருப்பவைகளை மட்டும் கிரகிப்பார்களேயன்றி (கிரியை சடங்கு கொள்கை கோட்பாடு முதலிய) அதன் முக்கியமல்லாத விஷயங்களைக் கவனிக்க மாட்டார்கள்.

593. விலையுயர்ந்த முத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் சிப்பிக்கு மதிப்பில்லையாயினும் அம்முத்தின் வளர்ச்சிக்கு அது அத்யாவசியமாகின்றது. முத்தைப் பெற்ற மனிதனுக்கு அச்சிப்பியால் யாதொரு பிரயோசனமுமிராது. அதுபோல மிகவும் உயர்ந்த உண்மைப் பொருளை (ஈசுவரனை) அடைந்தவனுக்கு சடங்குகள், கிரியைகள் முதலியன அவசியமாக விரா.

594. பகவந் நாமத்தைச் சொல்பவர்கள் பரிசுத்தர்கள்.

அரியாதஹை* என்னுமிடத்தில் வசித்து வந்த கிருஷ்ண கிஷோர் என்னும் ஒரு பெரியார் ஒருதரம் பிருந்தாவனத்துக்குத் தீர்த்த யாத்திரையாகச் சென்றார். அங்கு ஒரு நாள் நடந்து செல்கையில் தாகமேலீட்டால், ஒரு கிணற்றண்டை நின்று கொண்டிருந்த ஒருவனைக் கண்டு தமக்குக் கொஞ்சம் தண்ணீர்

* தக்ஷிணேசுவரத்துக்கு அருகாமையிலுள்ள ஒரு ஊர்

முகந்து கொடுக்கும்படி அவனைக் கேட்டார். அவன் தான் ஒரு தாழ்ந்த ஜாதியானென்றும், பிராம்மணருக்குத் தண்ணீர் முகந்து கொடுக்க அருகனல்லனென்றும் சொன்னான். "பகவந் நாமத்தைச் சொல்லிப் பரிசுத்தனாக்கிக்கொள்" என்றார் கிருஷ்ண கிஷோர். அம்மனிதன் அப்படியே செய்து கொஞ்சம் தண்ணீர் முகந்து கொடுத்தான். பரம வைதீகப் பிராம்மணரான கிருஷ்ண கிஷோர் அந்த ஜலத்தை அருந்தினார்; பகவந் நாமத்தில் அவருடைய நம்பிக்கை எவ்வளவு அதிகமாக இருந்ததென்பதைப் பாருங்கள்.

595. கிருஷ்ண கிஷோர் ஒரு சமயம், "நீர் என் பூணூலைக் கழற்றி விட்டீர்?" என்று என்னைக் கேட்டார். என்னிடம் இந்த மாறுதல் ஏற்பட்டபோது, (அதாவது கடவுள் தரிசனமும் ஆத்ம ஞானமும் உண்டானபோது) ஆடிமாசத்துப் புயற்காற்றிலகப்பட்ட பொருள்கள் அடித்துக் கொண்டு போகப்படுவதைப் போல எல்லாப் பொருள்களும் போய் விட்டன. நிலத்தின் பொழிவைக் காட்டும் வேலிகளெல்லாம் போய்விட்டன. அதுபோலத்தான் என்னுடைய நிலைமையும் ஆயிற்று. வெளி ஞாபகமே இல்லை. எனது வஸ்திரத்தையும் பூணூலையும் காப்பாற்ற யார் இருந்தனர்?

ஈசுவர ஞானத்திலேயே அழுந்திக்கிடந்த எனக்கு நாள் முழுதும் நான் ஆடையற்றவனாக விருந்ததுகூடத் தெரியவில்லை. ஆகவே பூணூலை அகற்றியதற்காக கிருஷ்ண கிஷோர் என்னைக் கடிந்து கொண்டபோது, "இந்தக் கடவுள் பைத்தியம் ஒருதரம் உம்மைப் பிடித்தாட்டினால், அப்போது எல்லாம் நீரே அறிந்து கொள்வீர்" என்று நான் பதில் சொன்னேன்.



## 31. பக்தர்களின் ஸ்வபாவம்

596. ஒரு ரயில்வே இஞ்சின் கனமான வண்டிகள் பலவற்றை வெகு சுலபமாக இழுத்துச் செல்கின்றது. அதுபோல ஈசுவரனிடம் அன்பு பூண்ட புதல்வர்கள் அவனிடம் வைத்திருக்கும் திடவிசுவாசத்தாலும் பக்தியாலும், மிக எளிதாக உலகத் துன்ப துயரங்களைச் சகித்துக் கடக்கின்றனர்; அன்றியும் அநேகரைத் தம்மோடு ஈசுவரனிடம் அழைத்துச் செல்கின்றனர்.

597. சிக்கிமுக்கிக்கல் கற்பாந்த காலம் தண்ணீரில் கிடந்தாலும் தன்னுள் இருக்கும் நெருப்பை இழப்பதில்லை. எப்போது வேண்டுமானாலும் சரியே, அதை ஒரு இரும்புத் துண்டில் தட்டினால் நெருப்புப்பொறி உடனே பறக்கும். அதுபோல, பக்தனும் தனது விசுவாசத்தில் திடசித்தனாகவே இருப்பான். உலக பாசங்கள் எல்லாவற்றின் நடுவே அவன் இருந்தாலும் அவனது விசுவாசமும் ப்ரேமையும் குறைவதில்லை; பகவந் நாமத்தைக் கேட்டதும், ப்ரேமை மேலீட்டால் அவன் சந்தோஷ சித்தனாகிறான்.

598. பக்தனுடைய பலம் எதில் உள்ளது? அவன் ஈசுவரனுடைய குழந்தை. ஆதலால் பக்தியால் பெருகும் அவனது கண்ணீரே அவனுக்குப் பலமான ஆயுதமாம்.

599. ஒரு ஞானியும் ஒரு பக்தனும் ஒரு காட்டுவழியே போய்க்கொண்டிருந்தனர். வழியில் ஒரு புலி வந்தது. "நாம் ஓடவேண்டிய அவசியம் இல்லை; ஈசுவரன் நம்மை நிச்சயமாகக் காப்பாற்றுவான்" என்றான் ஞானி. அதற்குப் பக்தன், "தம்பி! அப்படியல்ல; நாம் ஓடிப்போவோம். நம்மால் சாத்தியமாகக் கூடிய காரியத்துக்கு நாம் என் ஈசுவரனுடைய உதவியை விரும்பி அவனைச் சிரமப்படுத்தவேண்டும்?" என்றான்.

600. பாம்பு கொடிய விஷமுள்ள ஜந்து. யாரேனுமொருவன் அதைப் பிடிக்கப்போனால் அது அவனைக் கடிக்கிறது.

ஆனால் பாம்பை எடுத்து ஆட்டும் வித்தையைக் கற்றுக்கொண்டவன் ஒரு பாம்பைப் பிடிப்பதன்றி, ஆபரணங்களைப்போல, கையிலும் கழுத்திலும் அநேகம் பாம்புகளைச் சுற்றிக்கொண்டு போகவும் கூடும். அதுபோல ஆத்மஞானத்தைப் பெற்றவனுக்கு, பெண்ணாசை பொன்னாசைகளாகிய விஷத்தால் யாதொரு தீங்கும் உண்டாகாது.

601. சரீரத்தில் உள்ள படையைச் சொறிய அதிக நமைச்சலும், சொறிவதில் ஒரு இன்பமும் உண்டாகும். அதுபோல ஈசுவரபக்தி பண்ணுகிறவர்கள் அவனுடைய புகழைப் பாடுவதில் ஒருபோதும் சலிப்படைவதில்லை.

602. பகவந் நாமத்தைக் கேட்ட மாத்திரத்தில் எவனுக்கு மயிர்க்கூச்செடுத்துக் கண்ணில் பக்தி பாஷ்பம் பெருகுமோ அவனுக்கு இதுதான் கடைசி ஜன்மம்.

603. சுத்தம் செய்யப்பட்ட கற்கண்டைத் தின்றவனுக்கு அழுக்குள்ள வெல்லக்கட்டியில் திருப்தியிருப்பதில்லை. அரண்மனையில் படுத்துறங்கியவனுக்கு அசுத்தமான குடிசையில் படுத்துறங்குவதில் சுகமில்லை. அதுபோல, தெய்வானந்த இன்பத்தை அனுபவித்த ஆத்மாவுக்கு சாதாரணமான உலக சுகங்களில் சந்தோஷ மென்பது இல்லை.

604. ஜனஸமூகக் கட்டுப்பாடுகளை மீறிய ஆத்மார்த்திகள் அனைவரும் ஒரு தனிக் கோஷ்டியைச் சேர்ந்தவராவார்கள்.

605. தன் புருஷனுடன் தினம் செய்யும் ஸல்லாபங்களை எல்லாரிடமும் சொல்வதற்கு ஒரு ஸ்திரீ லஜ்ஜைப்படுவது ஸஹஜம். பிறரிடம் அவள் அதைச் சொல்வதுமில்லை; சொல்லப் பிரியப்படுவது மில்லை. எப்படியாவது அவை வெளிப்படுமானால் அதற்காக மனம் வருந்துவாள். ஆனால் அவளே அவ்விஷயங்களைத் தனது அந்தரங்கத் தோழியிடம் வலுவிலே சொல்லுவாள். சொல்வதற்கு அவாவடைவதன்றி சொல்வதில் இன்பமடைபவளாகவு மிருப்பாள். அதுபோல பக்தன் ஒருவன், ஸமாதியில் தான் அடையும் இன்பங்களைத் தன்னைப்போன்ற பக்தர்களுக்குச் சொல்வானேயன்றி, மற்றையோர்க்குச் சொல்லப் பிரியப்படமாட்டான். சில வேளைகளில் அத்தகையோரிடம்

சொல்வதற்கு ஆத்திரப்படுவதன்றி, சொல்வதில் சந்தோஷமு மடைகிறன்.

606. அரசனுடைய காமக்கிழத்தி தெருப்பிச்சைக் காரனைக் கண்ணெடுத்துப் பார்க்கவுமாட்டாள். அதுபோல, ஈசுவர ஸந்நிதானத்தின் கடாக்ஷம் பெற்ற ஆத்மாவானது அற்ப மாகிய உலக விஷயங்களில் ஆசைப்படுவதில்லை.

607. இலேசான உபயோகமற்றதைத் தள்ளிவிட்டு, கன மான நல்ல வஸ்துவை வைத்துக்கொள்வது புடைக்கும் முறத் தின் சுபாவம். எல்லா பக்தர்களுடைய சுபாவமும் அப்படிப் பட்டதே.

608. சர்க்கரையையும் மணலையும் கலந்து வைத்தால் எறும்பு மணலைத் தள்ளிவிட்டுச் சர்க்கரையை மட்டும் இழுத்துச் செல்கின்றது. அதுபோல பரமஹம்ஸர்களும் பக்தர்களும் நல் லோரைத் தீயோரை விட்டுப் பொறுக்கி எடுத்து விடுகின்றனர்.

609. விஷய சுகங்களும் உலகப்பற்றும் எப்போது ஒழி யும்? நித்யானந்த ஸாகரமாகிய ஈசுவரனிடம் எல்லாவித இன்ப மும் ஆனந்தமும் பூரணமுறுகின்றன. அவ்வீசுவரனை அனுபவிப் பவர்கள் பயனற்ற உலக விஷயங்களால் கவர்ச்சியடைய மாட் டார்கள்.

610. ஒரு பசு மந்தையில் மற்ற மிருகம் ஏதேனும் நுழைந் தால், எல்லாப் பசுக்களும் ஒன்று கூடி அதைக் கொம்புகளால் குத்திக் கால்களால் உதைத்துத் துரத்திவிடும். ஆனல் அம்மந் தையில் தம்மைப்போன்ற ஒரு பசு நுழையுமானல், மற்றப் பசுக் கள் அதனுடன் நட்புப் பாராட்டி நாவினல் நக்கிக் கொடுக்கும். அதுபோல ஒரு பக்தன் இன்னொரு பக்தனைச் சந்தித்தால் இரு வரும் அதிக ஆனந்தத்தை அடைந்து ஒருவரை யொருவர் பிரிய மனமில்லா திருப்பர். ஆனல் ஒரு தூர்த்தன் அவர்களிடம் வந் தால் அவனை அவர்கள் வெறுத்து அப்பால் போவார்கள்.

611. பகவத் ப்ரேமை கொண்டவன் ஏன் தன்னந்தனிய னக வாழப் பிரியப்படுவதில்லை? கஞ்சாக் குடிப்பவன், தோழர் கள் இல்லாமல் தன்னந்தனியனகக் குடிப்பதில் ஆனந்தமடைவ தில்லை. அவனைப்போல, பக்தனும், பக்தர்களுடைய கோஷ்டி

யில்லாமல், தன்னந்தனியனாய்ப் பகவந்நாம ஸங்கீர்த்தனம் செய்வதில் ஆனந்த மடைவதில்லை.

612. வேகமாயோடும் நீரோட்டம் சிற்சில விடங்களில் சுழித்துக்கொண்டு நிற்கிறது. ஆனால் சீக்கிரத்தில் இச்சுழல்களைக் கடந்து, வேகமாயும் நேராயும் செல்லும். அதுபோல பக்தனுடைய ஹிருதயம் சிற்சில வேளைகளில் சோகம், துயரம், அவநம்பிக்கை யாகிய சுழல்களில் அகப்பட்டுக் கொள்கிறது. என்றாலும் இது ஒரு க்ஷண நேரந்தான் நிற்கும். ஒருபோதும் நீடித்து நிற்பதில்லை.

613. வியபசாரி ஒருத்தி, பக்தனை ஒருவனை நெருங்கி அவனைத் தன் மாயைக் குள்ளாக்கிக் கொள்ள முயன்றால் என்னவாகும்?

பழுத்த மாம்பழமொன்றைக் கையில் பிடித்துப் பிழிந்தால் மேல்தோல் மட்டும் கையில் நிற்கும்; கொட்டை சதை யெல்லாம் வெளியே பிதுங்கி ஓடிவிடும். அதுபோல, அப்பக்தனுடைய மனம் ஈசுவரனிடம் பாய்ந்து சென்றுவிடும். அவனது சரீரம் மட்டும் அந்த ஸ்திரீயின் வசப்படநேரிடும்.

614. தாம் மாம்பழம் தின்றது பிறருக்குத் தெரியாதிருக்க வேண்டுமென்று தின்றவுடன் வாயை நன்றாகத் துடைத்துக் கொள்ளுகிறவர்கள் சிலரிருக்கின்றனர். ஆனால் தமக்கு ஒரு மாம்பழம் கிடைத்ததும் அதைப் பங்கிட்டுக் கொடுக்கப் பிறரைக் கூப்பிடுகிறவர்களும் சிலர் இருக்கின்றனர். அதுபோல, தெய்வீக இன்பத்தை அனுபவிப்பவர்களிலே, தாம்மட்டும் அனுபவிப்பவர்களும், பிறரையும் அனுபவிக்கச் செய்பவர்களும், இருக்கின்றனர்.

615. மனிதர் பார்க்காமற் போனாலும் ஈசுவரன் பார்க்கிறான் என்று நம்பி, தனியனாக விருக்கும்போது எவனொருவன் ஒரு பாபத்தையும் செய்வதில்லையோ அவன்தான் வாஸ்தவமான தர்மவானாவான். மனிதர் கண்ணுக்குப் புலப்படாமலிருந்தாலும் ஈசுவர திருஷ்டிக்குட் படுவோம் என்ற பயத்தினால் எவனொருவன் காட்டில் தனியாக இருக்கும்போதும் ஒரு கட்டழகியின் வலைக்குள் படாமலும், காம எண்ணத்தால் அவளைக்

கண்ணெடுத்துப்பாராமலும் இருக்கிருனே அவன்தான் வாஸ்தவமான தர்மவானுவான். ஒருவருமில்லாது தனித்துள்ளவோர் வீட்டில் காணப்படும் பொன் முடிப்பை எவனொருவன் எடுத்துக்கொண்டு போக இச்சைப்படமாட்டானே அவனே தர்மவான். ஊரார் வசைக்குப் பயந்து வெளி வேஷத்துக்காக எவனொருவன் தர்மத்தை அனுஷ்டிக்கிருனே அவனைத் தர்மவான் என்று சொல்லக்கூடாது. மௌனமாயும் மறைவாயும் அனுஷ்டிக்கும் தர்மமே வாஸ்தவமான தர்மம். வீண் பெருமையுடனும் படாடோபத்துடனும் செய்வன வெல்லாம் போலிச் செய்கைகளேயாம்.



# 32. ஸந்யாஸ தர்மம்



616. ஒருவன் வியாதியால் அவஸ்தைப்படும் தன் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு ஒரு ஸாதுவிடம் மருந்து கேட்கச் சென்றான். ஸாது அவனை மறுநாள் வரும்படி சொன்னார். அப்படியே அவன் மறுநாள் வந்தபோது. "உன் குழந்தைக்குச் சர்க்கரைப் பண்டங்களைக் கொடுக்காதே. சீக்கிரத்தில் குணமுண்டாகும்" என்றார் ஸாது. அதைக்கேட்ட மனிதன், "ஸ்வாமி! இதைத் தாங்கள் நேற்றே சொல்லியிருக்கலாமே" என்றான். "அப்பா! நான் சொல்லியிருக்கலாம். ஆனால் நேற்று என்முன்னால் சர்க்கரை வைக்கப்பட்டிருந்தது. அதை உன் குழந்தை பார்த்து, 'இந்த ஸாது அயோக்யன்போலவிருக்கிறது. சர்க்கரையைப் பிறர் சாப்பிடக்கூடாதென்று சொல்லுகிறான். தான்மட்டும் சாப்பிடுகிறான்' என்று நினைக்கக்கூடும்" என்று ஸாது பதில் சொன்னார்.

617. யோகிகளும் ஸந்யாஸிகளும் பாம்புகளைப் போன்றவர்கள். பாம்பு தனக்குத்தானே புற்றை உண்டாக்கிக் கொள்வதில்லை. எலி தோண்டிய வளையில் அது வாசம் செய்யும். ஒரு வளை உபயோகமில்லாது போனால் இன்னொன்றில் நுழையும். அதுபோல, யோகிகளும் ஸந்யாஸிகளும் தங்களுக்கென்று வீடுகளைக் கட்டிக் கொள்வதில்லை. இன்றைக்கு ஒருவர் வீட்டிலும் நாளைக்கு இன்னொருவர் வீட்டிலுமாக அவர்கள் பிறருடைய வீடுகளிலேயே காலங்கழிக்கின்றனர்.

618. ஸந்யாஸ ஆச்ரமத்துக்கு அருகனாவோன் யாவன்? நாளைக்குச் சாப்பாட்டுக்கு என்ன செய்வோம், உடுத்துவதற்கு யாது செய்வோம் என்ற சிந்தனையே இராமல் எவனொருவன் உலகத்தை முற்றிலும் விட்டொழிக்கிறானோ அவன்தான் வாஸ்தவமான ஸந்யாஸி யாவதற் குரியவன். உயர்ந்த மரத்தின் உச்சியிலேறி, உயிரையோ உடலையோ காப்பாற்றிக்கொள்ள

வேண்டுமென்ற சிந்தனையும் இல்லாமல், கையை விட்டுவிட்டுக் கீழே விழுகிறவனைப்போல, ஸந்யாஸியானவன் இருக்க வேண்டும்.

619. ஸந்யாஸியினுடைய ஒழுக்கம் வெகு கண்டிப்பானது. ஸந்யாஸியானவன் ஜன சமூகத்துக்கு ஆசாரியனாகிறபடியால், அவனுடைய வாழ்க்கையையும் மாதிரியையும் ஜனங்கள் பின் பற்றுவார்கள். ஆதலால் அவ்வளவு கடுமையான நியமம் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் ஸ்திரீகளுடன் ஸஹவாசம் செய்யக் கூடாது. அதுமட்டு மன்று. அவர்களுடைய உருவத்தைப் படங்களிலும் பார்க்கக்கூடாது. அவர்களுடைய நியமம் அவ்வளவு கடுமையானது.

620. ஸாதுக்களுக்குரிய காஷாய வஸ்திரத்தைத் தரித்துக் கொண்டால், ஒருவன் உண்மையில் ஸாதுவைப்போலவே நடந்தொழுக வேண்டும். நாடகத்தில், ராஜாவேஷம் போட்டுக் கொள்பவன் எப்பொழுதும் ஒரு ராஜாவைப் போலவும், மந்திரி வேஷம் போட்டுக் கொள்பவன் மந்திரியைப் போலவும் நடிப்பதை நாம் பார்க்கிறோமல்லவா? ஒரு சமயம் ஒரு கிராமத்து விதூஷகன் ஒருவன், ஸன்யாஸியைப் போல் காஷாயத்தைத் தரித்துக்கொண்டு, கிராமாதிகாரியிடம் போனான். கிராமதிகாரி விதூஷகனுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வந்தார். அதை அவன் வேண்டாமென்று மறுத்துவிட்டு அப்பாற் போனான். கொஞ்சநேரம் கழித்து, அவன் ஸ்நானஞ் செய்து உடையை மாற்றிக்கொண்டு, அதிகாரியிடம் வந்து, அவர் கொடுப்பதாக வந்த பணத்தைத் தரவேண்டுமென்று கேட்டான். ஸாதுவைப் போல உடை யுடுத்திருக்கையில் அவனால் பணத்தைத் தொடக் கூட முடியவில்லை. இப்பொழுதோ அவன் கால்ரூபாய் கொடுத்தாலும் திருப்தியடைபவனாக இருந்தான்.



## 33. வெவ்வேறு வகை மாந்தர்



621. ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களில் எது மேலோங்கி நிற்கிறதோ அதற்கேற்ப மனிதர்கள் வேறுபட்ட சுபாவமுள்ளவர்களாக இருக்கின்றனர்.

622. எல்லா ஆத்மாக்களும் ஒன்றே. ஆனால் தத்தம் நிலைமைகளுக்கேற்ப அவைகள் நான்கு வகைப்படும் :—(1) **பத்த ஆத்மா**, அதாவது கட்டுப்பட்ட ஜீவன்; (2) **முமுக்ஷு**, அதாவது விடுதலை யடைய முயலும் ஜீவன்; (3) **முக்த ஆத்மா**, அதாவது விடுதலை யடைந்த ஜீவன்; (4) **நித்ய முக்தன்**, அதாவது எப்போதும் விடுதலை பெற்றுள்ள ஜீவன்.

623. பக்ஷணங்களின் மேல்கூடு அரிசிமாவினால் செய்யப்பட்டிருக்கும். அவைகளின் உள்ளே வைக்கப்பட்டிருக்கும் பண்டங்கள் வேறு வேறு விதமானவையாக இருக்கும். உள்ளிருக்கும் பொருள்களுக்கு ஏற்ப பக்ஷணங்கள் நல்லவையாகவோ கெட்டவையாகவோ இருக்கும். அதுபோல, மானிட சரீரங்கள் எல்லாம் ஒரேவிதமான பொருளால் ஆக்கப்பட்டிருப்பினும் ஹிருதய சுத்திக்கு ஏற்றபடி மனிதர்கள் வித்யாசப்படுவர்.

624. மனிதர்கள் தலையணையைப் போன்றவர்கள். ஒன்று சிவப்பாயும், மற்றொன்று நீலமாயும் வேறொன்று கறுப்பாயுமிருந்த போதிலும் அவைகளுக் குள்ளிருக்கும் பஞ்சு ஒன்றே. அதுபோலத்தான் மனிதனும். ஒருவன் பார்வைக்கு அழகாகவிருக்கிறான். இன்னொருவன் கறுப்பா யிருக்கிறான். மற்றொருவன் பரிசுத்தனாக விருக்கிறான். வேறொருவன் கெட்டவனாகவிருக்கிறான். என்றாலும் ஈசுவரன் அவர்கள் எல்லாருள்ளும் வாசஞ்செய்கிறான்.

625. ஒரு செம்படவன் ஆற்றில் வலையை வீசி அனேகம் மீன்களைப் பிடித்தான். சில மீன்கள் வலைக்குள் அசைவற்

திருந்து, வெளியே போகக் கொஞ்சமேனும் பிரயத்தனப் படாமலிருந்தன. வேறு சில மீன்கள் பிரயத்தனப்பட்டுத்துள்ளிக் குதித்தன; ஆனால் வெளியே போகமுடியவில்லை. இன்னும் சில மீன்கள் எப்படியோ வலையை விட்டுத் தப்பித்துக்கொண்டு போய்விட்டன. உலகத்திலுள்ள மனிதர்களும் இவ்வாறு மூவகையினராக விருக்கின்றனர்:—(1) முக்தியடையப் பிரயத்தனப்படாது பந்தப்பட்டிருப்பவர்கள், (2) பிரயத்தனப்படும் முமுக்ஷுக்கள், (3) விடுதலையடைந்த முக்தர்கள்.

626. உப்பினாலும் துணியினாலும் கல்லாலும் செய்யப்பட்ட மூன்று வகைப் பதுமைகள் இருக்கின்றன. அவைகளைத் தண்ணீரில் அமிழ்த்தினால் முதலாவது கரைந்து தன் உருவத்தை இழந்துவிடும். இரண்டாவது தன் உருவத்துடனிருந்தே நிறையத் தண்ணீரைத் தன்னுள் கிரகித்துக் கொள்ளும். மூன்றாவதில் தண்ணீரே நுழையாது. முதல் பதுமை பரமாத்மாவிடம் சேர்ந்து அதனோடு ஒன்றி ஐக்கியமாய்விடும் மனிதனைக் குறிக்கும். அவன் முக்த புருஷன். இரண்டாவது பதுமை திவ்யானந்தத்தையும் திவ்ய ஞானத்தையுமுடைய வாஸ்தவமான பக்தனைக் குறிக்கும். மூன்றாவதோ, ஞானமானது கொஞ்சமேனும் நுழையாத ஹிருதயத்தையுடைய உலகப்பற்றுள்ளவனைக் குறிக்கும்.

627. எல்லா ஜலத்திலும் ஸ்ரீமந்நாராயணன் இருக்கின்றான். என்றாலும் எல்லாம் குடிப்பதற்கு உபயோகப் படுவதில்லை. அதுபோல எல்லாவிடங்களிலும் ஈசுவரன் இருக்கிறானென்றாலும் ஒவ்வோரிடமும் மனிதன் போகக் கூடியதன்று. ஒரு ஜலத்தைக் கால்கழுவ மாத்திரம் உபயோகிக்கிறோம்; இன்னொன்றை ஸ்நானம் செய்வதற்கு உபயோகிக்கிறோம்; வேறொன்றைக் குடிப்பதற்கு வைத்துக் கொள்கிறோம். மற்றும் சில, கையால் தொடக்கூடாதனவாயுமிருக்கின்றன. அதுபோலப் பல தினுசு இடங்கள் உண்டு. சில இடங்களை அணுகலாம்; சில இடங்களில் உள்ளேயும் பிரவேசிக்கலாம்; வேறுசில இடங்களைத் தூரத்திலிருந்தே விலக்கிவிட வேண்டும்.

628. புலியினிடத்தும் ஈசுவரன் இருப்பது உண்மையே. ஆனால் அக்காரணத்தைக் கொண்டு நாம் அதன் முன்னர் போய்

ரிக்கக்கூடாது. கெட்டவர்களிடத்தும் ஈசுவரன் இருப்பது வாஸ்தவம்; ஆயினும் நாம் அவர்களுடன் சகவாஸம் செய்வது சரியல்ல.

629. ஒரு பிராமணனுடைய மகன் பிறவியால் பிராமணன் தான். ஆயினும் அப்படிப்பட்ட பிறவிப் பிராம்மணர்களில் சிலர் கற்றறிந்த பண்டிதர்களாகவும் சிலர் கோவில் பூஜை செய்பவர்களாகவும், பலர் சமையற்காரர்களாகவும் இன்னும் பலர் வேசைகள் வீட்டு வாயிலில் புரள்பவர்களாகவும் ஆகின்றனர்.

630. கீழே சொல்லப்படும் ஐந்தையும் பற்றி ஜாக்கிரதையாகவிரு:—

(1) (பகுத்தறிவும் வாயடக்கமும் இல்லாது) சதா சர்வ காலமும் எதாவது பேசிக்கொண்டிருக்கும் வாயாடி.

(2) கபடமுள்ள மனிதன்.

(3) துளசி தளத்தைக் காதுகளில் சொருகிக்கொண்டு தனது பக்தியை வெளிக்குக் காட்டும் மனிதன்.

(4) நீளமாய் முக்காடு போட்டு முகத்தை மூடிக் கொண்டிருக்கும் ஸ்திரீ.

(5) புல் பூண்டுகள் வளர்ந்து மூடியிருக்கும் தேங்கிய குட்டையிலுள்ள தேகாரோக்கியத்துக்கு முற்றிலும் கெடுதலான குளிர்ந்த ஜலம்.



## 34. கிருஹஸ்தர்களுக்கு உபதேசம்

631. தூணைப் பிடித்துக் கொண்டிருக்கும் பையன், கீழே விழுந்து விடுவோம் என்ற பயம் கொஞ்சமு மில்லாமல், கன வேகத்துடன் அதைச் சுற்றிச் சுற்றி வருகிறான். அதுபோலவே, ஈசுவரனிடம் மனத்தைத் திடமாக நிறுத்திவிட்டு, நீ உனது காரியங்களைச்செய். அப்போது உனக்கு அபாயங்களே நேர மாட்டா.

632. காலமெல்லாம் வயிற்றுக்குச் சோறு தேடுவதில் கழிகின்றது. நான் எப்படி பக்தி பண்ண முடியும்?

நீ யாருக்காக உழைக்கிறாயோ அந்த பகவான் உனக்கு வேண்டியவைகளை அளிப்பான். உன்னை இவ்வுலகத்தில் அனுப்புவதற்கு முன்னமேயே ஈசுவரன் உனது போஷணைக்கு வேண்டிய பொருள்களைத் தேடி வைத்திருக்கிறான்.

உலகப்பற்றுகளான எல்லாவகைப் பொருள்களின் மத்தியிலும் வாழ்ந்துகொண்டே பரிபூரண மடைகிறவன்தான் உண்மையான சுத்த வீரன்.

633. உலகம், ஈசுவரன்; இந்த இரண்டையும் ஒன்றுபடுத்துவது எப்படி? அதோ தச்சன் மனைவியைப்பார். அவள் எத்தனை காரியங்களில் கருத்தாயிருக்கிறாள்! உரலில் இருக்கும் அவலை ஒரு கையால் கிளறிவிட்டுக் கொண்டு, மற்றொரு கையால் குழந்தையை அணைத்துப் பால்கொடுத்துக் கொண்டிருக்கிறாள். அதே சமயத்தில் அவல் வாங்கவந்த ஒருவனிடம் பேரம் பேசிக்கொண்டு மிருக்கிறாள். இப்படி அவள் பல வேலைகளைக் கவனித்தாலும் அவளுடைய மனம் மட்டும், உலக்கையானது கையில் விழுந்து காயமுண்டாக்காம லிருக்கவேண்டும் என்ற ஒரு விஷயத்தில், நிலைத்திருக்கிறது. உலக வாழ்க்கையில் நீ இரு. ஆனால் ஈசுவரனை மட்டும் எப்போதும் நினைத்துக் கொண்டிரு. ஒருபோதும் அவனுடைய மார்க்கத்தை விட்டுப் புறம்பே போகாதே.

634. முதலைக்கு ஜலத்தின் மேலே மிதந்து நீந்தவேண்டுமென்பது ஆசை. ஆனால் அது மேலே வந்தவுடன் வேட்டைக்காரர்கள் அதைக் குறிவைத்துச் சுடுகின்றனர். ஆதலால் அது மேலே கிளம்ப முடியாதபடி ஜலத்துக்குள்ளேயே மூழ்கியிருக்க வேண்டி யிருக்கிறது. என்றாலும் தகுந்த சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம், "விர்" என்று சத்த மிட்டுக்கொண்டு அது மேலே கிளம்பிப் பரந்த நீர்ப்பரப்பில் ஆனந்தமாக நீந்துகிறது. உலகப்பற்றில் அகப்பட்டுழலும் மனிதனே! உனக்கும் ஆனந்த ஸாகரத்தின் மேலே நீந்த வேண்டுமென்பது ஆசைதான். ஆனால் உனது குடும்பத் தொல்லைகளும் காரியங்களும் உனக்கு இடையூறுகளாக விருந்து தடுக்கின்றன. இருந்தாலும் தைரியமாக இரு. எப்பொழுது உனக்கு ஒழிவு நேரிடுகிறதோ அப்பொழுதெல்லாம் தீவிரமான பக்தியுடன் பகவானை நினை; அவனை மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய்; உனது துன்ப துயரங்களையெல்லாம் அவனிடம் சொல். காலக்கிரமத்தில் அவன் உனக்கு முக்தி யளித்து ஆனந்த ஸாகரத்தின் மேலே வெகு இன்பமுடன் நீந்திக் கொண்டிருக்கும்படி கிருபை செய்வான்.

635. நமது கிராமத்துப் பெண்மணிகள் ஒன்றன் மீதொன்றாக நாலைந்து தண்ணீர்ப் பானைகளைத் தலையின் மீது வைத்துக் கொண்டு நடந்து செல்லும்போது, ஒருவரோ டொருவர் தங்கள் தங்களுடைய சுகதுக்கங்களைப் பற்றிப் பேசிக்கொண்டு போகின்றனர். ஆயினும் ஒரு சொட்டுத் தண்ணீரைக் கூடக் கீழே சிந்த விடாமல் செல்கின்றனர். அதுபோலவே தர்ம மார்க்கத்தில் செல்லும் மனிதனும் நடக்கவேண்டும். எப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் இருந்தாலும் சரியே, அவனுடைய மனம் உண்மை நெறியை விட்டுக் கொஞ்சமேனும் விலகாதபடி அவன் சதா ஜாக்கிரதையுட னிருக்கவேண்டும்.

636. காந்த ஊசி எப்போதும் வடக்குத் திசையையே காட்டு மாதலால், கடலில் செல்லும் கப்பல்கள் திசை தவறிப் போவதில்லை. அதுபோல, மனிதனுடைய மனம் ஈசுவரனை நாடியிருக்கும் வரையில் அவன் உலக வாழ்க்கையாகிய சமுத்திரத்தில் திசைதப்பிப் போகமாட்டான்.

637. பக்தி பண்ணும்போது, அதைப் பரிகாசம் பண்ணுவோரையும், பக்தியையும் பக்தர்களையும் ஏளனம் செய்வோரையும் விட்டு விலகியிரு.

638. வீட்டுக் காரியங்களைக் கருத்துடன் எப்போதும் செய்து வந்தாலும் ஒரு விபசாரியின் மனமானது சோர நாயகனையே சதா காலமும் நினைத்துக்கொண்டிருக்கும். அதுபோல உலகத்தில் வாழும் மனிதர்கள், தங்கள் மனத்தை ஈசுவரனிடம் உறுதியாக நிறுத்திவிட்டு, தங்களுக் கேற்பட்ட காரியங்களைச் செய்ய வேண்டும்.

639. செல்வவான் வீட்டுக் குழந்தையை வளர்த்துவரும் பால் தாதி அக்குழந்தையைத் தன் சொந்தக் குழந்தையைப் போன்றே பிரியம் பாராட்டுகிறாள்- ஆனாலும் அக்குழந்தை தனக்குச் சொந்தமல்ல வென்பது அவளுக்கு நன்றாய்த் தெரியும். அதுபோல, உனது குழந்தைகளுக் கெல்லாம் உண்மைப் பிதாவானவன் ஈசுவரனே யென்றும் நீ அவர்களுடைய கார்டியன் அல்லது போஷணைக் கர்த்தா மட்டுமே என்றும் நினைத்துக் கொள்.

640. ஒரு சமயம், பிரம்ம ஸமாஜத்தைச் சேர்ந்த சில வாலிபர்கள் என்னிடம் வந்து, தாங்கள் ஜனகரைப்போன்றிருப்பதாகச் சொன்னார்கள். அதாவது உலகத்தில் வாழ்ந்தபோதிலும் அதில் பந்தப் பட்டிருப்பதில்லை யென்றனர். அதற்கு நான், அப்படிச் சொல்வது எளிது, ஜனகரைப் போல இருப்பது வேறு கார்யம், என்று சொன்னேன். பந்தத்துக் குள்ளாகாமல் உலக விஷயங்களின் மத்தியில் வாழ்வது வெகு கடினம். ஆரம்பத்தில் ஜனகர் எப்படிப்பட்ட கடுமையான தவங்களை யெல்லாம் அனுஷ்டித்தார்! அப்படிப்பட்ட கஷ்டமான தவங்களை யெல்லாம் நீங்கள் செய்யவேண்டுமென்று நான் சொல்லவில்லை. பின், செய்யவேண்டிய தென்னவெனில், சாந்தமாக ஓரிடத்தில் தனிமையில் கொஞ்ச காலமாவது இருந்து பக்தியிற் பழகவேண்டும் என்பதே. ஞானத்தையும் பக்தியையும் பெற்ற பிறகு உலக வாழ்க்கையில் பிரவேசிக்க வேண்டும். ஆட்டங் கொடுக்காத இடத்தில் பாலை உறைய வைத்தால் நல்ல தயிர் கிடைக்கும்.

பானையை ஆட்டினாலும் அல்லது வேறு பானையில் மாற்றினாலும் கூட தயிர் கெட்டுப்போகும். ஜனகர் உலகில் ஒட்டாதிருந்தார். அதனால்தான் அவருக்கு விதேகர் என்ற பேர் வந்ததும். அவர் ஒரு ஜீவன்முக்தரைப்போல வாழ்ந்தவர். தேக புத்தியைப் போக்கடிப்பது வெகு சிரமமான காரியம். உண்மையில் ஜனகர் ஒரு சுத்தவீரர். ஞானம், கர்மம் என்ற இரண்டு வாள்களையும் கையிற் பிடித்துச் சுலபமாக வீசக்கூடியவராக விருந்தார்.

641. உலகத்தில் பற்றற்று வாழவேண்டுமென்பது உன் விருப்பமானால், முதலில் ஒரு வருஷமோ, ஆறு மாதமோ, ஒரு மாதமோ, அல்லது பன்னிரண்டு நாளோ, நீ தன்னந்தனியனாக இருந்து பக்தியிற் பழகவேண்டும். அப்படித் தனித்திருக்கையில், சதா சர்வகாலமும் ஈசுவரனையே சிந்தித்துக்கொண்டு, அவனுடைய திவ்யப்ரேமை உனக்கு வரவேண்டுமென்று பிரார்த்தனை செய். உலகத்தில் உன்னுடையதென்று சொல்லக்கூடிய பொருள் ஒன்றுமே இல்லை; உன்னைச் சேர்ந்தவர்களென்று நீ நினைக்கும் மனிதர்கள் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் இறப்பது நிச்சயம், என்ற சிந்தனை உன் மனத்தில் பூரணமாக நிறையவேண்டும். ஈசுவரன் மட்டுந்தான் உனக்குச் சொந்தம். அவன்தான் உனது ஸர்வமும். அவனை எப்படி அடைவது என்ற ஒரு விஷயத்திலேயே நீ கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும்.

642. சந்தர்ப்ப வசத்தால், போகக்கூடாத மோசமான இடத்துக்கு நீ செல்லும்படி நேர்ந்தால் அப்போது திவ்ய மாதாவின் ஞாபகத்தையும் கூடக்கொண்டு போ. உன் மனத்தில் மறைந்து இருக்கக்கூடிய தீய நினைவுகளையும் அவள் போக்கி உன்னைக் காப்பாற்றுவாள். அவளுடைய ஸாந்நித்யம், கெட்ட காரியங்களை நீ செய்யாதபடியும் அவைகளைப்பற்றி நினைக்காதபடியும், உனக்கு வெட்கத்தைத் தரும்.

643. முதலில் உள்ளங்கைகளில் எண்ணெயைத் தடவிக்கொண்டு பலாப்பழத்தை அறுத்துச் சுளைகளை எடுப்பாயானால் பிசின் உன் கைகளில் ஒட்டிக்கொண்டு தொந்தரை செய்யாது. அதுபோல, முதலில் பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தால்

உனக்குப் பாதுகாப்பை யுண்டாக்கிக் கொண்டு, செல்வம் முத லான உலகப் பொருள்களினிடையே நீ வசித்தால், அவைகளில் நீ எவ்வழியிலும் வசப்படமாட்டாய்.

644. "கண்ணுமூச்சி" என்ற விளையாட்டில் ஓடுகிறவன் தாய்ச்சியைத் தொட்டுவிட்டால் அவனைப் பிறகு ஒருவரும் பிடிக்கக் கூடாது. அதுபோல, ஒருதரம் ஈசுவரனைக் கண்டு விட்டால் அப்பால் உலக பந்தங்களால் நாம் கட்டுப்படமாட் டோம். தாய்ச்சியைத் தொட்டவன் எங்கு வேண்டுமானாலும் தாராளமாய்ப் போகலாம்; பிடிபடுகிற பயம் அவனுக்கில்லை. அதுபோல, உலகமாகிய விளையாடுமிடத்திலும் ஒருதரம் ஈசுவர னுடைய சரணாரவிந்தங்களைத் தொட்டவனுக்குப் பயமே கிடை யாது. உலக விசாரங்களினின்றும் அவன் விடுதலையடைகிறான். அப்பால் ஒன்றும் அவனைப் பந்தப் படுத்தாது.

645. இறந்தோரது ஆக்கையின் மூலமாகத் தேவதைகளை வரவழைக்க விரும்பும் தாந்திரிகன், புதிதாக இறந்தவர் ஒரு வரது பிணத்தின் மீது உட்கார்ந்து கொண்டு அருகில் ஆகாரத்தையும் மதுவையும் தயாராக வைத்திருப்பான். மந் திரோச்சாரணத்தினால், எப்போதாவது அந்தப் பிணம் சற்றே உயிர்பெற்று வாயைத் திறக்குமானால், அவன், அப்பிண மூல மாகத் தோன்றிய பூதத்தைத் திருப்தி செய்வதற்காக, அவ் வாயில் உடனே சோற்றைக் கொட்டி மதுவை வார்க்கவேண் டும். அப்படிச் செய்யாவிட்டால், இந்தப் பூதத்தினால், அவன் செய்த பிரயத்தனம் தடைப்படும். அப்போது அவன் கோரிய தேவதையின் ஆவிர்ப்பவம் நேராது. அதுபோல உலகமாகிய பிணத்தின்மீது நின்று கொண்டிருக்கும் நீ, பரமானந்தத்தை அடைய விரும்புவாயானால், உன்னிடமிருந்து பெறுவதற்காகச் சூழ்ந்து காத்துக் கொண்டிருக்கும் உற்றார் உலகத்தவர்களைத் திருப்தி செய்வதற்காக, நீ முன் ஜாக்கிரதையோடு பொருள் களைத் தேடிவைத்துக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் உலக சஞ்சலமும் கவலையும் உன் பக்திக்கு இடையூற்றைச் செய்யும்.

646. தெருப்பாடகன் ஒரு கையால் சுதி மீட்டிக் கொண்டும், மற்றொரு கையால் ஒருவகை மேளத்தைத் தட்டிக்

கொண்டும், அதே சமயத்தில் சதா பாடிக்கொண்டு மிருக்கிறான். அதைப்போல, உலக பந்தத்துக்குட்பட்ட மனிதன் தனக் கேற்பட்ட காரியங்களைக் கைகளால் செய்து கொண்டிருக் கையிலும், பகவந் நாமத்தை முழுமனதோடும் சொல்லி அவனது குணுனுபவம் பண்ணுவதை மறக்கக்கூடாது.

647. சிறுவனுடைய உள்ளத்திலுள்ள ப்ரேமையானது பின்னமற்றது. அவனுக்குக் கல்யாணமாகும்போது, அப்பிரே மையில் குறைந்தது பாதியைத் தன் மனைவிக்குக் கொடுத்து விடுகிறான். குழந்தைகள் பிறக்கும் போது, இன்னொரு கால் பாகம் போய்விடுகிறது. பாக்கி யிருக்கும் கால் பாகம், தாய் தகப்பன், கவுரவம், புகழ், ஆடையாபரணங்கள், டம்பம் முதலிய வற்றில் செலவாகிவிடுகிறது. ஆதலால் ஈசுவரனுக்கு அர்ப்ப ணம் பண்ணுவதற்குப் பிரேமை அவனிடம் மீதி இருப்பதில்லை. ஆகவே பையனின் பின்ன மடையாத மனம் இளமையிலேயே ஈசுவரனிடம் செலுத்தப்படுமாயின், அவரை எளிதில் நேசிப்ப தும் காண்பதும் சாத்தியமாகும். வயது முதிர்ந்தவர்களால் அவ்வாறு செய்வது அவ்வளவு எளிதன்று.

648. உலக வாழ்க்கையில் இருக்கும் ஞானிக்கும் உல கத்தைத் துறந்த ஞானிக்கும் ஏதாவது வித்யாசம் இருக்கிறதா என்று கேட்டால் இல்லை யென்றே நான் சொல்வேன். இருவ ரிடமும் பொதுவாக இருப்பது அந்த ஞானமே. ஆனால் உலகத் தில் வாழும் ஞானிக்குப் பயம் ஏற்படக்கூடும். விஷய சுகங் களைக் கொடுக்கும் பொருள்களி னிடையே இருப்பதனால் கொஞ்சமாவது பயம் ஏற்படும். புகையடைந்த அறையில் நீ வசித்தால், என்ன ஜாக்கிரதை யுடனிருந்த போதிலும் உனது சரீரத்தில் கொஞ்சமாவது கரி படிவது நிச்சயம்.

649. குழந்தைகள், தனித்து, மரப்பாவைகளை வைத்துக் கொண்டு மனம் போனபடி யெல்லாம் விளையாடும்போது, தாயை நினைப்பதில்லை. ஆனால் அவ்விடத்துக்குத் தாய் வந்து விட்டால், குழந்தைகள் மரப்பாவைகளை அப்பால் போட்டுவிட்டு "அம்மா! அம்மா!" என்று கூவிக்கொண்டு அவளிடம் ஓடும். அக்குழந்தைகளைப் போலத்தான் நீங்களும் இவ்வுலகத்தில்

செல்வம் கவுரவம் கீர்த்தி முதலிய மரப்பாவைகளில் கருத்தூன்றியவர்களாய் வேறொன்றையும் கவனிக்காமல் விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் ஒருதரம் உங்களுள்ளே இருக்கும் திவ்ய மாதாவை நீங்கள் காண்பீர்களேயானால் செல்வம் கவுரவம் புகழ் முதலியவைகளில் உங்களுக்கு அப்பால் ஒருபோதும் இச்சையுண்டாகாது. அவைகளையெல்லாம் அப்பால் எறிந்துவிட்டு நீங்கள் அவனை நாடி ஓடுவீர்கள்.

650. எல்லாவற்றையும் பரித்யாகம் செய்துவிட்டு, ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களில் சேரவேண்டுமென்று செய்யும் உபதேசங்களை உலகப் பற்றுள்ளவர்கள் கேட்கமாட்டார்கள். இப்படிப்பட்டவர்களை எப்படி நல்வழிக்குக் கொண்டுவரலாமென்பதை நன்றாக ஆலோசனை செய்து தெளிந்த கௌரங்க ஸ்வாமியும் நித்யானந்த ஸ்வாமியும், "ஜனங்களே! வாருங்கள்; பகவந்நாமத்தை வாய்விட்டுப் பாடினால் உங்களுக்கு நல்லுணவும் நாரியர் போகமும் கிடைக்கும் என்று ஆசைகாட்டி யழைத்தனர். அனேகர் அவ்வுணவையும் போகத்தையும் அடையலாம் என்ற நோக்கத்தோடு பகவந் நாமத்தைச் சொல்ல ஓடி வந்து அவர்களைத் திரளாகச் சூழ்ந்து கொண்டனர். ஆகவே அவர்கள் எல்லாரும் வலைக்குள் அகப்பட்டு விட்டனர். பகவந் நாமமாகிய அமிர்தத்தின் இன்பத்தைச் சிறிது சிறிதாகச் சுவைத்ததும் அவர்கள் நித்யானந்த ஸ்வாமி சொன்ன வார்த்தைகளின் உட்கருத்தை யறிந்துகொண்டனர். ஈசுவரனிடம் பூரண பக்தி செய்வதாலுண்டாகும் ஆனந்த பாஷ்பந்தான் நல்லுணவு. பக்தி பரவசமானவன் தன்னை யறியாமல் தரையில் வீழ்ந்து புரளுவதுதான் நாரியர் போகம்.

651. சத்துருவோடு சண்டைக்குப் போவதற்கு முன்னால், சண்டைபோடும் வழிகளைத் தங்கள் கோட்டைக்குள்ளிருந்தே சிப்பாய்கள் பழகிக்கொள்கிறார்கள். அப்படிச் செய்வதனால் ரணரங்கத்தில் ஏற்படக் கூடிய ஆபத்துக்கள் அப்போது அவர்களுக்கு இருக்கமாட்டா. அதுபோல, ஸன்யாஸத்துக்கு ஏற்ற கஷ்ட சாதனைகளை வகிக்கத் தொடங்கு முன்னால், உனது கிருகஸ்தாசிரமத்தில் உள்ள சௌகரியங்களின் உதவியால், உனது ஆத்மீய சக்தியை விருத்தி செய்துகொள்.

652. நீ கிருகஸ்தனுகவோ உலகப்பற்றுள்ளவனுகவோ இருப்பதனுல் பாதகம் ஒன்றுமில்லை. ஆனுல் உனது சித்தம் மட்டும் சதா ஈசுவரனிடம் நிலைபெற்று இருக்க வேண்டும். ஒரு கையால் உனது வேலையைச் செய்துகொண்டே மற்றொரு கையால் ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களைத் தொட்டுக்கொண்டிரு. செய்யவேண்டிய காரியம் ஒன்றும் இராத சமயத்தில், அவனுடைய சரணுரவிந்தங்களை இரு கைகளாலும் சேரப்பிடித்து உன் மார்போடு அணைத்துக்கொள்.

653. கிருகஸ்தனுக்கும் கடவுள் தரிசனத்தைப் பெறும் பாக்கியம் கிட்டலாம். ராஜரிஷியாகிய ஜனகமகாராஜர் அப்படிப்பட்டவர். ஆனுல் ஜனகர் அடைந்த அந்த உயர் பதவியைத் திடீரென்று ஒருவனுல் அடைய முடியாது. அவர் உலகச் சந்தடியற்ற இடங்களில் தன்னந்தனியாக இருந்து அநேக வருஷங்கள் பக்திமார்க்கத்தை அப்பியசித்து வந்தார். அதுபோல, உலக வாழ்க்கையி லுள்ளவர்களும் சமயம் வாய்க்கும்போதெல்லாம், குறைந்தது மூன்று நாளாவது சேர்ந்தாற்போல் தனியிடம் சென்றிருந்து ஈசுவர தரிசனத்துக்காக முயற்சி செய்வார்களேயானுல் அவர்களுக்கு அளவிறந்த நன்மை யுண்டாகும்.

654. இவ்வுலகம் ஈசுவரனுடையது, என்னுடையதன்று; அவர் இச்சைப்படி நான் நடந்தொழுக வந்தவன்; நான் அவருடைய தாஸன், என, உறுதியாகக் கொள்.



## 35. உலகப்பற்றும் ஆத்மீயமும்



655. ஒரு குடியானவன் நாள் முழுவதும் ஒரு கரும்புத் தோட்டத்துக்குத் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தான். வேலைமுடிந்த பிறகு பார்க்கையில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூடத் தோட்டத்துக்குள் செல்லவில்லை யென்றும் ஜலமெல்லாம் அங்கிருந்த எலிவளைகளின் வழியே கீழே போய்விட்டதென்றும் தெரிந்தது. கீர்த்தி, விஷய சுகம், சௌக்கியம், ஆசை முதலியவைகளில் கருத்தூன்றிய பக்தன் செய்யும் ஈசுவராராதனையின் பலனும் இப்படித்தான் முடியும். அவன் தினந்தோறும் பிரார்த்தனை செய்த போதிலும் கொஞ்சமும் அபிவிருத்தியடைய மாட்டான். ஏனெனில் அவனது பக்தி முழுவதும் அந்த ஆசைகளாகிய வளைகளின் வழியே வீணாகப் போகின்றது. அப்படிப்பட்டவன் ஆயுள் முழுவதும் பக்தி செய்த பின்னரும் கொஞ்சமும் அபிவிருத்தியை யடையாமல் பழைய மனிதனாகவே இருப்பான்.

656. தியானத்தில் ஆழ்ந்திருக்கும்போது ஏன் மனம் சலிக்கின்றது?

ஈயானது மிட்டாய்க் கடையில் வைக்கப்பட்டிருக்கும் பக்ஷணங்களின்மீது சிலவேளைகளில் உட்காருகிறது. ஆனால் அவ்வழியே, மலத்தைக் கூடையில் எடுத்துக்கொண்டு ஒரு தோட்டி போவானானால் அந்த ஈ உடனே பக்ஷணத்தை விட்டு விட்டு அம் மலத்தின்மேல் போய் உட்காருகிறது. தேனீயோ தேனைக் கிரகிக்கும் பொருட்டு மலர்ந்த புஷ்பங்களில் உட்காருமே தவிர அசங்கியமான பதார்த்தங்களை ஒரு போதும் அணுகுவதில்லை. உலகப்பற்றுள்ளவர்கள் முன்னே சொன்ன ஈய்க்குச் சமானம். ஏதோ சில வேளைகளில் ஈசுவரப் பிரேமையாகிய இன்பத்தை ஒரு சிறிது அனுபவித்தாலும், பழைய வாசனையால்,

அவர்கள் சிற்றின்ப சுகமாகிய மலக்குழியைத் தேடிப்போய் விழுகின்றனர். பரமஹம்ஸர்களான மஹான்களோவெனில் சதா சர்வகாலமும் பகவத் பிரேமையிலேயே ஆழ்ந்திருக்கின்றனர்.

657. கேவலம் உலகப்பற்றிலேயே முற்றிலும் மூழ்கியுள்ள ஜீவனானது, மலத்திலேயே பிறந்து அதிலேயே இறக்கும் புழுவுக்குச் சமானம். மேலானது ஒன்றையும் அது அறியாது. சாதாரண உலகப்பற்றுள்ளவன், ஒரு சமயம் மலத்தின் மீதும் ஒரு சமயம் பக்ஷணத்தின் மீதும் உட்காரும் ஈய்க்குச் சமானம். ஜீவன் முக்தர்களோ வெனில், தேனைத் தவிர வேறொன்றையும் குடிக்காத தேனீய்க்குச் சமானமானவர்.

658. லௌகிகனுடைய மனம் சாணிக்குழியில் உள்ள புழுவுக்குச் சமானம். அப்புழு அங்கேயே எப்போதும் வாழ்கின்றது; அங்கேயே வாழவும் பிரியப் படுகின்றது. யாரேனும் ஒருவர் அப்புழுவை அங்கிருந்து எடுத்துப்போய் ஒரு தாமரைப் பூவின் மேல் வைப்பாரானால் அந்த நல்ல வாசனையாலே அது மரணமடையும். அதுபோல லௌகிகனானவன், உலக விஷய இச்சைகளாகிற அசங்கியத்திலிருந்து ஒரு நிமிஷம்கூட விலகி வசிக்க இயலாதவனாவான்.

659. சூளையில் வேகாத மண் பாண்டம் உடைந்தால் அம் மண்ணை வேறு புதிய பாண்டம் உண்டாக்கக் குயவன் உபயோகிப்பான். ஆனால் சூளையில் வெந்த மண் பாண்டம் உடைந்தாலோ, அதன் துண்டுகளை அப்பால் அவனால் உபயோகிக்க முடியாது. அதுபோல ஒருவன் அஞ்ஞானத்துடன் மரணமடைந்தால் மறு ஜன்மம் அடைவான். ஆனால் உண்மை ஞானமாகிய அக்னியால் வெந்த ஒருவன் பரிபூரணனாக இறப்பானானால் அவனுக்கு மறு ஜன்மம் கிடையாது.

660. உலகப் பற்றுள்ளவனுடைய சுபாவம் எப்படிப் பட்டது? அவன் குடத்துக்குள்ளிருக்கும் கீரிப்பிள்ளைக்குச் சமானம். கீரியை வளர்ப்பவன், சுவரின் மேல் ஒரு பானையை வைத்து, அதில் கீரியை விட்டு வைப்பான். மேலும், கயிற்றின் ஒரு நுனியைக் கீரியின் கழுத்தில் தளர்ச்சியாகக் கட்டி, மற்றொரு

நுனியில் ஒரு கனமான கல்லைத் தொங்க விட்டிருப்பான். கூடத்தை விட்டு வெளிப்படும் கிளி தன்னிஷ்டம்போலச் சுவர் வழியே இறங்கி அங்கு மிங்கும் உலாவும். ஆனால் ஏதாவது பயமுற்றால் உடனே அது பானைக்குள் நுழைந்துகொள்ள ஓடுகிறது. என்றாலும், கயிற்றின் நுனியில் கட்டியிருக்கும் கல், அதைக் கீழே இழுத்துத் தள்ளிவிடும். அதுபோல, உலக வாழ்க்கையில் ஏற்படும் துன்ப துயரங்களால் ஒருவன் வைராக்கிய மடைந்து ஈசுவரனுடைய திருவடிகளில் சரணமடையும்படி தூண்டப்படுவானாயினும், உலகப் பற்றும் உலக ஆசைகளுமாகிய கனமான கற்கள் அவனை அதி சீக்கிரம் கீழே இழுத்துத் துன்ப துயரங்களினிடையே தள்ளுகின்றன.

661. ஒரு சேர் பாலுடன் இரண்டு சேர் ஜலத்தைக் கலந்துவிட்டால் அந்த ஜலம் முழுவதும் வற்றி சுயப் பாலாவதற்கு நெடு நேரமும் நீண்ட பிரயாசையும் வேண்டும். லௌகீகனுடைய மனம் தீய சிந்தனைகளும் அசுத்த எண்ணங்களுமாகிய ஜலத்தால் நன்றாய் விளாவப்பட்டுள்ளது. ஆதலால், உண்மைப் பக்தனுடைய நிலைமையை அவன் அடைவதற்கு நீண்ட பிரயாசையும் நெடுங்காலமும் வேண்டியிருக்கிறது.

662. மந்திரித்த கடுகைப் பேய்பிடித்தவன் மீது தூவினால் பேய் அகன்றுவிடும். ஆனால் பேய் கடுகுக்குள்ளேயே புகுந்துகொண்டால், அப்படிப்பட்ட கடுகு பேயை எப்படிப் போக்கும்? பகவானை எந்த மனத்தைக்கொண்டு தியானம் பண்ண வேண்டுமோ அந்த மனமே உலக விஷயங்களாகிற தீய எண்ணங்கள் செறிந்ததாக விருந்தால், அப்படிப்பட்ட கெட்டதொரு ஸாதனத்தின் உதவியைக் கொண்டு எப்படி பக்தி மார்க்கத்தை அனுசரிக்க முடியும்?

663. நாவின் நரம்புகள் முற்றிப்போன வயது முதிர்ந்த கிளிக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்க முடியாது. அதன் கழுத்தில் கோடு உண்டாவதன் முன்னம் அதாவது அது இளமைப் பருவத்திலிருக்கும்போதே கற்பிக்கப்பட வேண்டும். அதுபோல, வயது சென்ற பிறகு ஈசுவரனிடம் மனத்தை நிலை நிறுத்த முடியாது. இளமையிலே அவ்வாறு நிலை நிறுத்த எளிதில் கற்றுக் கொள்ளலாம்.

664. வேகாத மண்ணைக் கொண்டு குயவன் சட்டிகளும் பானைகளும் செய்கிறான். ஒருதரம் சுடப்பட்டுவிட்டால் அந்த மண்ணைக்கொண்டு அவனால் ஒன்றும் செய்ய முடியாது. அது போல, உலக இச்சைகளாகிய நெருப்பால் வெந்துபோன ஒருவனுடைய மனத்தில் உயர்ந்த மனோபாவங்கள் உண்டாகா; அதை ஒரு அழகிய உருவமாக்கவு முடியாது.

665. ஈயானது ஒரு சமயம் அழுகிக் கிடக்கும் புண்மீதும் இன்னொரு சமயம் ஈசுவரனுக்குப் படைப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும் நைவேத்யத்தின் மீதும் உட்காரும். அதுபோல, லௌகிகனுடைய மனம் ஒரு சமயம் பக்தி விஷயத்திலும் இன்னொரு சமயம் பெண் பொன் சுகத்திலும் பதிகின்றது.

666. ஈரமான நெருப்புக் குச்சியை எவ்வளவு பலமாகத் தேய்த்தாலும் தீப்பற்றுவதில்லை; புகையும். உலர்ந்த நெருப்புக் குச்சியோ, மெதுவாய்த் தேய்த்த போதிலும் உடனே பற்றிக் கொள்கிறது. உண்மைப் பக்தனுடைய மனம் உலர்ந்த நெருப்புக் குச்சிக்குச் சமானம். பகவந் நாமத்தைக் கேட்டவுடனேயே அவன் மனத்திலுள்ள பிரேமையாகிய தீ மூண்டெழுகிறது. காமத்தாலும் காசாசையாலும் நனைந்து கிடக்கும் லௌகிகனுடைய மனமோ, ஈர நெருப்புக் குச்சியைப்போல, ஒருபோதும் பற்றுவதில்லை. அனேகந்தரம் அவனுக்கு ஈசுவரனைப் பற்றி உபதேசம் செய்த போதிலும், ஈசுவரப் பிரேமையாகிய நெருப்பு அவனிடம் மூண்டெழுவதில்லை.

667. மாம்பழம் ஒன்றை ஈசுவர நிவேதன மாகவோ, வேறு நல்லுபயோகமாகவோ வினியோகிக்கலாம். ஆனால், ஒருதரமாயினும், அது காக்கையால் கொத்தப்பட்டு விட்டால், ஒன்றுக்கும் உதவாமல் போய்விடும். ஈசுவர நிவேதனத்துக்கும் ஆகாது; பிராமணனுக்குத் தானமாகக் கொடுக்கவும் உதவாது. பரிசுத்தமானவர் எவரும் உண்பதற்கு அது உபயோக மற்றதாகிறது. அதுபோல, மனம் அசுத்தமடைவதன் முன்னம், உலக ஆசைகளாகிற அசுத்தங்கள் அவர்களைத் தீண்டுவதன் முன்னம், சிறுவர் சிறுமியர்கள், ஈசுவரஸேவைக்கு அர்ப்பணம் செய்யப்பட வேண்டும். உலக இச்சைகள் ஒரு தரம் அவர்களுடைய மனத்திற்

புகுந்துவிட்டாலும், இந்திரிய சுகங்களாகிற பேயின் தீய நிழல் அவர்கள் மீது ஒரு தரம் பட்டுவிட்டாலும் அப்பால் அவர்களை எப்போதும் தர்மவழியில் செல்லும்படி செய்வது மிகவும் கடினமாகும்.

668. முற்றாத மூங்கிலை எளிதில் வளைக்கலாம். முற்றின மூங்கிலைப் பலவந்தமாக வளைக்க முயன்றால் ஒடிந்துபோகும். அதுபோல இளமையான மனதை ஈசுவரனிடம் செல்லும்படி திருப்புவது எளிது. வயதுமுதிர்ந்தவனுடைய பழக்கப்படாத மனமோ, அப்படித் திருப்ப முயலும்போதெல்லாம் பிடியை மீறிச் செல்லும்.

669. வயல் வரப்புகளில் வைக்கப்படும் மூங்கிலால் பின்னிய மீன்பறியின் வழியே பளபள வென்று மின்னிக் கொண்டு போகும் ஜலத்தைப் பார்த்து ஆனந்தப்பட்டு, சிறுமீன்கள் அதனுள் புகுகின்றன. புகுந்தபின் வெளியே வருவதற்கில்லாமல் அதனுள் அகப்பட்டு விடுகின்றன. அதுபோல, முட்டாள்கள் மாயைத் தோற்றத்தால் மதிமயங்கி உலகவலையில் புகுகின்றனர். வலையினின்று வெளிவருவதைக் காட்டிலும் அதனுள் போவது எளிதல்லவா? சிறு மீன்களைப்போல அவர்கள் உள்ளே அகப்பட்டுக் கொண்டு விடுகின்றனர்.

670. வித்யா கர்வம் படைத்தவர்களும் பொருள் கர்வம் படைத்தவர்களும் ஆத்ம ஞானத்தை யடைய மாட்டாதவர்களில் சேர்ந்தவராவர். அவர்களில் ஒருவனிடம் சென்று, "அங்கோரிடத்தில் ஒரு ஸாது வந்திருக்கிறார். பார்க்க வருகிறாயா?" என்று கேட்டால், அவன் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி வருவதற் கியலாதென்பான். என்றாலும், மனத்துக்குள், "நான் உயர்ந்த அந்தஸ்துள்ளவன்; ஏன் இன்னொருவரிடம் போக வேண்டும்?" என்று அவன் நினைத்துக் கொண்டிருப்பான்.

671. சில மனிதர்களுக்கு இவ்வுலகில் பந்தம் ஒன்றுமே இல்லாமற் போனாலும் அவர்கள் வலுவிலேயே ஏதாவதொரு பந்தத்தை உண்டாக்கிக் கொள்கின்றனர். அவர்களுக்கு பந்தமற்ற வாழ்விலோ அல்லது முக்தியிலோ விருப்பமில்லை. தான் காப்பாற்றுவதற்கோ பரிபாலிப்பதற்கோ உற்றார் உறவினர்

யாரும் இல்லாத ஒருவன், பூனையோ, நாயோ, குரங்கோ, பக்ஷியோ இவைகளில் ஏதேனு மொன்றை எடுத்துப் பிரியம் பாராட்டி வளர்க்கிறான். இதனால் ஒருவகையான திருப்தியை அடைகிறான். உலகத்தவரை மயக்குவதற்கு ஏற்பட்ட மாயையின் மஹிமை அப்படிப்பட்டது.

672. மிருதுவான களிமண்ணில் எந்த உருவமும் எளிதில் பதியும். கருங்கல்லில் ஒரு உருவமும் பதியாது. அதுபோல பக்தனுடைய ஹிருதயத்தில் ஈசுவர ஞானம் தானே பதியும். பந்தப்பட்ட ஜீவனுடைய ஹிருதயத்தில் பதிவதில்லை.

673. சமயானுஷ்டான இன்பங்களில் எதனிடத்தும் வெறுப்புக் கொள்வதிலிருந்து ஒருவனை லௌகீகனென நன்கறியலாம். பகவந்நாமத்தை உச்சரிக்கவும் திவ்ய கானத்தைக் கேட்கவும் அவனுக்குப் பிரியம் இருப்பதில்லை. பிறர் அவ்வாறு செய்வதையும் அவன் தடுப்பான். தோத்திரம் செய்வதை நிந்திப்பவனும் தர்ம ஸ்தாபனங்களையும் தர்மாத்மாக்களையும் ஏளனம் பண்ணுபவனும் சரியான லௌகீகனாவான்.

674. கொல்லன் உலையில் இரும்பானது காய்ச்சப்படும் போது அக்னிச் சிவப்பாக இருக்கும். உலையிலிருந்து எடுபட்டவுடன் கறுநிறமாகிவிடும். அதுபோலத்தான் லௌகீகர்களும். ஒரு கோவிலிலோ, அல்லது ஸாதுஸங்கத்திலோ இருக்கும் வரையில் அவர்கள் தெய்வ உணர்ச்சியோடிருப்பார்கள். அப்படிப்பட்ட விடங்களிலிருந்து வெளிவந்தவுடன், அந்த பக்திப் பெருக்கானது நழுவி விடுகின்றது.

675. லௌகீகர்கள் எல்லாவற்றையும் தியஜித்துவிட்டு ஏன் ஈசுவரனிடம் ஓடுவதில்லை? இவ்வுலகம் ஒரு நாடக மேடை. மனிதர்கள் இங்கு வேறு வேறு வேஷம் பூண்டு பலவிதமாக நடிக்கின்றனர். ஆதலால், கொஞ்ச நேரமாவது தாங்கள் நடிக்காத வரையில், அவர்கள் தங்கள் வேஷத்தைக் கலைக்கப் பிரியப்படுவதில்லை. கொஞ்ச நேரம் அவர்கள் மனம் போன்படி நடிக்கட்டும். அப்பால் அவர்களே வேஷத்தைக் கலைத்து விடுவார்கள்.

676. முதலையின் மேற்புறத்தில் தோல் வெகு கனமாயும் செதில்களுள்ளதாயும் இருப்பதால் எந்த ஆயுதமும் அதனுள்

செல்வதில்லை. அதுபோல என்னதான் நீ உபதேசம் செய்தாலும் லௌகிகனுடைய மனதில் சிறிதும் நுழையாது.

677. பாலத்தின் கீழே ஜலமானது ஒரு பக்கத்தில் நுழைந்து மற்றொரு பக்கமாக ஓடிப்போவதைப்போல, தர்மோபதேசமும் லௌகிகனுடைய ஒரு காதுவழியாக நுழைந்து மற்றொரு காது வழியாக வெளியே போய்விடுகின்றது. சிறிதும் அங்குப் பதிவதில்லை.

678. வாழ்வில் எத்தனைதான் துன்ப துயரங்களை இடைவிடாது அனுபவித்தாலும், லௌகிகனுடைய மனமானது பெண்ணாசை பொன்னாசைகளை எளிதில் வெறுத்து, ஈசுவரனிடம் திரும்பாது.

679. ஒருவன் ஸத்குருவைப் பெற்றிருந்தாலும் ஸாது ஸங்கத்தில் சேர்ந்திருந்தாலும், மனவுறுதியைப் பெறாமலிருந்தால் யாதொரு பலனையும் அடையமாட்டான்.

680. புறாவின் கழுத்தைத் தொட்டுப் பார்த்தால், அது பொறுக்கித் தின்ற தானியத்தைத் தன் இரைப்பைக்குள் நிரப்பி வைத்திருப்பதைக் காணலாம். அதுபோல, உலகப்பற்றுள்ளவன் உள்ளத்தில் உலக விஷயங்களே நிறைந்திருப்பதை அவனுடன் சம்பாஷணை செய்வதால் தெரிந்துகொள்ளலாம்.

681. பாபியின் ஹிருதயம் சுருட்டை மயிருக்குச் சமானம்; எவ்வளவுதான் முயன்ற போதிலும் உன்னால் அதை நேராக்க முடியாது. அதுபோல, துன்மார்க்கனுடைய மனத்தைச் சுத்தமாக்கி நல்வழியில் செலுத்துவது சுலபமான காரியமன்று.

682. கற்பாறைக்குள் ஜலம் எக்காலத்தும் நுழையாது. அதுபோல, தர்மோபதேசமானது பந்தப்பட்ட ஜீவனிடத்துச் சிறிதும் பதிவதில்லை.

683. கற்பாறைக்குள் இருப்பாணியைச் செலுத்த முடியாது. ஆனால் மண்தரையில் அது வெகு எளிதில் இறங்கிவிடுகிறது. அதுபோல, தர்மோபதேசமானது பந்தப்பட்ட ஜீவனிடத்து யாதொரு பலனையும் உண்டாக்குவதில்லை. விசுவாசமுள்ளவர்களுடைய மனத்திலோ அது வெகு எளிதில் ஆழப் பதிகின்றது.

684. விவாக வாழ்க்கைச் சுகானுபவத்தை இளஞ்சிறுவர்கள் அறியார்கள்; அதுபோல ஈசுவரானுபவத்தால் உண்டாகும் திவ்யானந்தத்தை லௌகீகர்கள் அறியவே முடியாது.

685. அழுக்கடைந்த கண்ணாடியில் முகம் பிரதிபலிப்பதில்லை. அதுபோல, அசுத்தமான ஹிருதயத்தில் ஈசுவரனுடைய திவ்ய ரூபம் பிரதிபலிக்காது. கண்ணாடியின் அழுக்கைத் துடைத்துவிட்டால் அதில் ஒருவனுடைய முகம் பிரதிபலிக்கும். அதைப்போல, ஹிருதயம் பரிசுத்த மடைந்தால் அதில் ஈசுவரன் தானே பிரகாசிப்பான்.

686. ஒரு தரம் தயிர் தோய்த்த பானையில் ஒருவரும் பாலை வைப்பதில்லை. வைத்தால் - பால் தோய்ந்துபோகும். அப்பானையைச் சமையல் பாத்திரமாகவும் உபயோகிப்பதுகிடையாது. ஏனென்றால் அடுப்பில் வைத்ததும் அது வெடித்து விடும். ஆகவே அது உபயோக மற்றதற்குச் சமானமாகும். அனுபவம் முதிர்ந்த ஸத்குருவானவர், உயர்ந்த மதசம்பந்தமான ரகஸியங்களைக் கேவலம்லௌகீகனுக்கு உபதேசிப்பதில்லை. உபதேசித்தால் அவன், அவைகளின் பொருளைச் சரியானபடி கிரகிக்காமல், தன் காரியத்துக்கு அனுகுணமாகும்படி துர்விநியோகிப்பது நிச்சயம். சரீர சிரமம் சிறிது உண்டாகும்படியான கைங்கரியம் ஏதேனும் செய்யும்படியும் அவர் அவனைத் தூண்டமாட்டார். ஏனெனில், குருவானவர் தன்னை வேலை வாங்குகிறார் என்று அவன் நினைப்பான்.

687. லௌகீகன் ஒருவன் ஒரு ஞானியைப்போலவே மேலான அறிவையும் புத்திவன்மையையும் பெற்றிருக்கலாம். அவன் ஒரு யோகியைப்போல மிகவும் பரிசிரமப்படலாம்; அல்லது சந்யாசியைப் போல அதிக தியாகம் செய்யக் கூடியவனாயும் இருக்கலாம். என்றாலும் அவனுடைய முயற்சிகளெல்லாம் பயனற்றவையே. ஏனெனில் அவனுடைய சக்திகள் வேறு மார்க்கத்தில் செலுத்தப்படுகின்றன. மேற் கூறியவைகளையெல்லாம், அவன் ஈசுவரனுக்காக அல்லாமல், கௌரவம், அந்தஸ்து, செல்வம், இவைகளைப் பெறுவதற்காகவே செய்கிறான்.

688. ஸம்ஸ்காரத்தின் (பழைய வாஸனை) சக்தி எவ்வளவு பலமானது! ஓரிடத்தில் சில ஸாதுக்கள் உட்கார்ந்திருந்த போது ஒரு யுவதி அவ்வழியாகச் சென்றாள். எல்லாரும் எப்போதும் போல் ஈசுவரத் தியானத்திலேயே ஆழ்ந்திருக்க, ஒருவன் மட்டும் அவளைக் கடைக்கண்ணால் பார்த்தான். ஸ்திரீ லாவண்யத்தில் ஈடுபட்ட இவன், ஸாதுவாவதற்கு முன்னால் கிருகஸ்தாசிரமத்திலிருந்து மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்தவனா யிருந்தான்.

689. உலகப்பற்றில் ஆழ்ந்திருப்பவனுக்கு பிரம்ம ஞானம் சித்தியாது; அவனுக்கு ஈசுவர தரிசனம் நேராது. சேறாய்க் கிடக்கும் நீரில் சூரியனாவது சுற்றியுள்ள வஸ்துக்களாவது பிரதிபலிக்கின்றனவா?

690. கொடிய துன்ப துயரங்களை மிகுதியாக அனுபவித்தாலும், லௌகிகர்களுக்கு நற்புத்தி உண்டாவதில்லை. ஒட்டகங்களுக்கு முட்செடிகளில் அதிக ஆசை. அவைகளைத் தின்னத் தின்ன ஒட்டகங்களின் வாயிலிருந்து ரத்தம் அதிகமாகப் பெருகும். என்றாலும், அவைகள் முட்செடிகளைத் தின்பதை விடுவதில்லை.

சில சமயம் அந்த லௌகிகர்களுடைய ஸ்திதி, தவளையைப் பிடித்துக் கொண்டு விழுங்க முடியாமலும் வெளியே விட்டுவிட முடியாமலும் தவிக்கும் பாம்பின் நிலைமைக்குச் சமானமாக இருக்கும். சதைப்பற்றில்லாமல், மேற்றோலும் உட்கொட்டையுமே உள்ள மரிமாங்காயைப் போல, உலகத்தினிடத்து உண்மையானது எதுவும் இல்லை என்பதை அவர்கள் அறிவார்கள். என்றாலும், அதைத் துறந்து ஈசுவரனிடம் மனத்தைச் செலுத்தச் சக்தியற்றவர்களாக விருக்கின்றனர்.

அவர்களிடம் இன்னுமொரு விசேஷமுண்டு. உலக ஸஹவாசங்களினின்றும் அவர்களைப் பிரித்து, ஸாது ஸங்கத்தினிடையே, நல்லுபதேசங்களைக் கேட்கும்படி கொண்டுவந்து விட்டால், அவர்கள் அவ்விடத்தில் எப்போதும் நிம்மதியற்ற மனமுடையராய்க் கவலையுடன் தவிப்பார்கள். மலத்தில் உற்பத்தியாகி அங்கேயே விருத்தியாகும் புழுக்களைப் புதிதாகச்

சமைத்த சுத்தமான சோறுள்ள பானையில் வைத்தால், அவை இறந்துபோம்.

691. சந்நியாசியின் சுரைக்குடுக்கை (கமண்டலம்) திவ்விய க்ஷேத்திரங்களை யெல்லாம் தரிசித்திருக்கலாம். என்றாலும் அது பழையபடியே கசப்புள்ளதாகவே இருக்கும். அது போலத்தான் லௌகீகர்களுடைய சுபாவமும்.

692. லௌகீகர்கள், உலக வெகுமதிகளைப் பெறும் நோக்கத்தோடு அநேக தானதர்மங்களைச் செய்கின்றனர். ஆனால் அவர்களுக்கு துரதிருஷ்டம், துக்கம், தரித்திரம் இவைகள் வரும்போது, அவர்களுடைய தானதர்மமும் பக்தியும் ஓடிப்போய் விடுகின்றன. நாள் முழுவதும், "ராதாகிருஷ்ணா, ராதா கிருஷ்ணா" என்று திவ்ய நாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும் கிளியானது பூனையால் பிடிபட்டதும், அந்த திவ்யநாமத்தை மறந்து "கீ, கீ" என்று கத்தும். லௌகீகர்களுடைய சுபாவம் இந்தக் கிளியின் சுபாவத்தைப் போன்றதாம்.

ஆதலால்தான் அப்படிப்பட்டவர்களுக்குத் தர்மோபதேசம் செய்வதால் பயன் ஏற்படாது என்கிறேன். எத்தனைதான் உபதேசங்களைக் கேட்டபோதிலும் அவர்கள் முன்போலவே உலகப் பற்றுள்ளவர்களாக இருப்பார்கள்.

693. வில் மெத்தையானது, ஒருவர் உட்கார்ந்தவுடன் தாழ்ந்து, எழுந்தவுடன் பூர்வ நிலைமையை அடையும் சுபாவமுள்ளது. லௌகீகர்களுடைய சுபாவமும் அப்படிப் பட்டதே. தர்மோபதேசங்களைக் கேட்டுக்கொண்டிருக்கும் வரையில் அவர்கள் தர்மசிந்தனையுள்ளவராக இருப்பார்கள். உலக விவகாரங்களில் தலையிட்டுத் தங்கள் தினசரிவாழ்க்கையில் இறங்கியதும் அவர்கள் அந்த தர்மோபதேசங்களை மறந்து, பழையபடி மனத்தூய்மை யில்லாதவர்களாகி விடுகின்றனர்.

694. சில வேளைகளில் மதப்பற்றுள்ள பக்தர்களுடன்சில லௌகீகர்களும் என்னிடம் வருகின்றனர். லௌகீகர்களுக்கு மத விஷயமான சம்பாஷணையில் விருப்பங் கிடையாது. பக்தர்கள் ஆத்மா, ஈசுவரன் ஆகிய இவைகளைப்பற்றி விரிவாகப் பேசிக்

கொண்டிருக்கும்போது, இந்த லௌகீகர்கள் அதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்க மனமிராதவராகி, "எப்போது திரும்பிப் போகிறது? இன்னும் எவ்வளவு நேரம் இங்கிருக்கப் போகிறீர்கள்?" என்று ரகசியமாய்க் கூடவந்தவர்களைக் கேட்கின்றனர். பக்தர்கள், "கொஞ்சம் பொறு, இதோ வந்துவிட்டோம்." என்று சில வேளைகளில் பதில் சொல்வதுண்டு. இதைக் கேட்டு வெறுப்படைந்த லௌகீகர்கள், "நல்லது, நீங்கள் பேசிக் கொண்டிருங்கள்; உங்களுக்காக நாங்கள் படகில் காத்துக் கொண்டிருக்கிறோம்." என்று சொல்லிக்கொண்டு எழுந்து போகின்றனர்.

695. மனிதர்கள் இருவகுப்பினர்—மனிதர் என்ற பெயர் மாத்திரம் வகித்தவர் (மனுஷ்யர்); அறிவு விளங்கப்பெற்றவர் (மன்-ஹூஷ்யர்). ஈசுவரனை அடையவேண்டுமென்ற ஒரே நோக்கத்தையுடையவர்கள் பின்னர் சொன்ன வகுப்பினர். காமமும் காசாசையும் பிடித்து அலைபவர்கள் மனிதர் என்ற பெயர் மாத்திரம் வகித்தவர்கள்.



# 36. சித்திகள்



696. அற்புதக் காரியங்களைச் செய்வோரிடமும் சித்திகளைக் காண்பிப்போரிடமும் போகாதே; அவர்கள் கடவுள் நெறியினின்றும் வழிதப்பித் திரிபவர்கள். அவர்களுடைய மனம் பிரம்மத்தை யடையும் மார்க்கத்தில் வரக்கூடிய சித்திகள் என்னும் வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறது. இந்தச் சித்திகளில் அகப்படா வண்ணம் ஜாக்கிரதையாக இருங்கள். அவைகளை விரும்பவே வேண்டாம்.

697. ஒரு மனிதன் பதினன்கு வருஷங்களாகத் தனிக் காட்டில் தவஞ்செய்து, நீர்மேல் நடக்கும் சத்தியைப் பெற்றான். இதை யடைந்ததற்கு வெகு சந்தோஷப்பட்டு, அவன் தன் குருவிடம் சென்று, "ஸ்வாமி! ஸ்வாமி! நான் நீர்மேல் நடக்கக் கூடிய ஸித்தியைப் பெற்றிருக்கிறேன்," என்றான். அதைக் கேட்ட குருவானவர், "சே, பதினன்கு வருஷங்களாக நீ தவம் செய்ததன் பலன் இதுதானா? உண்மையில் நீ ஒரு தம்பிடிதான் சம்பாதித்திருக்கிறாய். பதினன்கு வருஷங்களாகச் செய்த பிரயத்தனத்தால் நீ நிறைவேற்றக்கூடிய ஒரு காரியத்தைச் சாதாரண ஜனங்கள் ஓடக்காரனுக்கு ஒரு தம்பிடி கொடுத்துச் செய்து விடுகின்றனர்," என்றார்.

698. பரமஹம்ஸருடைய சிஷ்யர்களில் பால்ய மானவன் ஒருவன் பிறருடைய மனதிலிருப்பதை யறியக்கூடிய ஸித்தியைப் பெற்றான். இதனால் அவன் ஸந்தோஷமடைந்து பரமஹம்ஸரிடம் சென்று, தான் பெற்ற சக்தியைத் தெரிவித்தான். அதைக் கேட்ட பகவான், "குழந்தாய்! உனக்கு வெட்கமாகவிருக்க வில்லையா? இப்படிப்பட்ட அற்ப விஷயங்களிலெல்லாம் உனது சக்தியை வீணாய்ச் செலவழிக்காதே," என்று கண்டித்தார்.

699. ஸித்திகளால் பிறருடைய வியாதிகளைப் போக்கிக் கொண்டும், லாகிரி வஸ்துக்களை உபயோகப்படுத்திக் கொண்டும் திரிகிற ஒரு ஸாதுவைச் சரியான ஸாது வென்று சொல்லக் கூடாது. அப்படிப்பட்டவர்களோடு சகவாசம் செய்யாதே.

700. பஞ்சவடியின் கீழிருந்து நான் தீவிரமான ஸாதனை களைச் செய்து கொண்டிருந்த காலத்தில் கிரிஜா என்ற பெய ருடைய ஒருவன் அங்குவந்தான். அவன் பெரிய யோகி. ஒரு நாள் ராத்திரி, நான் இருட்டில் என் அறைக்குப்போக விரும் பியபோது, அவன் தனது கையை உயரத் தூக்கினான். அவனது அங்குளிலிருந்து வெகு பிரகாசமான வெளிச்சம் தோன்றி வழி முழுவதிலும் பரவியது. எனது உபதேசத்தால் அவன் அவ்வித சக்தியை உபயோகிப்பதைக் கைவிட்டு பிரம் மத்தை யடையும் மார்க்கத்தில் மனத்தைத் திருப்பினான். பிற் பாடு அவனுக்கு இந்த ஸித்தி போய்விட்டது என்றாலும் ஸாதனா மார்க்கம் கை கூடியது.

701. ஒரு சிஷ்யன், தான் தியானத்தில் அமர்ந்திருக்கும் போது வெகு தூரத்துக்கப்பால் நடப்பவைகளும் வேறு ஜனங் கள் செய்பவைகளும் தனக்குத் தெரிய வந்தன வென்றும், பிற் பாடு விசாரித்ததில் அப்படிக் கட்புலனானவை யெல்லாம் உண்மையாகவே இருந்தன வென்றும் பரமஹம்ஸரிடம் வந்து சொன்னான். ஸ்ரீராமகிருஷ்ணர் அவனைப் பார்த்து, “அப்பா! கொஞ்ச காலம் தியானம் செய்யாமலிரு. இப்படிப்பட்ட சக்திக ளெல்லாம் ஈசுவர தரிசனத்துக்கு இடையூறுகளானவை,” என்றார்.

702. அசங்கியங்களை வெறுப்பதுபோல, ஸித்திகளையும் அற்புத சக்திகளையும் வெறுக்க வேண்டும். சமயானுஷ்டானமும் இந்திரிய நிக்கிரகமுமாகிற ஸாதனை ஸம்யமங்களால் இவை தாமே உண்டாகும். இத்தகைய ஸித்திகளில் கருத்தைச் செலுத் துபவன் அதிலேயே நின்றுபோய், மேல் நோக்கிச் செல்லச் சக்தியற்றவனாகிறான்.

703. சந்திரன் என்ற பெயருள்ள ஒருவன் குடிகை ஸித்தியைப் பெற்றிருந்தான். குடிகையைக் கையில் வைத்துக்

கொண்டால் அவன் பிறர் கண்ணுக்குப்புலப்படாமல் எங்கு வேண்டுமானாலும் தன்னிச்சைப்படி போகக் கூடியவனாக விருந்தான். முதன் முதலில் அவன் ஈசுவரனை யடையவேண்டுமென்ற தீவிரபுத்தி யுள்ள பக்தனாக விருந்தான். பிறகு இந்தச் சக்தியைப் பெற்றதும், அதை விஷய சுகங்களில் உபயோகப்படுத்த வாரம்பித்தான். நான் தடுத்துச் சொன்னதையும் கேட்கவில்லை. பிறருக்குத் தெரியாமல் அவன் அடிக்கடி ஒரு தனவான் வீட்டுக்குச் சென்று, அங்குள்ள வோர் யுவதியுடன் ரமித்துவந்தான். அதுகாரணமாக அவனுடைய சக்தி யெல்லாம் அகன்றது. அவன் பதிதனானான்.

704. "என்னை அடைய வேண்டுமென்ற விருப்பம் உனக்கு இருக்குமானால், உன்னிடம் அஷ்ட ஸித்திகளில் ஏதேனும் ஒன்று இருந்தாலுங்கூட உன் மனோரதம் கைகூடாது," என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்குச் சொல்லியருளினார்.

சித்திகளால் அகங்காரம் உண்டாகிறது. அவ்வகங்காரத்தால் ஒருவன் ஈசுவரனை மறந்துபோகிறான்.

705. சிலவேளைகளில் சித்திகளைப் பெறுவது பெரிய ஆபத்தை விளைவிக்கும். "ஒரு பெரிய ஸித்தர் ஒரு சமயம் கடற்கரையில் உட்கார்ந்திருந்தபோது பெரும் புயல் அடித்தது. உபத்திரவம் அதிகமாக விருந்தபடியால், அந்த ஸித்தர், 'புயல் நிற்கக்கடவது' என்றார்; உடனே புயல் நின்றது. அப்போது சமுத்திரத்தில் பாய்விரித்து வெகு வேகத்துடன் ஒரு கப்பல் போய்க்கொண்டிருந்தது. திடீரெனப் புயல் நின்றதும் கப்பல் அதனுள்ளிருந்த சகல ஜனங்களுடனும் கடலில் மூழ்கிப் போயிற்று. இப்படி அனேகரை மரிக்கச் செய்த பாபம் ஸித்தருக்கு லபித்தபடியால், அவருடைய சக்தி அவரைவிட்டகன்றது மல்லாமல் அவருக்கு நரகப்பிராப்தியுமாயிற்று," என்று மஹான் தோதாபுரி சொல்லியிருக்கிறார்.



## 37. கர்ம விதி



706. ஜீவனானது இவ்வுலகத்தை விட்டுப் போகும் தருணத்தில் கடைசியாக எதைப்பற்றி நினைத்துக்கொண்டிருக்குமோ அதற்குரிய உடலில் மறுபடியும் வந்து பிறக்கின்றது. ஆதலால் பக்தி சாதனை மிகவும் அவசியமெனத் தோன்றுகிறது. இடையறாத அனுஷ்டானத்தினால் உலகப் பொருள்களைப்பற்றிய எண்ணம் மனத்தில் உண்டாகாமற் போவதால் ஈசுவரனைப் பற்றிய சிந்தனையே ஆத்மாவினிடம் குடிகொள்ளும். மரணத்தருவாயிலும்கூட அந்தச் சிந்தனை நீங்குவதில்லை.

707. ஒருநாள் ஓரிடத்தில் காயடிக்கப்பட்ட காளைமாடுகள் இரண்டைக் கண்டேன். அவ்வழியாக ஒரு பசு சென்றது. அதைக் கண்டதும் ஒரு காளைக்குக் காமவிகாரம் ஏற்பட்டது. மற்றொன்றுக்கு ஏற்படவில்லை. அந்தக் காளைக்கு மட்டும் காமவிகாரம் உண்டான காரணத்தை யறிந்து கொள்வதற்காக அதைப் பற்றிய விவரங்களை விசாரித்தேன். அவைகளினின்றும், அக் காளை வயது முதிர்ந்து ஒரு பசுவோடு பிணைப்பட்ட பிறகு காயடிக்கப்பட்டதென்றும், மற்றொன்று இளம் பருவத்திலேயே காயடிக்கப்பட்டதென்றும் தெரியவந்தது. வழக்கம் அல்லது ஸம்ஸ்காரத்தின் பலன் இப்படிப் பட்டது. காமசுகத்தை அனுபவிக்காமல் உலகத்தைத் துறக்கும் ஸாதுக்களுக்கு ஸ்திரீகளைக் காணும்போது காமவிகாரமே யுண்டாவதில்லை. ஸம்ஸார வாழ்க்கையின் இன்பத்தை யனுபவித்த பிறகு, விருத்தாப்பியத்தில் காஷாயம் தரித்துக் கொள்பவர்க்கு, அவர்கள் நீண்ட காலமாகத் தன்னடக்கத்தைக் கைக்கொண்டிருந்தாலும் கூட பழைய வாசனைகள் ஞாபகத்துக்கு வரக்கூடும்.

708. தெரிந்தோ தெரியாமலோ, தன்னறிவுடனோ அறிவில்லாமலேயோ, எந்த ஸ்திதியிலாகட்டும், ஒருவன் பக்வந்நாமத்

ஜீதச் சொல்வானுனல் அவனுக்கு அதன் பலன் லபிக்கும். தன் னிச்சையுடன் விரும்பி ஆற்றுக்குப்போய்க் குளிப்பவனுக்கும், வேறொருவனுல் ஆற்றில் தள்ளப்படுபவனுக்கும், அல்லது தூங் கும்போது வேறொருவன் கொட்டிய தண்ணீரால் நனைபவனுக் கும் ஸ்நாந பலன் ஒருங்கே ஏற்படுகிறது.

709. பந்தப்பட்ட ஜீவர்கள் மரணத் தருவாயிலுங்கூட உலக விஷயங்களைப்பற்றியே பேசுகின்றனர். புண்ய க்ஷேத் திரங்களுக்கு யாத்திரை போவதிலும், கங்கா ஸ்நாநம் செய்வதி லும் ஜபதபங்கள் பண்ணுவதிலும் பிரயோஜனமில்லை; மனதில் உலகப்பற்று இருக்குமானுல், அது மரணகாலத்தில் நிச்சயமாக வெளிப்படும். அப்போது அவர்கள் கண்டபடி யெல்லாம் பிதற்றுவார்கள். சாதாரணமாக, ராதாகிருஷ்ணனுடைய திவ்ய நாமத்தைப் பாடும் கிளி, பூனையால் பிடிபடும்போது "கீ, கீ" என்று தனது சுபாவமான குரலெடுத்துக் கத்தும்.

710. ஈசுவரனிடம் பக்தி இராதபடியால்தான் மனிதன் வெகுவாகத் துன்பத்துக் குள்ளாகிறுன். அந்திய காலத்தில் ஈசுவரனுடைய ஞாபகம் வரும்படியான வழியை ஒவ்வொருவ னும் தேடிக்கொள்ள வேண்டும். அவ்வழி யாதெனில் ஈசுவர னிடம் பக்தி பூண்டொழுகுதலாம். முன்னுடியே ஒருவன் இப் படிப்பட்ட பக்தியிற் பழகுவானுனல், அது அவனுடைய அந்திய காலத்திலும் நிச்சயமாக மனத்திலெழும்.



# 38. மத ஒற்றுமை



711. ஒரே வஸ்துவான தண்ணீரை, சிலர் ஜலம் என்றும், சிலர் வாரி என்றும், சிலர் 'அக்வா' என்றும், சிலர் பானி என்றும் வேறு வேறு வார்த்தைகளால் கூறுகின்றனர். அதுபோல, ஒரே ஸச்சிதானந்தப் பொருளை, சிலர் கடவுளென்றும் சிலர் அல்லாவென்றும், சிலர் ஹரி என்றும் சிலர் பிரம்மம் என்றும் அழைக்கின்றனர்.

712. ஒரு பெரிய தடாகத்தில் குளிக்கும் துறைகள் அனேகம் இருக்கின்றன. ஸ்நானம் செய்யவோ ஜலம் மொள்ளவோ, யாராயிருந்தாலும், எந்தத் துறை வழியாக இறங்கின போதிலும், நீர்மட்டத்துக்குப் போகக்கூடும். ஒருவனுடைய துறை நல்லது மற்றவனுடைய துறை கெட்டது என்று சண்டைபோடுவது வீண். அதுபோல நித்யானந்தமாகிய நீர்த்தடத்துக்குப் போகும் துறைகளும் பல. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதமும் அப்படிப்பட்ட துறைகளில் ஒவ்வொன்றாகும். இந்தத் துறைகளில் எதாவதொன்றின் வழியே நேராகத் திடபக்தியுடன் சென்றால், நீ நித்யானந்த நீர்த்தடத்தை யடைவது நிச்சயம். ஆனால் உனது மதம்தான் உயர்ந்தது, மற்றவை தாழ்ந்தவை என்று மட்டும் சொல்லாதே.

713. ஈசுவரனுடைய நாமங்கள் அனந்தம். அவனை அடைவதற்குச் சாதகமாக ஏற்பட்ட ரூபங்களும் அனந்தம். நீ எந்த நாம ரூபத்துடன் அவனைப் பூஜிக்கின்றாயோ அந்த நாம ரூபத்துடனேயே அவனுடைய காட்சியை நீ பெறுவாய்.

714. குசவன் வேலைசெய்யுமிடத்தில் குடம், ஜாடி, தட்டு, சட்டி, பானை முதலிய வேறு வேறு உருவமுள்ள பாத்திரங்கள் இருக்கின்றன. ஆனால் அவை யெல்லாம் ஒரே களிமண்ணினால் தான் செய்யப்பட்டவை. அதுபோல ஈசுவரன் ஒருவனே.

ஆனால் அவன் வேறு வேறு நாமரூபங்கள் மூலமாக வேறு வேறு கால தேசங்களில் ஆராதிக்கப் படுகிறான்.

715. ஒரே வஸ்துவான சர்க்கரையினால் பக்ஷி போலவும் மிருகம் போலவும் வேறு வேறு உருவங்களைக்கொண்ட மிட்டாய் செய்யக்கூடும். அதுபோல, இன்பவடிவினளான ஒரே திவ்ய மாதாவானவள், பலவித நாம ரூபங்களால் பலவித கால தேசங்களில் ஆராதிக்கப்படுகிறாள்.

716. வேறு வேறான மதங்களெல்லாம் ஒரே ஈசுவரனை யடைவதற்கு வேண்டிய வேறு வேறு வழிகளேயாம். கல்கத்தாவிலுள்ள காளி கோயிலுக்குப் போகப் பல்வேறு வழிகள் உள்ளன. அதுபோல ஈசுவரனுடைய ஸந்நிதானத்துக்குச் செல்லும் மார்க்கங்களும் பலவுள்ளன. ஒவ்வொரு மதமும் மனிதனை ஈசுவரனிடம் கொண்டு சேர்ப்பிக்கும் அத்தகைய மார்க்கமேயன்றி வேறன்று.

717. ஒரே வஸ்துவான தங்கத்தினால் வெவ்வேறு பெயரும் உருவமும் கொண்ட பல நகைகளைச் செய்கின்றனர். அதுபோல ஒரே ஈசுவரன் வேறு வேறு நாம ரூபங்களால் வேறு வேறு கால தேசங்களில் ஆராதிக்கப் படுகிறான். அப்படி ஆராதிக்கையில் சிலர் அவனைப் பிதாவாகவும் சிலர் மாதாவாகவும், சிலர் தோழனாகவும், சிலர் நாயகனாகவும், சிலர் அந்தர்யாமியாகவும், சிலர் இனிய பாலகனாகவும், இவ்வாறு வேறு வேறு மனோபாவத்தால் கொண்டாடுகின்றனர். என்றாலும் இப்படிப் பல்வேறு விதமாக ஆராதிக்கப்படுபவன் ஒருவனேதான்.

718. விஷ்ணுவா, சிவனா, இவர்களில் யார் பெரியவர் என்ற வாக்குவாதம் ஒரு சமயத்தில் பரத்துவான் மகாராஜாவின் ஸபையிலிருந்த பண்டிதர்களுக்குள் நிகழ்ந்தது. சிலர் சிவன் பெரியவர் என்றனர். வேறு சிலர் விஷ்ணுவே பெரியவர் என்று சாதித்தனர். வாக்குவாதம் பலத்துவிட்டது. அப்போது அங்கிருந்த அறிவிற் சிறந்த பண்டிதர் ஒருவர், "கனவான்களே! நான் விஷ்ணுவையும் கண்டதில்லை; சிவனையும் கண்டதில்லை. அப்படியிருக்க அவர்களில் பெரியவர் யார் என்பதை எப்படி நான் சொல்லமுடியும்?" என்றார். அதுபோல, ஒரு தேவதையோடு

மற்றொரு தேவதையை ஒப்பிட்டுப் பார்க்க முயலாதே. ஏதேனும் ஒரு மூர்த்தியை நீ காணக்கூடுமானால் அப்போது எல்லா மூர்த்திகளும் ஒரே பிரம்மத்தின் ஸ்வரூபங்களே என்பதைத் தெரிந்து கொள்வாய்.

719. எல்லா மதங்களாலும் போற்றப்படும் ஈசுவரன் ஒருவனாகவே இருந்தால் ஏன் அவனைப் பல மதஸ்தர்கள் பலவிதமாக வர்ணிக்கின்றனர்?

ஈசுவரன் ஒருவனே. ஆனால் அவனுடைய நிலைகளோ பல. ஒரு வீட்டின் எஜமானன், ஒருவனுக்குப் பிதாவாயும் இன்னொருவனுக்குச் சகோதரனாயும் ஒருத்திக்கு நாயகனாயும் இருக்கிறான். பலரால் அவன் இவ்வாறு வேறு வேறு உறவு முறை பாராட்டி அழைக்கப் படுகிறான். அதுபோல ஒரே ஈசுவரன், பக்தர்களில் யார் யாருக்கு எந்தெந்தத் தோற்றத்துடன் காட்சி கொடுக்கிறானோ அந்தந்தத் தோற்றத்துக்கு அனுகுணமான வகையில் வர்ணிக்கப் பட்டிருக்கிறான்.

720. வீட்டின் உச்சி முகட்டுக்குப் போக, ஏணி, மூங்கில், மாடிப்படி, கயிறு இவைகளில் ஏதேனுமொன்றின் உதவியைக் கொண்டு ஏறலாம். அதுபோல, ஈசுவரனை அடைவதற்கு வேறு வேறு வழிகளும் சாதனங்களும் ஏற்பட்டுள்ளன. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதமும் அப்படிப்பட்ட வழிகளுள் ஒன்றைத்தான் காட்டுகிறது.

721. பச்சோந்தியின் நிறத்தைப்பற்றி இருவருக்குள் வெகு மும்முரமான விவாதம் உண்டாயிற்று. "அந்தப் பனை மரத்தின் மீதுள்ள ஓந்தி அழகிய சிவப்பு நிறமுள்ளது," என்றான் ஒருவன். மற்றொருவன், "ஏ, நீ சொல்வது தப்பு. அது சிவப்பு நிறமுள்ளதன்று, நீல நிறமானது," என்று தடுத்துச் சொன்னான். இவர்களுக்குள் வாக்குவாதம் தீரவில்லை யாதலால், இருவரும் அம்மரத்தின் கீழேயே எப்போதும் வசித்து, ஓந்தியின் நிறங்களையெல்லாம் கண்டறிந்த மனிதன் ஒருவனிடம் சென்றனர். சென்றதும் ஒருவன், "ஐயா! இந்த மரத்திலுள்ள ஓந்தி சிவப்பு நிறமுள்ள தல்லவா?" என்று கேட்டான். அம்மனிதன் "ஆமாம்" என்றான். உடனே மற்றொருவன், "அதென்ன, நீர் அப்படிச்

சொல்கிறீர்! அது சிவப்பு நிறமுள்ளதன்று, நீலநிறமுள்ளதுதானே" என்றான். இதற்கும் அம்மனிதன் பணிவுடன், "ஆமாம்" என்றான். ஓந்தியானது அடிக்கடி நிறம் மாறும் சுபாவமுள்ள தென்பதை அம்மனிதன் தெரிந்து கொண்டவனாதலால், இரண்டு பேர் வார்த்தைக்கும், "ஆமாம்" என்று பதில் சொன்னான். அம்மாதிரியே சச்சிதானந்தமும் அநேக உருவமுள்ளது. ஒரே ஒரு உருவத்தில் ஈசுவரனைக் கண்ட பக்தன் ஈசுவரனுக்கு அவ்வொரு உருவந்தான் உண்டு என்று நினைக்கிறான். ஈசுவரனை அவனது பல்வேறு உருவங்களில் கண்டவன் மட்டுமே, இவ்வுருவங்களெல்லாம் ஒரே ஈசுவரனுடையவை; ஈசுவரனின் ரூபங்கள் அனந்தம் என்று சொல்லக் கூடியவனாவான். ஈசுவரன் உருவமுள்ளவனும் உருவமற்றவனுமாகிறான். ஒருவரும் காணாத அவனுடைய ரூபங்கள் அநேகம் உள்ளன.

722. ஒவ்வொருவனும் தன் தன்னுடைய மதத்தையே பின்பற்ற வேண்டும். கிறிஸ்தவன் கிறிஸ்து மார்க்கத்தையும், முகம்மதியன் முகம்மதிய மார்க்கத்தையும் பின்பற்றவேண்டும். ஹிந்துக்களுக்கோ ஆரியரிஷிகள் ஏற்படுத்திய புராதன மார்க்கந்தான் உத்தமமானது.

723. உண்மையான சமயப்பற்றுள்ள ஒருவன் தன்னுடைய மதமேயன்றி மற்றைய மதங்களும் உண்மையை நாடியடைவதற்கேற்ற மார்க்கங்களென்றே கருதவேண்டும். இதர மதங்களுக்கு நாம் எப்போதும் மரியாதை பாராட்டுபவர்களாகவே இருக்கவேண்டும்.

724. மத துவேஷம் பாராட்டக்கூடாதென்பது பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தீவிரமான கொள்கை. ஒவ்வொருவனும் தன் தன்னுடைய மதத்தில் உறுதியான பற்றுடன் நிலைத்திருக்க வேண்டுமென்றும், ஆனால் அன்னிய மதங்களைப் பழிக்கவோ தூஷிக்கவோ கூடாதென்றும் அவர் அடிக்கடி சொல்வார்.

725. **டோல்கள்** (மதக்கக்ஷிகள்) உண்டாக்குவது நல்லதா? (டோல் என்னும் பதம் இங்குச் சிலேடையாக, அதாவது இரண்டு பொருள்பட உபயோகிக்கப்பட்டிருக்கிறது. டோல் என்பதற்கு, வங்காள பாஷையில், கக்ஷி அல்லது வகுப்பு என்

றும், தேங்கிய குட்டையில் தண்ணீரின் மீது படரும் பாசி என்றும் இரண்டு அர்த்தம் உண்டு.) ஓடிக்கொண்டிருக்கும் ஜலத்தில் (பாசி) போல் படராது. தேங்கிக்கிடக்கும் குட்டைகளில்தான் அது வளரும். ஈசுவரனை நாடி சதா சர்வகாலமும் ஓடிக்கொண்டிருக்கும் மனத்தையுடையவனுக்கு வேறு விஷயங்களைப்பற்றிச் சிந்திக்கச் சாவகாசம் இருப்பதில்லை. கவுரவம், கீர்த்தி, இவைகளைப் பெற விரும்புகிறவனே கக்ஷிகளை உண்டாக்கிக் கொண்டிருப்பான்.

726. எல்லா நரிகளின் ஊளையும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. அதுபோலவே எல்லா ஞானிகளின் உபதேசமும் ஒன்றாகவே இருக்கின்றது.

727. வாக்குவாதம் செய்யாதே. உனது மதத்தினிடத்தும் கொள்கையினிடத்தும் உனக்கு எவ்வளவு பற்று இருக்கிறதோ, அப்படியே மற்றவர்களுடைய மதங்களிலும் கொள்கைகளிலும் அவரவர்களும் பற்றுவைக்கும்படியான உரிமையை அவர்களுக்குக் கொடு. வாக்குவாதத்தினால் மட்டும், மற்றொருவனுடைய பிழையை அவனுக்கு எடுத்துக் காட்டமுடியாது. ஈசுவரனுடைய கிருபை வருமாகில் ஒவ்வொருவனும் தன்னுடைய பிழைகளைத் தெரிந்து கொள்வான்.

728. மின்சார விளக்கின் ஒளி மங்கலாகவோ வெளிச்சமாகவோ வெவ்வேறிடங்களில் வெவ்வேறு படித்தாகத் தோன்றுமாயினும், அந்தப் பிரகாசம் உண்டாவதற்கு மூலகாரணமான மின்சாரமோ ஒரே ஒரு பொது விடத்திலிருந்துதான் வருகிறது. அதுபோல, வெவ்வேறு காலத்தில் தேசங்கள் தோறும் தோன்றிய மதாசாரியர்கள் அனைவரும் ஸர்வ சக்தியுள்ள ஒரே ஒரு மூலப்பொருளிடத்திருந்து இடைவிடாது பெருகிக்கொண்டிருக்கும் சைதன்யச் சுடரை வெளிவிடும் தீபஸ்தம்பங்களைப் போன்றவராவார்கள்.

729. சில வருஷங்களுக்கு முன்னால், ஹிந்துக்களும் பிரம்ம ஸமாஜத்தவர்களும் தங்கள் தங்களுடைய மதத்தைப்பற்றி மிகுந்த சிரத்தையுடனும் ஊக்கத்துடனும் பிரசாரம் பண்ணி வந்தபோது ஒருவர் பரமஹம்ஸரைப் பார்த்து அவ்விரு கக்ஷியா

ரையும் பற்றி அவர்கொண்ட அபிப்பிராயம் யாதெனக் கேட்டனர். அதற்குப் பகவான், "எனது திவ்ய மாதா இந்த இரண்டு கக்ஷிகள் மூலமாயும் தனது காரியத்தைச் செய்துகொள்கின்றதைக் காண்கிறேன்," என்று பதில் சொன்னார்.

730. ஜனங்கள் தங்களுடைய நிலத்தை அளவு கோல் கொண்டு அளந்தும் வரப்புப் போட்டும் பிரித்துப் பங்கிட்டுக் கொள்கின்றனர். ஆனால் தலைக்குமேலே எங்கும் வியாபித்திருக்கும் ஆகாயத்தை அவ்விதம் பங்கிட்டுக் கொள்ள முடியாது. பகுக்க வொண்ணாத அவ்விசும்பு எல்லாவற்றையும் சூழ்ந்து தன்னுள் அடக்கிக்கொண்டுள்ளது. அதுபோல, ஞானமில்லாதவனே தனது மதம்தான் உண்மையானதென்றும் உயர்ந்ததென்றும் சொல்லுவான். ஆனால் உண்மையான ஞானம் அவன் மனத்தில் உதயமாகும்போது இந்த மதச் சண்டைகளையெல்லாம் கடந்த அகண்ட சச்சிதானந்தப் பொருள் ஒன்று இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்வான்.

731. நோய் வாய்ப்பட்ட குழந்தைகளுக்குப் போஷணை செய்யும் தாய், ஒன்றுக்குச் சோறும் கறியும், மற்றொன்றுக்கு சவ்வரிசிக் கஞ்சியும், வேறொன்றுக்கு வெண்ணெயும் ரொட்டியும் கொடுக்கிறாள். அதுபோல வேறு வேறான மனிதர்களுடைய மன நிலைமைக்கு ஏற்றபடி ஈசுவரன் வேறு வேறான மார்க்கங்களை நியமித்தருளி யிருக்கின்றார்.



# 39. யுக தர்மம்

732. இந்தக் கலியுகத்துக்கு ஏற்ற உண்மையரன பக்தி மார்க்கம் யாதெனில் கருணாநிதியான ஈசுவரனுடைய நாமத்தை பஜிப்பதே.

733. உனக்கு ஈசுவர தரிசனத்தில் விருப்ப மிருந்தால் ஹரி நாமோச்சாரண பலனில் திடமான நம்பிக்கைகொள். நித்யம் இது, அநித்யம் இது, என்பதைப் பகுத்தறிய முயற்சி செய்.

734. மீனை உண்பவர்கள் உபயோகமற்ற அதன் தலையை யும் வாலையும் தள்ளி விட்டு மிருதுவான அதன் நடுப்பாகத் தையே கொள்வார்கள். அதுபோல நமது சுருதி ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்கும் பழைய விதிவிலக்குகளில் உபயோக மில்லாத வற்றைத் தள்ளியும் சீர்திருத்தியும் தற்காலத்துக்கு அனுகுண மாகும்படி செய்துகொள்ள வேண்டும்.

735. மனிதன் தயையில் கிறிஸ்தவனைப்போலவும், அனுஷ் டானத்தைத் தவறாமல் கடைப்பிடிப்பதில் முகம்மதியனைப் போலவும் ஸர்வ ஜீவராசியினிடத்தும் அன்பு பாராட்டும் விஷ யத்தில் ஹிந்துவாகவும் இருக்கட்டும்.

736. கைகளினால் தாளம் போட்டுக்கொண்டே இனிமை யான ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்; அப்போது உனக்கு ஏகாக்ரசித்த முண்டாகும். மரத்தின் அடியிலிருந்து கைதட்டி னால் அம்மரக்கிளைகளில் இருக்கும் பக்ஷிகளெல்லாம் நாலா பக்கங்களிலும் பறந்து போய்விடும். ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு கைதட்டினால் உன் மனத்திலுள்ள தீய சிந்தனை களெல்லாம் அகன்றோடும்.

737. பக்தி யோகமென்பது பக்திமூலமாக ஈசுவரனுடன் கலப்பதும் தன்னை அவனுக்குச் சரணமடைவிப்பதுமே. இது

கலியுகத்திற்கு முக்கியமாக ஏற்பட்டுள்ள தர்மம். இதனால் கர்மம் வெகுவாகக் குறைவு படுகிறது. சதா சர்வ காலமும் ஈசுவரப் பிரார்த்தனை செய்வது அவசியம் என்பதை இது கற்பிக்கின்றது.

738. முதலில் பக்தியைத் தேடிக்கொள். அப்பால் மற்றெல்லா நன்மைகளும் உனக்கு உண்டாகும். முதலில் பக்தி, அப்பால் மற்ற கர்மங்கள். பக்தியில்லாது செய்யும் கர்மம் துணையற்றதாதலால் நிலை நிற்காது.

739. கலியுகத்துக்கு நாரதீய பக்தி விதிக்கப்பட்டிருக்கிறது; (அதாவது நாரதரிஷி அனுஷ்டித்ததுபோல பக்தி, அன்பு, சரணாகதி இவைகளால் ஈசுவரனை அடைவது). கர்ம யோகத்திற்கு, அதாவது மனிதனால் செய்யப்பட வேண்டுமென்று சாஸ்திரம் விதிக்கும் பலவிதமான கர்மாக்களைச் செய்வதற்கு, சாவகாசம் போதாது.

740. தற்காலத்தில் உண்டாகும் ஜுரங்களுக்குப் பழைய காலத்து முறையான "தசமூல கஷாயம்" ஏற்ற மருந்து ஆவதில்லையென்பதை நீ காணவில்லையா? மருந்தின் குணம் தெரியுமுன் நோயாளியின் உயிர் போய்விடும் ஸ்திதி வந்து விடுகிறது. ஆதலால் "பீவர் மிக்சர்" என்னும் ஜுர மருந்துதான் இக்காலத்துக்கு ஏற்ற ஔஷதம்.



## 40. நானு வகை



741. உலகத்தில் மனிதன் பிறக்கும்போது, வித்தியா குணம் அவித்தியா குணம் என்ற இரண்டு குணத்துடன் பிறக்கிறான். வித்தியா குணம் முக்தியை அடையச் செய்யும். அவித்தியா குணமோ மனிதனை உலகப் பற்றுக் குள்ளாக்கும். பிறக்கும்போது இவ்விரு குணங்களும் தராசின் தட்டுக்களைப்போலச் சரிசமமாக விருக்கும். சீக்கிரத்தில் உலக இன்பங்கள் ஒரு தட்டிலும் ஆத்ம விஷயங்கள் மற்றொரு தட்டிலும் ஏற்றப்படுகின்றன. மனம் உலக சுகங்களை விரும்புமானால் அவை வைக்கப்பட்டிருக்கும் தட்டு கனத்துக் கீழே செல்லும். அவ்வாறன்றி ஆத்ம விஷயத்தை மனம் பற்றுமானால் அவ்வாத்ம விஷயங்களடங்கிய தட்டு ஈசுவரனை நோக்கித் தாழும்.

742. முக்தியடைந்த ஆத்மாவினிடம் மாயை இருக்குமா? சுயம் பொன்னால் நகைகளைச் செய்ய முடியாது. எதாவது ஒரு தாழ்ந்த உலோகத்தை அதனுடன் கொஞ்சம் கலக்கவேண்டியிருக்கிறது. மனிதனுக்குச் சரீரம் இருக்கும் வரையில் அச்சரீராவஸ்தைகளை நடத்துவதற்குக் கொஞ்சம் மாயை வேண்டியது அவசியம். மாயையினின்றும் முற்றிலும் நீங்கிய மனிதன் இருபத்தொரு நாள்களுக்குமேல் ஜீவித்திருக்க மாட்டான்.

743. வாஸ்தவமான வைராக்கியத்தா லல்லாமல், தற்காலிக வெறுப்பினால் மட்டும் உலகத்தைத் துறந்த ஸந்யாஸியின் சுபாவம் எப்படிப்பட்டது?

பெற்றோருடனாவது மனைவியுடனாவது நேரும் மனஸ்தாபம் காரணமாக ஸந்யாஸம் பெற்றுக் கொள்பவனை "வெறுப்பு ஸந்யாஸி" யெனச் சொல்லலாம். அவனுடைய ஸந்யாஸித்வம் தற்காலிகமானதாம். செல்வவான் வீடு ஒன்றில் ஒரு அந்தஸ்துள்ள உத்தியோகம் ஒன்று கிடைத்தால் அது நீங்கிவிடும்.

744. பிரம்ம ஸமாஜத்தைச் சேர்ந்த பிரபல பிரசாரகர் ஒருவர் பரமஹம்ஸர் ஒரு பைத்தியக்காரர் எனவும், ஒரே விஷயத்தைப் பற்றிச் சதா சிந்தித்ததன் பயனாய், அனேகம் ஐரோப்பிய ஞானிகளுக்கு நேர்ந்ததைப்போல, அவருக்கு மன நிலை தடுமாறி விட்டதெனவும் சொன்னார். பரமஹம்ஸர் அந்தப் பிரசாரகரை நோக்கி, "ஐரோப்பாவில்கூட" ஒரே விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பதால் ஜனங்களுக்குப் பைத்தியம் பிடிக்கிறதென்று சொன்னீர். அப்படி அவர்கள் சிந்தித்த விஷயம் ஜடத்தைப் பற்றியதா? சைதன்யத்தைப் பற்றியதா? ஜடமானால், ஸதா ஜடத்தைப் பற்றியே சிந்திப்பதால் ஒருவனுக்குப் பைத்தியம் பிடிப்பதில் ஆச்சரியமென்ன? ஆனால் உலக முழுவதையும் விளக்கும் ஜோதியையுடைய சின்மயத்தைப் பற்றிச் சிந்திப்பதனால் ஒருவன் எப்படி அறிவை இழக்கக் கூடும்? உமது சாஸ்திரங்கள் இப்படித்தான் உமக்குப் போதிக்கின்றனவோ?" என்றார்.

745. ஸமர்த்தம் (சுயநலம் கருதாதது), ஸமஞ்ஜஸம் (பரஸ்பரமானது), ஸாதாரணம் (சுயநலம் கருதுவது) எனப் பிரேமை மூவகைப்படும். சுயநலம் கருதாத ப்ரேமைதான் மகாமேலானது. இதில் ப்ரேமை கொண்டவன், தனது சுக துக்கங்களைக் கவனியாமல், தனது அன்புக்குரியவனுடைய க்ஷேமலாபங்களையேகருதுபவனாகிறான். பரஸ்பர பிரேமையாகிய இரண்டாவதில், பிரேமை கொண்டவன் தனது அன்பனுடைய சுகத்தோடு தனது க்ஷேமத்தையும் தேடுகிறான். சுயநலம் கருதும் பிரேமையோ அதமமானது. இதில், பிரேமைகொண்டவன், தனது அன்பனுடைய சுக துக்கங்களைக் கவனிக்காமல் தனது க்ஷேமலாபங்களையே கவனிக்கிறான்.

746. ஆதி சங்கராசாரியரிடம், அவர் செய்ததையெல்லாம் தானும் செய்துவந்த அசட்டுச் சிஷ்யன் ஒருவன் இருந்தான். ஆசாரியர், "சிவோஹம்" என்றபோதெல்லாம் சிஷ்யனும் "சிவோஹம்" என்பான். இந்தச் சிஷ்யனுடைய அசட்டுத்தனத்தைத் திருத்தவேண்டி ஆசாரியர் ஒருநாள், கொல்லன் உலை வழியாய்ப் போகும்போது, அங்கு உருக்கப்பட்ட இரும்பை ஒரு பாத்திரத்தில் எடுத்துப் பானம் செய்து, சிஷ்யனையும் அவ்வாறே

செய்யச் சொன்னார். ஆசாரியர் செய்த இந்தக் காரியத்தைச் சிஷ்யன் செய்யச் சக்தியற்றிருந்தபடியால், அது முதல் அவன் "சிவோஹம்" என்று சொல்வதை விட்டுவிட்டான். ஒருவர் செய்வதைப்போலத் தானும் நடிக்க நினைப்பது எப்போதும் மதியீனம். ஆனால் பெரியோர்களுடைய நடவடிக்கைகளைப் பின்பற்றித் தன்னுடைய ஒழுக்கத்தைச் சீர்திருத்திக்கொள்ள முயல்வது எப்போதும் நல்லது.

747. உலக வாழ்க்கையிலிருந்தபடியே ஆத்ம ஞானத்தைப் பெற்றவர்க்கு உதாரணமாக ஜனங்கள் எப்போதும் ஜனக மகாராஜரையே எடுத்துக்காட்டுகின்றனர். ஜனசமூகத்தின் சரித்திரம் முழுவதிலும் இந்த உதாரணம் ஒன்றேதான் காணப்படுகின்றது. ஜனகருடைய விஷயம் ஒரு விதியை ரூபிப்பதன்று. அவ்விதியின் விலக்கையே ரூபிக்கின்றது. பொதுவான விதியென்னவெனில், காம இச்சையையும் காசின்மேல் ஆசையையும் ஒழிக்காதுபோனால் ஒருவர்க்கு ஆத்மவித்தியுண்டாகாதென்பதாம். ஜனகரைப்போல நீயும் இருப்பதாக எண்ணிக்கொள்ளாதே. அனேகமாயிரம் நூற்றாண்டுகள் கழிந்தனவென்றாலும் அப்படிப்பட்ட ஜனகர் இன்னொருவர் உற்பவிக்கவேயில்லை.

748. சுத்த ஜலம் நிரம்பிய பெரிய தடாகங்களில் பாசியுண்டாவதில்லை. தேங்கிக் கிடக்கும் அசுத்தத் தண்ணீர் உள்ள குட்டைகளில்தான் அது படரும். அதுபோல, சுயநலம் கருதாத் தன்மையையும் தாராள சிந்தனையையும் கைக்கொண்டிருக்கும் சமூகத்தாரிடம் மதக்கக்ஷி ஏற்படுவதில்லை. தன்னயம் கபடம் மதத்வேஷம் இவைகளை அவலம்பிக்கிற சமூகத்தாரிடமே கக்ஷி உண்டாகின்றது.

749. ஹிந்து தர்மத்துக்கும் பிரம்ம ஸமாஜத்துக்கும் உள்ள வித்தியாஸம் என்னவென்று ஒரு பிரம்மஸமாஜி பரமஹம்ஸரைக் கேட்டார். அதற்குப் பரமஹம்ஸர், "இவ்விரண்டுக்குமுள்ள பேதம் ஒற்றை ஸுரத்துக்கும் ஸுரங்களெல்லாம் பொருந்திய ஸங்கீதத்துக்கு முள்ள பேதத்தைப்போன்றது," என்றார். பிரம்ம ஸமாஜம் 'பிரம்மம்' என்ற ஒற்றை ஸுரத்துடன் திருப்தி

யடைகிறது. ஹிந்து தர்மமோ, ஒன்றுசேர்ந்து செவிக்கினிய ஸங்கீதத்தை யுண்டாக்கும் பற்பல ஸ்வரங்கள் பொருந்தியுள்ளதைப் போன்றது.

750. பிரம்மம், அதன் தோற்றம் ஆகிய இரண்டையும் அதாவது உட்பொருளாகிய சைதன்யத்தையும் வெளித்தோற்றமாகிய ரூபத்தையும் நீ பாராட்டு.

751. நெல்லினுள் இருக்கும் அரிசிதான் அதை முளைக்கச் செய்வதற்கு அவசியமானதென்பதும் அதன் மேலிருக்கும் உமி பிரயோசனமற்றதென்பதும் சாதாரண அபிப்பிராயம். என்றாலும், உமி நீங்கிய அரிசியை விதைத்தால் அது முளைத்துப் பயிராகி நெல் விளைவதில்லை. நெல் விளையவேண்டுமானால் அதற்கு உமியுடன் கூடிய தான்யத்தை அப்படியே விதைக்க வேண்டும். சாப்பிடுவதற்கு அரிசி வேண்டும்போது நெல்லினின்றும் உமியைப் பிரித்து நீக்கவேண்டும். அதுபோல ஒரு தர்மம் நிலைத்து வளர்வதற்கு கிரியைகளும் சடங்குகளும் அவசியம். அவை முளைக்கும் வித்தாகிய உண்மையைத் தம்முள் பொதிந்து வைத்திருக்கின்றன. ஆதலால் ஒவ்வொரு மனிதனும் அவற்றுள் அடங்கி இருக்கும் உண்மையை (தத்துவப் பொருளை) அடையும் வரையில் அவைகளைச் செய்துகொண்டு இருக்கத்தான் வேண்டும்.

752. வெளிச்சத்தைத் தருவது தீபத்தின் சுபாவம். அதன் உதவியால் சிலர் சமையல் செய்து கொள்ளக்கூடும். சிலர் பொய்ப் பத்திரம் தயார் செய்யலாம்; வேறு சிலர் பாகவத படனம் பண்ணலாம். அதுபோல ஈசுவரனுடைய நாமத்தின் உதவியால் சிலர் மோக்ஷமடையப் பார்க்கின்றனர்; வேறு சிலர் தங்களுடைய தீய எண்ணங்களைச் சாதித்துக் கொள்ள முயல்கின்றனர். என்றாலும் பகவந்நாமம் ஒருபோதும் அசுத்தமடையாமல் எப்போதும் தூயதாகவே இருக்கிறது.

753. புதிதாக வேறு பாஷையைக் கற்றுக்கொள்பவன், தான் பேசும்போதெல்லாம், அப்பாஷையின் வார்த்தைகளை உபயோகித்துத் தனது விற்பத்தியை வெளிக்காட்டிக் கொள்வான். அந்தப் பாஷையை நன்றாய்க் கற்றுக் கொண்டவனோ அதன்

வார்த்தைகளை, தன்னுடைய தாய்ப்பாஷையில் சம்பாஷிக்கும் போது, உபயோகிக்கிறதில்லை. சமயவாழ்க்கையில் வெகுதூரம் முன்னேற்றம் அடைந்தவர்களுடைய சுபாவமும் இப்படிப்பட்டதே. அவர்கள் வெளியில் காட்டிக்கொள்ள மாட்டார்கள்.

754. வெறும் குடத்தில் விழும் ஜலம் 'கடகட,' என்று சப்திக்கும் ; குடம் நிரம்பியதும் சப்தம் நின்றுவிடும். அதுபோல, ஈசுவரனைக் காணாதவன் அவனுடைய உண்மையையும் குணங்களையும்பற்றி வீணில் தர்க்கித்துக்கொண்டிருப்பான். அவனைக் கண்டவனோ அந்தத் திவ்யானந்தத்தை மௌனமாய் அனுபவிப்பான்.

755. எதுவரையில் மனிதனிடம் தெய்வீகம் இருக்கும்? நெருப்பில் இருக்கும் வரையில்தான் இரும்பு செந்நிறமுள்ளதாகவிருக்கும். நெருப்பை விட்டு அகற்றியதும் அது கருநிறமடைந்துவிடும். அதுபோல ஈசுவரனுடன் உறவு கொண்டாடும்வரையில்தான் மனிதன் ஈசுவரத்தன்மை பொருந்தியவனாகவிருப்பான்.

756. கங்கைக் கரையில் வாழ்பவர்கள் பரிசுத்தர்கள்.

757. காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்பன எவையென்று ஒரு தார்க்கிகன் பரமஹம்ஸரைக் கேட்டான். அதற்கு அவர், "அப்பா, இந்தச் சாஸ்திர ஆராய்ச்சி ரகஸியங்களெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தனவெல்லாம் என்னுள்ளிருக்கும் பரமாத்மாவும் எனது திவ்யமாதாவுமே," என்று பதில் சொன்னார்.

758. உண்மையாகிய ஞானம் எவனிடம் உதயமாகியிருக்கிறதோ அவன்தான் வாஸ்தவமான மனிதனாவான். மற்றவர்கள் எல்லாரும் பெயரளவில் மாத்திரம் மனிதர்களாவர்.

759. பெறுதற்கரிய இம்மானிடப் பிறவியைப் பெற்றவன் இப்பிறவியிலேயே ஈசுவரனை அறிய முயலாதுபோனால் வீணில் பிறந்தவனேயாவான்.

760. புதிதாய்ப்பிறந்த கன்றுக்குட்டி தாயை ஊட்டும்காலத்தைத் தவிர மற்றைப்போதெல்லாம் வெகு குதூகலத்துடன் துள்ளிக் குதிக்கின்றது. பெரிதாகி, நுகத்தடியை வைப்பதற்காகக்

கழுத்தில் கயிற்றைக் கட்டினவுடன் அதன் குதூகலங்களெல்லாம் போய்விடுகின்றன. அதன் முகத்தில் துக்கக்குறி தோன்றுகிறது. உடம்பு எலும்புளவாய் மெலிகின்றது. அதுபோல, உலக விஷயங்களில் ஈடுபடாதிருக்கும் வரையில், ஒரு பையன் கவலையற்றுச் சந்தோஷ சித்தனாகவே இருப்பான். கல்யாணமாகிய உலகக் கட்டு ஒன்று ஏற்பட்டுக் குடும்பப் பொறுப்பை வகிக்க வேண்டி வந்ததும், அவனுடைய சந்தோஷங்களெல்லாம் பறந்தோடி விடுகின்றன. முகத்தில் துக்கம் துன்பம் கவலை இவைகளைக் குறிக்கும் அடையாளங்கள் தோன்றுகின்றன. தேகாரோக்கியம் குறைகின்றது. முகத்திற் கண்ட அழகு மழுங்கிவிடுகிறது. நெற்றி சுருங்குகிறது. காலையில் வீசும் காற்றைப்போலச் சுயேச்சையாகவும், அன்றலர்ந்த பூவைப் போலப் புதிதாகவும், அழகிய பனித்துளியைப்போலப் பரிசுத்தமாகவும், ஆயுளுள்ளளவும் பாலகனாகவே இருப்பவன் எவனோ அவன்தான் பாக்கியவான்.

761. பட்டணத்துக்குப் புதிதாக வருபவன், ராத்திரி வேளையில் தங்குவதற்குச் சவுகரியமான ஒரு விடுதியை முதன் முதலில் தேடி அங்குத் தனது சாமான்களை வைக்கவேண்டும். அப்பால், அவன் ஊர் சுற்றி வேடிக்கை பார்க்கப் போகலாம். இல்லாவிட்டால், இருட்டில் இடம் தேடுவதில் சிரமப்படுவான். அதுபோல, இவ்வுலகத்துக்குப் புதிதாக வருபவனும் ஈசுவரனாகிய நித்திய விடுதியைத் தேடி வைத்துவிட்டு, பயமின்றி இவ்வுலகில் திரிந்து தான் செய்யவேண்டிய காரியங்களை யெல்லாம் செய்யலாம். இல்லாவிட்டால், மரணமாகிய பயங்கரமான அந்தகாரம் வரும்போது மிகுந்த துன்ப துயரங்களை அவன் அனுபவிக்க நேரும்.

762. முதலில் ஈசுவரனைத்தேடி, அப்பால் பொருளைத் தேடு. இதற்கு மாறாகச் செய்யாதே. ஆத்ம ஞானத்தை அடைந்த பிறகு நீ உலக வாழ்க்கையில் பிரவேசித்தால் உனக்கு மனச் சஞ்சலமே இராது.

763. சிறுகுழந்தைகள் மரப்பாவையை வைத்துக்கொண்டு யாதொரு கவலையுமின்றி நிர்ப்பயமாய் வெளியறையில் மனம் போனபடியெல்லாம் விளையாடுகின்றன. ஆனால், அங்கு அவர்

களுடைய தாயார் வந்தவுடன், குழந்தைகள் மரப்பாவையை அப்பால் போட்டு விட்டு, "அம்மா! அம்மா!" என்று கூவிக் கொண்டு அவளிடம் ஓடி வருகின்றன. மனிதனே, நீயும் இந்த ஜடமாகிய உலகத்தில் கவலையும் பயமுமற்று செல்வம், கௌரவம், கீர்த்தி முதலிய விளையாட்டுப் பொருள்களை வைத்துக்கொண்டு விளையாடுகிறாய். ஆயினும், ஒருதரம் நீ திவ்ய மாதாவைக் கண்டு விட்டால், மேற்கூறிய பொருள்களிடம் உனக்குப் பிரேமையே இராது; அவைகளை அப்பால் போட்டுவிட்டு, நீ அவளிடம் சரணமடைய ஓடுவாய்.

764. அமிருத ஸாகரத்தில் விழுபவன், தெரிந்து விழுந்தாலும் தெரியாமல் விழுந்தாலும், விழுந்த மாத்திரத்தில் மரண மற்றவனாகிறான். அதுபோல, ஈசுவரனுடைய நாமத்தைச் சொல்பவன், அறிந்தோ, தன்னை யறியாமலோ, எப்படிச் சொன்ன போதிலும், கடைசியில் மரண மற்றவனாகிறான்.

765. ஸதா ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்யப்படுகிற வீட்டில் பேய் பிசாசுகள் அணுகமாட்டா.

766. 'ஹரி' என்றால் நமது ஹிருதயத்தைக் கவர்பவன் என்று பொருள். 'ஹரிபல' என்றால் ஹரியே தான் நமக்குப் பலம் என்று அர்த்தம்.

767. உலகத்தார் செய்யும் பரிகாசத்துக்கும், தெரியாதவர்கள் கூறும் குறைக்கும் பயந்து, சமயத்தை அனுஷ்டிப்பதில் சங்கோசப்படாதே. அப்படிப் பட்டவர்கள் கண்ணெடுத்துப் பார்க்கவும் யோக்கியதை இல்லாத புழுக்களென்ன நினை.

768. மனிதர்கள் புகழ்வதும் சீக்கிரம், இகழ்வதும் சீக்கிரம். ஆதலால் மற்றையோர் உன்னைப் பற்றிச் சொல்லும் வார்த்தைகளைக் கவனிக்காதே.

769. அநித்தியத்தின் மூலமாய் நித்தியத்தையும், மாயையின் உதவியால் உண்மையையும், ரூபத்தின் உதவியால் அரூபத்தையும் அடையவேண்டும்.

770. உலக வாழ்க்கையிலேயே இருந்து முக்தியடைய முயல்பவர்கள், கோட்டைச் சுவருக்கு உள்ளிருந்து, சண்டை செய்யும் போர்வீரர்களுக்கு ஒப்பாவார்கள். கடவுளைத் தேடிக்

கொண்டு உலகத்தைத் துறந்த ஸந்யாஸிகளோ, வெளியிடத்தில் நின்றுகொண்டு சண்டை செய்யும் போர்வீரர்களை ஒத்தவர்கள். வெளியிடத்திலிருந்து சத்துருவை எதிர்த்துச் சண்டை செய்வதைக் காட்டிலும் கோட்டைக்குள்ளிருந்து எதிர்ப்பது சவுகரியமும் அபாயமற்றது மாகும்.

771. அநுலோமம், விலோமம் என யுக்திவாதம் இரு வகைப்பட்டது. அநுலோமக்கிரமத்தால், சிருஷ்டிப் பொருள்களிலிருந்து சிருஷ்டி கர்த்தாவை நோக்கி, அதாவது காரியத்திலிருந்து மூலகாரணத்துக்குப் போகலாம். அப்பால் விலோமக் கிரமம் ஆரம்பிக்கின்றது. மனிதன், ஈசுவரனை அடைந்த பின்னர், அவ்வீசுவரனுடைய தோற்றத்தைச் சிருஷ்டியிலும் ஒவ்வொரு சிருஷ்டிப் பொருளிலும் காண விரும்புகிறான். ஒரு கிரமம் பகுத்துப் பார்த்தல்; மற்றொன்று தொகுத்துப் பார்த்தலாம். முன்னது (அநுலோமக் கிரமம்) வாழை மட்டைகளை ஒவ்வொன்றாய்ப் பிரித்து, உள்ளிருக்கும் தண்டை எடுப்பது போலாம். பின்னது (விலோமக் கிரமம்) அந்த உள் தண்டின் மேல் வாழை மட்டைகளை ஒன்றின்மேலொன்றாய் அடுக்குவது போலாம்.

772. ஸாத்வீக, ராஜஸ, தாமஸ பூஜைகளின் வித்யாஸமென்ன? வெளிப் பகட்டும் அகங்காரமும் இல்லாமல் முழுமனதோடும் பூஜை செய்பவன் ஸாத்வீக பக்தன். வீடுகளை அலங்கரிப்பது, பாட்டு, கூத்து இவைகளுடன் படாடோபம் பண்ணுவது, வெகுவாகப் பணச் செலவிட்டுப் பஞ்ச பக்ஷிய போஜனம் செய்விப்பது ஆகிய இவைகளுடன் ஈசுவராராதனை செய்பவன் ராஜஸ பக்தன். பலிபீடத்தில் நூற்றுக் கணக்கான ஆடு கோழிகளைக் கொன்று, மதுமாமிசத்தை நிவேதனம் செய்து, ஆடிப்பாடுவதிலேயே கருத்துடையவனாக விருப்பவன் தாமஸ பக்தனாவான்.

773. இவ்வுலகம் எதைப் போன்றது? அது, தின்றால் வயிற்று வலியை உண்டாக்கக் கூடியதும், தோலுங் கொட்டையுமே நிறைந்து, சதைப்பற்றே இல்லாதிருக்கும் மரிமாங்காயைப் போன்றதாம்.

774. கடுமையான ஜுரத்தில், தாகமெடுக்கும்போது, கடலளவு தண்ணீர் இருந்தபோதிலும் அவ்வளவையும் குடித்துவிடலாமென்று நோயாளிக்குத் தோன்றும். ஜுரம் நின்று தாகம் தணிந்து விட்டால் ஒரு குவளை ஜலத்துக்குமேல் அவனால் குடிக்க முடியாது. கொஞ்சம் தண்ணீராலேயே அவனுடைய தாகமெல்லாம் தீர்ந்து விடுகிறது. அதுபோல, மாயையாகிய ஜுரதாபத்தில் தனது சிறுமையை மறந்திருப்பவன், தன்னுடைய ஹிருதயத்தில் ஈசுவரனை அப்படியே எழுந்தருளப் பண்ணிக்கொள்ளலாமென்று நினைக்கிறான். ஆனால் மாயை அகன்றதும், அவனுக்குத் திவ்யானந்தத்தைக் கொடுக்க ஈசுவரனுடைய திவ்ய தேஜஸின் ஒரே ஒரு கிரணம் போதுமானதாக விருக்கும்.

775. ஒருவர், "எனது பையன் ஹரீசன் பெரியவனானதும் அவனுக்குக் கல்யாணம் செய்துவைத்து, அவனிடம் குடும்பப் பொறுப்பை ஒப்புவித்துவிட்டு, உலகத்தைத் துறந்து யோக மார்க்கத்தை அனுஷ்டிக்கப் போகிறேன்," என்றார். இதைக் கேட்ட பரமஹம்ஸர், "பக்தி பண்ணுவதற்கு உமக்கு ஒருபோதும் சாவகாசம் ஏற்படப்போவதில்லை. இனி, 'ஹரீசனும் கிரீசனும் என்னிடம் அத்யந்தம் பிரியம் பாராட்டுகிறவர்களாக இருக்கின்றனர். நான் உலகத்தைத் துறந்தேனானால் அவர்கள் எனது பிரிவாற்றாமையால் வருந்துவார்கள். ஹரீசனுக்கு ஒரு குழந்தை பிறக்கட்டும். அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்' என்பீர். இம்மாதிரி உமது ஆசைகளுக்கு முடிவே இராது," என்றார்.

776. நுண்மையான தானியத்தைத் தள்ளிவிட்டு, பருமனான குப்பை முதலியவைகளைத் தங்கச் செய்வது சல்லடையின் சுபாவம். அதுபோல, நன்மையை விட்டு விட்டுத் தீமையை மட்டும் கைக்கொள்வது தீயோருடைய குணம். முறத்தின் சுபாவமும் நல்லோருடைய குணமும் இதற்கு முற்றிலும் மாறானவை.

777. ஆனந்த பாஷ்பமும் துக்கக் கண்ணீரும் ஒரே கண்ணிலிருந்து பெருகுமாயினும், அக்கண்ணின் வேறு வேறு பக்கங்களிலிருந்து பெருகுகின்றன. துக்கக் கண்ணீர் மூக்குக்குப் பக்

சுத்திலுள்ள கோடியிலிருந்துப், ஆனந்த பாஷ்பம் கடைக் கண்ணிலிருந்தும் பெருகுகின்றன.

778. தோழனே! எனது ஆயுட்காலம் நீடிக்க நீடிக்க நான் (ப்ரேமை, பக்தி யாதி விஷயங்களைப் பற்றிய ரகஸியங்களை) மேன்மேலும் தெரிந்துகொண்டு வருகிறேன்.

779. ஈசுவரனுடைய இச்சை அதுவானால், அவன் ஒரு ஊசிக்காதின் வழியாக ஒரு யானையைப் போகவும் செய்வான். அவனுடைய இஷ்டப்படி யெல்லாம் அவன் செய்யச் சக்தியுள்ளவன்.

780. ஈசுவரனுக்காகப் பின்கண்டவர்கள் தங்கள் தங்களுடைய பெரியோர்களின் வார்த்தைகளைத் தட்டினர். அவர்களாவர்: பரதன், பிரஹலாதன், சுகதேவர், விபீஷணர், பரசுராமன், மஹாபலி, கோபஸ்திரீகள்.

781. மதங்கள் என் மலின மடைகின்றன? மழைத் தண்ணீர் சுத்தமானதே. ஆனால் அது பூமியில் வந்து சேர்வதற்குள், வழியிலுள்ள அசுத்தத்தால் கெட்டுப்போகின்றது; வீட்டின் கூரை, குழாய்கள், சாக்கடைக் கால் ஆகிய எல்லாம் அழுக்கடைந்திருந்தால் அவைகளின் வழியாக வரும் தண்ணீரும் அழுக்காகத்தா னிருக்கும். (அதுபோல, மதம் மலின மடைவதன் காரணம், அதைப் பிரசாரம் பண்ணுபவர்களுடைய காரியமே.)

782. ஞானியே ஞானியை அறிவான். நூல் வியாபாரிக்குத்தான் ஒரு தினுசு நூல் இன்ன இழையின தென்றும் இன்ன நம்பர் உடையதென்றும் தெரியும்.

783. பாபமும் பாதரஸமும் எளிதில் ஜீரணமாகா.

784. முள்ளங்கி தின்றவனுக்கு முள்ளங்கி ஏப்பமும், கக்கரிக்காய் தின்றவனுக்குக் கக்கரி ஏப்பமும்தான் வரும். அதுபோல, சில சமயங்களில் உள்ளத்தில் உள்ளதை வாய் வெளியிட்டு விடும்.

785. வண்ணான் வீட்டில் அழுக்கு வேஷ்டிகள் ஏராளமாகக் கிடக்கின்றன. ஆனால் அவைகள் அவனுடையன அல்ல. அவைகள் வெளுக்கப்பட்டதும், அவன் வீடு காலியாய் விடுகிறது. தமக்கென்றே சிந்தனை யில்லாதவர்கள் வண்ணானைப் போன்ற

வர்களாவார். ஆதலால், சிந்தனையில் வண்ணானைப்போல இராதே.

786. உன்மத்தர்கள், குடிகாரர்கள், குழந்தைகள், இவர்கள் வாய் மூலமாகச் சிற்சில வேளைகளில் தெய்வீக விஷயங்கள் வெளிவருவதுண்டு.

787. 'கிரந்தம்' என்ற வார்த்தைக்குச் சாஸ்திரம் என்ற அர்த்தம் எப்போதும் இல்லை. ஆனால் 'கிரந்தி' அல்லது முடிச்சு என்ற அர்த்தம் எப்போதும் உண்டு. உண்மையை அறியவேண்டுமென்ற தீவிர புத்தியுடன், அகங்காரத்தை யெல்லாம் விட்டு, கிரந்தங்களைப் படிக்கவேண்டும். வெறுமனே படித்தால் வித்யா கர்வம், மமதை, தான் மேதாவி யென்ற அபிப்பிராயம் ஆகிய முடிச்சுகள்தான் மனத்தில் உண்டாகும்.

788. மனத்தையும் உள்ளத்தையும் பரிசுத்தமாக்கும் ஞானந்தான் உண்மையான ஞானம். மற்றவை யெல்லாம் அஞ்ஞானமாம்.

789. வங்காள பாஷையில் ச, ஷ, ஸ, என்ற மூன்று எழுத்துக்களைத் தவிர ஒரே சப்தம் கொள்ளும்படியான எழுத்துக்கள் இல்லை. இந்த மூன்றும், "பொறு" என்ற அர்த்தத்தையே கொண்டன. இதனால் நாம் எழுத்துக்களைக் கற்றுக் கொள்ளும் சிறு வயதிலிருந்தே பொறுமையையும் கற்றுக் கொள்ளக் கற்பிக்கப் படுகிறோம். பொறுமை யென்பது ஒவ்வொரு மனிதனுக்கும் வெகு முக்கியமான குணமாகும்.

790. "இதெல்லாம் நானே," "இவையெல்லாம் நீயே," "நீ எஜமானன், நான்தாஸன்," என்ற இந்த மூன்றில் எதையேனும் ஒன்றைச் சொல்லக்கூடிய மனநிலைமை எப்போது பக்குவமாகுமோ, அப்போதுதான் மனிதன் ஈசுவரனை அடைவான்.

791. எல்லா ஸ்திரீகளும் பகவதி தேவியின் அம்சங்களே யாவர்; ஆதலால் அனைவரும் அவர்களைத் தாய்மாரெனக் கருதவேண்டும்.

792. பெரியோர்களைத் தரிசிக்கச் செல்லும்போதும் ஆலயத்துக்குப் போகும்போதும், வெறுங் கையனாய் ஒருபோதும் போகக்கூடாது. பெரியோர்களுக்குச் சமர்ப்பிக்கும் பொருட்டு

மிகக் குறைந்த அளவினதாக விருந்தாலுங்கூட ஏதேனுமொன்றைக் கொண்டு செல்லவேண்டும்.

793. பிறர் எதைச் செய்ய வேண்டுமென்று நீ விரும்புகிறாயோ அதை நீயே செய்.

794. கிளி பறந்துபோன பிறகு கூண்டைக் கவனிப்பார் எவருமில்லை. உயிராகிய கிளி பறந்துபோன பிற்பாடு, பிணமாகிய உடலைக் கவனிப்பார் யாருமிரார்.

795. சிஷ்ய கோடிகளால் கவுரவிக்கப்பட்டு பூஜ்யதையுடன் கொண்டாடப்படும் மஹான்களிடத்தில் உள்ள தெய்வீக சக்தி, அப்படிப்பட்ட யோக்கியதை இல்லாதவரிடத்தில் உள்ளதைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கும்.

796. வெள்ளைத் துணியில் ஒரு சிறிது அழுக்குப் பட்டாலும் அவ்வழுக்கு பிரபலமாய்த் தோன்றும். அதுபோல, சான்றோரிடத்தில் காணப்படும் அற்பக் குற்றமும் வெளிப்படையாகத் தோன்றும்.

797. மற்றவர்கள் தலை வணங்குமிடத்தில் நீயும் தலை வணங்கு. பூஜ்யதை ஒருநாளும் பயன்படாமல் போவதில்லை.

798. வீட்டில் குடியிருப்பவன் அவ்வீட்டின் சொந்தக்காரனுக்குக் குடிக்கூலி கொடுப்பதைப்போல, சரீரத்தை உபயோகிப்பதற்காக ஆத்மாவானது நோய்ப்படுவதன் மூலமாக வரியைச் செலுத்துகின்றது.

799. இரும்பு எஃகு ஆகவேண்டுமானால் அதை நெருப்பில் நன்றாக நெடுநேரம் காய்ச்சிப் பதப்படுத்த வேண்டும். அப்போதுதான் அது எப்பக்கத்திலும் வளையக்கூடிய கூரிய கத்தியைச் செய்வதற்கு உதவும். அதுபோல, துன்ப துயரங்கள், உலக இம்சைகள் ஆகிய நெருப்பில் பலதடவை வாட்டப்பட்ட பிறகு தான் மனிதன் ஹிருதய சுத்தனாகி ஈசுவர ஸந்நிதானத்தில் செல்வதற்கு ஏற்ற பணிவுடையவனாகிறான்.

800. கோடீசுவரரான யதுநாத மல்லிக் பிரபுவைப் போன்ற செல்வவான் கிருகம் எதுவென்றும் அவருடைய ஆஸ்தி எவ்வளவினதென்றும் விசாரிப்பவர் பலராயினும் அவரிடம் நேரில் சென்று அவருடைய பரிச்சயத்தைப் பெறுபவர்

வெகு சிலரே. அதுபோல, மத கிரந்தங்களைப் படிப்பவர்களும், மதத்தைப் பற்றிப் பேசுபவர்களும் பலராயினும், ஈசுவரனைக் காணவோ அவனை அடையவோ முயற்சி செய்பவர் அருமையாகவே இருக்கின்றனர்.

801. வக்கீலைக் காணும்போது, வழக்குகளும் நியாய ஸ்தலங்களுமே ஞாபகத்துக்கு வரும். அதுபோல, பக்தனைக் காணும்போது, ஈசுவரனையும் மறுமையையும் பற்றிய ஞாபகம் வரும்.

802. ஒருவனுக்கு தெய்வீக இன்பம் உண்டாகுமானால், அவன் அதிலேயே ஆழ்ந்து உன்மத்தனைப் போலாவான். அவன் கட்குடியனைப் போலத் தோன்றுவானாயினும் கட்குடிக்க வேண்டிய அவசியமில்லை. எனது திவ்யமாதாவின் சரணாரவிந்தங்களைக் காணும்போது, நான் ஐந்து புட்டி சாராயம் குடித்தவனைப் போலாகிறேன். இந்த நிலைமையில் ஒருவனுக்கு எப்போதும் உணவு வேண்டியிருப்பதில்லை.

803. பண்டிகை காலங்களில் ஜனங்களுக்கு என் சாப்பாடு போடுகிறார்கள்? அப்படி அன்னமிடுவது ஸர்வ ஜீவர்களிடத்தும் அந்தர்யாமியாய் விளங்குகிற ஈசுவரனுக்கு நிவேதனம் செய்வதேயாம் என்று உனக்குத் தோன்றவில்லையா? ஆனால் கெட்ட நடவடிக்கை யுள்ளவர்களையும் காமுகர்களையும் அப்படிப்பட்ட பண்டிகை காலங்களில் சாப்பாட்டுக்கு அழைக்கக் கூடாது. அவர்களுடைய பாபமானது, அவர்கள் உட்காரும் ஆஸனத்தின் கீழ் அனேக முழம் ஆழம் வரையில் பூமியை அசுத்தமாக்கும் கொடிய சுபாவமுள்ளதாம்.

804. ஒரு கசாப்புக்காரன் ஒரு பசுவை வதை செய்யுமிடத்துக்கு ஓட்டிக்கொண்டு போனான். அவனுடைய குரூரத்தினால் கோபங்கொண்ட அப்பசு, வழியில் அவனுக்கு அடங்காது போனது காரணமாக, அவன் அதை அதிக சிரமத்துடன் ஓட்டிக் கொண்டுபோக வேண்டியதாயிற்று. முற்றிலும் களைத்துப் போன அவன் உச்சி வேளையில் ஒரு கிராமத்துக்கு வந்து, சிரம பரிகாரம் பண்ணிக்கொள்வதற்காக, அங்குள்ள வோர் சத்திரத்துக்குப் போய், சாப்பாடு பெற்றுப் புசித்தான். அப்படி வயி

சோறப் புசித்ததனால் திடங்கொண்ட கசாப்புக்காரன், பசுவை எளிதில் ஓட்டிக்கொண்டு போகச் சக்தியுள்ளவனானான். அப்பசுவைக்கொன்ற பாபத்தில் ஓர் பாகம் சாப்பாடு கொடுத்தவனைச் சார்ந்தது. ஆகையால் அன்னமிடுவதிலும் பிச்சை கொடுப்பதிலும், பெறுபவன் அதைக்கொண்டு தீமை செய்யக்கூடிய அயோக்கியனாயும் பாபியாயும்" இல்லாமலிருக்கும்படி பார்க்க வேண்டியது அவசியம்.

805. இவ்வுலகம் அநித்யமா? நீ ஈசுவரனை அறியாமலிருக்கும் வரையில் அது அநித்யந்தான். ஏனெனில், நீ ஒவ்வொரு பொருளிலுமுள்ள ஈசுவரனைக் காண்பதில்லை. ஆகவே, "நான், எனது," என்ற மனோபாவம் உன்னிடம் ஆழ்ந்து கிடக்க, நீ உலக வசத்தனாகிறாய். இவ்விதம் அஞ்ஞானத்தினால் மதிமயங்கிய நீ, விஷயப் பொருள்களையே கருதுபவனாகி, மாயையாகிய ஸமுத்திரத்தில் மேலும் மேலும் ஆழமாக மூழ்கிக்கொண்டேயிருக்கிறாய். வழி நேராக இருப்பினும், ஸம்சாரத்தினின்று கரையேற வொண்ணாதபடி, மாயையானது மனிதர்களுடைய கண்களை முற்றிலும் குருடாக்கி விடுகின்றது.

806. நினைத்தபோது ஞானத்தை அளிக்க முடியாது. அதைப் பெறுவது காலத்தைப் பொறுத்திருக்கின்றது. ஒருவனுக்குக் கடுமையான ஜுரம் அடிப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது கொயினாவைக் கொடுப்பதில் குணமிராதென்பது வைத்தியனுக்குத் தெரியுமாதலால் அவன் அதைக் கொடுக்கிறதில்லை; காலக்கிரமத்தில் ஜுரம் தணியவேண்டும். அப்பால்தான் கொயினாவையோ வேறு மருந்தையோ கொடுக்கலாகும். ஞானத்தைப் பெற விரும்பும் மனிதனுடைய விஷயமும் இஃதைப் போன்றதுதான். உலகப்பற்றில் ஆழ்ந்திருக்கும் வரையில் ஒருவனுக்குப் பெரும்பாலும் மதத்தைப்பற்றிய உபதேசங்கள் பயன்படுவதில்லை. கொஞ்சகாலம் வரையில் அவன் உலக சுகங்களை அனுபவிக்கும்படி விட்டுவிட வேண்டும். உலகப்பற்று சிறிது தளர்ந்ததும் உபதேசம் பயன் கொடுக்கக்கூடிய காலம் அவனுக்கு வரும். அதற்கு முன்னால் செய்யும் உபதேசமெல்லாம், அவனுக்கு யாதொரு பயனையும் தராது வீணாய்ப்போகும்.

807. ஸந்தியா வந்தனம் காயத்ரியில் அடங்கிவிடுகிறது. காயத்ரி பிரணவத்தில் அடக்கம். பிரணவமோ, முடிவில் ஸமாதியில் அடங்குகிறது. ஆகவே, ஸந்தியா வந்தனம் முதலிய கர்மாக்கள் எல்லாம் முடிவில் ஸமாதியில் அடங்கிவிடுகின்றன.

808. அன்பும் அறிவும் எவனிடம் நன்றாய் முற்றி ஸமத்வம் அடைந்திருக்கின்றனவோ அவனே பாக்கியவான். அவன் எந்த ஸ்திதியிலிருந்தாலும் தன்னை ஸமாளித்துக்கொள்ளக் கூடியவனாகிறான். அவனிடம் வஞ்சனையில்லாத விசுவாசமும் ஈசுவர பக்தியும் மிகுந்திருக்கும்; என்றாலும், பிறர் திருப்தியடையும் விதமாகவே அவன் நடந்து கொள்வான். உலக விஷயங்களில் அவன் ஈடுபடும்போது, காரியங்களைத் திருந்தச் செய்பவனாக இருப்பான். வித்வான்களுடைய ஸபையில் மேதாவியென்ற மதிப்பை ஸ்தாபித்துக்கொள்வான்; தர்க்கத்தில் தனது யுக்தி சாமர்த்தியத்தை வெளிக்காட்டுவான். பெற்றோர்களிடம் விசுவாசத்துடன் கீழ்ப்படிந்திருப்பான். பந்து மித்திரர்களிடம் இனிமையுடன் அன்பு பாராட்டுவான்; அண்டை அயலாரிடம் அனுதாபம் பாராட்டி அவர்களுக்கு எப்போதும் நன்மை செய்யச் சித்தனாக விருப்பான். மனைவிக்குக் காமதேவனைப் போலிருப்பான். அப்படிப்பட்ட மனிதனே குறையற்றவன்.

809. ஸம்ஸாரம் எவ்வளவு அநித்யமென்பது உனக்கே தெரியும். நாம் வசிக்கிற வீட்டைப் பற்றிச் சற்று யோசனை செய்வோம். எத்தனை பேர்கள் அதில் பிறந்து இறந்து போயிருக்கின்றனர்! உலகப்பொருள்கள் ஒரு நிமிஷத்தில் நம் முன்னர் தோன்றி, அடுத்த நிமிஷத்தில் மறைந்து போகின்றன. பந்துக்கள் என யாரை நீ கருதுகிறாயோ அவர்கள் நீ கண்மூடிய பிறகு உனக்குப் பந்துக்கள் ஆகிறதில்லை. அப்படியிருந்தும், லௌகீகனுடைய பற்று எவ்வளவு பலமானது! குடும்பத்தில் அவனுடைய பராமரிப்பை எதிர்பார்ப்பவர் ஒருவருமில்லாத காலத்தில்கூட அவனுக்குக் காசிக்குப் (பக்தி சாதனை செய்யப்) போய்வரச் சந்தர்ப்பப் படுவதில்லை. "பேரன் ஹரீசன் என்ன செய்வான்?" என்ற விசாரம் அவனை உலகத்தோடு பிணிக்கின்றது. மீன் பறியின் வாய் எப்போதும் திறந்திருக்கிறது. என்றாலும் மீன்கள்

வெளியே ஓடிப்போவதில்லை. வண்ணத்திப் புழு தான் இழைத்த கூண்டிலேயே கிடந்து சாகின்றது. அப்படிப்பட்ட ஸம்ஸாரம் அநித்ய மென்றும் அழிந்து போகக்கூடிய தென்றும் ஏற்படவில்லையா?

810. ஒரு மனிதன் ஒரு மந்தையைப்போல அனேகம் குழந்தைகளைப் பெற்று அவற்றை வளர்ப்பானானால், அதற்காக மட்டும் அவனைச் சிலாகிப்பதற்கு இடமில்லை. இதில் உண்மையான புருஷத்வம் இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஏனெனில் நாய்களும் பூனைகளும்கூட அவ்வாறே குட்டிபோட்டு வளர்க்கின்றன. ஒருவன் தனக்கு ஏற்பட்ட தர்மத்தைச் செய்வதுதான் புருஷத்வம்; அப்படிப்பட்ட புருஷத்வம் அர்ஜுனனிடம் வெளியாயிற்று.

811. வெளியுலக அறிவோடு மனம் சம்பந்தப்பட்டிருக்கும் போது அது ஸ்தூலப் பொருள்களையே காண்பதுடன் அன்னமய கோசத்திலேயே அழுந்திக் கிடக்கின்றது. மனம் உள்முகமாகத் திரும்புமானால், அது வாசற்கதவைச் சார்த்திக்கொண்டு உள் அறையை நோக்கிப் போவதை ஒக்கும். அதாவது, ஸ்தூலத்திலிருந்து ஸூக்ஷ்மத்துக்கும், ஸூக்ஷ்மத்திலிருந்து காரணத்துக்கும், அதிலிருந்து மஹா காரணத்துக்கும் போவதாகும். அந்த நிலைமையில் மனமானது பரம்பொருளில் லயமாய் விடும். அப்போது அதைப் பற்றிப் பிரத்தியேகமாக ஒன்றும் சொல்வதற்கில்லை.

812. பரமஹம்ஸர் நோய்கொண்டிருந்ததை சசாதர பண்டிதர் பார்த்து, "ஸ்வாமி! சரீரத்தில் நோயுள்ள பாகத்தின் மீது தமது மனத்தைச் செலுத்தி, அந்நோயை ஏன் குணப்படுத்திக் கொள்ளக் கூடாது?" என்று கேட்டார்.

பரமஹம்ஸர்:—"ஈசுவரனுக் கென்றே அர்ப்பணம் பண்ணி விட்ட மனத்தை, எலும்பு தோல்களால் ஆக்கப்பட்டிருக்கும் இந்த அற்ப உடலின் பொருட்டு, எப்படி நான் திருப்பக்கூடும்?"

சசாதரர்:—"அப்படியானால், தமது வியாதியைத் தீர்த்தருள வேண்டுமென்று தாம் ஏன் ஸர்வேசுவரியைப் பிரார்த்தித்துக் கேட்கக் கூடாது?"

பரமஹம்ஸர் :—“ ஸர்வேசுவரியை நினைக்கும்போது எனது ஸ்தூலசரீர ஞாபகமே இராது போகின்றது. அப்போது சரீரமே எனக்கில்லை. ஆதலால் சரீரத்தைப்பற்றி ஒன்றையும் பிரார்த்தித்துக் கேட்க இயலாதவனுக இருக்கிறேன்.”

813. பரமஹம்ஸருக்கு நோய் வலுத்துப் பேசமுடியாமலும் ஆகாரம் உட்கொள்ள முடியாமலும் இருந்தபோது அவர் சொன்னதாவது :—“ நான் இப்போது அநேகம் வாய்களால் பேசுகிறேன் ; அநேகம் வாய்களால் ஆகாரம் உட்கொள்ளுகிறேன். எல்லா ஜீவர்களினுடைய ஆத்மா நான் ஆனபடியால் எனக்கு அளவற்ற வாய்கள் உள்ளன. தொண்டையில் எங்கேயோ ஓரிடத்தில் புண்ணையுடைய மானிட சர்மத்தால் மூடப்பட்ட அளவிலடங்காத சைதன்யனுய் இருக்கிறேன் நான். சரீரத்தில் நோயுண்டானுல் அந்நோய் மனத்தையும் பீடிக்கிறது. ஒருவனை வெந்நீர் சுடுமானுல் அவன் ‘ இந்த ஜலம் என்னைச் சுட்டுவிட்டது,’ என்கிறுன். வாஸ்தவத்தில் அவனைச் சுட்டது உஷ்ணமே யொழிய ஜலமன்று. எல்லாவித நோயும் எல்லாவித வேதனையும் சரீரத்திலேயே உள்ளன. ஆனுல் ஆத்மாவோ வேதனைக்கு அப்பாலும் நோய்களுக்குப் புறம்பாயும் உளது.

814. சரீரத்தில் கொடிய வேதனை யிருக்கும்போதுகூட எப்படி ஆத்மாவைப்பற்றி நினைக்கமுடியும், எப்படி ஈசுவர ஞாபகத்தோடு இருக்க முடியும் என்பதை மனிதனுக்கு உபதேசிக்கிறதற்காக இந்த நோயைத் தேவி எனக்கு அருளியிருக்கின்றனள். பசியினுலும் கொடிய வேதனையாலும் சரீரம் கஷ்டப்படும்போதும், மனுஷ்ய ஸகாயத்தால் சிகித்ஸை செய்ய முடியாமலிருக்கிற காலத்திலும் சரீரத்தை ஆள்வது ஆத்மாவே என்பதைத் தேவியானவள் எனக்குக் காட்டுகிறுள். ஆத்மா தெய்வீகம் வாய்ந்த தென்பதையும், கடவுள் ஞானம் உண்மையான தென்பதையும், ஒருவன் பரிபூரணமடையும் போது எல்லாவித பந்தங்களினின்றும் விடுபடுகிறுனென்பதையும் ஸந்தேகாத்மாக்களுக்குத் தெளிவிப்பதற்காகவே இந்த நோயைத் தேவி எனக்குத் தந்திருக்கின்றனள்.

815. ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேசவ சந்திர ஸேனரை நோக்கிச் சொன்னதாவது :—"நீர் வேதனைப்படுகிறீர். ஆனால் உமது நோயில் ஒரு விசேஷ அர்த்தம் இருக்கிறது. இந்தச் சரீரத்தோடு நீர் பற்பல ஞான சாதனைகளைச் செய்திருக்கின்றீர், இப்போது அனுபவிக்கும் வேதனை அந்தச் சிரமத்தின் பயனாக ஏற்பட்டதேயாகும். உள்ளே ஞான அலைகள் உண்டாகும்போது சரீர ஞாபகம் அகன்று விடுகிறது. ஆனால், முடிவில் சரீரத்தில் சுகவீனம் உண்டாகிறது. கங்கா நதியில் ஒரு பெரிய நீராவிக்கப்பல் போகுமானால், அது போன பிறகு கொஞ்ச நேரம் வரையில் கரைகளில் அலைகள் மோதிக்கொண்டிருக்கும். கப்பல் எவ்வளவுக் கெவ்வளவு பெரிதோ, அவ்வளவுக் கவ்வளவு அலைகளும் பலமானவையாக விருக்கும். சிற்சில வேளைகளில் அவ்வலைகள் கரைகளையும் உடைத்துவிடும். ஒரு சிறிய குடிசைக்குள் யானையொன்று நுழையுமானால், அது அக்குடிசையை ஆட்டித் தவிடு பொடியாக்கிவிடும். அதைப்போல, ஆத்மானுபவ வெள்ளமானது சிற்சில சமயங்களில் பக்தனுடைய சரீரத்தை ஆட்டி அலைக்கழித்துவிடுகிறது. அப்பால் என்ன நிகழ்கிறதென்பதுதான் உமக்குத் தெரியுமே. வீட்டில் தீப்பிடித்துக் கொண்டால் அங்குள்ள பொருள்கள் எரிந்து சாம்பலாகின்றன. அதுபோல, திவ்ய ஞானமாகிய நெருப்பு காமக்குரோதாதி பாகங்களை எரித்து, கடைசியாய், 'நான்,' 'எனது' என்னும் மனோபாவத்தை அடியோடழித்து விடுகின்றது. அப்பால் சரீரம் சின்னபின்னமாகிறது. எல்லாம் பூர்த்தியாய் விட்டதென்று நீர் நினைக்கலாம்; ஆனால் அகங்காரம் அணுவளவு இருந்தாலுங்கூட, ஈசுவரன் உம்மை விடுவிக்கமாட்டான். வைத்திய சாலைக்குள் நோயாளியெனப் பதிவு செய்து கொண்டால், நீர் முற்றிலும் குணமடைவதற்கு முன்னால் உம்மால் வெளியே வரமுடியாது."

816. எனது சரீராவஸ்தையைக் கண்டு, "இவ்வளவு துர்ப்பலமான சரீரத்தில் ஆத்மீயமும் ஞான ஒளியும் இவ்வளவு அதிகமாகத் தோன்றுவதைப்போல வேறெங்கும் நான் கண்டதில்லை," என்று ஹிருதயன் சொல்வதுண்டு. எனது சரீரம் துர்ப்பலமாக விருந்தாலும், மற்றவர்களுடன் கடவுள் விஷயமாகப் பேசிக்

கொண்டிருப்பதை நான் ஒருபோதும் நிறுத்தினதில்லை. எனக்கு ஞாபக மிருக்கிறது: ஒரு தரம் என் சரீரம் எலும்பலுவினதாய்ப் போய்விட்டது. அப்போதும்கூட நான், எனக்கு ஒரு சரீரம் இருக்கிறதென்ற ஞாபகமே இல்லாமல், நெடுநேரம் வரைக்கும் ஆத்ம விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பேன்.

817. "ரோஜாச் செடிகளின் வேரின்மீது பனித்துளிகள் விழும்பொருட்டு, சிற்சில வேளைகளில் தோட்டக்காரன் அவ்வேர் தெரியும்படி திறந்து வைக்கிருன். சிற்சில வேளைகளில், புஷ்பங்கள் பெரியனவாக ஆகும் பொருட்டு, அவ்வேர்களில் சில்வற்றை அவன் கத்தரித்து விடுகிருன். ஒருக்கால், இன்னும் பெரிய காரியங்களைச் செய்யவேண்டியதற்காக ஈசுவரன் உம்மைத் தயார் செய்கிருன்போலும்," என்று பரமஹம்ஸர் கேசவ சந்திர ஸேனரை நோக்கிச் சொன்னுர்.

818. ஒரு சிஷ்யன்:—"ஸ்திரீகளை நாம் எவ்விதம் பாராட்ட வேண்டும்?"

பரமஹம்ஸர்:—"உண்மையை யறிந்தவனும், ஈசுவர தரிசனம் பெற்றவனும் ஸ்திரீகளைக் கண்டு பயப்படுவதில்லை. அந்த ஸ்திரீகள், ஜகதீசுவரியான திவ்ய மாதாவின் அம்சங்களே யாவரென்பதை அவன் காண்கிருன். ஆதலால், அவன் அவர்களை மரியாதையுடன் கவுரவப்படுத்துவது மட்டுமன்றி, தாயை மகன் வணங்குவதைப்போல, அவர்களுக்கு வந்தனை வழிபாடுகளும் செய்வான்.

819. ஸ்திரீகள் நற்குணங்களுடன் பிறந்திருந்தாலும் இல்லாவிட்டாலும், அவர்கள் கற்புடையவராகவோ வியபசாரிகளாகவோ இருந்தாலும், அனைவரும் ஆனந்தமயி யாகிய மாதாவின் வடிவங்களென்றே கருதப்படவேண்டும்.

820. குடியானவர்கள் உழவுமாடுகளை வாங்கும் வகை இன்னதென்பது உனக்குத் தெரியுமா? இந்த விஷயத்தில் அவர்கள் கைதேர்ந்தவர்கள். கெட்ட மாடுகளை விட்டு நல்ல மாடுகளை எப்படித் தெரிந்தெடுப்பதென்பதை அவர்கள் நன்கறிவார்கள். ஒரு மாட்டின் சுபாவம் எப்படிப்பட்டதென்பதை அவர்களுக்குக் கண்டுபிடிக்கத் தெரியும். வாலைத் தொட்டால்

போதும். உடனே எல்லாம் தெரிந்து விடும். ஜடிகை இல்லாத மாடு திமிருமல் தூங்கப் போவது போல் தரையில் படுத்துக் கொள்ளும். ஜடிகையுள்ள மாடோ தன்னை இவ் விதம் செய்ததை ஆக்ஷேபிப்பதைப்போல், திமிறிக்கொண்டு துள்ளிக் குதிக்கும். குடியானவர்கள் இப்படிப்பட்ட மாடுகளையே வாங்குவார்கள்.

வாழ்நாளில் ஜயமடையவேண்டுமானுல், மனிதனிடம் உண் மையான புருஷத்வம் (ஜடிகை) இருக்கவேண்டும். ஆனுல் அனேகரிடம் தைரியமென்பதே கிடையாது. அவர்கள் பாலில் ஊறவைத்த பொறி போன்றவராகி, கோழை நெஞ்சும் வழ வழத்த சுபாவமும் உள்ளவராக இருக்கின்றனர்; மனோபலம், தேகதிடன், புத்திவன்மை அற்றவர்களாகி, தங்கள்வாழ்நாளில் ஜெயமடையாது போகின்றனர்.

821. சம்புநாத மல்லிக் ஒரு சமயம் என்னிடம் வந்து, "ஸ்வாமி! எனது செல்வம் முழுவதையும் ஜகதீசுவரியின் திவ்ய சரணுரவிந்தங்களில் சமர்ப்பித்து விட்டு நான் மரணமடையும் படி என்னை ஆசீர்வதிக்கவேண்டும்," என்ருர். அதற்கு நான், "என்ன சொல்லுகிறீர்! அவை யெல்லாம் உமக்குத்தான் செல் வம். திவ்ய மாதாவுக்கோ, அவை உமது காலின் கீழே மிதி படும் புழுதியைப் போன்றவையாகும்," என்றேன்.

822. ஒரு சமயம் தக்ஷிணேசுவரத்தில் ராணி ராஸ்மணி யின் தோட்டத்தில் களவு போயிற்று. விஷ்ணுவாலயத்தில் விக்கிரகங்களின்மீது அணியப்பட்டிருந்த ஆபரணங்கள் காணு மற் போயின. (ராஸ்மணியின் மருமகனும் கோவில் அதிகாரியு மான) மதுரபாபுவும் நானும் சங்கதி என்னவென்பதை அறிய அங்கே சென்ரேம். சென்றதும், "தெய்வமே! நீர் ஒன்றுக்கும் உதவாதவர்! உமது ஆபரணங்களைக் களவாடினுர்கள்; அதைத் தடுக்க உமக்குச் சக்தியில்லை!" யென்று மதுரபாபு கூச்ச லிட்டார். இதைக் கேட்டதும் நான் சட்டெனத் திரும்பி, "என்ன நீரும் இப்படி மதியீனமாகப் பேசுகிறீர்! நீர் சிலாகித் துப் பேசும் நகைகள் எல்லாம் இதோ விக்கிரமாக எழுந்தருளி உம்மால் வணங்கப்படும் ஜகதீசுவரனுக்குக் களிமண்ணுக்குச்

சமானம். ஐசுவரியங்களுக்கு அதிதேவதையான மஹாலக்ஷ்மி, இவரிடமிருந்தேதான் தனது மஹிமையைப் பெறுகிறுளென்பதையும் நீர் ஞாபகப் படுத்திக் கொள்ளும்,” என்றேன்.

823. மனிதன் ஸமர்ப்பிக்கும் சொத்துக்களை யெல்லாம் ஈசுவரன் மதிக்கிருனு? இல்லவே இல்லை. பக்தியையும் ப்ரேமையையும் எவனொருவன் ஸமர்ப்பிக்கிருனே அவனுக்கு மட்டுந்தான் ஈசுவரனுடைய கிருபை உண்டாகும். தன் பொருட்டு உண்டாகும் பக்தி ப்ரேமைகளையும் விவேக வைராக்கியங்களையுமே ஈசுவரன் சிலாகித்துக் கொண்டாடுகிருன்.

824. ஈசுவரனை அடைவதற்காக அனேகமாயிரம் ஜனங்கள் நெடுநாட்களாக ஜபம், தபம், தியானம், பிரார்த்தனை, வந்தனை வழிபாடுகள் செய்து வரும் இடங்களில் ஈசுவர ஸாந்நித்யம் இருக்கு மென்பதைத் தெரிந்துகொள். அவர்களுடைய பக்தியினுல் ஆத்மிக எண்ணங்கள் அங்கு உருவடைந்துள்ளன போல அவ்விடங்கள் இருக்கின்றன. ஆதலால் அப்படிப்பட்ட இடங்களில் ஒருவனுக்கு ஆத்மீய அறிவு எளிதில் உண்டாகி ஈசுவர தரிசனம் கிடைக்கிறது. புராதன காலந்தொடங்கி, கணக்கற்ற ஸாதுக்களும் பக்தர்களும் இத் தீர்த்தங்களுக்கு வந்து, ஈசுவர தரிசனம் வேண்டுமென்று, ஆசைகளை யெல்லாம் விட்டுவிட்டு, உள்ளன்போடு கதறியிருக்கின்றனர். ஆதலால், ஈசுவரன் எங்கும் இருக்கிருன் என்றுலும் இத்தகைய க்ஷேத்திரங்களில் விசேஷமாகத் தன்னைத் தோற்றுவிக்கிருன். உதாரணமாக, பூமியில் தோண்டினுல் எங்கேயும் ஜலம் காணப்படும். ஆனுல் குளம், கிணறு, ஏரி இவையுள்ள விடத்தில் தோண்டவேண்டிய அவசியமில்லை. எப்போது வேண்டுமானுலும் ஜலத்தை யெடுத்துக் குடிக்கலாம்.

825. வயிறு நிறைய புல்லைத்தின்ற பசு, ஓரிடத்தில் சாந்தமாகப் படுத்துக்கொண்டு அசை போடுவதைப்போல, தீர்த்த யாத்திரைக்கு நீ போய் வந்தால், அந்தத் திவ்ய ஸ்தலத்தில் உன் மனத்தெழுந்த எண்ணங்களைப் பற்றிச் சிந்தித்துத் தனியிடத்தில் உட்கார்ந்து அவற்றிலேயே ஆழ்ந்து போகவேண்டும். அதை விட்டு அங்கிருந்து வந்ததும், அவ்வெண்ணங்கள் உன் மனத்தை

விட்டகன்று போகும்படி, நீ உலக வியாபாரங்களில் தலையிட்டுக் கொள்வது கூடாது.

826. பூமியின் நான்கு திக்குகளிலும் பிரயாணம் செய், உண்மையான தர்மத்தை ஓரிடத்தும் நீ காணமாட்டாய். இருப்ப தெல்லாம் உன் உள்ளத்திலேயே இருக்கிறது.

827. அகங்காரத்தை எப்படி அழிப்பதென்பது உனக்குத் தெரியுமா? நெல்லைக் குத்துகையில், அப்போதப்போது குத்து வதை நிறுத்திவிட்டு, உமி போய்விட்டதா என்பதை யறிய, நெல் லைக் கையில் எடுத்துப் பார்ப்பார்கள். ஸந்நமான வஸ்துக்களை லேசான தராசில் நிறுக்கும்போது, அடிக்கடி நிறுத்தி இடை சரியாக இருக்கிறதா என்று பார்க்கக் கையை நகர்த்தித் தராசு முள்ளை அசைத்துப் பார்ப்பார்கள். அதைப்போல, எனது அகங்காரம் இன்னும் தலையெடுக்கிறதா என்று பார்க்க, நான் அடிக்கடி என்னை தூஷித்துக் கொள்வது வழக்கம். சில சமயம் நான் இந்தச் சரீரத்தைப் பற்றிச் சிந்தித்து, "இது எலும்பாலும் சதையாலும் ஆக்கப்பட்ட கூண்டைத் தவிர வேறென்ன? ரத்தம், சீழ் முதலிய அசுத்தங்களைத் தவிர வேறு பொருள்கள் ஒன்றும் இதில் இல்லையே; இந்த அற்பப் பொருளைக்குறித்து இவ்வளவு பெருமை அடைவதுதான் ஆச்சரியம்," என்று சொல் லிக்கொள்வேன்.

828. "ஈசுவரன், குரு, பக்தர், இவர்களுடைய அருள் இருந்தாலுங்கூட இன்னொரு அருள் இல்லையாகில் ஜீவன் நாச மடையும்." மேற்கூறிய மூவகை அருளையும் ஒருவன் பெற்றபோ திலும், தனது மனத்தின் அருளைப் பெறாவிட்டால், அதாவது தான் முக்தியடைய வேண்டுமென்ற ஆசை அதற்கு இல்லா விட்டால் அவை பயனைத் தரமாட்டா.

829. ஸாதன மார்க்கங்கள் மூன்று வகைப்படும்: பக்ஷி ரீதி, மர்க்கட ரீதி, பிபிலிகா ரீதி என.

(1) பக்ஷி பறந்துவந்து பழத்தை மூக்கினால் கொத்துகிறது. அப்படிக் கொத்துகையில் பழம் ஒருவேளை விழுந்துவிடு மாத லால் அதற்கு இரையாகாமல் போய் விடும். (அதுபோல, முயற்சி

கள் வீணுகக்கூடிய முரட்டு மார்க்கத்தால் ஸாதனைகளில் ஈடு படும் பக்தர்கள் இருக்கின்றனர்.)

(2) வாயில் பழத்தைக் கவ்விக்கொண்டு மரத்தின் ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்குத் தாண்டுவது மர்க்கடத்தின் (குரங்கின்) சுபாவம். அப்படித் தாண்டுகையில் பெரும்பாலும் வாய்ப்பழம் கீழே விழுந்துவிடும். (அதுபோல, பக்தர்களின் பிடிப்பு பலமாக இராவிட்டால், மாறிவரும் வாழ்க்கைச் சம்பவங் களில், அவர்கள் ஸாதன மார்க்கத்தினின்றும் நழுவ நேரிடும்.)

(3) பீபிலிகா (எறும்பு) மெதுவாகவும் விடாமுயற்சி யோடும், இரை இருக்கு மிடத்தை அடைந்து, பின்னர் அவ் விரையைக் கவ்விக்கொண்டு, தனது கூண்டுக்குக் கொணர்ந்து, சவுகரியமாய்த் தின்கிறது. எறும்பின் ரீதியைப்போன்ற ஸாதன மார்க்கம் மிகச் சிறந்தது. அதில், பலனை அடைவதிலும் அதை அனுபவிப்பதிலும் ஒரு நிச்சயம் உண்டு.

830. சரீரத்தை அழுக்காக்கிக் கொள்வது குழந்தைகளின் சுபாவம். ஆனால் அவர்களை அப்படியே விட்டுவிடாமல் அடிக் கடி குளிப்பாட்டிச் சுத்தம் செய்வது தாய்மாரின் காரியம். ஒரு மனிதன் எவ்வளவு பாபம் செய்திருந்தாலும், கடைசியில் அவ னுக்கு நல்வழியை ஈசுவரன் காட்டுவது நிச்சயம்.

831. ஒரு சிறு துவாரத்தின் வழியாக ஒரு இருட்டறைக் குள் ஒரு கிரணம் வெளிச்சம் வருகிறது. அவ்வறைக்குள்ளிருப் பவனுக்கு, வெளிச்சத்தைப்பற்றி யிருக்கும் அபிப்பிராயமானது அந்தக் கிரணத்தின் அளவுக்குத் தகுந்தபடிதானிருக்கும். கதவு களிலும் ஜன்னல்களிலும் துவாரங்கள் அதிகமாக விருந்தால் இன்னும் அதிகமான வெளிச்சத்தையும், அக்கதவுகளையும் சாள ரங்களையும் நன்ருகத் திறந்துவிட்டால் வெளிச்ச மயமாக விருப் பதையும் அவன் காண்பான். ஆனால் வெளியிடத்தில் நிற்பவனே வெளிச்சத்திலேயே இருக்கிருன். அதுபோல, பக்தர்களுடைய சுபாவத்துக்கும் சக்திக்கும் தகுந்தபடி ஈசுவரன் தன்னைத் தோற்றுவித்தருள்கின்ருன்.

832. கடவுளை ஒருவன் அணுக அணுக, அக்கடவுளி னுடைய அளவுகடந்த தன்மைகளின் புதியனவும் மஹத்தான

வையுமான விசேஷங்களைத் தெரிந்து கொள்கிறான். கடைசியில் ஞான முதிர்ச்சியினால் அவன் அக்கடவுளினிடமே லயித்து விடுகிறான்.

833. கிருஷ்ண பரமாத்மாவினுடைய திவ்ய வடிவத்தைத் தேவகி சிறைச்சாலையில் கண்டு களித்தனளென்றாலும், அதனால் அவளுடைய சிறைத்துன்பம் நீங்கவில்லை.

834. ஒரு குருடன் கங்கையில் ஸ்நானம் செய்து தன் பாபங்களையெல்லாம் போக்கடித்துக் கொண்டான். என்றாலும் அவனது குருட்டுத்தனம் போகவில்லை.

835. சரீரத்தினால் அனுபவிக்கும் துன்பங்களும் இன்பங்களும் எப்படிப்பட்டதாயினும், உண்மைப் பக்தனுக்கு ஞானம், பக்தி இவைகளின் மஹிமையும் சக்தியும் ஒருபோதும் குறைவதில்லை. பாண்டவர்கள் அனுபவித்த கஷ்டங்கள் எவ்வளவு கொடியனவாக விருந்தன! என்றாலும் ஒரு நிமிஷங்கூட அவர்களுடைய ஞான ஒளி மங்கினதில்லை.

836. "வியாதி உடம்பைப் பீடிக்கட்டும், ஆனால் மனமே! நீ மட்டும் எப்போதும் ஆனந்தத்திலிரு."

837. கணவனுடன் வாழுங் காலத்திலேயே காமத்தை அடக்கிய ஸ்திரீ திவ்யமாதாவே யாகிறாள்.

838. "எல்லாவற்றையும் நான் ஒப்புக் கொள்கிறேன். கடவுளினுடைய பல்வேறு தோற்றங்களாகிற துரியாவஸ்தை, ஜாக்ரதாவஸ்தை, ஸொப்பனவஸ்தை, ஸுஷுப்தியவஸ்தை, பிரம்மம், ஜீவன் ஆகிய இவை யெல்லாவற்றையும் நான் ஒப்புக் கொள்கிறேன். இல்லாவிட்டால், முழுகனம் குறைய நேரிடும். ஆதலால் நான் பரம்பொருள், அதன் தோற்றங்கள் ஆகிய இரண்டையும் ஒப்புக் கொள்கிறேன்," என்று பரமஹம்ஸர் சொல்வதுண்டு.

839. பக்தி நிரம்பிய விறகு வெட்டி ஒருவனுக்குத் திவ்ய மாதாவின் தரிசனமும் அவளது அருளும் கிடைத்தன. என்றாலும் அவனுடைய விறகுவெட்டும் பிழைப்புமட்டும் நீங்கவில்லை. மேலும் கஷ்டப்பட்டு விறகு வெட்டியே அவன் தனது அற்ப காலக்ஷேபத்தைச் செய்ய வேண்டியதாக விருந்தது.

840. வீடு கட்டும்போது சாரம் அவசியம் வேண்டியிருக்கிறது. அவ்வீடு கட்டி முடிந்து விட்டால், சாரத்தைத் தேடுபவர் யாருமில்லை. அதுபோல, ஆரம்பத்தில் விக்ரகாராதனம் அவசியமாக விருக்கிறது. அப்பால் அவசியமில்லை.

841. கோபம் தாமஸகுணத்தின் அடையாளம்; கோபத்தில் மனிதனுக்குப் பகுத்தறிவு போய்விடுகிறது. ஹனுமார் லங்கையைக் கொளுத்தினார். ஆனால் ஸீதாதேவி இருக்குமிடத்தையும் அந்நெருப்பு எரித்து விடுமே என்ற எண்ணம் அவருக்கு அப்போது இராமல் போயிற்று.

842. ஈசுவரனிடம் சரணமடைந்தவனுக்கு ஒருபோதும் தளர் நடை யுண்டாவதில்லை.

843. ஸூக்ஷ்ம விஷயங்களின் உண்மைப் பொருளைக் கிரகிப்பவர் வெகு சிலரே. ஜனங்கள் எவர்களைப் பொல்லாதவர்கள் என்கின்றனரோ அவர்களில்கூட நல்லவர்கள் இருக்கலாம்.

844. ஈசுவரனைப் பற்றி லௌகீகர்கள் என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கின்றனர் தெரியுமா? விளையாடும்போது குழந்தைகள் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளும் பேச்சை அது ஒக்கும். சில வேளைகளில் அவர்கள், "சாமி மேல் ஆணையாகச் சொல்கிறேன்," என்பார்கள். பெரியோர்கள் இவ்வாறு சத்தியம் செய்வதை இவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்களாதலால் இப்படிச் சொல்லுகின்றனர். ('சாமி' என்றால் என்னவென்று குழந்தைகளுக்குத் தெரியுமா?) இன்னும், டம்பாசாரி ஒருவன் பொழுது போகாதபோது, தடிக்கம்பைச் சுழற்றிக்கொண்டு தோட்டத்தில் உலாவுகையில், ஒரு புஷ்பத்தைப் பறித்து, "ஆ! என்ன அழகான புஷ்பத்தை ஈசுவரன் உண்டாக்கி யிருக்கிறான்!" என்று சிலாகிப்பதையும் அது ஒக்கும். பழுக்கக் காய்ச்சின இரும்பின் மீது ஒரு துளித் தண்ணீரை விட்டால் அது உடனே சுவறிப் போவதைப் போல, இவர்களுடைய அபிப்பிராயமும் வெகு சீக்கிரத்தில் மாறிப்போகும். ஆதலால்தான் ஈசுவரனைக் காணவேண்டுமென்ற தீவிரமான ஆசை உனக்கு இருக்கவேண்டு மென்கிறேன். கடவுளாகிய ஸமுத்திரத்தில் நன்றாய் ஆழ்ந்து முழுகவேண்டும்.

845. ஆத்மாவின் மஹிமையை வெளிப்படுத்தும் கர்வம் கர்வமல்ல; தன்னைத்தானே பவ்யமாக்கிக் கொள்ளும் அடக்கம் அடக்கமன்று.

846. யாசகங் கேட்கும் மனிதன் சின்னவனுகிறான். மஹாபலியிடம் யாசகம் கேட்கப்போன மஹா விஷ்ணுவானவர் குறுகிய வாமன ரூபத்துடனேயே செல்லவேண்டியிருந்தது. பிறரிடமிருந்து ஏதேனுமொன்றை யாசிக்கும்போது நீ உன்னைத் தாழ்மைப் படுத்திக் கொள்கிறாய் என அவர் கற்பிக்கிறார்.

847. பரமசிவனுடைய அம்சத்துடன் பிறப்பவன் ஞானியாகிறான். பிரம்மம் மட்டும் உண்மை, இவ்வுலகம் மாயை, என்பதையே அவன் எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பான். ஆனால், விஷ்ணுவின் அம்சத்துடன் பிறப்பவன், பக்தியிலும் சிரத்தையிலும் ஒருபோதும் குறைவடைவதில்லை. பலமான யுக்தி வாதத்தினால் அவை ஒரு சிறிது குறைவுபட்டாலும், காலக்கிரமத்தில், யாதவ குலத்தை அழிக்கவந்த உலக்கையைப்போல, வர வரப் பெருகும்.

848. ஆத்மா ஒன்றனோடும் பந்தப்பட்டிருப்பதில்லையென்று வேதாந்திகள் கூறுகின்றனர். பாப புண்ணியம், சுக துக்கம் முதலியன அதை ஒருபோதும் கட்டுப்படுத்துவதில்லை. ஆனால் அவைகள் சரீரத்தின்மீது பற்றுவைத்தவர்களைத் துன்பத்துக் குள்ளாக்கும். புகையானது நாலுபக்கமும் சுவரைக் கரியாக்கும்; ஆகாசத்தை ஒன்றும் செய்யாது.

849. நம்பிக்கையில் குழந்தையைப்போல் ஆனாலொழிய ஈசுவரனைக் காண்பது துர்லபம். யாரேனும் ஒருவனைச் சுட்டிக் காட்டி, 'அவன் உன் சகோதரன்,' என்று தாயார் ஒரு குழந்தையிடம் சொன்னால், அக்குழந்தை அவள் சொல்வதை உண்மையெனவே நம்பும். 'அங்கே போகாதே, பிசாசு இருக்கிறது,' என்று தாயார் சொன்னால், அவ்விடத்தில், பிசாசு இருப்பதாகவே குழந்தை கருதும். இப்படிப்பட்ட குழந்தை போன்ற விசுவாஸம் எவனிட மிருக்கிறதோ அவனிடந்தான் ஈசுவரனுக்குத் தயை பிறக்கிறது. எல்லாவற்றிலும் கணக்குப் பார்க்கும் சுபாவத்துடனிருந்தால் ஈசுவரனைக் காணவேமுடியாது.

850. அத்வைத ஞானமே மிகச் சிறந்ததாயினும், முதன் முதலில், "ஈசுவரன் வழிபடத் தகுந்தவன், நான் வழிபாடு செய்யவேண்டியவன்," என்ற மனோபாவத்துடன் நீ பக்தி பண்ண ஆரம்பிக்கவேண்டும். அப்பால் உனக்கு அந்த அத்வைத ஞானம் எளிதில் வரும்.

851. அர்ஜுனனிடம் உண்மையான பௌருஷம் இருந்தது. ஏதாவதொரு காரியத்தைத் தனது கடமை யென்றாவது, செய்யத்தகுந்த தென்றாவது அவன் கருதினால், அதை அவன் நிச்சயமாகச் செய்து தீருவான்.

852. ஜீவன் முக்தர்களிடம் ஒரு சிறிதளவு மாயை இன்னும் ஊடாடிக் கொண்டு இருக்கின்றது. பிரம்மத்தைப் பூரணமாக அடைந்தால், இருபத்தொரு நாள்களுக்குப் பிறகு சரீரம் நசித்து விடும்.

853. மனமானது உறைகின்ற ஆதாரங்களாகிய இடங்கள் ஏழு என்று வேதங்கள் கூறுகின்றன. மனம் உலக விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கும்போது, அதன் ஸ்தானம் லிங்க, குஹ்ய, நாபி யாகின்றது. அதாவது கடைசி யாகிய கீழ் மூன்று ஆதாரங்களாகும். அந்த நிலைமையில் உயர்ந்த மனோபாவங்களே நிகழ்வதில்லை. மனமானது காமத்திலும் பொருள்மேல் அசையிலுமே அழுந்திக் கிடக்கும்.

மனத்தின் நான்காவது ஸ்தானம் ஹிருதயம். இந்த ஸ்தானத்துக்கு மனம் வரும்போது ஆத்மவெழுச்சி முதன் முதல் உண்டாகின்றது. அப்போது, மனிதன், ஒரு விதமான திவ்ய ஜ்யோதி எங்கும் நிறைந்திருப்பதைக் கண்டு, ஆச்சரியத்தால் கூச்சலிடுகிறான். இந்த நிலைமையில், மனமானது கீழான உலக ஆசைகளில் ஒருபோதும் செல்வதில்லை.

மனத்தின் ஐந்தாவது ஸ்தானம் கழுத்து. அங்கு அது வரும்போது, அஞ்ஞானமெல்லாம் அகல்கின்றது. அப்போது மனிதனுக்கு, ஈசுவரனைத் தவிர மற்றைய விஷயங்களைப்பற்றிக் கேட்கவோ பேசவோ விருப்பமிருப்பதில்லை. ஈசுவரனைப்பற்றியல்லாமல் வேறு விஷயங்களைப் பற்றி யாரேனும் பேசிக்கொண்டிருந்தால் அவன் அவ்விடத்தைவிட்டு அப்பால் போய்விடுவான்.

நெற்றியானது மனத்தின் ஆறாவது ஸ்தானம். இதற்கு மனம் வரும்போது, இரவும் பகலும் ஒருவனுக்குத் திவ்விய தரிசனமே தென்படுகின்றது. அப்போது கூட அவனுக்கு 'நான்' என்ற தற்போதம் சிறிதளவு இருக்கிறது. அப்படிப் பட்ட திவ்விய தோற்றத்தைக் கண்ட மனிதன், ஆனந்த பரவசனாகி, அதைக் கட்டிக்கொள்ள ஓடுகிறான். என்றாலும் அவன் எண்ணம் நிறைவேறுவதில்லை. அது விளக்கின் ஒளிப்பிழம்பைப் போன்றுள்ளது. ஒளிப் பிழம்பைக் கையால் தொடலாம் போலிருந்தாலும், கண்ணாடி குறுக்கே யிருந்து தடுக்கின்றது.

உச்சந்தலை தான் மனத்தின் ஏழாவது நிலை. அதை அடைந்தால் மனிதனுக்கு ஸமாதி நிலை உண்டாகிறது. அந்த ஞானி பிரம்மத்தை அறிகிறான். அதன் பிறகு சரீரம் நீடித்திருப்பதில்லை. அவனுக்குத் தன் நினைவே கிடையாது. ஒன்றையும் அவன் உண்பதில்லை. வாயில் பாலை வார்த்தால் அது கடைவாய் வழியே ஓடி வழிந்து விடுகிறது. இந்த நிலையில் இருபத்தொரு நாள் இருந்த பிறகு அவன் இறந்து விடுவான்.

854. ஸமாதி ஸித்தியானதும் ஜபம், பூஜை, உலக வியாபாரங்கள் ஆகிய கர்மங்களெல்லாம் ஒழிந்துபோகின்றன. ஆரம்பத்தில் இந்தக் காரியங்களைச் செய்வதில் ஒருவனுக்கு அதிக ஆடம்பரமும் சுறுசுறுப்பும் இருக்கிறது. ஆனால் ஈசுவரனிடம் நெருங்க நெருங்க, இவை குறைகின்றன. கடைசியாக பகவத் பிரார்த்தனையும், பகவந்நாம ஸங்கீர்த்தனமும் கூட நின்று போகின்றன. (ஸாதாரண பிரம்மஸமாஜத்தவரான சிவநாத சாஸ்திரியாரை நோக்கி) நீர் ஸபைக்கு வராம லிருக்கும் வரையில், உம்முடைய குண விசேஷங்களைப்பற்றி ஜனங்கள் பேசிக்கொண்டிருக்கின்றனர். நீர் உள்ளே நுழைந்ததும் அப்படிப் பட்ட பேச்செல்லாம் நின்றொழிகின்றது. உம்மைக் கண்டவுடன் எல்லாரும் சந்தோஷமடைந்து, "இதோ சிவநாத பாபு வந்து விட்டார்," என்று சொல்லுகிறார்கள். அப்பால், உம்மைப் பற்றிய பேச்செல்லாம் நின்றுவிடுகிறது.

855. என்னதான் முயன்றாலும், ஈசுவரனுடைய கிருபை மட்டும் இல்லாது போனால் உனக்கு ஒன்றும் லபிக்காது. நீ

ஈசுவரனை அடையமாட்டாய். ஆனால் அந்தக் கிருபை எளிதில் கிடைத்துவிடும் என்று நம்பாதே. உனது ஹிருதயத்திலிருந்து அகங்காரம் முழுவதும் நீங்கவேண்டும். "நான் கர்த்தா" என்ற எண்ணம் உன் மனத்திலிருந்தால் நீ ஒருபோதும் ஈசுவரனைக் காணமாட்டாய். பண்டகசாலையில் ஒரு காரியஸ்தன் இருக்கிறான். அப்பண்டகசாலையிலிருந்து ஏதாவது ஒரு பொருளைக்கொண்டு வந்து தரும்படி வீட்டு எஜமானனிடம் சொன்னால், அவன், "பண்டகசாலையில் இன்னான் இருக்கிறான். அவனைக் கொண்டு வரச் சொல்லு; நான் போகவேண்டிய அவசியமில்லை," என்றே பதில் சொல்வான். "தானே கர்த்தா" என்று எவன் நினைக்கிறானோ அவன் உள்ளத்தில் ஈசுவரன் ஒருபோதும் தோன்றுவதில்லை.

856. ஈசுவரன் தனது கிருபையாலேயே தன்னைத் தோற்றுவிக்கிறான். அவன் ஞான ஸூர்யன். அவனுடைய ஒற்றைக் கிரணமே இவ்வுலகம் முழுமைக்கும் அறிவைக் கொடுத்துள்ளது. அதனால்தான் நாம் ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளவும் பலவிதமான ஞானங்களைப் பெறவும் வல்லவர்களாய் இருக்கிறோம். அவன் தனது ஒளியைத் தனது திருமுகத்திலே திருப்பிக்கொண்டால் மட்டுந்தான் நம்மால் அவனைக் காணமுடியும்.

857. போலீஸ்காரன் தனது லாந்தருடன் ராத்திரியில் போகிறான். ஒருவரும் அவனைப் பார்க்க முடியாது. ஆனால் அவனுடைய லாந்தரினால் அவன் ஒவ்வொருவரையும் பார்க்க முடியும். பிறரும் ஒருவரை யொருவர் காணலாம். போலீஸ்காரனுடைய முகத்தைப் பார்க்க வேண்டுமானால், அவனுடைய லாந்தரை அவன் மீதிலேயே திருப்பிக்கொள்ளும் படியாக நீ கேட்க வேண்டும். அதுபோல, "ஈசுவரனே! உனது திருமுகமண்டலத்தை நான் காணும்வண்ணம், உனது ஞான ஜோதியை உன்மீதிலேயே திருப்பிக்கொள்," என்று நீ பிரார்த்திக்கவேண்டும்.

858. இருட்டைப் போக்கும் தீபம் வீட்டில் இல்லாமற் போனால் அது எழ்மைத்தனத்துக்கு அடையாளம். ஆதலால்,

ஒருவன் தனது ஹிருதயத்திலே ஞானதீபத்தை ஏற்றிக்கொள்ள வேண்டும். “மனமே! ஞானதீபத்தை ஏற்றிக்கொண்டு பிரம்ம மயியின் திருமுக மண்டலத்தைக் காண்க.”

859. பொய் அனைத்தும் கெட்டவை. பொய் வேஷமும் கெட்டதே. உன் வேஷத்துக்குத் தகுந்தபடி மனம் இராது போனால், நீ பெரும் நாசமடைவாய். இப்படித்தான் ஒருவன் வஞ்சகனாகிறான்; பொய் பேசுவதிலும் பொய்க் காரியங்களைச் செய்வதிலும் உள்ள பயம் அவனுக்குப் போய்விடுகிறது.

860. ஒருபக்தன் :—திவ்ய மாதாவுக்கு யோகமாயை எனப் பெயர் வந்ததன் காரணமென்ன?

பரமஹம்ஸர் :—யோகமாயை என்றால் புருஷப் பிரகிருதியின் சேர்க்கை என்று அர்த்தம். நீ பார்க்கும் ஒவ்வொரு பொருளும் இச்சேர்க்கையைத் தவிர வேறில்லை. சிவபிரான்மீது காளிதேவி நர்த்தனம் செய்யும் ‘சிவகாளி’ ரூபத்தை நீ பார்த்ததில்லையா? சிவபிரான் பிணம்போலக் கீழே கிடக்க, காளிதேவி அவரை உற்றுப்பார்த்த வண்ணமாக மேலே நிற்கிறாள். இதெல்லாம் மேலே கூறிய புருஷப் பிரகிருதியின் சேர்க்கையே. புருஷர் நிஷ்கிரியர்; ஆதலால்தான் சிவபிரான் பிணம்போல அசைவற்றுக் கிடக்கிறார். ஆனால் அவருடைய சேர்க்கையால்தான் பிரகிருதிக்குச் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற தொழில்களைச் செய்யும் சக்தி உண்டாகிறது. ராதா கிருஷ்ணனாகிய இரண்டும் ஒன்றாயிருக்கும் விக்கிரகத்தின் அர்த்தமும் இதுவே.

861. மாயையென்பது தாய் தகப்பன், சகோதர சகோதரிகள், மனைவி மக்கள், உற்றார் உறவினர் முதலியோரிடத்து ஒருவனுக்கு உண்டாகும் வாஞ்சையாம். எல்லா ஜீவப்பிராணிகளிடத்தும் ஒருங்கே உண்டாகும் வாஞ்சைக்குத் தயை என்று பெயர்.

862. உண்மையினிடத்துப் பூரண விசுவாசம் இருந்தால் ஈசுவரனை நிச்சயமாகக் காணலாம். இதற்கு மாறாக, உண்மையினிடம் ஒருவனுக்கு மதிப்பு இல்லாவிட்டால், காலக்கிரமத்தில் அவனுடைய நன்மைக் குணம் எல்லாம் நாசமடைந்துபோம். ஈசுவர தரிசனம் பெற்ற பிறகு ஒருநாள் நான் சில புஷ்பங்களைக்

கையில் எடுத்துக்கொண்டு தேவிமுன்னர் நின்று, "தாயே! உன்னால் சிருஷ்டிக்கப்பட்ட ஞானம் அஞ்ஞானம், சுத்தம் அசுத்தம், நன்மை தீமை, புண்ய பாவம் எல்லாவற்றையும் திரும்ப எடுத்துக்கொள். நிஜமான பக்தியை மட்டும் எனக்குக் கொடு," என்றேன். ஆனால் இவற்றை யெல்லாம் சொன்ன போது, "உனது உண்மையையும் பொய்யையும் எடுத்துக்கொள்," என்று என்னால் சொல்லமுடியவில்லை. தேவியிடம் உண்மையைத் தவிர மற்றெல்லாவற்றையும் என்னால் கொடுத்துவிட முடிந்தது.

863. மஹாவாயு எனப்படும் குண்டலி சக்தி திடீரென்று கிளம்பித் தலைக்குப் போவது கடவுள் தரிசனத்தின் அடையாளங்களில் ஒன்று. அப்போது ஸமாதி நிலையுண்டாகி, கடவுள் காட்சி ஏற்படுகின்றது.

864. ஒருவன் :—ஈசுவரனே எல்லாப் பொருள்களுமாய் இருக்கிறாரென்றால் பாபமென்பதும் புண்யமென்பதும் இல்லையா?

பரமஹம்ஸர் :—உண்டு என்றும் இல்லை யென்றும் சொல்லலாம். நம்மிடம் அகங்காரத்தை ஈசுவரன் வைத்திருக்கும் வரையில் புண்யம் பாபம் என்ற த்வந்த (இரட்டை) மனோபாவத்தையும் வைத்திருக்கிறான். ஆனால், சில சமயங்களில் அவன் சிலரிடம் அவ் வகங்காரத்தை அறவே ஒழித்துவிடுகிறான். அப்போது அவர்கள் பாப புண்யங்களைக் கடந்து விடுகின்றனர். ஈசுவர தரிசனம் உண்டாகாத வரையில் நன்மை தீமை என்ற த்வந்த மனோபாவம் இருக்கத்தான் செய்யும். நன்மை தீமைகளை நீ சமானமாகக் கருதுவதாகவும், கடவுள் சித்தப்படியே நீ காரியங்களைச் செய்வதாகவும் சொன்னபோதிலும், உன்து அந்தரங்கத்தில் இவையெல்லாம் வெறும் வாய்ப் பேச்சுதான் என்பதை நீ அறிவாய். எதேனும் ஒரு கெட்ட காரியத்தை நீ செய்தால், உன்து மனச்சாட்சி உன்னைக் கண்டிக்கத் தொடங்கும்.

865. ஜனங்களுடன் கலந்து ஸஹவாசம் செய்யவேண்டுமானால் உனக்கு எல்லாரிடத்தும் அன்பிருக்கவேண்டும். அவர்களுடன் தாராளமாகக் கூடி அவர்களில் ஒருவனாக நீ ஆக

வேண்டும். "ஓ! அவர்கள் உருவக்கடவுளை வழிபடுபவர், அருவக் கடவுளைக் கொண்டாடுவதில்லை. அல்லது, அவர்கள் அருவக் கடவுளைக் கொண்டாடுபவர், உருவக்கடவுளை வழிபடுவதில்லை. அவன் கிறிஸ்தவன், இவ்ன் மகம்மதியன், இவன் ஹிந்து," என்றெல்லாம் சொல்லிக்கொண்டு முகத்தைக் கோணிப் பிறரைத் துவேஷிக்கக் கூடாது. ஈசுவரன் தன்னைப்பற்றி எவ்வளவு தெரிவிக்கிருனே அதற்குமேல் மனிதன் தெரிந்துகொள்வதில்லை.

இன்னும் மனிதர்கள் வேறு வேறு சுபாவ முள்ளவர்களாக இருப்பார்கள் என்பதைத் தெரிந்துகொண்டு, நீ உன்னுல் கூடுமான வரையில் அவர்களுடன் சேர்ந்து பழகவேண்டும். ஆனுல் எல்லாரிடத்தும் உனக்கு அன்பு இருக்கவேண்டும்.

அப்பால், உன் உள்ளத்தினுள்ளே சாந்தியையும் ஆனந்தத்தையும் அடைவாய். அங்கு உன்னுடைய உண்மைச் சொரூபத்தை நீ காண்பாய்.

866. அனுபூதி அடைவதற்கு முயற்சி வெகு அவசியம். ஒருநாள் பாவஸமாதியில் நான் *ஹலதார் குளத்தைக் கண்டேன். அங்கு ஒரு நாட்டுப்புறத்தான், பாசியை ஒதுக்கிவிட்டு ஜலம் மொண்டு கொண்டிருந்தான். அவன் இடை இடையே ஜலத்தைக் கையில் எடுத்துப் பரிசோதித்துக் கொண்டிருந்தான். அக்காட்சியானது, பாசியை ஒதுக்கினுலொழிய ஜலத்தைக் காணமுடியாதென்பதுபோல, ஒருவன் சிரமப்பட்டாலொழிய பக்தியை, அதாவது ஈசுவர தரிசனத்தைப் பெற மாட்டான், என்று எனக்குத் தெரிவிப்பது போன்றிருந்தது. தியானம், ஈசுவர நாம ஸ்மரணம், நாம ஸங்கீர்த்தனம், தானம், தவம் முதலியன வெல்லாம் ஈசுவரனிடம் கொண்டு சேர்க்கும் சத் கருமங்களாம்.

867. 'இந்தக் காரியங்களை யெல்லாம் செய்ய வேண்டுமென்று வேதங்கள் சொல்லுகின்றன. ஆதலால் நான் செய்கிறேன்,' என்று நினைப்பது '**வைதீபக்தி**' யாகும். ஈசுவரனிடத்

* காமார்ப்புகூரில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிறந்த வீட்டுக்கு எதிரிலே உள்ள பெரியதோர் குளம்.

தில் அளவு கடந்த ப்ரேமையினால் உண்டாகும் இன்னொரு வித பக்திக்கு 'ராக பக்தி' என்று பெயர். இது பிரஹ்லாதனிடம் தென்பட்டது. அந்த ராக பக்தி உண்டாகும்போது 'வைதிக கர்மங்களை' அதாவது சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட காரியங்களைச் செய்ய வேண்டிய அவசியமே இருப்பதில்லை.

868. வாஸ்தவமான ஞானம் உண்டானவன் ஈசுவரன் வெகு தூரத்திலிருப்பதாகக் காண்பதில்லை. 'அவன்' என்று எட்ட இருப்பதுபோல் இல்லாமல், 'இது' என்று இங்கே, அவனுடைய உள்ளத்திலேயே, இருப்பதாக அவன் உணர்கிறான். ஈசுவரன் எல்லாரிடத்தும் இருக்கிறான். ஆகவே தேடுபவர்களுடைய காட்சிக்கு அவர்களிடமே தென்படுகிறான்.

869. ஒரு பக்தன்:—ஸம்ஸார வாழ்க்கையில் இருக்கும் போதே, ஒருவனுக்கு ஞானோதயமா யிருக்கிறது என்பதை எப்படி அறிய முடியும்?

பரமஹம்ஸர்:—பகவந் நாமத்தைக் கேட்டவுடன் எவனுக்கு மயிர்க் கூச்சலும் ஆனந்த பாஷ்பமும் உண்டாகிறதோ அவனுக்கு வாஸ்தவமான ஞானோதய மாயிருக்கிறது என்று தெரிந்துகொள்.

870. ஈசுவரனிடம் விசுவாச மில்லாததுதான் மனிதன் படும் துன்ப துயரங்களுக் கெல்லாம் காரணம்.

871. சங்கராசாரியருடைய அத்வைத ஸித்தாந்தம் உண்மையானது. ஸ்ரீ ராமானுஜருடைய விசிஷ்டாத்வைதமும் உண்மையானதே.

872. மனிதனிடம் இருக்கும் சைதன்யம் விழித்தெழுந்தாலொழிய ஈசுவரனை அறிய முடியாது.

873. யுக்தியினால் பெறப்படும் ஞானம் ஒருவகையானது என்பதையும், தியானத்தினால் வரும் ஞானம் முற்றிலும் வேறானதென்பதையும், ஈசுவர தரிசனத்தால் அதைவிட முற்றிலும் வேறான ஞானம் உதயமாகிற தென்பதையும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன்.

874. சுத்த ஸத்வம் மனிதனிடம் ஓங்கும்போது, அவன் ஈசுவரனைப் பற்றி மட்டுமே தியானிப்பான். மற்ற காரியங்

களில் அவனுக்கு இன்ப முண்டாவதில்லை. பிராப்தத்தின் பயனைச் சிலர் இந்த ஸத்வகுணத்துடனேயே பிறக்கின்றனர். ஆயினும் நிஷ்காம கர்மத்தைச் (பயன் கருதாமல் செய்தல்) செய்து கொண்டே இருப்பவர்க்கும் இந்தச் சுத்த ஸத்வ குணம் உண்டாகும். ஸத்வ குணத்தோடு ரஜோகுணம் சேர்ந்திருந்தால் மனமானது பல வழிகளில் ஓடும். அப்போது, 'நான் உலகத்துக்கு நன்மை செய்வேன்' என்னும் அகங்காரம் உண்டாகிறது. உலகத்துக்கு நன்மை செய்ய முயல்வது சாதாரண ஜீவர்களுக்கு மிகவும் அபாயத்தைத் தரக்கூடியதாம். ஆனால், பயன் கருதாது பிறர்க்கு நன்மை உண்டாக உழைப்பது நல்லது. அதில் அபாயம் ஒன்றுமில்லை. அப்படிப்பட்ட கர்மத்துக்கு 'நிஷ்காம கர்மம்' என்று பெயர். அவ்விதமான கர்மங்களைச் செய்வது நல்லதே. ஆனால், எல்லாராலும் அதைச் செய்ய முடியாது. அவ்வளவு கடினமானது!

875. எல்லோரும் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. வெகு சிலர்தான் வேலையைத் துறந்திருக்க முடியும். அப்படிப் பட்ட சுத்த ஸத்வ குணம் வெகு சிலரிடத்துத்தான் காணப்படுகிறது. நிஷ்காம கர்மங்களை ஒருவன் செய்து கொண்டே வந்தால், அவனது ஸத்வ குணத்தில் கலந்திருக்கும் ரஜோ குணம் கொஞ்சம் கொஞ்சமாக அகன்று போய், கடைசியில் சுத்த ஸத்வ குணம் மட்டுமே நிலைநிற்கும். இப்படிச் சுத்த ஸத்வ குணம் உண்டானால் ஈசுவர தரிசனம் லபிக்கும். சாதாரண மனிதர்களுக்கு இந்தச் சுத்த ஸத்வத்தின் தன்மை தெரியாது.

876. பஞ்ச பூதங்களால் ஆன இந்தச் சரீரம் ஸ்தூலசரீரம் எனப்படும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவைகளாலான சரீரம் ஸூக்ஷ்ம சரீரம் எனப்படும். ஈசுவர தரிசனமாகிய ஆநந்தத்தைப் பெற்று, அவ்வீசுவரனுடன் ஒன்றுபட்டிருக்கும் ஸம்யோகத்தை அனுபவிக்கும் சரீரம் காரண சரீரம் எனப்படும். தந்திர சாஸ்திரங்களில் இது 'பகவதி தனு' என்று சொல்லப்படுகிறது. இவைகளுக்கெல்லாம் அப்பால் மஹா காரணமாகிய முதற்காரணம் இருக்கிறது.

877. ஈசுவர தரிசனத்துக்கு முன்னால் உண்மையான ப்ரேமை உதிப்பதில்லை.

878. ஈசுவரானுபவத்துக்கும் அடையாளங்கள் உள்ளன. பக்தி எவனிடம் பொங்கித் ததும்புகின்றதோ அவனுக்கு வெகு சீக்கிரத்தில் ஈசுவர தரிசனம் கிடைக்குமென்று தெரிந்துகொள்.

879. விவேகம், வைராக்கியம், பூத தயை, ஸாது ஸேவை, ஸாது ஸங்கம், ஈசுவர நாம ஸங்கீர்த்தனம், ஸத்யம் முதலிய நற்குணங்களின் மூலமாக பக்தி பொங்கித் ததும்பும்.

880. ஒருபக்தன் :—ஒருவன் தனது இந்திரியங்களை விசாரணையினால் (பகுத்தறிவினால்) முதன் முதலில் அடக்கியாள வேண்டியது அவசியந்தானா?

பரமஹம்ஸர் :—விவேக விசாரணை யென்பது வேறொரு வழி. பக்தி மார்க்கத்தில் இந்திரிய நிக்கிரகம் தானே எளிதில் வரும். குழந்தை இறந்த தினத்தில் பெற்றோர்கள் தங்களுடைய தேக சுகத்தை நினைப்பதில்லை. அதுபோல, ஒருவனுக்கு ஈசுவரனிடம் பக்தி அதிகமாகும் அளவுக்கு ஏற்ப, அவனது இந்திரிய சுகங்கள் அவனுக்கு இன்பந் தராது போகும்.

881. பகவத் பக்தியைப் புலிக்கு ஒப்பிட்டிருக்கிறார் ஒரு கவி. புலியானது மிருகங்களை விழுங்குவதுபோல, பக்தியானது காமாதிகளான பெரும் பகைவர்களை விழுங்குகிறது. பகவத் பக்தி ஒருதரம் நன்றாய்க் கிளம்பி விட்டால், காமம், குரோதம் முதலிய கெட்ட பாசங்கள் முற்றிலும் நசித்து விடும். பிருந்தாவனத்துக் கோபஸ்திரீகள் கிருஷ்ணனிடம் வைத்த தீவிர பக்தியால் இப்படிப்பட்ட நிலைமையை அடைந்திருந்தனர்.

882. பக்தியைக் கண்களில் தீட்டும் மைக்கும் ஒப்பிட்டிருக்கின்றனர். ஸ்ரீமதி ராதை ஒரு சமயம், "ஸகிகாள்! நான் எனது கிருஷ்ணனை எல்லா விடங்களிலும் காண்கிறேன்," என்றாள். அதற்குக் கோபஸ்திரீகள், "தோழி! நீ பக்தியாகிய அஞ்சனத்தைக் கண்ணில் இட்டுக் கொண்டிருக்கிறாய். ஆதலால்தான் அப்படித் தெரிகின்றது," என்றார்கள்.

883. ஸாதன ஸித்தர்கள், கிருபா ஸித்தர்கள் என ஸித்தர்கள் இருவகைப் படுவர். நல்ல மகசூலைப் பெறுவதற்குச்

சிலர் வெகுவாகச் சிரமப்பட்டு, வாய்க்கால்களை வெட்டித் தங்கள் நிலங்களுக்கு ஜலம் பாய்ச்சுகின்றனர். அதிருஷ்டசாலிகளான சிலர்க்கோ இவ்விதச் சிரமமே இல்லாதபடி மழை பெய்து நிலங்களில் ஜலம் நிரம்பிவிடுகின்றது. ஆதலால், மாயையினின்றும் விடுபடுவதற்காக எல்லாரும் பக்தி மார்க்கத்தை இடைவிடாது அனுஷ்டிக்க வேண்டியதுதான்; ஆனால், கிருபாஸித்தர்களுக்கு இந்தக் கஷ்டங்கள் இல்லை. ஈசுவரக் கிருபையால், அவர்கள் பரிபூரண மடைகின்றனர். என்றாலும், அப்படிப்பட்டவர்கள் அருமையிலும் அருமையாகவே இருப்பார்கள்.

884. கோபிகளின் பக்தியானது 'ப்ரேம பக்தி' யாகும். அதைக் 'கலப்பற்ற தீவிரபக்தி' எனவும் சொல்வார்கள். கலப்புள்ள பக்தி இன்னதென்பது உனக்குத் தெரியுமா? ஞானத்துடன் கலந்த பக்தி கலப்புள்ள பக்தி எனப்படும். "கிருஷ்ணனே எல்லாமும் ஆனான்; பரப்பிரம்மம் அவனே. ராமன் அவன்; சிவபிரான் அவன்; திவ்ய சக்தி அவன்," என்ற உணர்ச்சியைப் போலாகும் அது. ஆனால் அதுபோன்ற ஞானம் ப்ரேம பக்தியுடன் கலந்திராது. ஹனுமார் ஒரு சமயம் துவாரகைக்கு வந்தபோது, தாம் ராமனையும் ஸீதையையுமே தரிசிக்கப் போவதாகச் சொன்னார். ஆதலால் ஹனுமாரைத் திருப்தி படுத்துவதற்காக ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா, ருக்மணி தேவியைப் பார்த்து ஸீதையின் உருவத்தை எடுத்துக் கொள்ளச் சொன்னார். பாண்டவர்கள் ராஜஸூய யாகத்தைச் செய்தபோது, யுதிஷ்டிரர் சிம்மாசனத்தில் வீற்றிருந்தனர். மற்றைய அரசரெல்லோரும் அவரது அடிவணங்கினர். அங்கு அப்போது வந்திருந்த விபீஷணர், தாம் கிருஷ்ண பரமாத்மாவைத் தவிர வேறொருவரையும் வணங்குவதில்லை யென்றனர். ஆகவே, கிருஷ்ண பரமாத்மாவே யுதிஷ்டிரருக்கு நமஸ்காரம் செய்யத் தொடங்கினர். உடனே விபீஷணரும் யுதிஷ்டிரர் முன்னர் தமது திருமுடி நிலத்தில் படும்படி சாஷ்டாங்கமாக வணங்கினர்.

885. ப்ரேம பக்தியில் "நான்," "எனது" என்னும் இரண்டு அம்சங்கள் உள்ளன. (அதாவது 'நான் பக்தன்; ஈசுவரன் எனக்கே உரியவன்' என்ற மனோபாவம்.) தன்னைத் தவிர

வேறெவரும் குழந்தை கோபாலனைப் பராமரிக்க முடியாதெனவும் தானில்லாவிட்டால் கோபாலனுக்கு உடம்பு ஸரிப்படாமல் போய்விடுமென்வும் யசோதை நினைப்பாள். அவளுடைய கோபாலனை ஸர்வேச்வரனுகக் கருத அவளுக்குப் பிரியமிருந்ததில்லை. பக்தனுடைய 'எனது' என்ற மனேபாவம், "அவன் எனது நாதன், எனது கோபாலன்," என்று கருதும்படி செய்கின்றது. உத்தவர் யசோதையைப் பார்த்து, "தாயே! உனது கிருஷ்ணன் ஸர்வேசுவரனே; அவன் ஸர்வ லோக சிந்தாமணி; அவன் சாதாரண மனிதன் அல்லன்," என்ருர். அதைக் கேட்ட யசோதை, "நான் உனது சிந்தாமணியைப் பற்றிக் கேட்கவில்லை. எனது கோபாலன் எப்படி இருக்கிருன் என்பதைத்தான் கேட்கிறேன். சிந்தாமணி இல்லை! எனது கோபாலன்!" என்று பதில் சொன்னுள்.

886. கோபஸ்திரீகளின் நிஷ்டை (தீவிர பக்தி) மிகவும் ஆச்சரியமானது! கிருஷ்ணன் மதுரையில் இருந்தபோது, கோபஸ்திரீகள், வாசல் காவலாளிகளை நயந்துகொண்டு ஸபாமண்டபத்தை அடைந்தனர். ராஜ வேஷத்துடன் கிரீடமணிந்து வீற்றிருந்த கிருஷ்ணனைப் பார்த்ததும் அவர்கள் நாணத்தால் தலை குனிந்தவர்களாகி, "இந்தக் கிரீடதாரி யாவன்? நாம் இவனேடு பேசினுல் நமது கிருஷ்ண பக்திக்குப் பங்கம் வராதா? பீதாம்பரதாரியும் மயிலிறகு அணிந்தவனுமான நமது நாதன் எங்கேயோ?" என்று ஒருத்தியோடொருத்தியாய் மெதுவாகப் பேசத் தொடங்கினுர்கள். கோபஸ்திரீகளின் ஏகாக்ர பக்தியைப் பாருங்கள்!

887. எவரிடம் விசுவாசம் இருக்கும், எவரிடம் இராது என்பதற்குச் சிற்சில சரீர அடையாளங்கள் உள்ளன. எலும்பளவாய் மெலிந்தவர்கள், கண்குழி பாய்ந்தவர்கள், வக்கிரக்கண்ணுடையவர்கள் ஆகிய இவர்களுக்கு விசுவாசம் எளிதில் உண்டாவதில்லை.

888. உலக விஷயங்களை நாடிச் செல்வதினுல் மனம் சிதறி விரயமடைகின்றது. அதற்கு ஈடு பண்ணவேண்டுமானுல், ஸந்நியாஸ வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

889. பிதாவினிடமிருந்து முதல் ஜனனத்தையும், உபநயன காலத்தில் இரண்டாவது ஜனனத்தையும் ஸந்யாஸத்தில் மூன்றாவது ஜனனத்தையும் மனிதன் பெறுகிறான்.

890. "நானே அவன், நான் அந்த சுத்த ஆத்மன்," என்று ஞானி சொல்லுகிறான். பக்தனோவெனில், "இவை யெல்லாம் ஈசுவரனுடைய மஹிமையே!" என்கிறான்.

891. ஸ்வானுபவத்தை அடைய நீ கடைப்பிடிக்கும் மார்க்கம் எதுவாக விருந்தாலும், மனம் முற்றிலும் சாந்தியை அடைந்தாலொழிய, யோகமானது ஸித்திக்காது. மனம் எப்போதும் யோகியின் வசப்பட்டிருக்கும்; யோகி ஒருபோதும் மனத்தின் வசப்பட்டிருக்க மாட்டான்.

892. மனத்தின் ஆட்டங்களெல்லாம் அடங்கிய பிறகு கும்பகம் உண்டாகிறது. அதாவது சுவாச பந்தனம் ஏற்படுகிறது. பக்தி யோகத்தின் மூலமாயும் கும்பகம் உண்டாகும்; அதாவது தீவிர பக்தியாலும் சுவாசபந்தனம் ஏற்படும்.

893. நரேந்திரர்:—ஸ்வாமி! தந்திர சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடி ஸ்திரீ சங்கத்தோடு செய்யும் பக்தி மார்க்கத்தைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயம் யாது?

பரமஹம்ஸர்:—அவை யெல்லாம் ஆபத்துக் கிடமான மார்க்கங்கள். அவை சிரம சாத்தியமானவை; பின்னும் இடைவழியில் தவறச் செய்யும் தன்மையுடையவை. தந்திர சாஸ்திரத்தின்படி மூன்று விதத்தில்—அதாவது, வீரனைப் போலவும், பணிப்பெண்ணைப் போலவும், தாய்க்கு மகனைப் போலவும்—பக்தி பண்ணலாம். எனது மார்க்கம், ஈசுவரனைத் தாயாகக் கருதுவதாம். திவ்யமாதாவின் பணிப்பெண்ணாக ஒருவன் தன்னைக் கருதுவதும் நல்லதே. ஆனால், "வீராசார*" மார்க்கம் அபாயகரமானது. நான் திவ்ய மாதாவின் குமாரன் எனக் கருதிப் பக்தி பண்ணுவது மிகப் பரிசுத்தமானது.

---

* ஒரு பெண்மணியைத் தனது தெய்வீகத் துணைவியாகக் கொண்டு தேவி வழிபாடு செய்யும் ஒரு தந்திர சாஸ்திரமுறைக்கு வீராசார மார்க்கம் என்று பெயர்.

894. ஒரு பக்தன்:—சம்யானுஷ்டானங்களிலேயே ஈடு பட்டுவரும் ஒரு புருஷனிடம் அவன் மனைவி, "நீர் என்னைச் சரியானபடி பராமரிக்காமல் போனால் நான் தற்கொலை செய்து கொள்வேன்," என்று சொன்னால், அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் செய்ய வேண்டியது என்ன?

பரமஹம்ஸர்:—கடவுள் தரிசனத்தை அடைவதற்குத் தடையாக நிற்கிற அப்படிப்பட்ட மனைவியை விட்டு விலகிவிட வேண்டும். அவள் தற்கொலைதான் செய்துகொள்ளட்டும், செய்யாமல் போகட்டும். ஈசுவரனை அடையும் மார்க்கத்தில் இடையூறு செய்பவள் அவித்யா மனைவியாவாள். ஆயினும் உண்மைப் பக்தனுக்கு அரசன், தீயோர், மனைவி முதலிய அனைவரும் அனுகூலிகளாகவே ஆவார்கள். ஒருவனுக்கு வாஸ்தவமான பக்தி இருக்குமானால், அவனுடைய மனைவியும் காலக்ரமத்தில் ஈசுவர பக்தி உள்ளவளாவாள். ஒருவன் நல்லவனாக இருந்தால், ஈசுவரக் கிருபையால் அவனுடைய மனைவியும் நல்லவள் ஆகலாம்.

895. ஈசுவர தரிசனத்தைப் பெற்ற பிறகு, ஈசுவரன் எங்கும், எல்லாவற்றிலும் இருப்பதாகவே பக்தனுக்குத் தோன்றும். ஆனால், ஈசுவரனுடைய மேலான தோற்றம் மனிதனிடம் காணப்படுகிறது. இன்னும் அதைவிட மேலான தோற்றமோ, காமமும் காசாசையும் கொஞ்சமேனும் இல்லாத சுத்த ஸாத்வீக பக்தர்களிடம் இருக்கும்.

896. ஒரு பக்தன்:—ஸ்வாமி! அடியேனுக்கு ஒரு ஸந்தேகம். நமது இச்சை சுயேச்சையானதென்று, அதாவது நல்லதோ, கெட்டதோ எதை வேண்டுமானாலும் நாம் செய்யக்கூடுமென்று, சொல்லுகிறார்களே. அது வாஸ்தவந்தானா? நமது இச்சை சுயேச்சையானதா?

பரமஹம்ஸர்:—அப்பா! எல்லாம் ஈசுவரனுடைய இச்சையைப் பொறுத்துள்ளது. இவை யெல்லாம் அவனுடைய திருவிளையாடல்கள். நல்லது கெட்டது, சிறியது பெரியது, பலமுள்ளது பலமற்றது—இப்படிப் பலவிதங்களில் பல காரியங்களைச் செய்யும்படி தூண்டுபவன் அவனே. நல்லோர், தீயோர்,—ஆகிய இவையெல்லாம் அவனுடைய மாயை, அவனுடைய திரு

விளையாடல். எதுபோலவென்றால், தோட்டத்திலுள்ள மரங்கள் எல்லாம் உயரத்திலும் அழகிலும் காம்பீரியத்திலும் சமானமானவையாக இருப்பதில்லை; அதுபோலவே பேதங்கள் எல்லாம்.

ஈசுவர தரிசனத்தைப் பெறுதிருக்கும் வரையில், தான் சுயேச்சாதிகாரி யென்று மனிதன் நினைக்கிறான். ஆனால், இந்த மாயையை மனிதனிடம் உண்டாக்குபவன் ஈசுவரனே. இல்லாவிட்டால், பாபம் அதிகரித்துவிடும். பாபம் செய்வதற்கு ஜனங்கள் பயப்பட மாட்டார்கள். குற்றங்களுக்கும் பாபங்களுக்கும் தண்டனைகூட இராது.

ஆனால், ஈசுவரனைத் தரிசித்தவனுடைய மனநிலைமை எப்படிப்பட்டதென்பது தெரியுமா? "நான் யந்திரம், நீ அதை ஓட்டும் யந்திரி; நான் வீடு, நீ அதில் குடியிருப்பவன்; நான் ரதம், நீ ஸாரதி; உனது இச்சைப்படி நான் நடக்கிறேன். உனது இச்சைப்படியே நான் பேசுகிறேன்," என்றே அவன் சொல்வான்.

897. சைதன்ய ஸ்வாமிக்கு மூன்று அவஸ்தை நிலைகள் இருந்தன:—அவையாவன: (1) பாஹ்ய (ஜாக்கிர) அவஸ்தை. இதில் மனமானது ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத்தைப்பற்றி நின்றது. (2) அர்த்த பாஹ்ய (பாதி வெளியிலும் பாதி உள்ளேயும் உள்ள) அவஸ்தை. இதில் மனமானது காரண சரீரத்தைப் பற்றிச் சிந்தித்து, காரண ஆனந்தத்தை அனுபவித்தது. (3) அந்தர்முகமான ஸமாதி அவஸ்தை. இதில் மனமானது மஹா காரணத்தில் இரண்டறக் கலந்திருந்தது.

இதற்கும் வேதாந்திகளால் கூறப்படும் பஞ்ச கோசங்களுக்கும் ஒற்றுமை உண்டு. ஸ்தூல சரீரம், அன்னமய பிராணமய கோசமாம்; ஸூக்ஷ்ம சரீரம், மனோமய விக்ஞானமய கோசமாம்; காரண சரீரம் ஆனந்தமய கோசமாம். மஹாகாரணம் இந்த கோசங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டதாம். இந்த மூல காரணத்தில் மனம் இரண்டறக் கலக்கும்போது ஒருவருக்கு ஸமாதி நிலை ஸம்பவிக்கும். இதைத்தான் நிர்விகல்ப ஸமாதி அல்லது ஜட ஸமாதி என்கின்றனர்.

898. உலகத்தைத் துறக்கவேண்டுமென்று மனிதன் நினைத்தாலும் அவ்வெண்ணத்துக்கு இடையூறாக அவனது பிரா

ரப்த கர்மம், சம்ஸ்காரங்கள் முதலியன குறுக்கே வந்து நிற்கும். ஒரு ஸமயம், யோகி ஒருவர், ஒரு அரசனைத் தம்மருகே உட்காந்து ஈசுவரனைத் தியானம் செய்யும்படி சொன்னார். அதற்கு அவ்வரசன், "ஸ்வாமி! அது என்னால் முடியாத காரியம். நான் உமது ஸமீபத்தில் இருப்பேன் என்றாலும் என் மனம் போகத்திலேயே செல்லும். நான் இந்தக் காட்டில் இருந்தால், இங்கு ஒரு ராஜ்யம் உண்டானாலும் உண்டாகலாம். ஏனெனில், நான் இன்னும் போகம் அனுபவிக்க வேண்டியவனாகவே யிருக்கிறேன்," என்று பதில் சொன்னான்.

899. அநாஹத த்வனியான பிரணவ சப்தம் ஸதா ஸர்வ காலமும் தானே ஒலித்துக் கொண்டிருக்கிறது. பரப்பிரம்மத்தினிடமிருந்து வரும் இந்தச் சப்தம் யோகிகளுக்கு மட்டுந்தான் கேட்கும்; சாதாரண மனிதர்களுக்குக் கேட்காது. அது ஒரு புறத்தில் நாபிப் பக்கத்திலிருந்தும், மற்றொரு புறத்தில் பரப்பிரம்மத்தினிடத்திலிருந்தும் வருகிறதென்பதை யோகிகள் அறிவார்கள்.

900. பக்தனானவன் ஈசுவரனிலிருந்து வேறுபட்டவன் என்று புராணங்கள் கூறுகின்றன: 'நான் ஒரு தனி உயிர்; இறைவன் வேறானவன்.' இந்தச் சரீரம் ஒரு பாத்திரத்துக்குச் சமானம். மனம், புத்தி, அஹங்காரம் என்பன அப்பாத்திரத்தில் இருக்கும் ஜலத்துக்குச் சமானமாகும். பிரம்மமோ, ஸூரியனைப் போன்று அந்த ஜலத்தில் பிரதிபலிக்கிறது. ஆகவே, பக்தர்கள் ஈசுவரனுடைய பல்வேறு தோற்றங்களைக் காண்கின்றனர்.

901. ஆனால் வேதாந்தமோ, பிரம்மம் மட்டும் உண்மை, அதாவது நித்யமென்றும், மற்றவை யெல்லாம் மாயை, அதாவது கனவைப்போல அநித்யமென்றும் கூறுகின்றது. பிரம்மமாகிய ஸமுத்திரத்தில் 'நான்' என்ற கோல் கிடக்கிறது. அக்கோலை எடுத்துவிட்டால் ஜலப்பரப்பில் பிரிவு ஏற்படுவதில்லை: கோல் அங்கிருக்கும்போது ஜலமானது கோலுக்கு இருபுறத்திலும் பிரிவுபட்டதுபோலத் தோன்றுகிறது. ஸமாதி நிலையில் ஒருவனுக்குப் பிரம்மஞானம் உண்டாகிறது. அப்போது அஹங்காரம் அழிகின்றது.

902. மனிதனுக்குத் தாய்தந்தையர் எல்லாவற்றிலும் முக்கியமானவர். அவர்களைத் திருப்தி படுத்தினுலொழிய பக்தி ஸாதனைகள் பயனைத் தரமாட்டா. ஆதலால்தான் ஈசுவர ப்ரேமையால் பித்தேறிய சைதன்ய ஸ்வாமிகூட, தாம் ஸந்யாஸம் பெற்றுக்கொள்வதற்கு முன்னுல் தமது தாயைச் சமாதானப் படுத்துவதற்கு வெகு சிரமப் பட்டனர். "தாயே! வருந்தவேண்டாம்! நான் அடிக்கடி தங்களைப் பார்க்க வருவேன்," என்று அவர் வாக்களித்தார். தேவர்களின் கடன், ரிஷிகளின் கடன், பெற்றோர்களின் கடன், மனைவியின் கடன் முதலிய பல கடன்களை மனிதன் தீர்க்க வேண்டியிருக்கிறது. பெற்றோர்களின் கடனைத் தீர்த்தாலொழிய சத்கருமங்கள் பலிக்கமாட்டா. மனைவிக்கும் கொடுத்துத் தீரவேண்டிய கடன் உண்டு.

903. எப்போதும் மிக ஜாக்கிரதையாகப் பழகுதற்குரியவர்கள் சிலர் இருக்கின்றார்கள்: முதலாவது, செல்வவான்கள். அவர்களுக்குப் பணம் பணியாட்கள் செல்வாக்கு முதலியன இருக்கின்றன. இஷ்டப்பட்டால் அவர்கள் உனக்குத் தீமை செய்து விடுவார்கள். ஆதலால் அவர்களுடன் நீ வெகு ஜாக்கிரதையாகப் பழகவேண்டும். அவர்கள் சொல்வதையெல்லாம் கேட்டு, "சரி, சரி" "ஆமாம், ஆமாம்" என்று நீ சொல்ல வேண்டி வரலாம். இரண்டாவது, நாய். அது உன்னைக் கண்டு குலைக்கவோ கடிக்கவோ வரும்போது நீ ஓடாமல் நின்று, சிட்டியடித்து, அதைச்சமாதானம் செய்ய முயலவேண்டும். மூன்றாவது, காளை மாடு. அது உன்னை முட்ட வரும்போது, அதையும் ஏதாவதொரு சப்தம்செய்து சமாதானப்படுத்த வேண்டும். நான்காவது, குடிகாரன். நீ அவனைத் தொந்தரவு செய்தால், அவன் காதால் கேட்கச் சகிக்காதபடி யெல்லாம் உன்னை வைவான்; அதை விட்டு, "மாமா, சௌக்கியமா?" என்று அவனோடு நீ ஸல்லாபம் செய்வாயானுல், அவன் உன்னிடம் சந்தோஷம் கொண்டு உன்னண்டை வந்து உட்கார்ந்து புகைச்சுருட்டு பிடிக்கத் தொடங்குவான்.

904. சிலருக்குப் பாம்பின் சுபாவ மிருக்கிறது. அவர்கள் எப்போது உன்னைக் கடிப்பார்களென்பது உனக்குத் தெரிய

மாட்டாது. அவர்களுடைய விஷத்தை முறிக்க வெகுவாகப் பாடுபட வேண்டும். இல்லாவிட்டால், அவர்கள்மீது பழிக்குப் பழி வாங்கவேண்டு மென்ற கோபம் உனக்கு வந்துவிடும்.

905. ஒருவனுடைய குணதோஷங்கள் அவனுடைய ஸஹவாசத்தைப் பொறுத்திருக்கின்றன; நிற்க, ஒருவன் தன்னுடைய குணதோஷங்களுக்கு ஏற்ற ஸஹவாசத்தையே நாடுகிறான்.

906. ஸ்திரீகளின் இடையே வாழ்ந்தும் அவர்களை அறியாதவனே சுத்த வீரன்.

907. ஒரு பண்டிதர் :—'மஹாத்மா'க்கள் இருக்கின்றனர் என்று தியாஸபி கூட்டத்தார் (Theosophists) சொல்லுகின்றனர். இன்னும், நக்ஷத்திர மண்டலம், ஸூர்ய, சந்திர மண்டலங்கள், தேவ மண்டலம் முதலியன இருக்கின்றன வென்றும், மனிதனுடைய ஸூக்ஷ்ம சரீரம் அவ்விடங்களுக்கெல்லாம் போகக்கூடு மென்றும், இன்னும் இவைபோன்ற பல விஷயங்களை அவர்கள் சொல்லுகின்றனர். தியாஸபியைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயம் என்ன?

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—ஈசுவரனிடம் பக்திதான் பிரதானமானது. தியாஸபிகளும் பக்தியைப் பிரதானமாகக் கொள்வரேல் அது நல்லதுதான். ஈசுவரானுபவமே அவர்களுடைய நோக்கமானால் அது சிலாக்யமானதே. ஆனால், நக்ஷத்திர மண்டலம், ஸூர்ய சந்திர மண்டலங்கள் முதலிய அற்பமான விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பது ஈசுவரனைத் தேடும் முயற்சியாகாது. அவனுடைய பாதாரவிந்தங்களில் பக்தி பண்ணுவதற்கு, முழு மனதுடன் கசிந்துருகி, ஸாதன மார்க்கங்களை அனுஷ்டிக்க வேண்டும். மனதைப் பல விஷயங்களில் சிதற விடாமல் அவனிடத்திலேயே நிலைத்திருக்கும்படி செய்யவேண்டும். அவன் வேதம், வேதாந்தம் முதலிய கிரந்தங்களில் இருப்பதில்லை. மனங் கசிந்து உருகினாலொழிய அவனைக் காணமுடியாது. தீவிரமான பக்தியுடன் பிரார்த்தித்து, ஸாதனைகளைச் செய்யவேண்டியது அவசியம். ஸாதனை இல்லாவிட்டால் ஈசுவரனை எளிதில் காணமுடியாது.

908. எல்லாப் பொருள்களையும் ஒவ்வொன்றாக, "இதல்ல, இதல்ல," என்று தள்ளிவிட்டு ஆத்மனை அறிவதுதான்

ஞானம். அவ்வாறு விசாரணையினால் (பகுத்தறிவினால்) ஒவ்வொன்றாக விஷயப்பொருள்களைப் புறக்கணித்துத் தள்ளுவதினால் ஸமாதி ஸித்தியாகும். அப்பால் ஆத்மனை அறியலாகும்.

விஞ்ஞானமென்பது விஷயத்தை இன்னும் நன்றாய் அறிவதாம். சிலர் பாலைப்பற்றிக் கேட்டுமட்டு மிருப்பார்கள். சிலர் அதைப் பார்த்திருப்பார்கள்; வேறு சிலர் அதைக் குடித்து ருசி கண்டிருப்பார்கள். இவர்களில், பாலைப்பற்றிக் காதால்மட்டும் கேட்டவன் அஞ்ஞானியாவான்; பார்த்தவன் ஞானி; ருசி கண்டவன், அதனை முழுவதும் நன்றாய்த் தெரிந்து கொண்டவனாதலால், விஞ்ஞானியாவான். ஈசுவரனைக் கண்டபிறகு, அவன் நம்முடையவன் என்ற மனோபாவத்துடன் அவனோடு நெருங்கிய உறவு கொண்டாடுவதுதான் விஞ்ஞானம்.

909. முதலில் 'நேதி, நேதி' (இதல்ல, இதல்ல,) என்ற கொள்கையை நீ கைப்பற்ற வேண்டும். ஈசுவரன் பஞ்சபூதங்களும் (உடலும்) அல்லன்; பஞ்சேந்திரியங்கள், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய இவைகளும் அல்லன். அவன் எல்லா தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டவன். வீட்டின் மேன்மாடிக்குப் போக வேண்டுமானால் படிக்கட்டின் வழியாக, ஒவ்வொரு படியாகத் தாண்டி மேலே போகவேண்டும். படிக்கட்டும் மேன்மாடியும் ஒன்றே யல்ல. ஆயினும் மேன்மாடிக்குப் போனதும், படிக்கட்டு ஆக்கப்பட்டிருக்கும் செங்கல், சுண்ணாம்பு, மண் முதலியவைகளாலேயே, மேன்மாடியும் ஆக்கப்பட்டிருப்பதை நீ காண்பாய். பிரம்மமென்பது, இருபத்துநான்கு தத்துவங்கள் ரூபமாக, ஜீவர்களாகவும் ஜகத்தாகவும் ஆயிருக்கின்றது. ஆத்மனென்று சொல்லப்படுவதே பஞ்ச பூதங்களாக ஆயிருக்கின்றது. இவ்வுலகம் ஆத்மனிலிருந்து உண்டாயிற்றென்றால், ஏன் இவ்விதம் அது இறுகிக் கல்போன்றிருக்கிறது என்று கேட்கலாம். ஈசுவரனுடைய இச்சையால் எல்லாம் சாத்யமாகும். ரத்தமும், சுக்கிலமும் எலும்பும் தசையும் ஆகவில்லையா? ஸமுத்திரத்தின் நுரை அவ்வளவு கடினமாவது எப்படி?

910. ஈசுவர தரிசனம் உண்டானபிறகு, உலகம் சூன்யமாகத் தோன்றாது. ஈசுவரனை அடைந்தவனுக்கு, அவ்வீசு

வரனே ஜீவனாகவும் ஜகத்தாகவும் ஆகியிருக்கிறா னென்பது விளங்கும். அப்படிப்பட்டவன், தனது குழந்தைகளுக்கு உணவு ஊட்டும்போது, ஸ்ரீகோபாலனுக்கு உணவு ஊட்டுவதாகவே கருதுவான். அவன் தனது தாய் தந்தையரை ஜகதீச்வரியும் ஜகதீசுவரனுமாகவே கருதி வந்தனை வழிபாடுகள் செய்வான். ஈசுவர தரிசனத்துக்குப் பிறகு ஒருவன் குடும்ப வாழ்க்கையில் இருப்பானானால், அவனால் தனது மனைவியுடன் சரீர சம்பந்தம் வைத்துக்கொள்ள முடியாது. இருவரும் பக்தர்களாகிப் பிரார்த்தனையிலும் பக்தியிலுமே காலத்தைக் கழிப்பார்கள். ஈசுவரன் எல்லா ஜீவர்களிடத்திலும் இருக்கிறானாதலால், அவர்கள் எல்லா ஜீவர்களுக்கும் தொண்டு பூண்டு, எல்லாரிடத்துமுள்ள அவ்வீசுவரனுக்கு வழிபாடு செய்வார்கள்.

911. ஒரு சிஷ்யன் :—உண்மையான ஸாதுவை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?

ஸ்ரீராமகிருஷ்ணர் :—எவனுடைய ஹிருதயமும் ஆத்மாவும் பூரணமாக ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கின்றனவோ அவன்தான் உண்மையான ஸாது. பெண்ணாசை பொன்னாசைகளை ஒழித்தவன் எவனோ, அவன்தான் உண்மையான ஸாது. அப்படிப்பட்டவன், ஸ்திரீகளை உலக வாழ்க்கையினர் கருதுவதைப்போலக் கருதமாட்டான். எப்போதும் அவன் அவர்களுக்குச் சற்று தூரத்திலேயே விலகியிருப்பான். ஒருக்கால் அவர்களுக்குச் சமீபத்தில் வரும்படி நேர்ந்தால், அப்போது அவன் அவர்களைத் தனது தாய்மாரெனக் கருதி, வழிபாடு செய்வான். உண்மையான ஸாது ஸதா ஸர்வகாலமும் ஈசுவரனைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருப்பான். அவ்வீசுவரன் எல்லா ஜீவர்களிடத்தும் இருக்கிறானென்பதை அவன் அறிந்துகொண்டு எல்லோருக்கும் தொண்டு செய்வான். இவைகள்தான் உண்மை ஸாதுவின் முக்கிய அடையாளங்கள்.

912. சரீரம் தோன்றியிருக்கிறது. அது மறுபடியும் நசித்துப் போகும். ஆனால் ஆத்மாவுக்கு மட்டும் நாசமே இல்லை. கொட்டைப் பாக்கைப்போல. பாக்கு முற்றினால், கொட்டை வேறு, மேல்தோல் வேறாக ஆய் விடும். முற்றாமல் காயாக

இருக்கும்போது அப்படிப் பிரித்தெடுப்பது மிகவும் கடினம். ஈசுவர தரிசனம் உண்டான பிறகு, ஆத்மா வேறு, சரீரம் வேறு என்ற ஞானம் உதிக்கும்.

913. தியானத்தில் தீவிரமான ஏகாக்ரம் உண்டாகிறது; அப்போது வேறொன்றும் கண்ணுக்குப் புலப்படாது; காதுகளிலும் விழாது. ஸ்பரிச உணர்ச்சியும் அகன்றொழிகின்றது. அப்போது, பாம்பு ஒன்று சரீரத்தின்மீது ஊர்ந்து போனாலும் ஒன்றும் தெரிவதில்லை. தியானிப்பவர்க்கும் உணர்ச்சியிருப்பதில்லை; பாம்புக்கும் கிடையாது.

914. ஆழ்ந்த தியானத்தில் இருக்கும்போது இந்திரியங்கள் எல்லாம் சக்தியற்றுக் கிடக்கின்றன. வெளிக்கதவு பூட்டப்பட்டாற்போல, மனம் உள்ளேயே அடங்கிவிடுகின்றது. சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் ஆகிய பஞ்சேந்திரியங்களின் விவகாரங்கள் தெரியாமல் வெளியே மறைகின்றன. முதலில், அதாவது தியானத் தொடக்கத்தில், கட்புலனாகக் கூடிய பொருள்கள் மனத்தின் முன்னர் எழுகின்றன. ஆனால் ஆழ்ந்த தியானத்தில் அப்பொருள்கள் தோன்றுவதில்லை. தள்ளிக் கதவு மூடப்பட்டாற்போலப் புறம்பே கிடக்கின்றன.

915. தாழ்ந்த சுபாவமுள்ளவர்கள்தான் வியாதிகளைக் குணமாக்கல், வியாஜ்யங்களை வெல்லல், நீர்மேல் நடத்தல் முதலிய ஸித்திகளை நாடி ஓடுவார்கள். உண்மைப் பக்தர்களோ வெனில் ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களைத் தவிர வேறெதையும் நாடுவதில்லை.

916. 'மஹாபாவம்' என்பது ஈசுவர தியானத்தின் மேலான நிலையாகும். அது உண்டாகும்போது, ஒரு யானையானது ஒரு குடிசையில் புகுந்து அதைக் குலுக்கிச் சின்னபின்னமாக்குவதைப்போலச் சரீரமும் மனமும் பயங்கரமாக அலைக்கழிக்கப்படுகின்றன. ஆயினும் அந்த நிலையில் முன்னால் எவ்வளவு துன்பம் இருக்கிறதோ அவ்வளவு இன்பம் அப்பால் உண்டாகின்றது.

917. ஈசுவர விராஹத்தால் (ஈசுவரனை விட்டுப் பிரிந்திருக்கிறோம் என்ற மனோபாவத்தால்) உண்டாகும் துயரம்

அளவற்றது. கௌரங்கஸ்வாமியின் சிஷ்யர்களான ரூப ஸநா தனர்கள் இந்த நிலையில் எந்த மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்தார் களோ அந்த மரத்தின் இலைகள்கூடக் கருகிப் போயிற்றும்! இந்த நிலைமையில் நான் மூன்றுநாள் அசைவற்றுக் கிடந்து, பெரும்பாலும் பிரக்ஞையற்றவனுகை இருந்தேன். எனக்குக் கொஞ்சம் ஞாபகம் வந்ததும், (தாந்தரீக ஸாதனைகளை உபதே சித்த) பிராம்மணி என்னை ஸ்நானத்துக்கு அழைத்துச் செல் வாள். ஆனுல், அவள் எனது சரீரத்தைத் தொட முடிய வில்லை யாகையால், ஒரு கனத்த துப்பட்டியை என்மீது போர்த்தி, போர்த்திய துணியின்மீது தன் கையை வைத்து என்னை அவள் பிடித்துக்கொண்டு செல்வாள். சரீரத்தின்மீது பூசிய மண்ணும் கருகிப் போயிற்று! அந்த நிலை வரும்போது, என் முதுகெலும்பின் வழியே ஒரு பெரிய ஈட்டியைச் சொருகி ஞற்போல உணர்வேன். சிற்சில வேளைகளில் நான் இறந்து போகிறேனென்றும் அழுதிருக்கிறேன். ஆனுல், அதன் பிற கெல்லாம் அளவுக்கடங்காத ஆனந்தம் எனக்கு உண்டாகும்.

918. ஒருவன் தனது விந்துவைப் பன்னிரண்டு வருஷம் வரையில் இழக்காது காப்பானுனல் அரிய சக்திகளைப் பெறு வான். அப்போது 'மேதை நாடி' என்ற புதிய நாடி ஒன்று சரீரத்தில் உற்பத்தியாகின்றது. அந்த நாடி உண்டாகுமாஞல் ஒருவன் எல்லா விஷயத்தையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வும், எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்ளவும் கூடும்.

919. விந்து விரயம் செய்யப்பட்டால் சக்திக்கும் நாச முண்டாகிறது. ஆனுல், தானே விந்து வெளிப்படுவதைப்பற்றிக் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. அது ஆகாரத்திஞல் ஏற்படு கிறது. ஆனுலும், உண்மையான சாதகன் ஒருவன் ஸ்திரீகளை அறியாதிருக்கவேண்டும்.

920. முற்றிலும் இந்திரிய நிக்ரகம் செய்தாலொழிய சூக்ஷ்மமான ஆத்மீய உண்மைகளைத் தெரிந்துகொள்ள முடி யாது.

921. பெண்ணாசையை ஒழித்தவன் உலகத்தையே துறந்தவனாவான். அவனுக்கு ஈசுவரன் வெகு சமீபத்திலிருக்கிறான்.

922. உண்மைப் பக்தனுடைய மனத்தில் முக்கால் பாகம் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது. உலக விஷயங்களைக் கவனிப்பதற்குப் பாக்கிக் கால்பங்கு மனமே அவனிடமுள்ளது. ஆதலால்தான் பக்தன் ஈசுவர ஸம்பந்தமான விஷயங்களைக் கேட்பதற்கு அத்யந்த ஜாக்கிரதையுள்ளவனாக விருக்கிறான். பாம்பின் வாலை மிதித்தால் வாலில் மட்டுமே உயிர் இருப்பதைப்போல அது சீறிவரும்.

923. பரமஹம்ஸர்களுடைய சுபாவமும் குழந்தையின் சுபாவமும் ஒரே தன்மையானவை. ஐந்து வயது குழந்தைக்கு ஸ்திரீ புருஷருடைய வித்தியாசம் தெரியாததைப்போல, அவர்களும் ஸ்திரீ புருஷர்களுடைய வித்தியாசத்தைத் தெரிந்து கொள்ளாதவர்களாக இருக்கின்றனர். என்றாலும் உலகத்தாருக்குத் திருஷ்டாந்தம் காட்டுவதற்காக அவர்கள் ஸ்திரீகளினின்றும் விலகி இருக்கவேண்டும்.

924. கள்ளங் கபடமற்ற மனமிருந்தால் ஈசுவரனை எளிதில் அடையலாம். கற்கள் இல்லாமல் உழுது பண்படுத்தப்பட்ட மிருதுவான பூமியில் போடப்படும் வித்து எளிதில் முளைத்துக் கிளம்பி, சீக்கிரத்தில் பயன் அளிப்பதைப்போல, கள்ளங் கபடமற்ற மனத்தில் ஆத்மீய உபதேசங்கள் எளிதில் பயன் அளிக்கின்றன.

925. உலகவாழ்க்கையினர் செய்யும் பக்தி ஸாதனைகள் தாற்காலிகமேயாம். அவைகள் சாசுவதமான அடையாளங்களை உண்டாக்குவதில்லை. ஆனால் ஈசுவரனுக்கே தங்களை அர்ப்பணம் பண்ணியவர்கள், ஒவ்வொரு மூச்சிலும் பகவந்நாமத்தையே உச்சரிக்கின்றனர். சிலர், "ராம், ராம்" என்று எப்போதும் வாய்க்குள்ளேயே சொல்லிக்கொண்டிருப்பார்கள். ஞான மார்க்கத்தை அநுஷ்டிப்பவர்கள், "ஸோஹம்," என்று சொல்லுவார்கள். இன்னும் சிலருடைய நாக்கு சதா சர்வ காலமும் மந்திரோச்சார

ணத்தாலேயோ பிரார்த்தனையாலேயோ அசைந்துகொண்டே யிருக்கும்.

926. தியானமும் சிந்தனையும் சதாகாலமும் செய்ய வேண்டும்.

927. ஞானத்தை அடையக்கூடியவர்கள் வெகு சிலரே. ஆயிரம் பேர்களில் ஒருவரே ஈசுவரனை அறிய விரும்புகின்றனர் என்றும், அவ்விதம் விரும்பும் ஆயிரம் பேர்களில் ஒருவரேதான் அவனை அறிகின்றனர் என்றும் கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. காமமும் காசாசையுமாகிய உலக விஷயங்களில் விருப்பம் குறையும் அளவுக்கு ஏற்ப ஞானம் அதிகரிக்கும்.

928. உலக வாழ்க்கைக்குப் பணத்தின் உதவி அவசியந்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதைப் பற்றியே வெகுவாகச் சிந்தித்துக்கொண்டிராதே. தானே கிடைக்கக் கூடியதைக் கொண்டு திருப்தியடைவதே மேலான குணம். பணத்தைச் சேர்த்து வைக்கவேண்டுமென்ற கவலை கொள்ளாதே. ஈசுவரனுக்குத் தங்களுடைய உடல் உயிர் அனைத்தையும் அர்ப்பணம் பண்ணி, அவன்தான் தஞ்சமென்று சரணமடைந்த பக்தர்கள் இப்படிப்பட்ட பணவிஷயங்களைப்பற்றிக் கவனிக்கிறதில்லை. அவர்களுடைய வரவுக்குத் தகுந்த செலவிருக்கும். ஒரு வழியிலிருந்து வரும் பணம் இன்னொரு வழியாய்ச் செலவழிந்து போம்.

929. பரிபூரணமானவர்களை, சாக்தர்கள் கௌலரென்றும், வேதாந்திகள் பரமஹம்ஸரென்றும், பௌல வைஷ்ணவர்கள் ஸாய்யி யென்றும் கூறுகின்றனர்.

930. எல்லா வேலைகளையும் அப்பால் போட்டுவிட்டு, ஸாயங்கால வேளைகளில் நீ பகவத்யானம் செய்யவேண்டும். அஸ்தமன காலந்தான் ஈசுவர ஞாபகம் தானுகவே வரும் தருணம். சற்று முன்னுல் உலகப்பொருள்கள் எல்லாம் கட்புலப்பட்டன. இப்போது அவைகள் அந்தகாரத்தில் மறைந்து கிடக்கின்றன. இப்படிச் செய்தவன் யாவன்? என்ற இவைபோன்ற சிந்தனை

கள் அப்போது உண்டாகின்றன. முகம்மதியர்கள், எல்லா வேலைகளையும் புறக்கணித்துவிட்டு, சாயந்தர வேளைகளில் தொழுவதற்கு உட்காருவதை நீ கவனித்ததில்லையா?

931. நீ ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் பொருள் எல்லாம் ஆயிரமடங்காக உனக்குத் திருப்பிக் கொடுக்கப்படும். ஆதலால், நீ செய்யும் சத்கர்மங்களின் பலன் எல்லாம் "கிருஷ்ணார்ப்பணமாகட்டும்" என்று கருதி, ஒரு கை ஜலம் அள்ளிவிட வேண்டும்.

932. யுதிஷ்டிரர், தமது பாபங்களைக்கூடக் கிருஷ்ண பரமாத்மாவுக்கு அர்ப்பணம் பண்ணப்போகையில், "அப்படிச்செய்யாதீர்கள்; கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் பண்ணும் பொருள்கள் எல்லாம் ஆயிரம் மடங்காகி உம்மிடம் திரும்பிவரும்," என்று பீமசேனன் சொல்லித் தடுத்தான்.

933. தான் செய்யும் பக்தி ஸாதனைகளை எவ்வளவுக் கெவ்வளவு பிறர் அறியாமல் செய்துகொள்ளக் கூடுமோ அவ்வளவுக் கவ்வளவு பக்தனுக்கு நல்லது.

934. சில சமயம் மானிட வடிவத்திலும் சில சமயம் சின்மயரூபமாகவும் பல விதங்களில் ஈசுவரன் பிரத்யக்ஷமாகிறான். ஆனால் திவ்யரூபங்களில் ஒருவனுக்கு நம்பிக்கை வேண்டும்.

935. கிருஷ்ண பரமாத்மாகூட ராதா யந்திரத்தைக் கொண்டு வெகு கடுமையாகச் சாதனை புரிந்தார். யந்திரமாவது பிரம்மயோனி. அதைத் தியானித்து வழிபாடு செய்வது ஸாதனை. இந்தப் பிரம்மயோனியிலிருந்து கோடிக்கணக்கான உலகங்கள் உண்டாகின்றன.

936. குண்டலினி சக்தி எழுந்தாலொழிய ஆத்மீய உணர்ச்சிகள் உண்டாகமாட்டா. மூலாதாரத்தில் குண்டலினி சக்தி செய்கையற்றுக் கிடக்கின்றது. எழுப்பப்பட்டதும், அது சுஷும்ண நாடியில் நுழைந்து, ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் முதலிய ஆதாரங்களின் வழியாகச் சென்று, கடைசியில் கபால ரந்திரத்தில், அதாவது சகஸ்ராரத்தில் சேர்கின்றது. அப்பால்

ஸமாதி ஸித்தியாகிறது. இவைகளை யெல்லாம் நான் நேரில் கண்டிருக்கிறேன்.

937. சாந்தமான இடத்தில் உட்கார்ந்து கொண்டு, பகவந் நாமத்தை மௌனமாக உச்சரிப்பதுதான் ஜபம். ஏகாக்ர சித்தத்துடன் ஒருவன் ஜபம் செய்வானுனல் அவனுக்குத் திவ்ய தரிசனம் உண்டாவது நிச்சயம். அதாவது அவன் நிச்சயமாக ஈசுவரனை அடைவான். ஒரு தடாகத்தில் ஒரு பெரிய மரக்கட்டை கிடக்கிறது. அதன் ஒரு கோடியில் பிணைக்கப்பட்டிருக்கும் சங்கிலியானது கரையோடு சேர்த்துக் கட்டப்பட்டிருக்கிறது. சங்கிலியைப் பிடித்துக்கொண்டு கணுக்கணுவாய்த் தாண்டிச் சென்றால் நீ அந்தக் கட்டையினிடம் போய்விடுவாய். அதுபோல, ஜபத்தின் மூலமாக ஒருவன் ஈசுவரனையே பற்றிச் சிந்தித்து, தியானத்தில் ஆழ்ந்திருப்பானுனல், அவன் கடைசியில் அவ்வீசுவரனை அடைவது நிச்சயம்.



# 41. உவமைக் கதைகள்

938. "உலகம் பிரம்மமயம்," என்ற திவ்யமான அத்வைதக் கொள்கையை ஒரு அரசனுக்கு அவனுடைய குரு உபதேசம் செய்தார். இதனால் அரசன் வெகு சந்தோஷம் அடைந்தவனாகி, அரண்மனைக்குள்ளே சென்று தனது பட்ட மகிஷியை நோக்கி, "ராணிக்கும் ராணியின் வேலைக்காரிக்கும் யாதொரு வித்யாசமுமில்லை. ஆதலால் இது முதல் வேலைக்காரியே ராணியாக இருக்க வேண்டியது," என்றான். இப்படி மதியீனமாகத் தனது நாயகன் சொன்னதைக் கேட்ட ராணி இடிவிழுந்தாற்போலப் பிரமித்துப் போனாள். உடனே அவள் குருவை வரவழைத்து, "ஸ்வாமி, தங்களுடைய உபதேசத்தினால் வந்த கெடுதியைப் பாருங்கள்," என்று நடந்த சமாசாரத்தைச் சொல்லி அழுதாள். குரு அவளைத் தேற்றி, "இன்றையதினம் கலத்தில் அன்னம் பரிமாறும்போது ஒரு சட்டிச் சாணியையும் கூட வை," என்று சொல்லிப் போனார். போஜன சமயம் வந்ததும், அரசனும் குருவும் சாப்பிட உட்கார்ந்தனர்! அன்னத்தின் அருகில் சாணமும் வைக்கப்பட்டிருந்ததைக் கண்ட அரசனுக்கு அளவு கடந்த கோபம் வந்தது. இதைப் பார்த்த குரு, வெகு சாந்தமாக, "ராஜனே! உனக்கு அத்வைத ஞானம் வெகுவாக உண்டே; சாணி வேறு அன்னம் வேறு என்ற வித்தியாசம் எப்படி உனக்கு வந்தது?" என்று கேட்டார். அரசனுக்கு இன்னும் கோபம் அதிகரித்தது. ஆகவே அவன், "அத்வைதி என்று பெருமை பேசிக்கொள்ளுகிற நீர்தாம் இந்தச் சாணியைச் சாப்பிடும் பார்ப்போம்," என்றான். "நல்லது" என்று குரு சொல்லிக்கொண்டு, ஒரு பன்றியாக உடனே மாறி, அத்யந்த சந்தோஷத்துடன் சாணியை விழுங்கிவிட்டு மறுபடியும் மனித ரூபத்தை எடுத்துக்கொண்டார். அரசன் வெட்கப்பட்டுப் போனான். மறுபடியும் அவன் அதைப்போன்ற மதியீனமான பேச்சைத் தன் மனைவியிடம் பேசினதே இல்லை.

939. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது பத்னியுடன் கிருகஸ்தாசிரமத்தில் இருந்து குடும்ப வாழ்க்கையைக் கைக் கொள்ளாததற்குக் காரணமென்ன என்பதை ஒருவர் கேட்டார். அதற்குப் பகவான் பின்வருமாறு பதில் சொன்னார்.

ஒருநாள் கார்த்திகேய பகவான் தம் நகத்தால் ஒரு பூனையைக் கீறினார். வீட்டுக்குச் சென்றதும், தமது அன்னையின் கன்னத்தில் விரலாற் கீறிய அடையாளம் இருப்பதைக் கண்டார். கண்டதும், "தாயே! உனது கன்னத்தில் இந்த வடு எப்படி உண்டாயிற்று?" என்று கேட்டார். ஜகன் மாதாவானவள், "குழந்தாய்! இது உன் கைக்காரியம் தான்; உனது கை நகத்தின் வேலை," என்றாள். கார்த்திகேயர் திடுக்கிட்டு, "எப்படி யம்மா! நான் உன்னை ஒருபோதும் கீறினதில்லையே," என்றார்.

"குழந்தாய்! இன்று காலையில் நீ ஒரு பூனையைக் கீறினதை மறந்து போய்விட்டாயா?"

"ஆமாம்; கீறினேன். ஆனால் உன்னுடைய கன்னத்தில் வடுவேற்பட்டதன் காரணமென்ன?"

"குழந்தாய்! உலகத்தில் உள்ள ஸர்வ ஜீவராசிகளும் நானே; ஸகல சிருஷ்டியும் நான் தான். ஆதலால், நீ யாரைத் தொந்தரவு செய்தாலும் அது என்னையே தொந்தரவு செய்ததாகிறது."

இதைக் கேட்டதும் கார்த்திகேயருக்கு ஆத்யாச்சரிய முண்டாயிற்று. அப்பால், அவர் ஒருவரையும் கல்யாணம் பண்ணிக் கொள்வதில்லையென நிச்சயித்தனர். ஏனெனில், அவர் யாரைக் கல்யாணம் செய்வது? ஒவ்வொரு ஸ்திரீயும் அவருக்குத் தாய் ஆயினள். ஆதலால், அவர் கல்யாணம் செய்து கொள்ளவில்லை.* நான் கார்த்திகேயரைப் போன்றிருக்கிறேன். ஒவ்வொரு ஸ்திரீயும் எனக்குத் திவ்ய மாதாவாகவே தோன்றுகின்றனள்.

940. ஒரு பிராம்மணனும் ஒரு ஸந்யாஸியும் சந்தித்து வெகுநேரம் லௌகிக வைதீக விஷயங்களைப் பற்றிப் பேசிக்

---

* வடநாட்டில் கார்த்திகேயர் எப்போதும் பிரம்மசாரியாகவே இருக்கின்றார் என்ற கொள்கையை மக்கள் கொண்டிருக்கின்றார்கள்.

கொண்டிருந்தனர். கடைசியாக, ஸந்யாஸி பிராம்மணனை நோக்கி, "பாரப்பா, இவ்வுலகத்தில் ஒருவரை யொருவர் சார்ந்திருப்பதென்பதே இல்லை," என்றார். பிராம்மணனுக்கு இதில் நம்பிக்கை உண்டாகவில்லை. இரவும் பகலும் அவனுடைய குடும்பத்தாருக்காக அவன் வருந்திப் பாடுபடவில்லையா? அப்படி யாருக்காகப் பாடுபடுகிறானோ அவர்கள் அவனுக்குத் துணை செய்யமாட்டார்களா? ஆகவே, பிராம்மணன் ஸந்யாஸியைப் பார்த்து, "ஸ்வாமி! எனக்குச் சற்று தலைவலியுண்டானாலும், எனக்காக உயிரைக்கூட விடக்கூடிய என் தாயார் பெரிதும் வருந்துகிறாள்; அப்படிப் பட்டவள் எனக்குத் துணையாக மாட்டாள் என்பதை நான் நம்பவில்லை," என்றான். ஸந்யாஸியானவர், "அப்பா! நீ சொல்வது வாஸ்தவமானால், அவள் உனது துணைவிதான். ஆனால் உண்மையைச் சொல்லவேண்டுமானால், உனது அபிப்பிராயம் தப்பென்றே சொல்லுவேன். உனது தாய், மனைவி, மக்கள் இவர்கள் உனக்காக ஒருபோதும் தங்களுடைய உயிரை விடமாட்டார்கள் என்பதை நம்பு. வேண்டுமானால் இதை நீ சோதிக்கலாம். வீட்டுக்குப் போனதும், உனக்குப் பொறுக்க முடியாத வயிற்றுவலி இருப்பதாகச் சொல்லி ஓலமிடு. நான் வந்து வேடிக்கை காட்டுகிறேன்," என்றார்.

பிராம்மணன் அப்படியே செய்தான். வைத்தியர்கள் பலர் வந்தனர். ஆயினும் அவனது நோய்க்குக் குணம் ஏற்படவில்லை. நோயாளியின் தாயார் பெருமூச்சு விட்ட வண்ணமாகவே இருந்தனள். அவனுடைய மனைவி மக்கள் கண்ணீர் விட்டு அழுது கொண்டிருந்தனர். அத்தருணத்தில் மேற்கூறிய ஸந்யாஸி உள் நுழைந்தார். நோயாளியைப் பார்த்துவிட்டு அவர், "இந்த வியாதி வெகு கடுமையானது; குணத்தைத் தரக்கூடிய சிகிச்சை ஒன்றுமில்லை. ஆனால், யாராவது ஒருவர், இவனுக்காகத் தமது உயிரை விடுவதாகவிருந்தால் குணம் உண்டாகலாம்," என்றார். இதைக்கேட்டதும் எல்லாரும் திடுக்கிட்டுப்போயினர். ஸந்யாஸி நோயாளியின் தாயைப் பார்த்து, "அம்மா, உன் தள்ளாத வயதில், உங்களை யெல்லாம் காப்பாற்றுகிற மகனை இழக்கும்படி நேருமானால், நீ இருப்பதும் இறப்பதும் ஒன்றுதான். உன் மகனுக்காக நீ

உயிரை விடத் துணிவாயானால், நான் உன் மகனைக் காப்பாற்றக் கூடும். தாயாகிய நீயே இந்தப் பிரகாரம் செய்யாமல் போனால் வேறு யார் செய்வார்?" என்றார்.

கிழவி கண்ணும் கண்ணீருமாய் நின்று தழுதழுத்த குரலில், "ஸ்வாமி! எனது மகனுக்காகத் தேவரீர் சொல்வதை யெல்லாம் செய்யத் தயாராக விருக்கிறேன்; ஆயினும், என் உயிர்—இல்லை இல்லை; என் மகன் உயிரைக் காட்டிலும் என் உயிர் மேலானதா?—என் மற்ற குஞ்சு குழந்தைகளின் கதி என்னவாகுமென்பதுதான் என்னை வருத்துகின்றது. இவைகள் எனக்குக் குறுக்காக விருந்து தடுக்கின்றன," என்றாள்.

இவர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருந்த நோயாளியின் மனைவி பிரமாதமாக அழுது, தனது பெற்றோர்களை விளித்து, "ஐயோ, உங்கள் பொருட்டல்லவா நான் இப்பொழுது உயிரை விட முடியாதவளாய் இருக்கிறேன்," என்று புலம்பினாள். ஸந்யாஸி அவளைப் பார்த்து, "அம்மா! உனது மாமியார் உன் புருஷனுக்காக உயிரைவிடத் துணியவில்லை. நீயாவது துணிவாயா?" என்று கேட்டார். "ஐயோ! நான் கொடிய பாவி! நான் தாலி அறுத்துப் போகவேண்டுமென்பது விதியானால் போகிறேன். என் உயிர் போனால் என் பெற்றோர்கள் தவிப்பார்கள்!" என்றாள். இவ்விதம் ஒவ்வொருவராக மறுத்து விட்டனர். அப்பால், ஸந்யாஸி நோயாளியைப்பார்த்து, "பார்த்தாயா! ஒருவராவது உனக்காகத் தனது உயிரை விடத் துணியவில்லை. உலகத்தில் ஒருவரையொருவர் சார்ந்திருப்பதில்லை என்று நான் சொன்னதை இப்போதாவது தெரிந்து கொண்டாயா?" என்றார். அதையெல்லாம் கண்ட பிராம்மணன், கிருகஸ்தாசிரமத்தை விட்டு விட்டு ஸந்யாஸியைத் தொடர்ந்து போனான்.

941. மனிதனுடைய புண்ய பாவங்கள் அவனுடைய காரியங்களைச் சார்ந்தில்லாமல் அவனுடைய மனநிலைமையைத்தான் சார்ந்துள்ளன. இரண்டு நண்பர்கள் கூடிப்போகையில், ஸ்ரீமத் பாகவதம் வாசிக்கப்படும் இடத்தை யடைந்தனர். அவர்களில் ஒருவன், "நண்பா! இங்கே சற்று தாமதித்து இந்த ஸத்வார்த்

தைகளைக் கேட்கலாமே," என்றான். மற்றவன், "பாகவதத்தைக் கேட்பதினால் என்ன சுகம்? தாஸி வீட்டில் போய் இன்பம்நுகரலாம் வா," என்றான். முன்னவன் இதற்கு இணங்கவில்லை. ஆதலால் அவன் பாகவதம் படிக்கப்படும் இடத்தில் உட்கார்ந்து கதை கேட்கத் தொடங்கினான். மற்றவனோ, தாஸி வீட்டுக்குப் போனான். என்றாலும் அவனுக்கு அங்கு இன்பம் ஏற்படவில்லை. "அடா! என்னசெய்துவிட்டேன்! ஏன் இங்கு வந்தேன்? எனது நண்பன், ஹரியின் திவ்ய சரித்திரத்தைக் கேட்டுக்கொண்டு, மகிழ்ந்திருப்பான்," என்று நினைத்துக் கொண்டு, தாஸி வீட்டிலிருந்த போதிலும் ஹரியைப்பற்றி நினைத்திருந்தான். பாகவதத்தைக் கேட்க உட்கார்ந்தவனுக்கும் இன்பம் உண்டாகவில்லை. "என் நண்பனோடு தாஸி வீட்டுக்குப் போயிருந்தால் அவனைப் போல நானும் இன்ப நுகர்ச்சி பெற்றிருக்கலாம்," என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆகவே, இவன் பாகவத படனம் செய்யும் இடத்தில் இருந்தபோதிலும், அதைக் கேட்காமல் தாஸி வீட்டைப்பற்றிய சிந்தனை யுள்ளவனாக இருந்தபடியால், அங்கு நேரில் போகாத போனாலும், வாஸ்தவத்தில் போவதால் பெறக்கூடிய பாபத்தை அடைந்தான். தாஸி வீட்டுக்குச் சென்றவன் பாகவத படனத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தபடியால், அவனுக்கு அந்தக் கெட்ட விடத்திலும் கூடப் புண்ணியமே லபித்தது.

942. ஒரு வெள்ளாடு, தன் தாயுடன் சூன் மாதத்தில் வெகு உல்லாஸமாகத் துள்ளி விளையாடிக் கொண்டிருக்கையில், தாயைப் பார்த்து, "ராஸலீலை என்னும் பண்டிகை காலத்தில் விசேஷமாய்ப் புஷ்பிக்கும் ராஸப் புஷ்பத்தை ஏராளமாகத் தின்று பண்டிகை கொண்டாடப்போகிறேன்," என்றது. அதற்கு அந்தத் தாய் ஆடு, "குழந்தாய்! நீ நினைக்கிறபடி அது அவ்வளவு சுலபமான காரியமன்று. ராஸப் புஷ்பத்தினால் பண்டிகை கொண்டாடுவதற்கு முன்னால் நீ அனேகம் கண்டங்களினின்றும் தப்பிப் பிழைக்கவேண்டி யிருக்கிறது. வருகிற செப்டம்பர் மாதந் தொடங்கி அக்டோபர் முடிய உனக்குப் பொல்லாத காலம். துர்க்கா பூஜைக்கு உன்னை யாராவது பலிகொடுத்து

விடுவார்கள். அடுத்துக் காளிபூஜை வருகிறது. அதையும் தப்பினால், ஜகதாத்ரி பூஜை வரும். அப்போது உயிர் தப்பியிருக்கும் எல்லா ஆடுகளையும் பலியிட்டுவிடுவார்கள். இந்தக் கண்டங்களுக் கெல்லாம் நீ தப்பிப் பிழைப்பாயானால், நவம்பர் மாதத்தில் ராஸப் புஷ்பப் பண்டிகையை நீ கொண்டாடலாம்," என்று சொல்லிற்று. தாய் ஆடு சொன்னதைப்போல, நமது வாணாளில் நேரிடக்கூடிய கண்டங்களை உணர்ந்து, இளமையில் மனத்தில் தோன்றும் எல்லாவித ஆசாபாசங்களும் பூர்த்தியாகக் கூடியவை யென நினைந்திருக்கக் கூடாது.

943. ஒரு மனிதன் ஒரு ஸாதுவிடம் போய், தன்னை மிகவும் பணிவுடையவனாகக் காட்டிக்கொண்டு நின்று, "ஸ்வாமி! நான் மிகவும் தாழ்ந்தவன்; நான் கடைத்தேறும் வழி இன்னதென்பதைச் சொல்லி யருளவேண்டும்," என்றான். இவனுடைய உள்ளக் கருத்தை யறிந்த ஸாதுவானவர், "நல்லது; முதலில் உன்னைக் காட்டிலும் தாழ்ந்ததான பொருளைக் கொண்டுவா," என்றார். அம்மனிதன் அவ்வாறே சென்று எங்கும் தேடிப் பார்த்தான்; அவனைக் காட்டினும் தாழ்ந்த தொன்றைக் காணவில்லை. கடைசியாக அவன் தன்னுடைய மலத்தைக் கண்டு, "இதோ ஒன்று என்னைக் காட்டிலும் தாழ்ந்ததாகக் கிடைத்தது," என்று எண்ணிக்கொண்டு, அதை எடுத்து ஸாதுவிடம் கொண்டு போவதற்காகக் கையை நீட்டினான். அத்தருணத்தில் அம்மலத்தின் உள்ளிருந்து, "ஏ பாபியே! என்னைத் தொடாதே; நான் இனிமையான பணியாரமாக விருந்தேன். தேவர்களுக்கு நிவேதனம் பண்ணக் கூடியதாயும், பார்ப்போருடைய கண்ணுக்கு இன்பம் தரக்கூடியதாயும் இருந்த என்னை எனது துரதிருஷ்டம் உன்னிடம் கொண்டு சேர்த்தது; உனது ஸஹவாசத்தினால் நான் இந்தக் கேவலமான நிலைமையை அடைந்தேன். என்னைக் கண்டவர்கள் முகத்தைத் திருப்பிக்கொண்டும் மூக்கைப் பிடித்துக்கொண்டும் அப்பால் போய்விடுகின்றனர். உன்னோடு ஒரு தரம் ஸஹவாஸம் செய்ததினாலேயே எனக்கு இந்த துர்த்தசை உண்டாயிற்று. இன்னுமொருதரம் என்னை நீ தொடுவாயானால், எனக்கு இன்னும் தாழ்ந்த நிலைமை யுண்டாகாதா?" என்ற

வார்த்தைகள் கிளம்பின. இதனால் அம்மனிதன் வாஸ்தவமான பணிவு இன்னதென்பதைத் தெரிந்துகொண்டான். அது காரணமாக அவன் பூரண ஞானத்தை யடைந்தான்.

944. ஒரு மனிதனுச்குக் கடன் வெகு ஜாஸ்தியாகிவிட்டது. அதினின்றும் தப்பித்துக்கொள்வதற்காக அவன் பைத்தியம் பிடித்தவன்போலப் பாசாங்கு செய்து கொண்டிருந்தான். வைத்தியர்களால் யாதொரு குணமும் உண்டாகவில்லை. மருந்து அதிகமாக உள்ளுக்குச் செல்லச் செல்லப் பாசாங்குப் பைத்தியமும் அதிகரித்தது. கடைசியாக, கெட்டிக்காரனான வைத்தியன் ஒருவன் உண்மையைத் தெரிந்துகொண்டு, போலிப்பைத்தியனைத் தனியாக அழைத்துப்போய், "அடே! நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்! ஜாக்கிரதை! பைத்தியம் என்று பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தால், வாஸ்தவமாகவே உனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். இப்போதே உன்னிடம் சில பைத்தியக் குறிகள் தென்படுகின்றன," என்றான். இதைக்கேட்ட அம்மனிதன் பயந்து போய் பைத்தியமெனப் பாசாங்கு செய்வதை விட்டு விட்டான். இடைவிடாது நீ எவ்விதம் இருப்பதாகக் காட்டிக் கொள்ளுகிறாயோ, அவ்விதமாகவே ஆகிவிடுவாய்.

945. ஒரு பணக்காரன் தன்னுடைய சொத்துக்களையெல்லாம் ஒரு காரியஸ்தனிடம் ஒப்புவித்திருந்தான். இந்தச் சொத்துக்கள் யாருடையவை என்று வேறு யாரேனும் கேட்டால், அந்தக் காரியஸ்தன், "இவையெல்லாம் என்னுடையவை. இந்தத் தோட்டம் வீடு முதலியவை எல்லாம் என்னைச் சேர்ந்தவை," என்று வீண் கர்வம் பேசிக்கொண்டு திரிவது வழக்கம். அந்தப் பணக்காரன், ஒரு குளத்தில், யாரும் மீன் பிடிக்கக் கூடாதென்று கண்டிப்பான உத்திரவிட்டிருந்தான். இந்த உத்திரவை மீறி, காரியஸ்தன் மீன் பிடித்துக் கொண்டிருந்தபோது, எஜமானனே நேரில் வந்து பார்த்து விட்டான். தனது காரியஸ்தனுடைய அயோக்கியத் தனத்தைக் கண்ட எஜமானன், அவனை வீட்டை விட்டுத் துரத்தியதன்றி, அவமானப்படுத்தி, அவன் சேர்த்து வைத்திருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு விட்டான். சொத்து முழுமையும் தன்னுடைய தென்று பெரு

மை பேசிக்கொண்ட காரியஸ்தனுக்குத் தனக்குச் சொந்தமான சொம்பு தவலைகள் அடங்கியிருந்த ஒரே ஓட்டைப் பெட்டியைக் கூட எடுத்துப் போக வழியில்லாது போயிற்று. வீண் கர்வத்தினுல் வரும் பலன் இதுதான்.

946. ஒரு ஸந்யாஸி ஒரு கோவிலுக்குப் பக்கத்தில் வசித்து வந்தார். அவருடைய வாசஸ்தானத்துக்கு எதிரில் ஒரு தாஸியின் வீடு இருந்தது. அந்த வேசியின் வீட்டில், சதாசர்வ காலமும் புருஷர்கள் கூடியிருப்பதைக் கண்ட அந்த ஸந்யாஸி, ஒருநாள் அவளைக் கூப்பிட்டு, "நீ ஒரு பெரும் பாவியாகி விட்டாய். இரவும் பகலும் நீ பாபம் செய்தவாருகவே இருக்கிருய். உன் கதி என்னவாகுமோ!" என்று கண்டித்தார். தான் செய்த பாபத் தொழில்களுக்குப் பெரிதும் வருந்திய தாஸி, வெகுவாகப் பச்சத்தாபப் பட்டுத் தன்னை மன்னித்தருள வேண்டுமென்று உள்ளன்போடு ஈசுவரனை நோக்கிப் பிரார்த்தித்தாள். என்றாலும், வேசைத் தனமே அவளுடைய குலத்தொழிலாகையால் வேறு வகையால் அவளுக்குக் காலக்ஷேபம் செய்ய முடியவில்லை. ஆயினும், வயிற்றுப் பிழைப்புக்காகச் சரீரத்தை விற்றபோதெல்லாம் அவள் உள்ளங் குழைந்து மன்னிப்புக்காக ஈசுவர ஸ்துதி செய்வது வழக்கம். ஸந்யாஸியோ, தான் சொன்னதைத் தாசி கேட்கவில்லையென்று எண்ணி, "இவளுடைய ஆயுட் காலத்துக்குள் எத்தனை பேர் இவளிடம் வருகிருர்கள் என்பதைப் பார்க்க வேண்டும்," என்று நிச்சயித்துக்கொண்டு; அன்று முதல் அவளைக் கவனிப்பதிலேயே கருத்தாயினர். யாரேனும் ஒருவர் அந்த வேசையின் வீட்டுக்குள் நுழைந்தால், உடனே அந்த ஸந்யாஸி ஒரு கூழாங்கல்லை எடுத்துப்போட்டு எண்ணிக் கொள்வார். இப்படிப்போட்ட கற்கள் பெரிய குவியலாகக் குவிந்தன. ஒருநாள் அந்தச் சந்யாஸி, இந்தக் கற்குவியலைத் தாசிக்குக் காட்டி, "பெண்ணே! இந்தக் குவியலைப் பார்த்தாயா? நான் எந்தக் காரியத்தைச் செய்யவேண்டாமென்று சொன்னேனே, அந்தக் காரியத்தை நீ எத்தனைதரம் செய்திருக்கிருய் என்பதை இந்தக் குவியலில் உள்ள கற்கள் ஒவ்வொன்றும் தெரிவிக்கும். இன்னும்

சொல்லுகிறேன். வீணாகக் கெட்டுப் போகாதே," என்றார். தனது பாபக் குவியலைக் கண்ட தாஸிக்கு நடுக்க முண்டாயிற்று. ஆகவே அவள் கண்ணும் கண்ணீருமாய் நின்று உள்ளம் வருந்தி, "ஈசுவரா! இந்தத் தீய செய்கையை இனி நான் செய்யா வண்ணம் என் உயிரைக் கொண்டுபோக மாட்டாயா?" என்று பிரார்த்தித்தாள். அந்தப் பிரார்த்தனையின் படியே அவள் உயிரை எமன் அன்றிரவே கொண்டுபோனான். ஈசுவரனுடைய இச்சையை என்னென்று சொல்வது! அதே நாளில் அந்த ஸந்யாஸியும் இறந்து போனார். வைகுண்டத்திலிருந்து விஷ்ணு தூதர்கள் வந்து அந்தத் தாஸியின் உயிரைச் சுவர்க்கத்துக்குக் கொண்டு போக, எமபடர்கள் வந்து நரகத்துக்குக் கொண்டு போவதற்காக அந்த ஸந்யாஸியின் உயிரைக் கட்டிப் பிணித்தனர். தாஸியின் நற்கதியை நோக்கிய ஸந்யாஸி, "இதுதானா ஈசுவரனுடைய நீதி? ஆயுள் முழுவதும் தவம் செய்த என்னை நரகத்துக்கும், தினந்தோறும் பாபம் செய்த தாஸியை மோக்ஷத்துக்கும் கொண்டுபோவது நியாயமா?" என்று கூறினார். விஷ்ணு தூதர்கள் இதைக்கேட்டு, "ஈசுவரனுடைய ஆக்ஞை எப்போதும் நியாயமானதாகவே இருக்கும். நீ எதை நினைக்கிறாயோ அதையே அனுபவிப்பாய். கௌரவத்தையும் புகழையும் பெறவேண்டி நீ வீண் படாடோபத்துடன் காலங்கழித்தாய். ஈசுவரன் உனக்கு அவற்றைக் கொடுத்தான். உனது மனம் ஒருபோதும் அந்தரங்கத்துடன் அவனை நாடினதில்லை. இந்த வேசையோ சரீரத்தால் பாபம் செய்தனள் என்றாலும், இரவும் பகலும் மனமார ஈசுவரனைத் துதித்து வந்தாள். பூலோகத்தில் உன் சரீரமும் அவள் சரீரமும் அடையும் மரியாதையைப் பார். நீ சரீரத்தால் பாபம் செய்ததில்லை. ஆகவே உனது சரீரத்தைப் புஷ்பங்களால் அலங்கரித்து, ஆற்றில் இடுவதற்காக மேளதாளத்துடன் ஊர்கோலம் கொண்டு போகின்றனர். பாபம் செய்த இந்த வேசையின் உடலை இந்த க்ஷணத்தில் நாயும் நரியும் பிடுங்கித் தின்கின்றன. என்றாலும் அவள் சுத்தமான மனமுடையவளாதலால், சுவர்க்கத்துக்குப் போகிறாள். உன் மனம் எப்போதும் அவளுடைய பாபச் செயல்களையே பற்றிச் சிந்தித்திருந்தபடியால் அசுத்தமாயிற்று; ஆத

லால் நீ அசுத்தாத்மாக்களிடம் போகிறாய். வாஸ்தவத்தில் நீதான் வேசையானாய், அவள் வேசையல்ல," என்று பதில் கூறினார்.

947. ஒரு பிராம்மணன் புதிதாக ஒரு தோட்டம் உண்டாக்கி அதை இரவு பகலாய்க் காப்பாற்றி வந்தான். ஒருநாள் ஒரு பசு, அத்தோட்டத்துக்குள் நுழைந்து, பிராம்மணன் வெகு அருமையாக வளர்த்து வந்த மாஞ்செடியை மேய்ந்துவிட்டது. இதனால் கோபங்கொண்ட அப்பிராம்மணன், பசுவை வெகு பலமாய் அடிக்க, அது அடி பொறுக்கமாட்டாமல் இறந்துபோய் விட்டது. உடனே, பிராம்மணன் பசுவைக் கொன்றுவிட்டான் என்ற சமாசாரம் ஒரு நொடியில் ஊரெங்கும் பரவியது. பிராம்மணனோ, வேதாந்தியென்று வேஷம் போட்டவனாதலால், பசுவைக் கொன்ற குற்றத்தை ஒப்புக்கொள்ளாமல், "நான் பசுவைக் கொல்லவில்லை. என் கை கொன்றது. இந்திரன் கைக்கு அதிதேவதை. ஆகவே பசுவைக் கொன்ற தோஷம் இந்திரனைச் சேர்ந்தது. என்னைச் சேர்ந்ததல்ல," என்று சொன்னான்.

தேவலோகத்திலுள்ள இந்திரன் இதைக்கேட்டு, ஒரு கிழப் பிராம்மண உருவத்துடன் அந்தத் தோட்டத்துக் குடையவனிடம் வந்து, "ஸ்வாமி! இந்தத் தோட்டம் யாருடையது?" என்று கேட்டான்.

பிராம்மணன்:—என்னுடையது.

இந்திரன்:—இது வெகு நேர்த்தியாக விருக்கிறது. உனது தோட்டக்காரன் கெட்டிக்காரன் போலும். இந்த மரங்கள் வெகு அழகாயும் வரிசையாயும் நடப்பட்டிருக்கின்றன.

பிராம்மணன்:—இதுவும் நான் செய்ததுதான். மரங்களெல்லாம் என்னுடைய ஏற்பாட்டின்படியேதான் எனக்கெதிரில் நடப்பட்டன.

இந்திரன்:—ஸரிதான்; நிரம்பவும் அழகாக விருக்கிறது. இந்தப் பாதை யார் போட்டது? வெகு நேர்த்தியாய்ப் போட்டு முடிக்கப் பட்டிருக்கிறது!

பிராம்மணன்:—இதுவும் என் வேலைதான்.

இதைக்கேட்ட இந்திரன், கூப்பிய கையினனாய், "ஸ்வாமி! இவை யெல்லாம் உம்முடையவை யென்கிறீர்; இந்தத் தோட்டத்

தில் செய்யப்பட்டிருக்கும் வேலைகளுக்கெல்லாம் கீர்த்தி உமக்கு வரவேண்டுமென்கிறீர். ஆனால், பசுவைக்கொன்ற தோஷத்துக்கு மட்டும் ஏழை இந்திரனை உள்படுத்துவது நியாயமா?" என்றான்."

948. 'கிருகஸ்தாசிரமத்தில் இருந்தபோதிலும் உலகப் பற்றுக்குள் அகப்பட்டுக் கொள்ளாமல் இருக்கக்கூடும் என்று நவீனக் கல்வி கற்ற ஒரு கனவான் பரமஹம்ஸருடன் பேசிக்கொண்டிருந்தார். அப்போது பகவான் அந்தக் கனவானைப் பார்த்து, "உலகப்பற்றில் அகப்பட்டுக் கொள்ளாத கிருஹஸ்தன் எப்படிப் பட்டவன் என்பது உனக்குத் தெரியுமா? யாசகத்தை விரும்பிய ஒரு ஏழையானவன் அவனிடம் வந்து ஏதாவது கேட்டால், 'அப்பா, நான் பணத்தைத் தொடுகிறதில்லை. என்னிடத்தில் யாசகங் கேட்டுக்கொண்டு நீ காலத்தை வீணுகக் கழிக்க வேண்டாம்,' என்பான். ஏனெனில், பண வியாபாரங்களில் அவனுக்கு யாதொரு சுதந்திரமும் கிடையாது. எல்லாம் எஜமானியம்மாள் கையை எதிர்பார்த்தே ஆகவேண்டியிருக்கிறது. யாசகத்துக்கு வந்த பிராம்மணன் பிடிவாதமாக நின்று கொண்டிருந்தால், அதைக் கண்டு இரக்கங் கொண்ட கிருஹஸ்தன், அவனுக்கு ஏதாவது கொடுத்துப் போகச் சொல்லலாமென நிச்சயித்துக்கொண்டு, 'நல்லது, அப்பா! நாளைக்கு வா. ஏதாவது தருகிறேன்,' என்கிறான். அப்பால் அவன் உள்ளே சென்று தன் மனைவியை நோக்கி, 'ப்ரியே! ஒரு ஏழைப் பிராம்மணன் மிகவும் கஷ்டப்படுகிறான். அவனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கலாம்,' என்கிறான். ரூபாய் என்ற வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் கோபங்கொண்ட அவன் மனைவி, 'நீங்கள் வெகு தார்மிகர் தான்! கல்லையும் மண்ணையும் போல யோசனையில்லாமல் எடுத்தெறியப்படும் வஸ்துவா ரூபாயும்?' என்கிறாள். கிருஹஸ்தன் மறுபடியும் சற்று தீன ஸ்வரத்துடன், 'ப்ரியே! அவன் பரம ஏழை; ஒரு ரூபாய்க்குக் குறைவாகக் கொடுக்கக் கூடாது,' என்று சொன்னவளவில், அவன் மனைவி, 'அவ்வளவு என் கையிலில்லை; இதோ இரண்டணு இருக்கிறது. வேண்டுமானுல் கொண்டுபோய்க் கொடுங்கள்,' என்கிறாள். கிருஹஸ்த

னுக்கு உலகப்பற்றே இல்லாதபடியால் தன்னிஷ்டப்படி செய்ய முடியாமல், தன் மனைவி சொற்படி நடக்கவேண்டியவனுகிறுன்! ஆகவே அடுத்தநாள் ஏழைப் பிராம்மணனுக்கு இரண்டணுத் தான் கிடைக்கிறது. உலகப்பற்றற்றவர்களெனச் சொல்லப் படும் கிருஹஸ்தர்கள் கேவலம் பெண்டாட்டிகள் சொல்கிறபடி கூத்தாடுகிறவர்களேயாவர். குடும்ப விஷயத்தில் அவர்களுக்கு யாதொரு சுதந்திரமும் கிடையாது. இருந்தபோதிலும் அவர்கள் மகான்களென்றும் மிக நல்லவர்களெனவும் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். வாஸ்தவத்தில் இந்த இரண்டு தன்மைகளும் அவர்களிடம் இல்லை," என்ருர்.

949. ஒரு கிணற்றில் ஒரு தவளை வசித்தது. வெகு காலமாகவே அது அங்கு வசித்து வந்தது. அது அங்கேயே பிறந்து வளர்ந்தபோதிலும் சின்னஞ் சிறு தவளையாகவே இருந்தது. ஒரு நாள் சமுத்திரத்தில் வசித்த வேருெரு தவளை வந்து அந்தக் கிணற்றில் குதித்தது.

"நீ எங்கிருந்து வருகிருய்?" என்று கிணற்றுத் தவளை கேட்டது.

"நான் சமுத்திரத்திலிருந்து வருகிறேன்," என்றது கடற் றவளை.

"சமுத்திரமா! அது எவ்வளவு பெரியது?" என்று கேட்டது கிணற்றுத்தவளை.

"அது வெகு பெரியது," என்று வந்த தவளை கூறிற்று.

கிணற்றுத் தவளை தன் காலை நீட்டி, "உன் சமுத்திரம் இவ்வளவு பெரியதாக இருக்குமா?" என்றது.

"அது இன்னும் பெரியது," என்றது கடல் தவளை.

கிணற்றுத் தவளை அப்பால் கிணற்றின் ஒருபக்கத்திலிருந்து மற்ருெரு பக்கத்துக்குத் தாண்டிக் குதித்து, "உனது கடல் இவ்வளவு பெரியதாக விருக்குமா?" என்று கேட்டது.

"நண்பா, கிணற்றைக் கடலுக்கு எப்படி ஒப்பிடமுடியும்?" என்றது கடல் தவளை.

கிணற்றுத்தவளை, "எனது கிணற்றைக் காட்டிலும் பெரியது ஒன்றும் இருக்கமுடியாது. இதைக் காட்டிலும் பெரியது

ஒன்று எது? இவன் பொய்யன்; இவனை வெருட்டிவிட வேண்டும்,'' என்று சொல்லிக் கொண்டது.

தாராள நோக்கம் இல்லாதவன் விஷயமும் இப்படிப் பட்டதே. அவன் தனது சிறிய கிணற்றில் உட்கார்ந்து கொண்டு முழு உலகமும் தனது கிணற்றைக் காட்டிலும் பெரியதன்றென்று நினைக்கிறான்.

950. ஒரு திருடன் ஒருநாள் நடுராத்திரியில் அரசனுடைய அரண்மனைக்குள் நுழைந்து ஒளிந்திருக்கையில், அவ்வரசன் தனது மனைவியுடன், "ஆற்றங்கரையில் இருக்கும் ஸாதுக்களில் ஒருவருக்கு நமது குமாரத்தியைக் கல்யாணம் செய்து கொடுக்கப் போகிறேன்,'' என்று சொன்ன வார்த்தையைக் கேட்டான். உடனே அந்தத் திருடன், "பேஷ்! இதில் எனக்கு அதிருஷ்டம் இருக்கிறது போலும்! நாளையதினம் நான் ஸாதுவேஷம் போட்டுக் கொண்டு, ஆற்றங்கரையிலுள்ள ஸாதுக்களினிடையே உட்காருகிறேன். ஒருவேளை அரசனுடைய மகள் எனக்கு மனைவியானாலு மாகலாம்,'' என்று எண்ணி வெளியே போய்விட்டான். மறுநாட்காலையில் அவன் அவ்வாறே ஸாதுக்களின் கோஷ்டியிலிருக்கையில், அரசனுடைய உத்தியோகஸ்தர்கள் அங்குவந்து, அரசனுடைய குமாரத்தியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஒவ்வொரு ஸாதுவாகப் பிரார்த்தித்துக் கேட்டனர். ஒருவரும் ஸம்மதிக்கவில்லை. கடைசியாக அரசனின் உத்தியோகஸ்தர்கள் ஸாதுவேஷம் பூண்டிருந்த திருடனிடம் வந்து பிரார்த்தித்தனர். திருடன் மௌனமாகவிருந்தான். உத்தியோகஸ்தர்கள் திரும்பிப்போய், "அங்குள்ள ஸாதுக்களில் ஒருவரேனும் நமது கருத்துக்கு இணங்கவில்லை. ஆயினும் ஒரு வாலிப ஸாது இருக்கிறார். அவரை இணங்கச் செய்யலாம் என்று தோன்றுகிறது,'' என அரசனிடம் தெரிவித்தனர். ஆகவே, அரசன் நேரில் இந்தக் கபடஸாதுவிடம் சென்று, தனது குமாரத்தியைக் கல்யாணம் செய்து கொள்ளவேண்டுமென்று விநயமாய்க் கேட்டான். ஆனால் அரசனே நேரில் வந்ததைக் கண்டதும் திருடனுடைய மனம் மாறிவிட்டது. "நான் ஸாது வேஷத்தையே பூண்டிருக்கிறேன். இதனாலேயே

அரசன் என்னிடம் வந்து நயந்து பிரார்த்திக்கிறான்! நான் வாஸ்தவத்திலேயே ஸாதுவாகி விட்டால் எனக்கு என்னென்ன அதிருஷ்டங்களெல்லாம் உண்டாகா?" என்று நினைத்தான். நினைத்ததும் பொய்வேஷம் பூண்டு ராஜகுமாரத்தியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளும் எண்ணம் மனத்தை விட்டகன்றது. அந்தக்ஷணம் முதற்கொண்டு அவன் தனது பழைய நடத்தைகளை அடியோடு விட்டு விட்டு, உண்மையான ஸாதுவாவதற்குப் பிரயத்தனப்பட்டான். அப்பால் அவன் கலியாணமே பண்ணிக்கொள்ளவில்லை. அக்காலத்திருந்த பிரபல ஸாதுக்களில் ஒருவனாக அவன் விளங்கினான். போலிவேஷம் சிற்சில சமயங்களில் எதிர்பாராத நன்மையைத் தருகின்றது.

951. ஒரு ஏழைப் பிராம்மணனுக்குச் செல்வவானான ஜவுளி வர்த்தகன் ஒருவன் சிஷ்யனாக விருந்தான். அவ்வர்த்தகன் பரமலோபி. ஒரு நாள் அந்தப் பிராம்மணன், தனது பாகவத புஸ்தகத்துக்கு உறைபோடுவதற்காக, ஒரு சிறு வஸ்திரத்துண்டு வேண்டுமென்று, தனது சிஷ்யனிடம் சென்று கேட்டான். வர்த்தகனோ, "ஸ்வாமி! தங்களுக்கு இல்லை யென்று சொல்வதற்கு மனம் வருந்துகிறேன். சற்று முன்னால் சொல்லியிருந்தீர்களேயானால் தாங்கள் கேட்டதைக் கொடுத்திருப்பேன். இப்போது என் கைவசம் சிறிய துண்டு ஒன்றுமே இல்லை. என்றாலும் தாங்கள் கேட்டது எனக்கு ஞாபகமிருக்கும். ஆனால், அடிக்கடி மாத்திரம் சொல்லி யனுப்பிக் கொண்டிருங்கள்," என்று பதில் சொல்லி விட்டான். பிராம்மணன் வெறுங்கையனாக வீட்டுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. குருவுக்கும் சிஷ்யனுக்கும் நடந்த இச்சம்பாஷணையை, அச்சிஷ்யனுடைய மனைவி பின்னால் இருந்து கேட்டாள். அவள், உடனே ஒரு மனிதனை பின்பக்கமாக அனுப்பி, பிராம்மணனை அழைத்துவரச் செய்து அவருடன் உள்ளே சென்று, "ஸ்வாமி! என் கணவரிடம் தாங்கள் கேட்டது என்ன?" என்று கேட்டாள். நடந்ததைச் சொன்னான் பிராம்மணன். வர்த்தகனுடைய மனைவி, "ஸ்வாமி! தாங்கள் வீட்டுக்குச் செல்லலாம். நாளைக் காலையில் விரும்பிய வஸ்திரம் வந்து சேரும்," என்று சொல்லி யனுப்பினாள். அன்றிரவு

வியாபாரி வீட்டுக்கு வந்ததும், அவன் மனைவி, "இன்றைக்குக் கடை மூடியாய்விட்டதா?" என்று கேட்டாள். "மூடியாய் விட்டது. ஆனால், விசேஷம் என்ன?" என்றான் வர்த்தகன். அதற்கு அவள், "உடனே கடைக்குப்போய் அங்கிருக்கும் விலையுயர்ந்த வஸ்திரங்களில் இரண்டை எடுத்து வாருங்கள்," என்றாள். "என்ன அவசரம்? நாளைக் காலையில் எடுத்து வந்து தருகிறேன்," என்றான் வர்த்தகன். "இல்லை; எனக்கு இப்போதே வேண்டும். இல்லாவிட்டால் வேண்டவே வேண்டாம்," என்றாள் அவன் மனைவி. வர்த்தகன் என்ன செய்வான்? பாபம்! வீண் சாக்குப் போக்குகளைச் சொல்லிப் போகச் சொல்லக்கூடிய ஆத்ம குரு அல்லள் இவள். உடனே கீழ்ப்படிய வேண்டிய 'தலையணை மந்திரகுரு' ஆவாள். சொன்னதைக் கேட்காவிட்டால், அன்றைய இராப்போது பெரும்பாடாக முடியும் என்பதையுணர்ந்த வர்த்தகன், அந்தநடுநிசியில், மறுபடியும் கடைக்குப்போய், திறந்து மனைவிகேட்ட வஸ்திரங்களுடன் திரும்பி வந்தான். மறுநாட் காலையில் அவள் அவ்வஸ்திரங்களைக் குருவுக்கு அனுப்பும்போது, "இனிமேல் தங்களுக்கு ஏதேனும் தேவையாக இருந்தால், என்னிடம் சொல்லி யனுப்புங்கள்; நான் கொடுத்தனுப்புகிறேன்," என்று சொல்லி யனுப்பினாள். ஆதலால், ஜகத் பிதாவான ஸர்வேசுவரனைப் பிரார்த்தித்துக் கேட்பதைக் காட்டிலும் தயாமயியான ஜகன்மாதாவைப் பிரார்த்தித்துக் கேட்டால் இஷ்டசித்தி பெறுவது எளிது.

952. வித்வானான பிராம்மணன் ஒருவன் விவேகியான ஒரு அரசனிடம் சென்று, "மகாராஜாவே! நான் வேதசாஸ்திர விற்பன்னன். தங்களுக்குத் திவ்ய கிரந்தமான பாகவதத்தைச் சொல்லலா மென்று வந்திருக்கிறேன்," என்றான். பிராம்மணனைக் காட்டிலும் விவேகமுள்ள அவ்வரசன், பாகவதத்தைச் செம்மையாகப் படித்த ஒருவன் தனது ஆத்மாவைப்பற்றி மேன் மேலும் அறிந்துகொள்ள முயற்சி செய்வானே யொழிய, ராஜ ஸபையில் கண்ணியத்தையும் செல்வத்தையும் பெற விரும்ப மாட்டானென்று நினைத்து, பிராம்மணனை நோக்கி, "ஸ்வாமி, தாங்கள் இன்னும் பாகவதத்தை நன்றாகப் படிக்கவில்லையென்று

தோன்றுகிறது. மறுபடியும் படித்து நன்றாகத் தெரிந்து கொண்டு வந்தால் நான் தங்களுக்குச் சிஷ்யனாவேன்," என்றான். "இத்தனை வருஷங்களாக நான் பாகவதத்தைப் படித்து வந்திருக்க, இந்த அரசன் மதியீனமாய் என்னைப் படிக்காதவன் என்று சொல்லிவிட்டானே," என்று தன்னுள் எண்ணிக் கொண்டு திரும்பிப்போன பிராம்மணன் தன் வீட்டுக்குச் சென்று, மறுபடியும் ஒரு தரம் பாகவதத்தைப் படித்து விட்டு, ராஜஸமுகத்துக்கு வந்தான். மறுபடியும் அரசன் முன்சொன்ன படியே சொல்லிப் பிராம்மணனைத் திருப்பி யனுப்பினான். பிராம்மணனுக்கு விசனம் வந்தது. ஆனால் அரசன் இப்படிச் சொன்னதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்கவேண்டுமென்று நினைத்து, மறுபடியும் வீட்டுக்குச் சென்று, மனதை ஒருமிக்கச் செய்து, ஏகாந்தமாய் ஒரு அறையில் உட்கார்ந்து கொண்டு பாகவதத்தை வெகு கவனமாகப் படிக்கத் தொடங்கினான். படிக்கப் படிக்க அதன் ரகஸ்யமான பொருள்கள் புத்தியில் தெளிவாய்ப் படவே, செல்வம், கண்ணியம், ராஜ ஸன்மானம், கீர்த்தி, இவைகளைத் தேடிப் போகும் மமதை அவனுடைய திருஷ்டியிலிருந்து மறைந்து போய்விட்டது. அந்தத் தினம் முதல் அரசனிடம் போகவேண்டுமென்ற எண்ணம் நீங்கி, திட சித்தனாய், ஈசுவர ஸேவைசெய்து பரிபூரணனாக வேண்டுமென்று தியானத்தில் அமர்ந்துவிட்டான். கொஞ்ச காலத்துக்குப் பிறகு, அரசனுக்கு இந்தப் பிராம்மணனுடைய நினைவு வர, அவன் எப்படியிருக்கிறான் என்று பார்க்க வெண்ணி அவன் வீட்டுக்குச் சென்றான். பிராம்மணன் ஈசுவர கடாக்ஷம் பெற்று விளங்குவதைக் கண்ட அரசன் அவன் பாதங்களில் வீழ்ந்து, "ஸ்வாமி! தாங்கள் தான் சாஸ்திரங்களின் பொருளை இப்போது நன்றாக அறிந்து கொண்டிருக்கிறீர்கள். ஏழையின் பேரில் கிருபை கூர்ந்து அடியேனைச் சிஷ்யனாக அங்கீகரிக்க வேண்டும்," என்று பிரார்த்தித்துக்கொண்டான்.

953. மதவைராக்கியத்தில் கண்டாகர்ணனைப் போல் இராதே. ஒருவன் சிவனை மட்டும் ஆராதித்து மற்றத் தெய்வங்களை யெல்லாம் தூஷித்து வந்தான். ஒருநாள் அவனுக்குப்

ப்ரமசிவன் பிரத்யக்ஷமாய், "நீ மற்றத் தெய்வங்களைத் தூஷிக்கிற வரையில் உன்மீது எனக்குப் பிரியம் உண்டாகாது," என்றனர். ஆகவே அவன் மௌனமாக விருந்தான். சில நாட்களுக்குப் பிறகு மறுபடியும் ஒரு தினம் அவனுக்குப் பரமசிவன் பிரத்யக்ஷமானார். இப்போது, அவர் ஹரிஹர ரூபத்தில், அதாவது, ஒரு பாதி சிவனாகவும் மற்றொரு பாதி விஷ்ணுவாகவும் தோன்றினார். இதைக் கண்டதும் அவனுக்குப் பாதி விருப்பும் பாதி வெறுப்பும் உண்டாயிற்று. சிவன் ரூபமுள்ள பாகத்தில் நைவேத்தியங்களைச் சமர்ப்பித்து, விஷ்ணு ரூபமுள்ள பாகத்துக்கு ஒன்றும் செய்யாதிருந்தான். அப்பால் பரமசிவன், "அடே, உனது வைராக்கியம் அசாத்தியமானது! எல்லாத் தேவ தேவிகளும் ஒரே பரம்பொருளின் தோற்றங்கள் என்பதை உனக்குத் தெளிவிக்கவேண்டியே, நான் இந்த இரட்டை உருவத்தோடு தோன்றினேன். இதை நீ அறிந்து கொள்ளவில்லை. இந்தக் குற்றத்துக்காக நீ நெடுங் காலம் துன்பப்படக்கடவாய்," என்று சொல்லி மறைந்தனர். அம்மனிதன், அப்பால் ஒரு கிராமத்துக்குச் சென்று காலங்கழிக்கத் தொடங்கினான். அங்கு அவன் பரம விஷ்ணுத் துவேஷியாக யிருந்ததைக் கண்ட அக் கிராமத்துப் பிள்ளைகள் அவன் காதுகளில் விஷ்ணு நாமமே விழும்படி கூறி அவனைத் தொந்தரவு செய்ய வாரம்பித்தனர். ஆகவே அவன், விஷ்ணு நாமங்கள் தன் காதில் நுழையாம லிருப்பதற்காக இரண்டு காதுகளிலும் இரண்டு மணிகளைத் தொங்கவிட்டுக் கொண்டு, பையன்கள் விஷ்ணு நாமத்தைச் சொல்லும்போதெல்லாம், அந்தச் சத்தம் கேட்காமலிருக்கும்படி அம்மணிகளை ஆட்டிக்கொள்வான். இதனால் அவனுக்கு "கண்டா கர்ணன்" (மணியையுடைய காதுகள் உள்ளவன்) என்ற பெயர் வந்தது.

954. வேலையில்லாதிருந்த ஒரு மனிதனை எதாவதொரு வேலையில் அமரும்படி அவனுடைய மனைவி எப்போதும் தூண்டிக்கொண்டிருந்தாள். ஒரு நாள் அவன், தன்னுடைய மகன் பிழைக்க ஹேது வில்லாதபடி நோயுற்றிருக்கையில், வேலை தேடுவதற்குப் புறப்பட்டுப் போனான். இதன் மத்தியில் குழந்தை இறந்துவிட்டது. வெகுவாகத் தேடியும் அம்மனிதன் தென்பட

வில்லை. கடைசியில், பொழுதுபோகும் வேளையில் அவன் திரும்பி வரவே, இப்படி மகன் மரணத் தருவாயில் இருந்தபோது வெளியே சென்ற கடின சித்தத்துக்காக, அவனுடைய மனைவி அவனை வெகுவாகக் கடிந்து கொண்டாள். புருஷன், மந்த ஹாஸத்துடன், "இதோ பார்; நான் அரசனாகி, ஏழு குழந்தைகளைப் பெற்று, அவர்களுடன் உல்லாசமாகக் காலங் கழித்ததாகக் கனவு கண்டேன். விழித்துக் கொண்டதும், அக்குழந்தைகளில் ஒருவரையாவது காணவில்லை. நான் கண்டது கனவென்பதை உணர்ந்தேன். அந்த ஏழு குழந்தைகளை இழந்ததற்கு நான் அழுகிறதா, இப்போது நீ பறிகொடுத்த குழந்தைக்கு விசனப்படுகிறதா? சொல்லு," என்றான். இவ்வுலகத்தைக் கனவெனக் கருதுபவனுக்கு, உலக பாசங்களில் சாதாரண மனிதர்களுக்கு இருக்கும் சுக துக்கங்கள் இருப்பதில்லை.

955. ஒருசமயம் கிருஷ்ண பரமாத்மாவின் ஸகாவான அர்ஜுனனுடைய மனத்தில் கர்வம் உதித்தது. தான் கிருஷ்ணனிடத்தில் வைத்திருக்கும் பிரேமையையும் பிரியத்தையுங் காட்டிலும் அதிகமாக வேறொருவரும் வைத்திருக்கமாட்டாரென அவன் கருதி யிருந்தான். சர்வக்ஞரான கிருஷ்ணன் இதையறிந்து அர்ஜுனனுடன் ஒருநாள் உலாவப் புறப்பட்டுப் போனார். கொஞ்சதூரம் போனதும், உலர்ந்த புல்லைத் தின்று கொண்டிருந்த பிராம்மணன் ஒருவனை இருவரும் கண்டனர். அவன் இடுப்பில் கூரிய கத்தியொன்று தொங்கிக்கொண்டிருந்தது. அவன் வைஷ்ணவன் என்பதை அர்ஜுனன் தெரிந்து கொண்டான். வைஷ்ணவர்கள் ஜீவஹிம்சை செய்யார்கள். பச்சைப் புல்லுக்கும் உயிர் இருக்குமாதலால் இந்தப் பிராம்மணன் உயிரற்ற உலர்ந்த புல்லைத் தின்று கொண்டிருந்தான். ஆனால் அவன் பக்கத்தில் ஒரு கத்தி தொங்கினதன் பொருள் மட்டும் அர்ஜுனனுக்கு விளங்கவில்லை. ஆகவே அவன் கிருஷ்ண பரமாத்மாவை நோக்கி, "பிரபோ! இதென்ன விந்தை! இவன் புல்லுக்குங்கூட ஹிம்சை செய்யாத விரதமுடையவன்போலத் தோன்றுகிறான்; என்றாலும், ஹிம்சை செய்யக்கூடிய கத்தியை வைத்துக்கொண்டிருக்கிறானே, அது என்?" என்று கேட்டான்.

"அவனையே கேட்டுத் தெரிந்துகொள்," என்று பகவான் பதில் சொல்லியருளினார். உடனே அர்ஜுனன் அந்தப் பிராம்மணனிடம் சென்று, "ஸ்வாமி! நீர் ஜீவஹிம்சை செய்வதில்லை; உலர்ந்த புல்லைத் தின்கிறீர். அப்படியிருக்க, இந்தக் கூரிய கத்தியை ஏன் வைத்துக்கொண்டிருக்கிறீர்?" என்று கேட்டான்.

பிராம்மணன்:—"நான்கு துஷ்டரைத் தண்டிக்கிறதற்காக இந்தக் கத்தியை வைத்திருக்கிறேன். அவர்களைச் சந்திக்கும் காலத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்," என்றான்.

அர்ஜுனன்:—அவர்கள் யாவர்?

பிராம்மணன்:—முதலாமவன் பாபி நாரதன்.

அர்ஜுனன்:—நாரதரா! அவர் என்ன செய்திருக்கிறார்?

பிராம்மணன்:—அவனுடைய தவுஷ்டிகத்தைப் பார்; எப்போது பார்த்தாலும் பாட்டும் ஸங்கீதமும் தான் அவனுக்கு. அவைகளினால் பகவானுக்கு ஒரு நிமிஷ நித்திரை கூடக் கிடையாது. ஸ்வாமியினுடைய சவுகரியத்தை அவன் கொஞ்சமேனும் கவனிக்காமல் இரவு பகலாக் பகவந் நாம ஸங்கீர்த்தனம் செய்து கொண்டு அவருடைய நிம்மதியைக் குலைத்துக் கொண்டிருக்கிறான்.

அர்ஜுனன்:—இரண்டாமவன் யாவன்?

பிராம்மணன்:—தவுஷ்டிகம் படைத்த துரௌபதி.

அர்ஜுனன்:—அவளுடைய பிழை என்ன?

பிராம்மணன்:—அவளுடைய அக்கிரமத்தைத்தான் பார். பகவான் போஜனம் செய்யப்போகும் சமயத்தில் அவரைக் கூப்பிட்டாள். ஆதலால், அவர் துர்வாஸ ரிஷியின் சாபத்திலிருந்து பாண்டவர்களைக் காப்பாற்றுவதற்காகக் காம்ய வனத்துக்குப் பட்டினியாய்ச் செல்லவேண்டியிருந்தது. இன்னும் கேள். தான் சாப்பிட்டபின் மிகுந்திருந்த அன்னத்தை எல் பகவானுக்குப் போடவந்த அவளுடைய வன்னெஞ்சத்தைப் பற்றி என்ன சொல்கிறது!

அர்ஜுனன்:—மூன்றாவது யரர்?

பிராம்மணன் :—கல் நெஞ்சனை பிரஹ்லாதன். கொஞ்சம்கூடத் தயங்காமல் அவன் எனது ஸ்வாமியைப் பொங்கும் எண்ணெய்க் கொப்பரையில் இறங்கும்படியாகவும் யானைகளின் கால்களால் இடறப்படும்படியாகவும் வஜ்ரம்போன்ற தூணைப் பிளந்து கொண்டு வரும்படியும் செய்தானே!

அர்ஜுனன் :—நான்காமவன் யாவன்?

பிராம்மணன் :—அதமனை அர்ஜுனன்.

அர்ஜுனன் :—அர்ஜுனனா? அவன் என்ன பிழை செய்திருக்கிறான்?

பிராம்மணன் :—அவனுடைய போக்கிரித் தனத்தைப் பார். எனது ஸ்வாமியைத் தன்னுடைய தேர்ப்பாகனுக்கிக் கொண்டு அவன் குருக்ஷேத்திரத்தில் சண்டை செய்தான்.

இதைக் கேட்ட அர்ஜுனன் பிராம்மணனுடைய பக்தி ப்ரேமையின் தீவிரத்தைக்கண்டு ஆச்சரியமடைந்து, அந்த க்ஷணம் முதல் தன்னைக் காட்டிலும் பகவத் பக்தியில் ஈடுபட்டவர் ஒருவருமில்லை யென்ற அகங்காரத்தை விட்டு விட்டான்.

956. மனிதனுக்கு எப்படி வைராக்யம் வரும்? ஒருவனிடம் அவனுடைய மனைவி வந்து, "நாதா! எனக்கு என் சகோதரனைப்பற்றி அதிக கவலையாக இருக்கிறது. சென்ற ஒரு வாரமாக அவன் சந்யாஸம் வாங்கிக் கொள்ளப் போவதாகச் சொல்லிக்கொண்டு அதற்கு வேண்டிய பிரயத்தனங்களையும் செய்து கொண்டிருக்கிறான். அவன் தனது ஆசைகளையும் தேவைகளையும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டிருக்கிறான்," என்றாள். இதைக் கேட்ட அம்மனிதன், "அன்புடையாய்! உன் சகோதரனைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அவன் ஒருநாளும் சந்யாஸியாக மாட்டான். அப்படி ஒருவரும் சந்யாஸியானதில்லை," என்றான்.

மனைவி :—ஆனால் எப்படித்தான் ஒருவர் சந்யாஸியாவார்?

புருஷன் :—இப்படித்தான்!

என்று சொல்லித் தான் கட்டியிருந்த வஸ்திரத்தைத் துண்டுகளாய்க் கிழித்து, அவற்றில் ஒன்றை எடுத்து இடுப்பில் கட்டிக்

கொண்டு, தன் மனைவியைப் பார்த்து, அந்த க்ஷணமுதற்கொண்டு அவளும் அவளைப்போன்ற ஸ்திரீ வகுப்பினர் அனைவரும் தனக்குத் தாய்மார்க்குச் சமானம் என்று கூறி வெளியே போய் விட்டான். அப்பால் அவன் வீட்டுக்குத் திரும்பவே இல்லை.

957. ஒரு மனிதன் தன் இரு மகன்களையும் அழைத்துக் கொண்டு வயல் வழியாகச் சென்றான். ஒரு மகனைக் கையில் எடுத்துக் கொண்டிருந்தான். இன்னொரு மகன் பிதாவினுடைய கையைப் பிடித்துக் கொண்டு பக்கத்தில் நடந்துவந்தான். அங்கு ஒரு பருந்து பறந்தது. அப்போது கீழே நடந்துவந்த பையன் சந்தோஷத்தால் கைகளைக் கொட்டி, "அப்பா அதோ பாரும், ஒரு பருந்து பறக்கிறது," என்றான். ஆனால் அவன் பிதாவின் கையை விட்டவுடன் கால் தடுக்கிக் கீழே விழுந்தான். தகப்பனால் தூக்கிச் செல்லப்பட்ட பையனும் கையைக் கொட்டிச் சந்தோஷப்பட்டானென்றாலும், அவன் கீழே விழவில்லை. ஏனெனில், அவனை அவன் பிதா தூக்கிக்கொண்டிருந்தான். ஆத்மீக விஷயத்தில் முதல் பையன் தன்னம்பிக்கையையும் இரண்டாவது பையன் சரணாகதியையும் ரூபிக்கின்றவராவார்கள்.

958. ஒரு மனிதன் ஒரு கிணறு வெட்ட ஆரம்பித்தான். இருபது முழம் வெட்டியும் தண்ணீர் வரக்கூடிய ஊற்றுக்கண் தோன்றவில்லை. அதை அப்படியே நிறுத்திவிட்டு வேறொரு இடத்தில் கிணறு வெட்டத் தொடங்கினான். முன்னிலும் ஆழமாய் அங்கு வெட்டின போதிலும் தண்ணீர் காணப்படவில்லை. அதையும் அப்படியே விட்டுவிட்டு, இன்னொரு இடத்தைக் கண்டு அங்கே இன்னும் ஆழமாக வெட்டினான். அதிலும் தண்ணீர் கிடைக்கவில்லை. கடைசியில் மிக வெறுப்புடன் கிணறு வெட்டும் யோசனையையே விட்டுவிட்டான். இப்படி மூன்று கிணறு வெட்டின மொத்த ஆழம் கிட்டத்தட்ட நூறு முழம் இருக்கும். இடம் விட்டு இடம் மாறாமல் முதலில் வெட்டின கிணற்றிலேயே, இப்படி வெட்டின அளவில் அரை வாசி ஆழம் பொறுமையுடன் வெட்டியிருப்பானானால், தண்ணீர் கிடைத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. எப்போதும் மதம் மாறி மதம் போய்க் கொண்டிருப்பவர்களுடைய விஷயமும் இப்படிப்பட்டதுதான்.

காரியம் ஸித்தியாகுமோ ஆகாதோ என்று சந்தேகம் கொள்ளாமல் ஒரே பொருளினிடத்து உறுதியான நம்பிக்கை வைத்து மனவொருமைப் பட்டிருந்தால் ஜயமுண்டாவதற்குத் தடையே யில்லை.

959. ஒரு மனிதனும் அவன் மனைவியும் சந்யாஸம் பெற்றுக்கொண்டு, தீர்த்த யாத்திரைக்காக ஒன்று சேர்ந்து சென்றனர். ஒரு சமயம் அவர்கள் பாதை வழியே சென்று கொண்டிருக்கையில், சற்று முன்னர் போன அம்மனிதன் பாதையில் ஒரு வைரக்கல் கிடப்பதைக் கண்டான். அதைத் தன் மனைவி கண்டால் எங்கே ஒருவேளை அதன்மீது ஆசைப்பட்டு சந்யாஸ பலத்தை இழந்துவிடப் போகிறாளோ என்று கருதிய அம்மனிதன், அதைப் புதைத்துவிட வெண்ணித் தரையைத் தோண்டினான். தோண்டிக் கொண்டிருக்கையில் அவன் மனைவி நெருங்கி வந்து விசேஷம் என்னவென்று கேட்டாள். அவன் எதோ மறை முகமாகப் பதில் சொன்னான். ஆயினும், அவள் வைரத்தைக் கண்டு தன் புருஷனுடைய மனக்கருத்தை யறிந்து, "ஸ்வாமி! வைரத்துக்கும் மண்ணுங்கட்டிக்குமுள்ள வித்யாசம் தங்களுக்கு இன்னும் தெரிகிறதானால் தாங்கள் ஏன் உலகத்தைத் துறந்து வந்தீர்கள்?" என்று அவன் மனதிற் படும்படி கேட்டாள்.

960. நான்கு குருடர்கள் சேர்ந்து யானை பார்க்கப் போனார்கள். அவர்களில் ஒருவன் யானையின் காலைத் தொட்டுப் பார்த்து, "யானை தூணைப்போலிருக்கிறது," என்றான். இன்னொருவன் துதிக்கையைத் தொட்டுப் பார்த்து, "யானை உலக்கையைப் போலிருக்கிறது," என்றான். மூன்றாமவன் யானையின் வயிற்றைத் தொட்டுப் பார்த்து, "யானை சாலைப் போலிருக்கிறது," என்றான். நான்காமவன் அதன் காதைத் தொட்டுப் பார்த்து, "யானை முறத்தைப் போலிருக்கிறது," என்றான். இப்படி இவர்கள் யானையின் உருவத்தைப்பற்றி வழக்காடிக்கொண் டிருக்கையில், அங்கு வந்த பிரயாணி யொருவன், "நீங்கள் என் சச்சரவு போடுகிறீர்கள்?" என்று கேட்டான். இவர்கள் அவனிடம் சங்கதிகளைச் சொல்லி, மத்தியஸ்தம் செய்யும்படி கேட்டார்கள். அதற்கு அவன், "உங்களில் யாரும் யானையைப் பார்க்கவில்லை.

யானை தூணைப்போல் இல்லை; அதன் கால்தான் தூணைப்போலிருக்கிறது. அது ஒரு சாலைப்போலில்லை; அதன் வயிறே அப்படியிருக்கிறது. யானை ஒரு முறத்தைப்போலில்லை; அதன் காது தான் அப்படியிருக்கிறது. யானை ஒரு உலக்கையைப்போலில்லை; அதன் துதிக்கையே அப்படி யிருக்கிறது. இவைகள் எல்லாம் சேர்ந்ததோர் உருவமே யானை," என்று சொல்லிப்போனான். ஈசுவரனுடைய ஏதோ ஒரு வடிவத்தை மட்டும் கண்டவர்களும் இப்படியே சச்சரவு போடுகிறார்கள்.

961. சில செம்படவ ஸ்திரீகள், ஒருநாள் பிற்பகலில், அதிக தூரத்தில் கூடின சந்தைக்குப் போய்த் திரும்பி வந்து கொண்டிருந்தனர். நடுவழியில், அஸ்தமன சமயத்தில், வெகு கனமாகப் பெய்யத்தொடங்கிய மழையில் அகப்பட்டுக்கொண்டபடியால், அருகிலிருந்த ஒரு புஷ்ப வியாபாரியின் வீட்டில் அவர்கள் இரவு தங்கவேண்டியதாயிற்று. அவர்கள் தூங்குவதற்காக அந்தப் பூக்கடைக்காரன் ஒரு அறையை ஒழித்துக் கொடுத்தான். ஆனால் மறுநாள் காலையில் வியாபாரம் செய்வதற்காகச் சில கூடைகள் நிரம்ப நறுமணம் வீசும் புஷ்பங்கள் அவ்வறையில் ஒரு பக்கம் வைக்கப் பட்டிருந்தன. அவ்வறை முழுவதிலும் பரிமளத்தைப் பரவச் செய்த அப் புஷ்பங்களின் வாசனை இந்த ஸ்திரீகளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவர்களுக்குக் கொஞ்சமும் தூக்கம் வரவில்லை. ஆகவே அவர்களில் ஒருத்தி, "இந்தப் புஷ்பங்களின் நாற்றம் நமது தூக்கத்தைக் கெடுத்துத் தொந்தரவு செய்கிறது. அதைத் தடுப்பதற்காக, ஒவ்வொருவரும் அவளவளுடைய வெற்று மீன்கூடையை மூக்குக்குச் சமீபத்தில் வைத்துக்கொள்ளலாம்," என்று யோசனை சொன்னாள். இதை எல்லாரும் ஒப்பி, அப்படியே செய்தனர். செய்ததும் எல்லாரும் குறட்டைவிட்டுத் தூங்கத் தொடங்கினர். கெட்டவழக்கத்தில் பழகினவர்களை அவைகள் எப்படி உள்ளாக்கி வெல்லுகின்றன பாருங்கள்! உலகப் பொருள்களின் மத்தியிலும் விஷய இச்சைகளிலுமே நீண்டநாள் தோய்ந்து வளர்ந்த ஒருவனுக்கு வைராக்கியமும் பரிசுத்தமும் நிறைந்த ஓர் இடத்தில் அதிகநேரம் இருக்கச் சகிக்காது.

962. ரஸ்தாவின் பக்கத்தில் ஒரு மஹான் ஸமாதியில் ஆழ்ந்திருந்தார். அவ்வழியே வந்த திருடன் ஒருவன் அவரைப் பார்த்து, "இதோ படுத்திருக்கிறவன் ஒரு திருடன். ராத்திரி முழுவதும் எங்கெங்கேயோ கன்னம் வைத்த சிரமத்தினால் படுத்துத் தூங்குகிறான்போலும். போலீசார் சீக்கிரம் வந்து இவனைப் பிடித்துக்கொள்வார்கள். நான் தப்பித்துக்கொண்டு போய் விடுகிறேன்," என்று சொல்லிக்கொண்டு ஓட்டம் பிடித்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அங்கு ஒரு குடிகாரன் வந்து, ஸாதுவைப் பார்த்து, "அடே! அளவுக்கு மிஞ்சிக் குடித்துவிட்டு இங்கே பள்ளத்தில் விழுந்து கிடக்கிறாயோ? என்னைப் பார். நான் தடுமாறாமல் இருக்கிறேன். உன்னைப்போலக் குழியில் விழமாட்டேன்," என்று சொல்லிக்கொண்டு போனான். கடைசியாய் ஒரு ஸாது அங்கு வந்தார். மஹான் ஒருவர் ஸமாதியில் ஆழ்ந்திருக்கிறார் என்பதை அவர் தெரிந்துகொண்டு பக்கத்தில் உட்கார்ந்து அவருடைய கால்களைத் தொட்டு மெதுவாகப் பிடிக்கத் தொடங்கினார்.

963. ஒரு கிராமத்தில் ஒரு மடம் இருந்தது. அம்மடத்திலிருந்த சந்யாஸிகள் தினந்தோறும் பிக்ஷா பாத்திரத்தை எடுத்துக்கொண்டு வெளியே பிக்ஷைக்காகப் போவதுண்டு. ஒருநாள் ஒரு சந்யாஸி அப்படிப் போகும்போது, ஏழைக் குடியானவன் ஒருவனை ஒரு மிராசுதாரன் கன கடுமையாக அடிப்பதைக் கண்டார். தயாளுவாகிய அந்த ஸாது, குடியானவனை அடிப்பதை நிறுத்த வேண்டுமென்று மிராசுதாரனைக் கேட்டுக்கொண்டார். கோபத்தால் தன்னை மறந்த மிராசுதாரன் உடனே, ஸாதுவின் மேல் பாய்ந்து அவரை அடி அடியென்று அடித்துவிட்டான். அது காரணமாக அவர் பிரக்ஞையற்றுத் தரையில் விழுந்துவிட்டார். இவருடைய நிலைமையைக் கண்ட மனிதன் ஒருவன் மடத்துக்கு ஓடிப்போய் நடந்த சங்கதிகளைச் சொன்னான், அங்கிருந்த மற்ற சந்யாஸிகள் உடனே அவர் விழுந்து கிடக்கு மிடத்துக்கு ஓடிவந்து, அவரைத் தூக்கியெடுத்து மடத்துக்குக் கொண்டு போயினர்; என்றாலும், அவருக்கு நெடுநேரம் வரையிலும் பிரக்ஞை வரவில்லை. ஆதலால் மற்றைய ஸாதுக்கள் கவலையும்

துக்கமுங்கொண்டு, அவருக்குக் காற்று வரும்படி விசிறி, முகத்தைக் குளிர்ந்த ஜலத்தால் துடைத்து, வாயில் பாலை வார்த்து, பிரக்ஞை வருவதற்கான சைத்தியோபசாரங்களைச் செய்து கொண்டிருந்தனர். கொஞ்சம் கொஞ்சமாக அவருக்குத் தம் நினைவு வரத் தலைப்பட்டது. அவர் கண்ணைத் திறந்து மற்றைய சந்யாஸிகளைப் பார்த்ததும், அவர்களில் ஒருவர், அவருக்குத் தம் ஸகாக்களை அறிந்து கொள்ளக்கூடிய நல்ல ஞாபகம் வந்து விட்டதா என்று தெரிந்து கொள்ளவேண்டி, "மகராஜ், இப்போது தங்களுக்குப் பால் வார்த்துக் கொண்டிருப்பது யார் என்று தெரிகின்றதா?" என்று கேட்டார். அதற்கு அந்த ஸாது, "தம்பி, யார் என்னை அடித்தானோ அவனேதான் இப்போது பால் கொடுத்துக் கொண்டிருக்கிறான்," என்று பதில் சொன்னார்.

ஈசுவர சைதன்யத்தை அடைந்து நன்மை தீமை, பாப புண்யம் இவைகளைக் கடந்து நின்றாலொழிய இப்படிப்பட்ட ஆத்ம ஒருமை ஸித்தியாகாது.

964. விறகுவெட்டி ஒருவன் தான் தினந்தோறும் அருகிலிருந்த காட்டிலிருந்து வெட்டிக்கொண்டு வரும் விறகுச் சுமையை விற்று, அதனால் வரும் சொற்பப் பணத்தைக்கொண்டு கஷ்ட ஜீவனம் செய்துவந்தான். ஒருநாள் அவன் காட்டில் விறகு வெட்டிக் கொண்டிருக்கையில் அவ்வழியாய்ச் சென்ற ஸாது ஒருவர், அவன் வேலை செய்வதைப் பார்த்து, இன்னும் காட்டுக்குள்ளே சென்று வேலை செய்தால் அவனுக்கு லாபம் கிடைக்குமென்று சொன்னார். அவன் அவருடைய வார்த்தையைக் கேட்டு காட்டினுள் போகையில், ஒரு சந்தனமரம் தென்பட்டது. அதை வெட்டித் தான் சுமக்கக் கூடிய அளவு சந்தனக் கட்டைகளைத் தூக்கிக்கொண்டு கடைக்குச் சென்று விற்று அதிக லாபம் அடைந்தான். பிறகு அவன், "சந்யாஸி என்னைப் பார்த்து, இன்னும் கொஞ்ச தூரம் சென்றால் சந்தன மரம் கிடைக்கும் என்று சொல்லவில்லையே; காட்டுக்குள்ளே போனால் லாபம் கிடைக்குமென்று தானே சொன்னார்;" என்று அதைப் பற்றி யோசிக்கத் தொடங்கினான். மறுநாள் அவன் சந்தன மரம் அகப்பட்ட இடத்தையும் தாண்டி

இன்னும் அப்பால் போக, அங்கு ஒரு தாமிரச் சுரங்க மிருக்கக் கண்டான். அதிலிருந்து தன்னால் தூக்கக்கூடிய அளவு தாமிரத்தை எடுத்துச் சென்று கடையில் விற்று மிகவும் லாபம் அடைந்தான். அடுத்த நாள் தாமிரச் சுரங்கத்தினிடம் நிற்காமல் ஸாது சொன்னபடி இன்னும் கொஞ்ச தூரம் உள்ளே போக, அங்குத் தென்பட்ட வெள்ளிச் சுரங்கத்திலிருந்து தூக்கக்கூடிய வெள்ளியை எடுத்து வந்து விற்று இன்னும் அதிகமான பணத்தைச் சம்பாதித்தான். நாளுக்குநாள் அவன் காட்டினுள்ளே அதிக தூரம் செல்லச் செல்ல பொன் சுரங்கமும், வைரச் சுரங்கமும் தென்பட அவைகளினால் அளவற்ற செல்வனாகிவிட்டான். ஞானமார்க்கத்தில் செல்லுபவனுடைய விஷயமும் இப்படிப் பட்டதுதான். ஏதோ கொஞ்சம் அபூர்வமான சித்திகளைப் பெற்றதும் அவைகளுடன் நின்றுவிடாமல், ஒருவன் மேன்மேலும் முன்னேறிச் செல்வானானால், முடிவில் மேலான பரம் பொருளை யடைந்து உண்மையான ஞானச் செல்வத்தை உடையவனாவான்.

965. ஒரு யக்ஷன் வாழ்ந்துவந்த மரத்தின்கீழ் ஒரு அம்பட்டன் செல்லும்போது, "உனக்கு ஏழு ஜாடி தங்கம் வேண்டுமா?" என்ற ஓர் குரலைக் கேட்டான். அம்பட்டன் திரும்பிப் பார்த்தான். ஒருவரும் கட் புலப்படவில்லை. என்றாலும், 'ஏழு ஜாடி தங்கம்' என்றதனால் பேராசை கொண்ட அம்பட்டன், "எனக்கு வேண்டும்," என்று பதில் சொன்னான். "நீ வீட்டுக்குப்போ; நான் ஜாடிகளை அங்குக் கொண்டு போய் வைத்து விட்டேன்," என்ற பதில் குரல் உடனே தொனித்தது. இதைப் பரிசோதிக்க வெண்ணிய அம்பட்டன் குடல் தெறிக்க வீட்டுக்கு ஓடினான். உள் நுழைந்ததும் அவன் முன்னர் ஏழு ஜாடிகள் இருக்கக் கண்டான். அவைகளைத் திறந்து பார்க்க, ஆறு ஜாடிகளில் தங்கம் நிறைந்தும் ஏழாவது ஜாடியில் தங்கம் பாதியளவு மாக இருக்கக் கண்டான். குறைவாக விருக்கும் இந்த ஜாடியையும் நிரப்பிவிட வேண்டுமென்ற ஆசை அம்பட்டனுக்கு உண்டாகியது. இல்லாவிட்டால் அவன் அடையும் சுகம் பூரணமானதாகாது என்று எண்ணினான். ஆகவே தன்னிடமிருந்த பொன்

வெள்ளி நகைகளை யெல்லாம் விற்றுப் பவுன்களாக்கி அந்த ஜாடியில் போட்டான். என்றாலும், அந்த மாய ஜாடி முன்போலவே அரைகுறையாகவே இருந்தது. பிறகு அவன் தன்னையும் குடும்பத்தையும் பட்டினி போட்டுச் சம்பாதிக்கும் பணத்தை யெல்லாம் ஜாடியிலேயே போட்டான். அப்படிச் செய்தும் ஜாடி நிறையவில்லை. அப்பால் அவன் தான் சேவித்து வந்த அரசனிடம் சென்று, தன் சம்பளம் காலக்ஷேபத்துக்குப் போதாமலிருக்கிறபடியால் அதை இருமடங்கு அதிகமாக்கும்படி கேட்டுக்கொண்டான். அரசனுக்கு இவனிடம் தயவு இருந்தபடியால் கோரிய எண்ணம் நிறைவேறிற்று. அம்பட்டன் இந்த ஜாஸ்தி சம்பளத்தையும் செலவு செய்யாமல் ஜாடியில் போட்டு வந்தான். அப்போதும் ஜாடி பூர்த்தியாகவில்லை. பிறகு, அவன் வேலையில்லாத காலத்தில், பிச்சை யெடுத்து, அதனுற் கிடைத்த பொருளையும், வேலையினுற் கிடைத்த சம்பளத்தையும் பொன்னுக்கி ஜாடியில் போட்டான். என்றாலும் அகாதமான ஜாடி நிரம்பவில்லை! இப்படி அனேக மாதங்கள் கழிந்தன. அம்பட்டனுடைய நிலைமை வரவரப் பரிதாபகரமாயிற்று. ஒருநாள் அரசன் அம்பட்டனுடைய ஸ்திதியைக்கண்டு, "அடே, இப்போது உனக்குக் கிடைக்கிற சம்பளத்தில் பாதி உனக்குக் கிடைத்தபோது நீ சந்தோஷமாயும் திருப்தியாயும் இருந்தாய். இப்போது அதைவிட இருமடங்கு அதிகமான சம்பளம் வரும்போது நீ என் மயங்கிய முகத்துடன் கவலையும் விசாரமும் கொண்டவனுக இருக்கிருய்! எழு ஜாடி தங்கத்தை வாங்கிக் கொண்டாயோ?" என்று கேட்டான். அம்பட்டன் ஆச்சரியப்பட்டு, "மகாராஜாவே! சமுகத்தில் இந்த சங்கதியை யார் தெரிவித்தார்கள்?" என்றுன். அதற்கு அரசன், "எவனிடம் யக்ஷனுடைய செல்வம் வந்திருக்கிறதோ அவன் இப்படிப்பட்ட நிலைமைக்கு வருவான் என்று தெரியாதா? அவன் இந்த எழு ஜாடிகளையும் எனக்குக் கொடுப்பதாகச் சொன்னுன். அது 'வரவுப் பணமா, செலவுப் பணமா,' அதாவது அந்தப் பணத்தைச் செலவு செய்ய வேண்டியதா, புதைத்து வைக்க வேண்டியதா என்று அவனைக் கேட்டேன்; கேட்டதும் யக்ஷன் பதில் சொல்லாமல்

ஓடி விட்டான்; அந்தப் பணத்தை ஒருவராலும் செலவழிக்க முடியாதென்பதை நீ அறியாயோ? அது இன்னும் சேர்த்து வைக்க வேண்டுமென்னும் ஆசையைத்தான் தரும். உடனே போய்ப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு," என்றான். அம்பட்டனுக்கு புத்தி வந்தது. அவன் யக்ஷன் வாழும் மரத்தடிக்குச் சென்று, "உன் பணத்தை வாங்கிக்கொள்," என்றான். "நல்லது," என்று யக்ஷன் பதில் சொன்னான். அம்பட்டன் வீட்டுக்குத் திரும்பி வந்ததும், மாயமாய் வந்தஜாடிகள் ஏழும் மாயமாகவே போய்விட்டன வென்பதையும் அவைகளுடன் அவன் ஆயுளளவும் கஷ்டப்பட்டுத் தேடிய செல்வமும் போய் விட்டதென்பதையும் கண்டான். ஈசுவர ராஜ்யத்திலும் சிலருடைய நிலைமை இப்படிப் பட்டதாகவே இருக்கிறது. உண்மையான வரவுக்கும் உண்மையான செலவுக்கும் வித்தியாசம் தெரிந்து கொள்ளாதவர்கள் தாங்கள் பெற்றுள்ளனவற்றை யெல்லாம் இழந்து விடுகின்றனர்.

966. ஒரு சிஷ்யன் பரமஹம்ஸரிடம் வந்து, "ஸ்வாமி! பெண்ணாசையை எப்படி ஒழிக்கிறது? நான் ஆயுளளவும் தர்ம மார்க்கத்திலேயே இருந்து வருகிறேன். என்றாலும் அடிக்கடி என் மனதில் தீய சிந்தனைகள் உண்டாகின்றன," என்றான்.

அதற்கு பகவான் பதில் சொன்னதாவது:—ஒரு மனிதன் ஒரு நாயை வெகு பிரியமாய் வளர்த்து வந்தான். அவன் அதைத் தட்டிக் கொடுத்து, எடுத்துச் சென்று விளையாடி முத்தமிடுவது வழக்கம். இந்த மதியீனத்தைக் கண்ட ஸாது ஒருவர் நாய்க்கு அத்தனை இடங் கொடுக்கக் கூடாதென்றும், அது பகுத்தறிவற்ற பிராணியாதலால் என்றைக்காவது அவனைக் கடித்துவிடுமெனவும் சொல்லிப்போனார். அதைக்கேட்டு அதன்படி நடக்க வெண்ணிய அம்மனிதன் நாயைத் தூர எறிந்துவிட்டு அந்த க்ஷணமுதல் அதைச் சீராட்டுவதில்லை யெனத் தீர்மானித்தான். ஆனால் அவனுடைய மனம் மாறியதை நாய் அறியவில்லை; ஆதலால் அது அடிக்கடி அவனிடம் ஓடிற்று. பலதரம் அவனால் அடிபட்ட பிறகுதான் அது அவனிடம் போவதை நிறுத்தியது. உனது நிலைமையும் அப்படிப்பட்டதுதான். இது

வரையிலும் நீ உன் மனத்தில் வைத்துச் சீராட்டிவந்த நாயானது உன்னை விட்டு எளிதில் அகலாது. என்றாலும் பாதகமில்லை. அந்த நாய் உன்னிடம் வரும்போதெல்லாம் அதைச் சீராட்டாமல் நன்றாக அடி. காலக்கிரமத்தில் அது உன்னிடம் கொஞ்சி குலாவ வருவதை விட்டுவிடும்.”

967. ஒரு இடைச்சி, ஆற்றுக்கு அக்கரையில் வசித்து வந்த பிராம்மண குரு ஒருவருக்குத் தினந்தோறும், பால் கொண்டுபோய்க் கொடுத்து வருவது வழக்கம். படகு சரிவரப் போகாதபடியால், தினந்தோறும் பால் கொண்டுபோய்க் கொடுப்பதில் தவக்கம் ஏற்பட்டது. இப்படித் தவக்கம் ஏற்பட்டதற்காக ஒருநாள் குரு கடிந்து கொள்ளவே, இடைச்சி, ஸ்வாமி! நான் என்ன செய்வேன்? தினமும் அதிகாலையில்தான் நான் வீட்டைவிட்டுப் புறப்படுகிறேன். ஆற்றங்கரைக்கு வந்ததும் ஓடக்காரனுக்கும் ஜனங்களுக்குமாக நெடு நேரம் காத்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது,” என்றாள். “ஏ ஸ்திரீயே! பகவந்நாமத்தைச் சொல்லிக் கொண்டு ஜனங்கள் சம்ஸாரமாகிய ஸாகரத்தையே கடந்து விடுகிறார்கள். உன்னால் இந்தச் சிறிய ஆற்றைக் கடக்க முடியவில்லையா?” என்றார் குரு. ஆற்றைக் கடக்கிறதற்குச் சுலபமான வழியைத் தெரிந்துகொண்ட கள்ளம் கபடமற்ற இடைச்சிக்கு வெகு சந்தோஷமுண்டாய்விட்டது. மற்றும் நாள் முதற்கொண்டு குருவுக்கு அதிகாலையிலேயே பால் கிடைத்து வந்தது. ஒருநாள், அவர் இடைச்சியைப் பார்த்து, “நீ இப்போது தாமதமாக வருவதில்லையே; எப்படி சீக்கிரம் வர முடிகிறது,” என்று கேட்டார். “ஸ்வாமி, தேவரீர் சொல்லியபடி நான் பகவந் நாமத்தைச் சொல்லிக்கொண்டு ஆற்றைத் தாண்டிவருகிறேன். ஓடக்காரனுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறதில்லை,” என்றாள். இடைச்சியின் வார்த்தையில் நம்பிக்கையற்ற குரு, “நீ எப்படி ஆற்றைத் தாண்டி வருகிறாயென்பதை எனக்குக் காட்டுவாயா?” என்றார். இடைச்சி சம்மதப்பட்டு, குருவை அழைத்துக் கொண்டு வந்து ஆற்று ஜலத்தின்மீது நடக்கத் தொடங்கினாள். அப்படிக் கொஞ்சம் நடந்ததும் பின்னால் திரும்பிப்பார்த்து, குரு நடக்க முடியா

மல் கஷ்டப் படுவதைக் கண்டு, "சுவாமி! இது என்ன! பகவந் நாமத்தை வாயால் சொல்லிக்கொண்டு, வஸ்திரம் எங்கே நனைந்து விடப் போகிறதோ என்று கைகளினால் அதைத் தூக்கிக் கொள்ளுகிறீர்களே! தங்களுக்கு ஈசுவரனிடத்தில் பூரணமான நம்பிக்கை இல்லை," என்றாள். உலகில் ஒரு மனிதனாலேயோ ஸ்திரீயாலேயோ காட்டப்பட்டுள்ள அபூர்வ வித்திகள் எல்லாவற்றினுடையவும் ரகஸியம் யாதெனில், ஈசுவரனே கதி என்று அவனிடம் முழுநம்பிக்கையுடன் தன்னை ஒப்படைத்துவிடுதலேயாம்.

968. ஒரு பொந்தில் ஒரு பாம்பு வசித்து வந்தது. அவ்வழியாக யார் சென்றபோதிலும் அவரை அது கடித்து வந்ததாதலால், அப்பக்கம் ஒருவரும் போவதில்லை. ஒருநாள் ஸாது ஒருவர் அவ்வழியே போகும்போது, அவரைக் கடிக்கவேண்டுமென்று அப்பாம்பு அவரைப் பின்தொடர்ந்து ஓடிற்று. ஆனால் அவரைச் சமீபித்ததும் அவருடைய மஹிமையால் பாம்புக்கிருந்த மூர்க்கம் முழுவதும் போய்விட்டது. அந்த மஹான் பாம்பைப் பார்த்து, "நண்பா! என்னைக் கடிக்க நினைக்கிறாயா?" என்று கேட்டார். பாம்பு வெட்கப்பட்டுப் பதில் சொல்லாமலிருந்தது. அதன்மேல் அந்த யோகி, "நண்பா, கேள். இனிமேல் ஒருவருக்கும் தீங்கு செய்யாதே," என்று சொல்லிப் போனார். அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகப் பாம்பு தலையை அசைத்தது. மஹான் போனபிறகு பாம்பு தன் புற்றில் புகுந்துகொண்டு, அந்த க்ஷண முதல் யாருக்கும் தீங்கு செய்ய நினைக்காமல் வாழத் தொடங்கியது. கொஞ்சநாளில் அவ்வூர் ஜனங்கள், இந்தப் பாம்புக்கு விஷமெல்லாம் போய்விட்டது. இனி ஒருவரையும் கடிக்காது என்று நினைத்து அதைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தனர். சிலர் அதன்மீது கற்களை எறிந்தார்கள். வேறு சிலர் இரக்கமின்றி, அதன் வாலைப் பிடித்து இழுத்தார்கள். இப்படியாக அதற்கு நேர்ந்த உபத்திரவத்துக்கு அளவேயில்லை. அதிருஷ்டவசமாய், முன் வந்துபோன ஸாது அவ்வழியாய் மறுபடியும் வந்து, உடம்பெல்லாம் புண்ணாகி மெலிந்திருக்கும் பாம்பைப் பார்த்து, அப்படி யானதின் காரணத்தை அறியவேண்டி, "நடந்த சங்கதி என்ன?" என்று கேட்டார். "ஸ்வாமி, தங்கள் உபதேசப்படி

நான் ஒருவருக்கும் தீங்கு செய்வதில்லை. அதன் பயன் இது. ஜனங்கள் இரக்கமில்லாமல் என்னைத் தொந்தரவு செய்கிறார்கள்," என்றது பாம்பு. யோகி இதைக்கேட்டு, புன்சிரிப்புக் கொண்டு, "நண்பா, யாரையும் கடிக்கவேண்டாம் என்று மட்டும் உனக்குச் சொன்னேன். ஒருவரையும் பயமுறுத்த வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே. நீ ஒருவரையும் கடிக்க வேண்டாம். ஆனால் பிறர் உன்னிடம் வந்து தொந்தரவு செய்யாதிருக்குமப்படி நீ சீறிச் சப்தமிட்டுப் பயமுறுத்தி அவர்களை உன்னருகில் வராமலிருக்கும்படி செய்துகொள்ள வேண்டும்," என்று சொன்னார். அதுபோல, நீ உலகத்தில் வாழ்ந்திருக்கும் வரையில் பிறர் உன்னிடம் அச்சமும் மரியாதையும் கொள்ளும்படி நட. ஆனால், ஒருவருக்கும் தீங்கு செய்யாதே. பிறரால் உனக்குத் தீங்கு வராதபடியும் காத்துக்கொள்.

969. "உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் ஈசுவர ஸ்வரூபங்களே," என்று குரு உபதேசித்தார். சிஷ்யனோ இதன் வாஸ்தவமான அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளாமல் சொல்லர்த்தத்தை மட்டும் தெரிந்து கொண்டிருந்தான். ஒருநாள் அவன் தெருவழியாகப் போய்க்கொண்டிருக்கையில், எதிரே வந்த ஒரு யானையைக் கண்டான். யானையின் மீதிருந்த பாகன், "விலகுங்கள், விலகுங்கள்" என்று கூவிக்கொண்டிருந்தான். "நான் என் விலகவேண்டும்? நானும் ஈசுவரன், இந்த யானையும் ஈசுவரன்; ஈசுவரன் தனக்கே என் பயப்படவேண்டும்?" என்று நினைத்துக் கொண்டு, சிஷ்யன் விலகாமலிருந்து விட்டான். பிறகு யானை சமீபித்து இந்தச் சிஷ்யனைத் துதிக்கையால் தூக்கி அப்பால் போட்டுச் சென்றது. அதனால் நேர்ந்த காயங்களுடன் அவன் குருவை அணுகி நடந்த சங்கதிகளைச் சொன்னான். "எல்லாம் சரிதான்; நீயும் ஈசுவரன், அந்த யானையும் ஈசுவரனே. ஆனால் மேலேயிருந்த பாகனான ஈசுவரன் உன்னை எச்சரித்து வந்தானே. அதை என் நீ கவனிக்கவில்லை?" என்று குரு கேட்டார்.

970. தேவரிஷியான நாரதர் ஒரு காலத்தில் மமதை கொண்டு பக்தியில் தன்னை மிஞ்சியவர் எவருமில்லை என்று நினைத்தார். ஸர்வேசுவரனான பகவான் இவருடைய மனக்கருத்தை

அறிந்து இவரைப்பார்த்து, "நாரதரே! இன்ன இடத்தில் என்னுடைய பரம பக்தன் ஒருவன் இருக்கிறான்; அங்குச் சென்று அவனோடு நட்புக்கொண்டு உறவாடிவாரும்," என்றார். நாரதர் அப்படியே அங்கே சென்று ஒரு குடியானவனைக் கண்டார். அவன் அதிகாலையில் எழுந்திருந்து, "ஸ்ரீ ஹரி" என்று ஒரு தரம் சொல்லிவிட்டு, கலப்பையை எடுத்துக்கொண்டு போய், நாள் முழுவதும் வயலில் உழுதுவிட்டு, இரவில் படுக்கைக்குச் செல்லும்போது, இன்னொரு தரம் ஹரி நாமஸ்மரணம் பண்ணினான். "இந்தப் பட்டிக்காட்டானை எப்படிப் பக்தன் என்று சொல்வது? நாள் முழுவதும் தன் காரியத்தையே செய்கிறான். பக்திமானாகத் தோற்றவில்லை," என்று நாரதர் தனக்குள் நினைத்துக்கொண்டு பரந்தாமனிடம் சென்று, தனது அபிப்பிராயத்தை வெளியிட்டார். பகவான் நாரதரைப் பார்த்து, "எண்ணெய் நிரம்பிய இந்தக் கிண்ணத்தை எடுத்துக்கொண்டு இந்தப் பட்டணத்தை ஒரு தரம் சுற்றிவாரும். ஆனால் ஒரு துளி எண்ணெய் கூடக் கீழே சிந்தாமல் ஜாக்கிரதையாக விருக்கவேண்டும்," என்றார். நாரதர் அவ்விதமே செய்து பகவானிடம் திரும்பி வந்தபோது, "ஊரைச்சுற்றி வரும்போது எத்தனை தடவை என்னை நினைத்தீர்?" என்று பகவான் கேட்டார். "பிரபோ! ஒருதரம் கூட நினைக்கவில்லை. எண்ணெய் நிரம்பிய கிண்ணத்தின் மீது கவனமாக இருக்கையில் வேறு ஒரு ஞாபகமும் வரவில்லை," என்று நாரதர் பதில் சொன்னார். "நல்லது, நாரதரே! இந்த ஒரு கிண்ணம் எண்ணெயினால் நீர் என்னை முற்றிலும் மறந்து போய் விட்டீர்; ஆனால் அந்தக் குடியானவனைப் பாரும். பாரமான சம்ஸாரச் சுமையைத் தாங்கிக் கொண்டிருந்த போதிலும், தினந்தோறும் தவறாமல் இரண்டு தரம் என்னை ஸ்மரிக்கிறான்," என்று பகவான் கூறியருளினார்.

971. ஒரு குரு, தன் சிஷ்யனுடைய கிராமத்துக்குப் போய்க் கொண்டிருந்தார். தன்னுடன் கூட வேலைக்காரன் ஒருவனும் வராதபடியால், அவர் வழியில் நின்ற ஒரு சக்கிலியனைப் பார்த்து, "அடே! நீ எனக்கு வேலையாளாக வருவாயா? நல்ல சாப்பாடு கிடைக்கும். மற்றும் உன்னை ஜாக்கிரதையாகப் பார்

துக் கொள்ளுகிறேன்; வா," என்றார். அதற்குச் சக்கிலியன், "ஸ்வாமி, நான் தாழ்ந்த ஜாதியான். தங்களுடைய வேலையாளாய் எப்படி இருப்பேன்?" என்றான். "பாதகமில்லை; நீ இன்னானென்று ஒருவரோடும் சொல்லாதே. நீ ஒருவரோடும் பேசாதே; ஒருவரோடும் சகவாசம் செய்யாதே," என்று குரு சொன்னார். சக்கிலியன் இதற்கிணங்கி, அவருடைய வேலையாளாகப் போனான். சாயங்கால வேளையில், குருவானவர் சிஷ்யன் வீட்டில் உட்கார்ந்து தியானம் செய்து கொண்டிருக்கையில், இன்னொரு பிராம்மணன் வந்து குருவின் வேலையாளை நோக்கி, "அடே! என்னுடைய பாதரக்ஷை அங்கிருக்கிறது. போய் எடுத்துவா," என்றான். குரு சொல்லியிருக்கிற வார்த்தையின்படி, இந்தச் சக்கிலியன் பதில் சொல்லாமலிருந்தான். பிராம்மணன் அடுத்தடுத்துச் சொல்லியும் இவ்வேலைக்காரன் கேட்காமலிருந்தபடியால், அவன் கோபங்கொண்டு, "அடே! நீ சக்கிலியனா? பிராம்மணன் சொல்லும் வார்த்தையைக் கேட்கக்கூடாத தவுஷ்டிகம் எங்கிருந்து உனக்கு வந்தது? உன் பெயர் என்ன?" என்று கேட்டான். இதைக் கேட்டதும், சக்கிலியன் நடுநடுங்கிப்போய், "ஸ்வாமி, என்னைக் கண்டுபிடித்து விட்டீர்கள். நான் இனிமேல் இங்கிருக்கக் கூடாது," என்று சொல்லிக்கொண்டு ஓட்டம் பிடித்தான். இதைப்போல், மாயையை இன்னதென்று அறிந்து கொண்டால், அது உடனே விலகிப்போய் விடும்.

972. "செய்யலாமென்றிருக்கிறேன்," "இதோ செய்யப் போகிறேன்," "இப்போது தொடங்கப் போகிறேன்," என்று கால விளம்பரம் செய்வது தீவிர வைராக்கியத்தைக் காட்டுவதன்று. தீவிர வைராக்கியம் எவனிடம் இருக்குமோ அவன் தாயை நினைத்து அழும் குழந்தையைப்போல ஈசுவரனை அடையத் தவித்துக் கொண்டிருப்பான். அவனுக்கு ஈசுவரனைத் தவிர வேறொன்றும் வேண்டியிருப்பதில்லை. இவ்வுலகத்தை அவன் சுற்றுச் சுவர் இல்லாத கிணற்றுக்குச் சமானமாகக் கருதுவான். ஆகவே, அதில் விழாமலிருப்பதற்கான முன் ஜாக்கிரதையுடன் இருப்பான். மற்றவர்களைப் போல், "முதலில் குடும்ப விவகாரங்களை ஒழுங்குப்படுத்தி விடுகிறேன், அப்பால் ஈசுவரத் தியானம்

செய்கிறேன்,'' என்று அவன் சொல்லமாட்டான். அவன் உறுதி யான தீர்மானங் கொண்டவனுகவே யிருப்பான்.

ஒரு தேசத்தில் ஒரு சமயம் மழையில்லாமல் க்ஷாமம் நேரிட்டது. வாய்க்கால்களை வெட்டி அவைகளின் வழியாக, விளை நிலங்களுக்குத் தண்ணீர் கொண்டு வருவதில் குடியானவர்கள் கருத்தூன்றி யிருந்தார்கள். அவர்களில் ஒரு உறுதியான தீர் மானம் கொண்டவன் இருந்தான். தனது வாய்க்காலை ஆற்றுடன் சேர்க்கும் வரையில் வெட்டிக்கொண்டு போவதாகவே அவன் நிச்சயித்துவிட்டான். ஸ்நானத்துக்கு நேரம் ஆனபடியால், அவனுடைய மனைவி, கொஞ்சம் எண்ணெயைத் தன் மகளிடம் கொடுத்தனுப்பினுள். அம்மகள் வந்து, "அப்பா! உச்சிப் போதாகிவிட்டது; இந்த எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு ஸ்நானம் செய்யுங்கள்,'' என்ருள். "இன்னும் வேலை யிருக்கிறது. ஆதலால் பொறு,'' என்ருன் குடியானவன். மாலை இருபது நாழிகை ஆகியும் அவன் சாப்பாட்டைப் பற்றியாவது ஸ்நானத்தைப் பற்றியாவது நினைக்கவேயில்லை. கடைசியாக அவனுடைய மனைவி, வயலுக்கு வந்து, "இன்னும் ஏன் நீங்கள் ஸ்நானம் செய்யவில்லை. சோறு ஆறிப்போய்க் குளிர்ந்து விட்டது. எப்போதும் நீங்கள் இப்படித்தான் பிடிவாதம் செய்கிறீர் கள். இப்போதாவது வாருங்கள், பாக்கி வேலையை நாளைக்குச் செய்யலாம்; அல்லது சாப்பாட்டுக்குப் பிறகு பார்த்துக்கொள்ள லாம்,'' என்ருள். குடியானவனுக்குக் கோபம் வந்தது. உடனே அவன் மண் வெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்து அவளைக் கண்டபடி வைது துரத்தி, "புத்தி கெட்டவளே! கதிர்கள் வாடுவதைப் பார்க்கவில்லையா நீ? நாளைக்கு நீங்கள் எல்லாரும் பட்டினி கிடந்து சாக வேண்டியதல்லவா? இன்றைய தினம் வயலுக்கு ஜலம் கொண்டு வருவதென்று தீர்மானம் செய்திருக்கி றேன். பிறகுதான் மற்ற விஷயங்களைக் கவனிக்கப் போகி றேன்,'' என்ருன். சங்கதிகளைத் தெரிந்துகொண்ட அந்த ஸ்திரீ ஓடிப்போனுள். பிறகு அவன் நடுநிசி வரையில் பகீரதப் பிரயத்தனம் செய்து கருதிய காரியத்தை முடித்தான். வயலுக் குள் ஜலம் சப்தமிட்டுக் கொண்டு பாய்ந்ததைக் கண்டபோது

அவனுக்கு அளவற்ற ஆனந்த முண்டாயிற்று. அப்பால் அவன் வீட்டுக்கு வந்து மனைவியைப் பார்த்துக் கொஞ்சம் எண்ணெய் கொண்டு வரும்படியும், ஹுக்கா பிடிக்க புகையிலை தயாராக்கும் படியும் சொன்னான். ஸ்நானம் செய்து, உண்ட பிறகு அவன் நெடுநேரம் அயர்ந்து தூங்கினான். இப்படிப்பட்ட, உறுதியான மனந்தான் தீவிர வைராக்கியத்திற்கு நல்ல உதாரணம்.

இன்னொரு குடியானவனும் இதே வேலையைச் செய்து கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய மனைவி வந்து அவனை வீட்டுக்குக் கூப்பிடும்போது, அவன் மாறொரு தடையும் சொல்லாமல், மண்வெட்டியைத் தூக்கித் தோள்மீது போட்டுக் கொண்டு, "நீ வந்து கூப்பிடுகிறபடியால் நான் வரத்தான் வேண்டும்," என்று சொல்லிக்கொண்டு பின் தொடர்ந்தான். காலத்தில் அவன் வயலுக்கு ஜலம் கொண்டுவரவில்லை. இது தான் காலவிளம்பரமும் சோம்பலுமான வைராக்கியத்துக்கு உதாரணம். திடமான தீர்மானம் இல்லாதுபோனால் குடியானவனுடைய விளைநிலத்துக்கு ஜலம் பாய்வதில்லை. அதுபோல, தீவிர வைராக்கியம் இல்லாவிட்டால் ஈசுவரதரிசனமாகிய மகோன்னத நிலை ஸித்தியாகாது.

973. "நான் யார்," என்ற ஞானத்தை உபதேசம் செய்யும் எண்ணத்துடன் ஒரு ஸாது, தனது சிஷ்யனை ஒரு மனோஹரமான உத்யானவனத்தில் விட்டுச்சென்றார். அவர், சில நாட்கள் சென்ற பின் அங்கு வந்து, "குழந்தாய்! உனக்கு ஏதாவது தேவையிருக்கிறதா?" என்று கேட்டார். அவன் விரும்பிய படியே, அவர் சியாமா என்ற பெயருள்ள ஒரு கட்டழகியை அவனுடன் இருக்கச்செய்து வேண்டியவளவு மாமிசாதிகளைப் புசிக்கும்படி சொல்லிப் போனார். வெகுநாள் சென்றபின் அவர் மறுபடியும் வந்து, முன்போலவே அவனுக்கு இன்னும் ஏதாவது வேண்டுமா என்று கேட்டார். "ஸ்வாமி! எனக்கு ஒன்றும் வேண்டாம்; தங்கள் கிருபையால் நான் திருப்தியடைந்தவனாகவிருக்கிறேன்," என்றான் சிஷ்யன். அப்பால் அந்த ஸாது, அவ்விருவரையும் கூப்பிட்டு, சியாமாவின் கைகளைச் சிஷ்யனுக்குக் காட்டி, "இவைகள் என்னவென்று

சொல்வாயா ?" என்று கேட்டார். "என் அவைகள் சியா மாவின் கைகள்," என்று சிஷ்யன் பதில் சொன்னான்.

"இது என்ன ?"

"சியாமாவின் மூக்கு."

"இவை என்ன ?"

"சியாமாவின் கண்கள்."

இப்படிச் சொல்லிக் கொண்டே போகையில், "நான் ஒவ் வொன்றையும் சியாமாவினுடையது, சியாமாவினுடையது என்று சொல்லிக் கொண்டே வருகிறேன். ஆனால் இந்த சியாமா யாரோ ?" என்ற எண்ணம் சிஷ்யனுடைய மனத்தில் உதித்தது. அவன் தடுமாறிய மனத்தனாய், குருவைப் பார்த்து, "ஸ்வாமி! இந்தக் கண் காதுகளையுடைய சியாமா யார்?" என்று கேட்டான்.

"இந்த சியாமாவைப்பற்றி நீ தெரிந்து கொள்ள விரும்பு வாயானால் என் பின்னால் வா, உபதேசிக்கிறேன்," என்று ஸாது சொல்லி, அவனை அழைத்துக்கொண்டு போய் ரகஸியத்தை உபதேசித்தார்.

974. "ஸீதையைத் தங்கள் நாயகி யாக்கிக்கொள்ள விரும்புவது கருத்தானால், தங்களுடைய மந்திர சக்தியால் ராம னுடைய உருவத்தை எடுத்துக்கொண்டு அந்த ஸீதையைத் தாங் கள் ஏன் ஏமாற்றிவிடக் கூடாது ?" என்று மண்டோதரி தன் கணவனான ராவணனைக் கேட்டாள்.

அதற்கு ராவணன், "சீ! போ; ராமனை நினைத்த மாத்தி ரத்திலே எனக்குச் சொல்ல வொண்ணாத ஆனந்தமும் இன்பமும் உண்டாகின்றன. பரமபதமான சொர்க்கங்கூட வெறுப்பாகி விடும் போலத் தோன்றுகிறது. அப்படியிருக்க அவனுடைய திவ்ய உருவத்தை எடுத்துக் கொண்டால் எனக்குச் சிற்றின்பத் தில் எப்படி மனம் செல்லும் ?" என்று பதில் சொன்னான்.

975. மாட்டிக்கு மிடத்திலிருந்து ஒரு பறையன், தன் கழுத்தில் வைத்த காவடியின் இரு பக்கங்களிலும் தொங்க விட்ட கூடைகளில் மாமிசத்தைக் கொண்டு வந்தான். வரும் வழியில் அவன், ஆற்றிற்குப் போய் ஸ்நானம் செய்து திரும்பிய சங்கராசாரியரைச் சந்திக்க நேர்ந்தது. ஏதோ தற்செயலாய்

அவன் அந்த மஹான் மேல் பட்டுவிட்டான். உடனே சங்கரர் அவன் மீது கோபங்கொண்டு, "அடே சண்டாளா! நீ என் மேல் பட்டுவிட்டாயே," என்றார். அதற்குப் பறையன், "ஸ்வாமி! நான் தங்கள் மீது படவுமில்லை, தாங்களும் என்மீது படவில்லை. தங்கள் ஆத்மாவானது சரீரமா, மனமா, புத்தியா, இவைகளில் எது? தாங்கள் யார்? எனக்குச் சொல்லுங்கள். இந்த உலகமானது எந்த ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் ஆக்கப்பட்டிருக்கிறதோ, அவை ஒன்றனோடும் உண்மையான ஆத்மா ஸம்பந்தப்பட்டிருப்பதில்லை என்பதைத் தாங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்களே," என்றான். சங்கரர் வாய் பேசாது நின்று விழிக்கலானார்.

976. ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தனர். தகுந்த வயது வந்ததும் அவன் அவ்விருகுமாரர்க்கும் உபநயனம் செய்து வைத்து, வேதாத்தியயனம் செய்யும்படி ஒரு குருவினிடம் ஒப்புவித்தான். நெடுநாள் கழித்து, அக்குமாரர்கள் அத்தியயனத்தை முடித்த பின் வீட்டுக்குத் திரும்பி வந்தனர். தகப்பனார், அவர்களைப் பார்த்து, "நீங்கள் வேதாந்தம் கற்றிருக்கிறீர்களா?" என்று கேட்டார்.

குமாரர்கள், "படித்திருக்கிறோம்," என்றனர். "அப்படியானால் பிரம்மம் எப்படிப்பட்டதென்பதைச் சொல்லுங்கள்," என்றார் பிதா. மூத்தகுமாரன், வேதங்களினின்றும், வேறு சாஸ்திரங்களினின்றும் அனேகம் மேற்கோள்களை எடுத்துக்கூறி, "அப்பா! அது மனோவாக்குக்கு எட்டாதது. இன்னின்ன மாதிரி இருப்பது. அதெல்லாம் எனக்குத் தெரியும்" என்று சொல்லி, பின்னும் சில ஆதாரங்களை எடுத்துக்கூறி முடித்தான்.

"குழந்தாய்! நீ பிரம்மத்தை நன்றாகத் தெரிந்துகொண்டவன் போலத்தான் இருக்கிறாய். இனி நீ உன் காரியங்களைக் கவனிக்கலாம்," என்று பிதா சொல்லிவிட்டு, இளையவனைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டார். ஆனால் அவன் பதில் சொல்லவில்லை. பதில் சொல்லப் பிரயத்தனப்படவுமில்லை. உடனே அவனுடைய பிதா, அப்பா! நீ அறிவிப்பதுதான் சரியானது. அதீத ஸ்வரூபியைப் பற்றி ஒன்றும் விவரித்துச் சொல்ல முடியாது

சொல்லத் தொடங்கினால் அளவற்றதற்கு அளவையும், நித்யத்துக்கு அநித்யத்தையும், ஸம்பந்தமற்றதற்கு ஸம்பந்தத்தையும் ஸங்கல்பிக்கவேண்டி யிருக்கிறது. நீ ஒன்றும் சொல்லாமல் மௌனமாக விருந்ததே அனேகமாயிரம் ஆதாரங்களை எடுத்துக் காட்டியதற்கு மேலாகும்,'' என்றார்.

977. அக்பர் சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில், டில்லிக்குச் சமீபமான காடொன்றில் ஒரு பக்கிரி (சாது) குடிசை கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார். அனேக ஜனங்கள் அந்த ஸாதுவிடம் போவதுண்டு. ஆனால் அவரிடம் பொருள் ஒன்றும் இருக்கவில்லை யாதலால், வந்தவர்களை உபசரிப்பது சாத்தியமில்லாதிருந்தது. அதை நிவர்த்திக்கும் பொருட்டுக் கொஞ்சம் பணத்தைப் பெறவேண்டுமென்று நினைத்த அந்தப் பக்கிரி, ஸாதுக்களை அபிமானிக்கும் அக்பரிடம் சென்றனர். அவ்வேளையில் அக்பர் தொழுது கொண்டிருந்தனர். ஸாதுவும் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து தொழுதனர். அந்தச் சந்தர்ப்பத்தில், "ஈசனே! எனக்கு இன்னும் செல்வம் செல்வாக்கு, ராஜ்யம் இவைகளைக் கொடுத்தருளவேண்டும்,'' என்று அக்பர் பிரார்த்தித்ததை இந்த ஸாது கேட்டு, உடனே அவ்விடம் விட்டு எழுந்து போகத் தொடங்கினர். ஆனால் அக்பர் அவரைக் கூப்பிட்டுத் திரும்பவும் உட்காரும்படி சொன்னார்.

தொழுகை முடிந்ததும் அக்பர் அந்தப் பக்கிரியைப் பார்த்து "தாங்கள் என்னைக் காண வந்தீர்கள். ஆனால் என்னிடம் எதையும் சொல்லாமல் தாங்கள் திரும்பிப் போகவெண்ணிய காரணம் என்ன?'' என்று கேட்டார்.

பக்கிரி, "சக்கரவர்த்தியாகிய தங்கள் ஸமுகத்துக்கு ஒரு காரியத்தை உத்தேசித்து வந்தேன். ஆனால், அதை இப்போது சொல்லித் தங்களைச் சிரமப்படுத்த வேண்டாமென்று நினைக்கிறேன்,'' என்றார்.

வந்த காரியத்தைச் சொல்லும்படி அக்பர் பன்முறை வற்புறுத்தியதின் மேல், "ராஜனே! அனேக ஜனங்கள் உபதேசம் பெறும் பொருட்டு என்னிடம் வருகின்றனர். ஆனால் என்னிடம் பொருளில்லாமையால், அவர்களுடைய சவுகரியங்களைக் கவ

ணிக்க எதுவில்லாமல் சிரமப்படுகிறேன். தங்களைக் கேட்டுக் கொஞ்சம் பணம் பெறலாமென்று வந்தேன்,'' என்றார் பக்கிரி.

"அப்படியானால் என் தங்களுடைய கருத்தைத் தெரிவிக்காமல் போகிறீர்கள்?''

"ராஜனே! நீங்களே செல்வம், செல்வாக்கு, ராஜ்யம் இவைகளை வேண்டி ஈசுவரனிடம் யாசித்தீர்கள்! ஆதலால் ஒரு யாசகனிடம் இன்னொரு யாசகன் ஏன் யாசிக்கவேண்டும்? யாசகம் வாங்காமல் காரியத்தை முடிக்க முடியாதென்று கண்டால், ஈசுவரனிடத்திலேயே யாசித்துக்கொள்ளலாம் என்று நினைத்துப் புறப்பட்டேன்,'' என்றார் பக்கிரி.

978. ஒரு மனிதனுடைய மகன் மரணத்தருவாயி லிருந்தான். ஒருவாற்றானும் குணமடைய எதுவில்லாம லிருந்தது. அத்தருணத்தில் அங்கு வந்த ஒரு ஸாது, "ஒரே ஒரு உபாயம் இருக்கிறது: ஒரு மனிதனுடைய மண்டையோட்டில், ஸ்வாதி நட்சத்திரம் உச்சமாகும் ஸமயத்தில் பெய்யும் மழைத்துளியுடன் நல்லபாம்பின் விஷத்தைக் கலந்து கொண்டு வந்தால், அது உன் மகனைப் பிழைக்கச் செய்யும்,'' என்றார். உடனே அம்மனிதன் காலத்தைக் கவனித்துப் பார்த்தான். ஸ்வாதி நட்சத்திரம் மற்றும் நாட் காலையில் உச்சமாகுமென்பதை அறிந்து ஈசுவரனை நோக்கி, "பிரபோ! இந்த நிபந்தனைகளையெல்லாம் முற்றச் செய்து என் மகனைக் காப்பாற்றும்,'' என்று பிரார்த்தித்தான். பின்னர், அவன் அதிக சிரத்தையுடனும் ஆவலுடனும் மனிதனுடைய மண்டையோட்டைத் தேடிச் சென்றான். கடைசியில், ஒரு மரத்தினடியில் ஒரு மண்டையோடு கிடந்தது. இதை எடுத்து ஒரு பக்கம் வைத்து, மேலும் பிரார்த்திக்கையில், மழை பெய்யத் தொடங்கி, அவன் வைத்திருந்த மண்டை யோட்டில் சில துளிகள் விழுந்தன. பின்னர், அவன், "ஈசுவரனே! இரண்டு காரியங்கள் பூர்த்தியாயின. இன்னொன்றையும் பூர்த்தியாக்க வேண்டும்,'' என்று பிரார்த்தித்தான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அந்த மண்டையோடு இருந்த இடத்தின் அருகாமையில் ஒரு தவளை தென்பட்டதைக் கண்டு, மறுபடியும் பிரார்த்தித்தான். அப்போது அந்தத் தவளையைப் பிடிக்க வேண்டுமென்று கருதிய

நல்ல பாம்பு ஒன்று புல்லிலிருந்து பாய்ந்தெழுந்தது. ஆனால் அந்தக்ஷணத்தில் அத்தவளை தப்பித்துக்கொள்ள மண்டையோட்டைத்தாண்டி அப்புறம் தாவிக்குதிக்க, பாம்பின் விஷம் அவ்வோட்டுக்குள் விழுந்தது. உடனே ஆனந்த மடைந்து, பூரண நன்றி யறிதலுடையவனாகி, அம்மனிதன், "ஈசுவரா! உனது அருளால், முடியாத காரியங்களும் முடிகின்றன. இனி என் மகன் உயிர் பிழைத்து எழுந்திருப்பானென்பது நிச்சயம்," என்று கூறினான். ஆதலால்தான், உண்மையான நம்பிக்கையும் தீவிரமான ஆவலும் இருந்தால், ஈசுவரக் கிருபையால் உனக்கு எல்லாம் உண்டாகும் என்கிறேன்.

979. ஒரு கனவான் வீட்டில் ஒரு பிராம்மணர் பூஜை செய்துவந்தார். ஒரு சமயம் அப்பிராம்மணர் வெளியூருக்குப் போக நேர்ந்தபோது, தன் சிறு மகனிடம் பூஜையை ஒப்புவித்து, "தினந்தோறும் நிவேதனத்தை ஸ்வாமி முன்னால் வைத்து, அவருக்கு அமுது செய்துவை," என்று சொல்லிப்போனார். பிதாவின் கட்டளைப்படி நடந்த பையன், நைவேத்தியத்தை ஸ்வாமி முன்னால் வைத்து, மௌனமாகக் காத்திருந்தான். ஆனால் ஸ்வாமி பேசவுமில்லை; நைவேத்தியத்தை அமுது செய்யவுமில்லை. பையன் நெடுநேரம் வரையில் பொறுத்துப் பார்த்தான். பூஜா கிருகத்திலிருந்து ஸ்வாமி கீழே இறங்கிவந்து, நைவேத்தியத்தின் முன்னர் உட்கார்ந்து அதனைப் புஜிப்பார் என்று அப்பையன் திடமாக நம்பியிருந்தான். ஆதலால், அவன், "ஸ்வாமி! சீக்கிரம் வந்து சாப்பிடும். எனக்கு நாழிகையாகிறது. என்னால் இனிமேல் காத்துக்கொண்டிருக்க முடியாது," என்றான். இதற்கும் ஸ்வாமி பதில் சொல்லவில்லை. ஆதலால் பையன், "ஸ்வாமி! உமக்கு அமுது செய்விக்க வேண்டுமென்று என் பிதா சொல்லிப் போயிருக்கிறார். அப்படியிருக்க, நீர் ஏன் இன்னும் உண்ணவாராமலிருக்கிறீர்? என் பிதா கூப்பிட்டால் வந்து அமுது செய்துபோகும் நீர், என்னால் நிவேதனம் செய்யப்பட்டதைப் புஜிக்காமலிருப்பதற்கு நான் என்ன அபராதம் செய்திருக்கிறேன்?" என்று சொல்லி நெடுநேரம் அழுதான். பின்னர் தலையை நிமிர்த்துப் பார்க்கையில், ஸ்வாமி மனித ரூபத்தை

எடுத்துக்கொண்டு நைவேத்தியத்தைச் சாப்பிடுவதைக் கண்டான்! பூஜை முடிந்ததும் பையன் வெளியில் வந்தான். வீட்டுக்காரர்கள், "பூஜை ஆகிவிட்டால் நைவேத்தியத்தைக் கொண்டு வருகிறது தானே?" என்றனர். "எல்லாவற்றையும் ஸ்வாமி சாப்பிட்டு விட்டாரே," என்று பையன் பதில் சொன்னான். அவர்கள் ஆச்சரியப்பட்டு, "என்ன சொல்கிறாய்?" என்றனர். "நான் நிவேதனம் செய்தவற்றை யெல்லாம் ஸ்வாமி சாப்பிட்டுவிட்டார்," என்றான் பையன். அப்பால், அவர்கள் பூஜாகிருகத்தினுள் நுழைந்து பார்க்க, நைவேத்தியம் வைக்கப்பட்டிருந்த பாத்திரங்கள் வெறும் பாத்திரங்களாக இருக்கக்கண்டு, பிரமித்து நின்றனர். உண்மையான நம்பிக்கையும் தீவிரமான அவாவும் இப்படிப்பட்ட மகிமையை உடையன.

980. ஒரு மனிதன் ஒரு காட்டு வழியே போய்க்கொண்டிருந்தான். வழியில் மூன்று திருடர்கள் அவனை மடக்கிப் பிடித்துக்கொண்டனர். அவனிடம் இருந்த பொருள்கள் எல்லாவற்றையும் அவர்கள் பிடுங்கிக் கொண்டனர். அப்பால் முதல் திருடன், "இவனை உயிருடன் வைத்திருப்பதில் என்ன லாபம்?" என்று சொல்லித் தன் கத்தியை உருவி அவனை வெட்டப் போனான். அப்போது இரண்டாவது திருடன், "இவனைக் கொல்வதனால்தான் லாபம் என்ன? கைகால்களைக் கட்டி ஒரு பக்கத்தில் போட்டுவிட்டுப் போகலாம்," என்றனன். உடனே அவர்கள் அப்படியே செய்து ரஸ்தாவின் பக்கத்தில் அவனைப் போட்டுவிட்டுச் சென்றனர். அவர்கள் கொஞ்சதூரம் சென்றதும், மூன்றாவது திருடன் திரும்பி இவனிடம் வந்து, "அப்பா! உனக்கு நோகிறதா? நான் உன் கட்டுக்களை அவிழ்த்து உன்னை விடுதலை செய்கிறேன்; இரு," என்று சொல்லிக் கட்டுகளை அவிழ்த்துவிட்டு, "என்னுடன் வா; வழியைக் காட்டுகிறேன்," என்று வெகு தூரம் அழைத்துக்கொண்டு போனான். அப்பால் அவன், "அதோ பார்; உன் வீடு தெரிகிறது. இந்த வழியே போவாயானால் சீக்கிரம் வீடு போய்ச் சேருவாய்," என்றான். இதைக்கேட்டதும் இவன் நன்றியறிவுடன், "அப்பா! நீ எனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்திருக்கிறாய். என்னுடன்கூட எனது

வீட்டுக்கு வரக்கூடாதா?" என்று கேட்டான். அதற்குத் திருடன், "நான் வரக்கூடாது. போலீஸார் வந்து பிடித்துக் கொள்வார்கள்," என்று சொல்லிப் போய்விட்டான்.

இந்த உலகந்தான் அந்தக் காடு. ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் மேல் கூறிய மூன்று திருடர்கள். ஜீவன்தான் காட்டுவழியே போன பிரயாணி. ஆத்மஞானம் அவனிடம் இருந்த பொருள். தமோகுணமும் ரஜோகுணமும் உலக பந்தங்களாகிய சங்கிலியால் அவனைக் கட்டுகின்றன. உலகபந்தங்களிலிருந்து, அவனை ஸத்வ குணம் காப்பாற்றுகின்றது. ஸத்வ குணத்தைச் சரணமடையும் ஜீவன் தமோ ரஜோ குணங்களின் பயன்களாகிய காமக் குரோதாதி மாயைகளினின்றும் விடுதலையடைகின்றது. உலக பந்தங்களினின்றும் ஜீவனைக் கரையேற்றுவது அந்த ஸத்வ குணந்தான் என்றாலும் அந்த ஸத்வகுணமும் ஒரு திருடனே. பரமபதத்துக்குச் செல்லும் வழி வரையில் ஒருவனை அது அழைத்து வந்து, "அதோ உன் வீட்டைப்பார்," என்று சொல்லிவிட்டு மறைந்து விடுகிறது. ஸத்வ குணமும் பரமபதத்தினருகே செல்லாது.

981. ஓரிடத்தில் இரண்டு யோகிகள் ஈசுவரனைக் காணும் பொருட்டுத் தவம் புரிந்து கொண்டிருந்தனர். ஒருநாள் அவர்களுடைய ஆசிரமம் வழியாக தேவரிஷியான நாரதர் போய்க் கொண்டிருந்தார். யோகிகளில் ஒருவர், "நாரதரே! இப்போது வைகுண்டத்திலிருந்துதான் வருகிறீர்களோ?" என்று கேட்டார். "ஆமாம்," என்றனர் நாரதர். இரண்டு யோகிகளும், "அப்படியானால் இப்போது ஸர்வேசுவரன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதைச் சொல்லும்," என்றனர். "ஒரு ஊசிக்காதின் வழியாக ஈசுவரன் யானைகளையும் ஒட்டகங்களையும் போகச்செய்து விளையாடுவதை நான் கண்டேன்," என்று நாரதர் பதில் சொன்னார். யோகிகளில் ஒருவர், "அதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. ஈசுவரனால் ஆகாத காரியம் ஒன்றுமே கிடையாது," என்றார். மற்றொரு யோகியோ, "ஓ! இது அசட்டு வார்த்தை. நீர் சொல்வது அசம்பாவிதம். இது நீர் வைகுண்டத்துக்குப் போகவே இல்லை என்பதைக் காட்டுகின்றது," என்றார்.

முன்னவர் பக்தர். அவருக்குக் குழந்தைகளின் நம்பிக்கையைப் போன்ற விசுவாசம் இருந்தது. ஈசுவரனால் முடியாத காரியம் ஒன்றுமே கிடையாது. அவருடைய சுபாவத்தை ஒருவராலும் முற்றிலும் தெரிந்துகொள்ள முடியாது. அவரைப் பற்றி எதைச் சொன்னாலும் பொருந்தும்.

982. ஒரு கிராமத்தில் ஒரு சேணியன் (நெசவுக்காரன்) இருந்தான். அவன் பரம பக்தன். ஆதலால் ஜனங்கள் எல்லாருக்கும் அவனிடம் நம்பிக்கையும் அன்புமுண்டு. அச்சேணியன் தான் நெய்த வஸ்திரத்தை விற்பதற்குக் கடைத் தெருவுக்குக் கொண்டுபோவான். யாரேனும் அந்த வஸ்திரத்தின் விலையைக் கேட்டால், அவன், "ராமனுடைய சித்தத்தின்படி, நூல் விலை ஒரு ரூபாவாகிறது. ராமனுடைய சித்தத்தின்படி கூலி நாலணாவாகிறது. ராமனுடைய சித்தத்தின்படி லாபம் இரண்டணா. ஆகவே ராமனுடைய சித்தத்தின்படி இந்த வஸ்திரத்தின் விலை ஒரு ரூபாவும் ஆறணாவுமாகும்," என்பான். ஜனங்களுக்கு இவனிடம் பூரண நம்பிக்கை இருந்தபடியால், அவர்கள், இவன் சொன்ன விலையைக் கொடுத்து வஸ்திரத்தை வாங்கிக் கொள்வார்கள். இவன் பக்தனாகையால், இரவு வேளையில், சாப்பிட்ட பிறகு நெடுநேரம் உட்கார்ந்து பகவத்தியானத்திலும் ஜபத்திலும் காலங்கழிப்பான்.

ஒரு நாள் இரவில் நெடுநேரமாகியது. அவனுக்குத் தூக்கம் வரவில்லை. ஆகவே, திண்ணையில் தனியாக உட்கார்ந்து தியானமும் ஜபமும் செய்து கொண்டிருந்தான். அப்போது ஒரு கூட்டம் திருடர்கள் அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்தனர். அவர்களுடைய பொருள்களைச் சுமந்து கொண்டுவர மனிதன் எவனும் அகப்படாமையால், அவர்கள் இந்தச் சேணியனை இழுத்துக்கொண்டு சென்றனர். அப்பால், அவர்கள் ஒரு வீட்டுக்குள் நுழைந்து, அனேக சாமான்களைக் கொள்ளையடித்து, அவைகளில் சிலவற்றைச் சேணியன் தலையின்மீது ஏற்றிவைத்து அழைத்துக்கொண்டு போயினர். ஆனால் அந்தச் சமயத்தில் காவற்காரர்கள் அங்கு வந்தபடியால், திருடர்கள் ஓடிப்போய் விட்டனர். மூட்டைத் தலையனாகிய சேணியன்

அகப்பட்டுக் கொண்டான். அன்றைய இரவு அவனைக் காவலில் வைத்திருந்து மற்றும் நாள் காலையில் நியாயாதிபதி முன்னர்க் கொண்டுபோய் நிறுத்தினர். இந்த விஷயம் ஊராருக்குத் தெரியவர, அவர்கள் ஓடிவந்து சேணியனைக் கண்டு வருந்தி, நியாயாதிபதியைப் பார்த்து "பிரபோ! இவன் களவு செய்திருக்க மாட்டான்," என்று ஏகோபித்துச் சொல்லினர். அதன்மேல், நியாயாதிபதி நடந்த சமாசாரத்தைச் சொல்லும்படி சேணியனைக் கேட்டார். சேணியன், "பிரபோ! ராமனுடைய சித்தத்தின் படி நான் என் வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்திருந்தேன்; ராமனுடைய சித்தத்தின்படி அன்றிரவு நெடுநேரமாயிற்று; ராமனுடைய சித்தத்தின்படி நான் பகவத்தியானமும் ஜபமும் செய்து கொண்டிருந்தேன்; அப்போது ராமனுடைய சித்தத்தின்படி திருடர்கள் கூட்டமாய் அவ்வழியே போய்க் கொண்டிருந்தனர்; ராமனுடைய சித்தத்தின்படி அவர்கள் என்னையும் கூட இழுத்துச் சென்றனர்; ராமனுடைய சித்தத்தின்படி அவர்கள் ஒரு வீட்டுக்குள் நுழைந்து கொள்ளையடித்தார்கள். ராமனுடைய சித்தத்தின்படி என் தலையிலும் ஒரு சுமையை வைத்தார்கள்; அப்போது ராமனுடைய சித்தத்தின்படி காவல்காரர்கள் வந்தனர்; ராமனுடைய சித்தத்தின்படி நான் அகப்பட்டுக் கொண்டேன்; ராமனுடைய சித்தத்தின்படி நான் காவலில் வைக்கப்பட்டு, ராமனுடைய சித்தத்தின்படியே இன்று காலையில் ஸமுகத்தின் முன்பாகக்கொணரப் பட்டிருக்கிறேன்," என்றான். இவனுடைய பக்தியையும் நிரபராதத்தையும் கண்ட நியாயாதிபதி இவனை உடனே விடுதலை செய்துவிட்டனர். வெளியே வந்த சேணியன், தனது நண்பர்களைப் பார்த்து, "ராமனுடைய சித்தமே என்னை விடுதலைசெய்தது," என்று சொன்னான்.

நீ உலகவாழ்க்கையில் இருப்பதும், உலகத்தைத் துறப்பதும் ராமனுடைய சித்தத்தையே பொறுத்துள்ளது. எல்லாப் பாரத்தையும் இறைவன்மீது போட்டுவிட்டு, உலகத்தில் உனக்கேற்பட்ட கடமைகளைச் செய்.

983. தீவிரமான ஆசை இருந்தால் ஈசுவரனை நிச்சயமாகக் காண முடியும். தாயைக் காணவேண்டுமென்று குழந்தை ஏவ்

வாறு உருகுமோ, அப்படிப்பட்ட சிசுவினது போன்ற ஆவலும் விசுவாசமும் ஒருவனுக்கு இருக்கவேண்டும்.

ஜடிலன் என்ற ஓர் சிறுவன் இருந்தான். அவன் தன்னந் தனியாகக் காட்டுவழியே பள்ளிக்கூடத்துக்குப் போவான். அடிக் கடி அவனுக்குத் தனியாக விருப்பதினால் பயமுண்டாவதுண்டு. ஆகவே அவன், அதைப்பற்றித் தன் தாயாரிடம் சொல்ல, அவள் "குழந்தாய்! நீ ஏன் பயப்படவேண்டும்? பயமுண்டானால் 'கிருஷ்ணா' என்று கூப்பிடு," என்றாள். "கிருஷ்ணன் யார் அம்மா?" என்று பையன் கேட்டான். "அவன் உன்னுடைய அண்ணன்," என்று அவன் தாய் பதில் சொன்னாள். அப்பால் ஜடிலன் ஒருநாள் காட்டுவழியே போகையில் பயப்பட்டு, "அண்ணா!" என்று உரக்கக் கூப்பிட்டான். ஒருவரும் வர வில்லை. ஆதலால் பையன், "அண்ணா! கிருஷ்ணா! நீ எங்கிருக் கிறாய்? எனக்குப் பயமாக விருக்கிறது. வந்து காப்பாற்று," என்று மறுபடியும் கூவினான். இந்தக் குழந்தையின் விசுவாசத் தைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான், உடனே ஒரு சிறுவனைப் போல உருவந் தரித்து வந்து, "தம்பி! இதோ இருக்கிறேனே! நீ ஏன் பயப்படுகிறாய்? என்னுடன் கூட வா; நான் உன்னைப் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய் விடுகிறேன்," என்று சொல்லி அழைத்துக்கொண்டு போனார். அங்கே போனதும், "தம்பி! நீ கூப்பிடும் போதெல்லாம் வருகிறேன். பயப்படாமலிரு," என்று சொல்லி யருளினர். உண்மையான விசுவாசமும் ஆசை யும் இப்படிப்பட்ட மஹிமையை உடையன.

984. ஆத்ம ஞானத்துக்கு ஞான ஸாதனைகள் மிகவும் அவசியம். ஆனால், விசுவாசம் பூரணமாக விருந்தால், கொஞ்ச அப்பியாசமே போதுமானதாக விருக்கும்.

ஒரு சமயத்தில் வியாஸர் யமுனை நதியைக் கடந்துபோக விருந்தனர். அதே தருணத்தில் கோபஸ்திரீகளும் அங்கு வந் தனர். ஆனால் ஓடக்காரன் ஒருவனுமில்லை. ஆதலால் அவர்கள் வியாஸரை நோக்கி, "ஸ்வாமி! இப்போது என்ன செய்கிறது?" என்று கேட்டனர். அதற்கு வியாஸர், "விசாரப்பட வேண் டாம். நான் உங்களை அக்கரைக்கு அழைத்துச் செல்கிறேன்.

ஆனால்; எனக்குப் பசியாக விருக்கிறது. உங்களிடம் ஏதாவது தின்பண்டம் இருக்கிறதா?" என்றனர். கோபஸ்திரீகள், தாங்கள் வைத்திருந்த பால், தயிர், வெண்ணெய் எல்லாவற்றையும் கொடுக்க, வியாஸர் அவைகளை வாங்கிப் புசித்தனர். பிறகு கோபிகள், "ஆற்றைக் கடப்பது எப்படி?" என்று கேட்க, வியாஸர் ஆற்றங் கரையில் நின்றுகொண்டு, "யமுனா தேவி! நான் இன்று உபவாஸமிருப்பது மெய்யானால் நீ எங்களுக்கு வழி விடவேண்டும்; நாங்கள் ஆற்றைக் கடந்து அக்கரைபோய்ச் சேருகிறோம்," என்று பிரார்த்தித்தார். அப்படிப் பிரார்த்தித்த வுடன், யமுனை நதியின் ஜலத்தில் ஒரு பிளவு உண்டாகியது. தரை தெரிந்தது. கோபிகளுக்கு அத்யாச்சரிய முண்டாயிற்று. அவர்கள் கொடுத்த பால் முதலியவற்றை வியாஸர் வாங்கிப் புசித்திருக்க, அவர், "இன்று உபவாஸ மிருப்பது மெய்யானால்," என எப்படிச் சொல்லக் கூடும் என்று அவர்கள் நினைத்தனர். அந்தப் பண்டங்களைப் புசித்தது அந்தர்யாமியான ஈசுவரனே தவிர வியாஸரல்லர். இந்த விஷயத்தில் வியாஸருக்கு இருந்த விசுவாசத்தின் பலத்தினால் அவர் அப்படிச் சபதம் பண்ணினார் என்பதைக் கோபஸ்திரீகள் தெரிந்து கொள்ளவில்லை.

985. பரமஹம்ஸர் (பிரதாப சந்திர முஜும்தாரை நோக்கி):—நீர் நன்றாகப் படித்துத் தேர்ந்த சாமர்த்தியசாலி; நல்ல ஞானி. கேசவ சந்திர ஸேனரும் நீரும், கௌரங்கரையும் நித்தியானந்தரையும் போல ஸகோதரபாவம் கொண்டவர்கள். உலக வியவஹாரங்களாகிய உபன்யாஸங்கள், தர்க்கங்கள், கட்சிப் பிரதிகட்சிகள் இவைகளை வேண்டு மளவு பார்த்தாய் விட்டது. இன்னும் இவைகளில் உமக்கு விருப்பமிருக்கிறதா? சிதறியோடும் மனதை ஒருமித்து ஈசுவரனிடம் செலுத்த வேண்டிய காலம் வந்து விட்டது. திவ்ய ஸாகரத்தில் ஆழ்ந்து முழுகும்.

மஜும்தார்:—"நான் அதைச் செய்ய வேண்டியதுதான்; சந்தேகமில்லை. ஆனாலும், கேசவ சந்திர ஸேனருடைய பேரையும் புகழையும் நிலை நிறுத்துவதற்காகவே, நான் இவைகளையெல்லாம் செய்கிறேன்.

பரமஹம்ஸர் (புன்சிரிப்புடன்):—உமக்கு ஒரு கதை சொல்கிறேன்: ஒரு மனிதன் மலையுச்சியில் ஒரு குடிசையைக்

கட்டினான். அதைக் கட்டி முடிப்பதற்குப் பணச் செலவும் பிர யாசையும் அதிகமாக வேண்டியிருந்தன. கொஞ்ச நாட்களுக் கெல்லாம் புயற்காற்று அடிக்கத் தொடங்கியது. அப்போது அக் குடிசை முன்னும் பின்னுமாக அசைந்து ஆடிற்று. அது கீழே விழுந்துவிடாமல் இருக்கும் பொருட்டு, அம்மனிதன் வாயு பக வானை நினைத்து, "ஸ்வாமி! எனது குடிசையை நாசமாக்காம லிருக்கவேண்டும்," என்று பிரார்த்தித்தான். ஆனால் வாயுபகவான் இதைக் கேட்கவில்லை. அவன் மறுபடியும் பிரார்த்தித்தான். அப் போதும் குடிசை காற்றில் அசைந்து கொண்டே யிருந்தது. அப்போது அவனுக்கு ஒரு உபாயம் தோன்றிற்று. ஹனுமானென வர் வாயுவின் புத்திரன் என்பது அவனுடைய ஞாபகத்துக்கு வந் தது. உடனே அவன், "பிரபோ! இந்தக்குடிசையைக் காப்பாற்ற வேண்டும். இது உங்களுடைய குமாரனான ஹனுமாருடையது," என்று கூவினான். அப்போதும் வாயு பகவான் கவனிக்கவில்லை. ஆகவே, அம்மனிதன், "ஸ்வாமி! இந்தக் குடிசையைக் காப் பாற்ற வேண்டும். இது ஹனுமானுடைய பிரபுவான ராமபிரா னுடையது," என்று கத்தினான். இதையும் வாயு பகவான் லட்சி யம் பண்ணவில்லை. அப்பால் அந்தக்குடிசை கீழே விழுந்து விடும் போலிருந்த தருணத்தில், அவன் தன்னுயிரைக் காப்பாற் றிக் கொள்ள வேண்டியதற்காக வெளியே ஓடிவந்து, "இந்தக் குடிசை நாசமாகத்தான் போகட்டும், எனக்கென்ன?" என்று சொல்லத் தொடங்கினான்.

கேசவ சந்திரஸேனருடைய பேரைக் காப்பாற்ற வேண்டு மென்ற கவலை உமக்கு இப்போது இருக்கலாம். ஆனால் அவ ருடைய பேரைப்பற்றி யெழுந்த தர்மஸ்தாபனம் ஈசுவரனுடைய சித்தத்தால்தான் உண்டாயிற்றென்பதையும், அத்தர்ம ஸ்தாபனம் நிலைத்து நிற்கக் கூடியதும் அதே ஈசுவர சித்தத்தால்தான் என்ப தையும் நீங்கள் தெரிந்து கொண்டு சாந்தமடைய வேண்டும். ஆதலால், நித்யாநந்த ஸாகரத்தில் ஆழ்ந்து மூழ்கும்.

986. ஸ்ரீ ராமச்சந்திரர் வனவாசம் பண்ணுகையில், ஒரு நாள் தமது அம்பையும் வில்லையும் தரையில் சொருகிவிட்டு, தாக சாந்தி செய்து கொள்வதற்காகப் பம்பா ஸரஸ் என்ற தடாகத்

தில் இறங்கினர். மேலே எறிவந்து பார்க்கையில் தமது வில், ஒரு தவளையை ஊடுருவிச் சென்றதின் காரணமாக அந்தவளை ரத்தத்தால் நனைந்திருப்பதைக் கண்டார். ஸ்ரீ ராமபிரான் இதற்குப் பெரிதும் வருந்தி, தவளையைப் பார்த்து, "ஏ தவளையே! நீ எதாவது சப்தம் செய்திருக்கக் கூடாதா? அப்போது நீ இருப்பதை நான் தெரிந்து கொண்டிருப்பேன். உனக்கு இந்த கதியும் நேர்ந்திராதே," என்றார். "ராமா! எனக்கு எதாவது ஆபத்து நேரும்போது, 'ராமா! என்னைக் காப்பாற்று' என்று நான் சொல்லுவேன். ஆனால் நீயே என்னைக் கொல்லும்போது, நான் யாரிடம் எனது குறையை முறையிட்டுப் பிரார்த்திக்கிறது?" என்று தவளை பதில் சொல்லிற்று.

987. ஈசுவர பக்தியிலும் கற்பிலும் சிறந்த ஒரு ஸ்திரீ இருந்தாள். தன் புருஷனுக்கும் குழந்தைகளுக்கும் அவள் மிகுந்த பிரியத்துடன் பணிவிடை செய்த போதிலும் ஈசுவரனிடத்தில் திடமாகச் செலுத்திய மனமுடையவளாக விருந்தாள். அவளுடைய புருஷன் இறந்து, கர்ம காரியங்கள் முடிந்த பிறகு, அவள் தன் கையில் தரித்திருந்த கண்ணாடி வளையல்களை உடைத்தெறிந்து அவைகளுக்குப்பதிலாகப் பொன்வளையல்களை அணிந்து கொண்டாள். இவளுடைய விபரீதமான நடத்தையைக் கண்டு ஆச்சரிய மடைந்த ஊராருக்கு, "இதுவரையில் எனது கணவனின் சரீரம் கண்ணாடி வளையலைப் போல உடைந்துபோகும் சுபாவத்தைப் பெற்றிருந்தது. அந்த நசிக்கக்கூடிய சரீரம் போய்விட்டது. இப்போது அவர் எல்லாவிதத்திலும் பரிபூரணராயும் மாறாத சுபாவமுடையவராயும் இருக்கிறார். அவருடைய சரீரம் இனிமேல் அழியாது. ஆதலால்தான், அழிந்துபோகக் கூடிய கண்ணாடி வளையல்களுக்குப் பதிலாகச் சாசுவதமான சுபாவமுள்ள பொன் வளையல்களைத் தரித்துக் கொண்டேன்," என்று அவள் பதில் சொன்னாள்.

988. ஒரு சமயம் தக்ஷிணேசுவரத்துக்கு, பிதாவும் மகனுமான ஸாதுக்கள் இருவர் வந்தனர். மகனுக்கு உண்மையான ஞானம் வந்திருந்தது. பிதாவுக்கு அந்த ஞானம் வரவில்லை. அவ்விருவரும் பரமஹம்ஸர் இருந்த அறையில் உட்கார்ந்து

அவருடன் ஸல்லாபம் செய்துகொண்டிருந்தனர். அத்தருணத்தில், ஒரு சிறிய பாம்பு, ஒரு புற்றிலிருந்து கிளம்பி வந்து, மகனைக் கடித்துவிட்டது. அதைக்கண்ட பிதா, வெகுவாகப் பயந்து போய், பக்கத்திலுள்ளவர்களைக் கூப்பிடத் தொடங்கினர். பையனே கொஞ்சங் கூடச் சஞ்சலப்படாமல் உட்கார்ந்திருந்தான். இது பிதாவுக்கு இன்னும் மனக்கலக்கத்தைக் கொடுத்தது. "ஏன் கலங்காமல் உட்கார்ந்திருக்கிறாய்?" என்று பிதா கேட்க, பையன் சிரித்துவிட்டு, "பாம்பு எது? அது யாரைக் கடித்தது?" என்று சொன்னான். ஸர்வமும் ஒன்றே என்பதை அவன் அறிந்து கொண்டிருந்தபடியால், பாம்புக்கும் மனிதனுக்கும் யாதொரு வித்தியாசத்தையும் காணவில்லை.

989. ஒரு வண்ணான், ஒரு பக்தனை வெகு கடுமையாக அடிக்கும்போது, பக்தன், "நாராயணா! நாராயணா!" என்று மட்டும் சொல்லிக் கொண்டிருந்தான். அப்போது, வைகுண்டத்தில் லக்ஷ்மி ஸமேதராய் வீற்றிருந்த ஸ்ரீமந்நாராயணனுடைய காதுகளில் இந்தச் சப்தம் விழுந்தது. அவர் எழுந்திருந்து பக்தனைக் காப்பாற்றுவதற்காகப் புறப்பட்டு வந்தார். ஆனால் அவர் இரண்டு மூன்று தப்படி சென்றதும், திரும்பிவந்து ஆஸனத்தில் அமர்ந்தார். இதைக்கண்ட லக்ஷ்மிதேவி, "இவ்வளவு சீக்கிரத்தில் திரும்பிவரக் காரணம் என்ன?" என்று கேட்டாள். "நான் போக வேண்டிய அவசியம் இராது போயிற்று. பக்தனும் வண்ணானகிவிட்டான். அவன் தானே தன்னைக் காப்பாற்றிக்கொள்ளத் தொடங்கி, தன்னை அடித்தவனைத் திருப்பி அடிக்கத் தொடங்கியிருக்கிறான். ஆதலால் அங்கு நான் போகவேண்டிய அவசியம் இல்லை," என்று பதில் சொன்னார். முற்றிலும் சரணாகதி செய்தாலொழிய ஈசுவரன் உன்னைக் காப்பாற்ற மாட்டான்.

990. கௌரங்க ஸ்வாமியின் ஜீவிய சரித்திரத்திலிருந்து புரோகிதர்களைப்பற்றிய கதையொன்றைப் பரமஹம்ஸர் சொல்வதுண்டு. ஸமாதியிலிருந்த காலத்தில் கௌரங்க ஸ்வாமி ஒரு சமயம் ஸமுத்திரத்தில் விழுந்துவிட்டார். செம்படவர்கள் அவரை வலைபோட்டு இழுத்துக் கரையேற்றினர். வலையின் மூல

மாக, கௌரங்கஸ்வாமியின் சரீர சம்பந்தத்தை இந்த செம்பட வர்களும் பெற்றார்களாதலால், இவர்களுக்கும் ஒருவிதமான பரவசம் உண்டாயிற்று. ஆகவே, அவர்கள் வேலைகளை அப்பாற் போட்டுவிட்டு, ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு, உன்மத்தர்களைப்போல அங்கு மிங்கும் ஓடத்தலைப்பட்டனர். இவர்களைக் குணப்படுத்த முயன்ற பந்துவர்க்கங்கள், தங்களுடைய முயற்சிகள் பயனற்றுப் போனதைக் கண்டு, கடைசியில் கௌரங்க ஸ்வாமியிடம் வந்து, தங்கள் துக்கத்தைச் சொல்லிக்கொண்டனர். "ஒரு புரோகிதர் வீட்டிலிருந்து கொஞ்சம் சாதம் கொணர்ந்து இவர்களுடைய வாயில் போடுங்கள்; இந்தப் பரவச நிலை போய்விடும்," என்று கௌரங்க ஸ்வாமி உபாயம் சொல்லித்தந்தனர். பந்துவர்க்கத்தார் அப்படியே செய்ய, செம்படவர்களுக்கிருந்த பக்தி பரவசம் நீங்கிப் போய் விட்டது.

981. மாயையை அறியமுடியாது. ஒரு சமயம், நாரதர் ஸர்வேசுவரனைப் பார்த்து, "ஸ்வாமி! முடியாத காரியத்தை முடிக்கவல்ல தங்களுடைய மாயையை எனக்குச் சிறிது காட்டியருளவேண்டும்," என்றார். ஆகட்டும் என்று ஸர்வேசுவரன் சொல்லி சிலநாள்களுக்குப்பின், நாரதருடன் பிரயாணப்பட்டார். கொஞ்சதூரம் சென்றதும் ஸர்வேசுவரனுக்கு தாகம் எடுத்தது. சிரமம் அதிகமாகியபடியால், அவர் கீழே உட்கார்ந்து கொண்டு, நாரதரை நோக்கி, "நாரதா! எனக்கு தாகம் அதிகமாக இருக்கிறது. எங்கிருந்தாவது கொஞ்சம் ஜலம் கொண்டுவா" என்றனர். நாரதர் ஜலத்தைத் தேடிக்கொண்டு புறப்பட்டுப்போனார்.

சமீபத்தில் ஓரிடத்திலேயும் ஜலம் அகப்படாதபடியால், நாரதர் வெகுதூரம் சென்றனர். அங்கு ஆறு ஒன்று ஓடுவது போலத் தெரிந்தது. அவ்விடத்தை யடைந்தபோது, அங்கு ரூபலாவண்யங்களில் நிகரற்ற ஒரு நங்கை உட்கார்ந்திருப்பதை நாரதர் கண்டு, உடனே அவள் அழகில் ஈடுபட்டுவிட்டார். நாரதர் சமீபத்தில் வந்தவுடன், அவள் இவரை இன்சொல்லால் அழைக்கத் தொடங்கினள். அதிசீக்கிரத்தில் இருவரும் ஒருவர் மீதொருவர் காதல் கொண்டனர். ஆகவே, நாரதர் அவளுடன் கூடி இல்லறவாழ்வை நடத்தத் தொடங்கினர். காலக்கிரமத்

தில், அவளுக்கு நாரதர் மூலமாக அனேகம் குழந்தைகள் பிறந்தன. இப்படி நாரதர் மனைவி மக்களுடன் இன்பமாய்க் காலம் கழிக்கையில், தேசத்தில் கொடிய நோய் ஒன்று தலைப்பட்டு, மூலை முடுக்குகளிலெல்லாம் மரணத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தது. அப்போது அவ்விடத்தை விட்டுவிட்டு, வேறிடத்துக்குப் போகலாமென்று நாரதர் யோசித்தனர். அவருடைய மனைவியும் இதற்கிணங்கி, குழந்தைகளின் கைகளைப் பிடித்துக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டனள். வழியில் ஒரு ஆற்றுப்பாலத்தின் மீது இவர்கள் சென்றபோது கரைபுரண்டு வந்த வெள்ளத்தில் இவர்களுடைய குழந்தைகள் எல்லாம் அடித்துக் கொண்டு போகப்பட்டன. நாரதருடைய மனைவியும் ஆற்றில் மூழ்கிப் போய்விட்டாள். துக்கத்தில் மூழ்கிய நாரதர், ஆற்றங்கரையில் உட்கார்ந்துகொண்டு வெகுவாகப் பிரலாபித்து அழத்தொடங்கினார். அந்த ஸந்தர்ப்பத்தில், சர்வேசுவரன் தோன்றி, "நாரதா! ஜலம் எங்கே? நீ ஏன் அழுது கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார். ஈசுவரனைக் கண்டதும் நாரதருக்கு தியக்கம் உண்டாகியது. அப்பால் அவர் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு, "பிரபோ! உமக்கு ஒரு நமஸ்காரம்; உமது ஆச்சரியமான மாயைக்கும் ஒரு நமஸ்காரம்," என்று சொல்லி வணங்கினார்.

992. தனது கோபாலனைப் பற்றிய செய்தி ஒன்றையும் கேட்கப்பெறாத யசோதை ஒரு சமயம் ராதையினிடம் வந்து, "கோபாலனுடைய சமாசாரம் ஏதாவது தெரியுமா?" என்று கேட்டாள். அத்தருணத்தில் ராதை பக்திபரவசப் பட்டிருந்தபடியால் யசோதை சொன்னதைக் கேட்கவில்லை. தன் நினைவு வந்ததும், தனக்கு முன்னால் நந்தன் மனைவி உட்கார்ந்திருப்பதைக் கண்டு, ராதை அவளுக்குத் தண்டனிட்டாள். பிறகு, அவள் அங்கு வந்த காரியத்தை ராதை வினவி, கோபாலனைத் தேடிவந்ததாகச் சொன்ன யசோதையை நோக்கி, "அம்மா! உமது கண்களை மூடிக்கொண்டு கோபாலனுடைய உருவத்தைத் தியானித்தால் அவனைக் காண்பீர்" என்றாள். உடனே யசோதை கண்களை மூடிக்கொண்டாள். ப்ரேமஸ்வரூபியான ராதை

தனது திவ்யசக்தியை யசோதையினிடத்தில் செலுத்திய மாத்திரத்தில், யசோதை கோபாலனைப் பார்க்கக்கூடியவளானாள். அப்பால் அவள் ராதையைப் பார்த்து, "அம்மணி! நான் கண்ணை மூடிக்கொள்ளும் போதெல்லாம் எனது பிரியனான கோபாலனைக் காணும்படியான வரம் எனக்கு நீ தரவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்.

993. முன்னாளில், ஜயபுரியிலிருக்கும் கோவிந்தஜியின் கோவிலிலுள்ள அர்ச்சகர்கள் கல்யாணம் பண்ணிக்கொள்வதில்லை. ஆகவே அவர்கள் ஆத்ம சக்தியால் வெகு பலம் படைத்தவர்களாக இருந்தனர். ஒரு சமயம் அவ்வூர் அரசன் அவர்களை வரும்படி சொல்லி யனுப்பினான். அவர்கள் போகாமல், "அரசனைத்தான் எங்களிடம் வரச்சொல்லுங்கள்," என்று பதில் அனுப்பினர். அப்பால், அவர்கள் கல்யாணம் பண்ணிக்கொண்டனர். அதன்பின் அர்ச்சகர்களை அரண்மனைக்கு வரவழைக்கவேண்டிய அவசியம் அரசனுக்கு இல்லாது போயிற்று. ஏனெனில், அவர்கள் தாமாகவே அரசனிடம் வந்து, "மகராஜ்! நாங்கள் ஆசீர்வாதம் செய்ய வந்திருக்கிறோம். ஸ்வாமிக்குச் சார்த்திய புஷ்பங்களைக் கொணர்ந்திருக்கிறோம். அங்கீகரிக்கவேண்டும்," என்று சொல்ல வாரம்பித்தனர். இவர்களுக்கு அப்படிப்பட்ட அவசியம் நேர்ந்துவிட்டது. பாவம்! அவர்கள் வேறு என்னதான் செய்வார்கள்? ஒருநாளைக்கு வீடுகட்ட வேண்டியிருந்தது; இன்னொரு நாள் குழந்தைக்கு அன்னப் பிராசனம் செய்யவேண்டியிருந்தது; வேறொரு நாள் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணவேண்டியிருந்தது. இப்படியாக அவர்களுக்கு இடைவிடாத பணமுட்டுப்பாடு உண்டாயிற்று. இதனால் ராஜஸபைக்குப் போகவேண்டிய அவசியம் நேர்ந்தது.

994. ஒரு செம்படவன், ஒரு கனவானுடைய தோட்டத்துக்குள் ஒருவருமறியாதபடி இரவில் நுழைந்து, அங்குள்ள குளத்தில் வலை வீசித் திருட்டுத்தனமாக மீன் பிடித்துக் கொண்டிருந்தான். இந்தச் சங்கதி அக்கனவானுக்கு எட்ட, அவன் தன் வேலைக்காரர்களுடன் தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு திருடனைப் பிடிக்கிறதற்காகத் தோட்டத்தை வளைத்துக்கொண்

டான். தப்பித்துக்கொள்வதற்கு வழியொன்றையும் காணுத அச்செம்படவன், தன் சரீரம் முழுவதிலும் சாம்பலைப் பூசிக் கொண்டு, ஒரு மரத்தின் கீழே ஸாதுவைப்போல் உட்கார்ந்தான். ஆகவே ஜனங்கள் நெருங்கி வந்தபோது தோட்டத்தில் திருடனைக் காணவில்லை. மரத்தின் கீழே சாம்பர் பூசிய சரீரத்துடன் ஒரு ஸாது தியானத்திலிருப்பதைத்தான் கண்டனர். மற்றும் நாட்காலையில் அந்தக் கனவானுடைய தோட்டத்தில் ஒரு மஹாஞான ஸாது வந்திருக்கும் ஸமாசாரம் ஊரெங்கும் பரவியது. ஆகவே நூற்றுக்கணக்கான ஜனங்கள் பல பக்ஷணாதிகளைக் காணிக்கையாகக்கொண்டு, அவரைத் தரிசிக்க வந்தனர். ஸாதுவின் முன்னல், பொன் வெள்ளி நாணயங்கள் குவியத் தொடங்கின. அப்போது அந்தச் செம்படவன், "என்ன ஆச்சரியம்! நான் உண்மையான ஸாது அல்லன்; என்றாலும் ஜனங்கள் எனக்கு இவ்வளவு மரியாதை பாராட்டுகிருர்கள். வாஸ்தவமான சாதுவாக நான் இருந்தால் எனக்கு ஈஸ்வர ப்ராப்தியாவது நிச்சயம்," என்று தன்னுள்ளேயே நினைத்துக்கொண்டான். இவ்விதமாக, அச்செம்படவன், கபட வேஷம் காரணமாக நற்போத முண்டாகக்கூடிய மன நிலைமையைப் பெற்ருன்.

995. அனேக ஸித்திகளை அடைந்த ஒரு ஸாது, அது காரணமாகத் தற்பெருமை கொண்டவராக இருந்தார். என்ருலும் அவர் நல்ல குணமுடையவராயும் தபஸ்வியாயும் இருந்தபடியால், அவரை நல்வழிப்படுத்தக் கருதிய ஈசுவரன், ஸந்யாஸி வேஷத்துடன் அவர் முன்வந்து, "ஸ்வாமி! தாங்கள் அனேகம் ஸித்திகளை அடைந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டேன்" என்ருர். ஸாது, வந்த ஸந்யாஸியை மரியாதையுடன் வரவேற்று, உட்காரும்படி சொன்னார். அத்தருணத்தில் அங்கு ஒரு யானை வந்தது. ஸந்யாஸி ஸாதுவைப்பார்த்து, "ஸ்வாமி! இந்த யானையை உங்களால் கொல்லமுடியுமா?" என்று கேட்டார். "முடியும்" என்று ஸாது சொல்லி, ஒரு பிடி மண்ணை எடுத்து அபிமந்திரித்து யானையின் மேல் எறிந்தார். உடனே அந்த யானை வேதனைப்பட்டு உயிரிழந்து விழுந்தது. இதைப் பார்த்த ஸந்யாஸி, "தங்

களுடைய சக்தி எவ்வளவு அபாரமானது! தாங்கள் எவ்வளவு சுலபமாக யானையைக் கொன்றுவிட்டீர்கள்!" என்றார். இந்தப் புகழ்ச்சியைக் கேட்ட ஸாதுவுக்குச் சந்தோஷமுண்டாயிற்று. அப்பால், ஸந்யாஸி, "ஆமாம்; இந்த யானையைப் பிழைக்கச் செய்ய முடியுமா?" என்று கேட்டார். அதற்கும் நமது ஸாது "முடியும்" என்று சொல்லி, ஒரு பிடி மண்ணை எடுத்து முன் போலவே யானையின்மேல் எறிந்தார். உடனே அது உயிர் பெற்று எழுந்தது. பின்னர் ஸந்யாஸியானவர், "ஸ்வாமி! தங்களுடைய சக்தி அபாரமானதுதான். ஆனால் தங்களை ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். இப்போது தாங்கள் யானையைக் கொன்று, மறுபடியும் அதைப் பிழைப்பூட்டினீர்கள். ஆயினும் அதனால் தங்களுக்கு உண்டான பலன் யாது? அது தங்களுக்கு எப்படிப்பட்ட அபிவிருத்தியைக் கொடுத்தது? தாங்கள் ஈசுவரனை அடைவதற்கு அது உதவி செய்ததா?" என்று சொல்லிவிட்டு, அந்தர்த்தியானமாயினர்.

996. தன் மனைவி தன்னை அத்யந்தம் நேசிக்கிற காரணத்தால்தான் தான் ஸந்யாஸம் பெறவில்லையென்று ஒரு சிஷ்யன் தன் குருவினிடம் சொன்னான். அந்தச் சிஷ்யன் ஒரு ஹடயோகி. அவனுக்கு ஏதோ ஒரு ரகஸியத்தைக் குரு சொல்லிக் கொடுத்தார். ஒரு நாள் திடீரென்று, இந்தச் சிஷ்யனுடைய வீட்டில் அமளிகுமளியும் அழுகைக் குரலும் கேட்டன. அண்டை அயலார்கள் வந்து பார்க்க, இந்த ஹடயோகி அசைவற்று ஒரு அறையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டனர். அவனது அவயவங்கள் கோணிப்போன நிலைமையில் இருந்தன. அவனுக்கு உயிர்போய்விட்டதென்று எல்லாரும் நினைத்தனர். அவனுடைய மனைவி, "பிராணநாதா! ஐயோ! நீர் எங்களையெல்லாம் கைவிட்டு விட்டு, எங்கே போய் விட்டீர்? இப்படிப்பட்ட துக்கம் எங்களுக்கு வருமென்று நாங்கள் நினைக்கவுமில்லையே!" என்று பிரலாபிக்கத் தொடங்கினாள். இதன் மத்தியில், பந்துக்கள், பிணத்தைத் தகனம் செய்ய எடுத்துப் போவதற்காக, ஒரு பாடையைக் கட்டிக் கொணர்ந்தனர். அப்போது சில சங்கடங்கள் உண்டாயின.

ஹடயோகியின் சரீரம் கோணலான நிலைமையில் இருந்தபடியால் வாசற்படி வழியாக அது வருவதற்கில்லா திருந்தது. உடனே, ஒருவன் கோடரியைக் கொணர்ந்து நிலைப்படியை இடிக்கத் தொடங்கினன். அது வரையில் துக்க மேலீட்டால் தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்த ஹடயோகியின் மனைவி, கோடரிச் சப்தத்தைக் கேட்டதும் ஓடிவந்து, சங்கதி என்ன வென்று கேட்டாள். அவளுடைய கணவனின் சரீரம் வாசற்படி வழியாக வருவதற்கில்லாதபடியால், நிலைப்படியை இடிக்கவேண்டி யிருப்பதாக ஒருவன் பதில் சொன்னான். அப்பால் அவள், "கூடாது, கூடாது. இடிக்காதேயுங்கள். நான்தான் விதவை யாய்ப் போய் விட்டேன். என்னைக் காப்பாற்றுவார் யாரு மில்லை. எனது அநாதைக் குழந்தைகளை நான் காப்பாற்ற வேண்டி யிருக்கிறது. நிலைப்படியை இப்போது இடித்து விட்டால், அதை மறுபடியும் பழுது பார்க்கமுடியாது. என் கண வனுக்கு நேரவேண்டியது நேர்ந்து விட்டது. வேண்டுமானால் அவருடைய கை கால்களை வெட்டி வெளியே கொண்டு வாருங் கள்," என்றாள். இவள் இவ்வார்த்தைகளைச் சொன்னதும், ஹடயோகி சாப்பிட்ட மருந்தின் வேகம் மறைந்ததும் ஏக காலத்தில் நிகழ்ந்தன. ஆகவே அவன் இவள் வார்த்தையைக் கேட்டு எழுந்து நின்று, "துஷ்டை! என் கை கால்களை வெட்ட வேண்டுமென்றா சொன்னாய்!" என்று கூவிக்கொண்டு, வீடு வாசல்களைத் துறந்துவிட்டுக் குருவுடன் கூடப் புறப்பட்டுப் போய்விட்டான்.

997. ஒரு ஏழைப் பிராம்மணன் வேலை கிடைக்காமல் மிகுந்த கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். அவன் அடிக்கடி ஒரு கச்சேரி மானேஜரிடம் சென்று வேலை கொடுக்க வேண்டு மென்று கேட்டான். "இன்றைக்கு இல்லை, நாளைக்கு வா," பின்பொரு சமயம் வா." என்ற பதில்கள்தான் இவனுக்குக் கிடைத்தன. இப்படி நெடுநாள் சென்றது. ஒரு நாள் இவன் தன்னுடைய கஷ்டங்களைத் தன் துணைவன் ஒருவனிடம் சொன் னான். அந்த நண்பன், "என்ன அசட்டுத்தனமான காரியம் செய்து விட்டாய்! அவனிடம் அடிக்கடி சென்று உன் கால்

தேய்ந்து போகும்படி செய்து கொள்வானேன்? "ரோஜாமணி" யிடம்போ. அவளை நயந்து கேள். உனக்கு நாளைக் காலையி லேயே வேலை கிடைக்கும் பார்," என்றான். ஏழைப் பிராம்மண னுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. "வாஸ்தவந்தானா? இப்போதே அவளிடம் செல்கிறேன்," என்று சொல்லிப்போனான். இந்த ரோஜாமணி முன் கூறிய கச்சேரி மானேஜரின் வைப்புஸ்திரீ. ஏழைப் பிராம்மணன் அவளிடம் சென்று, "தாயே! நான் மிகுந்த கஷ்டப்படுகிறேன். உன்னைத்தவிர வேறுகதி கிடை யாது. நான் பிராம்மணன்; வேறு சம்பாத்திய வழி இல்லை. அம்மணி! வேலை இல்லாமல் நெடுநாளாகக் கஷ்டப்படுறேன். மனைவி மக்கள் பட்டினி கிடக்கிறார்கள். நீ ஒரு வார்த்தை சொன்னால் எனக்கு உத்தியோகம் கிடைக்கும்," என்றான். பிராம்மணன் கஷ்டப்படுவதைக் கண்டு அவளுக்கு இரக்கம் உண்டாயிற்று. ஆகவே "யாரிடம் சிபார்சு செய்யவேண்டும்?" என்று அவள் கேட்டாள். "தாயே! கச்சேரி மானேஜரிடம் ஒரு வார்த்தை சொன்னால் எனக்கு உத்தியோகம் கிடைப்பது நிச்சயம்," என்றான் பிராம்மணன். ரோஜாமணி அன்றைய இரவே கச்சேரி மானேஜரிடம் சொல்லி வாங்கித்தருவதாக வாக் களித்தாள். ஆச்சரியம்! மற்றும் நாட்காலையில் மானேஜ ருடைய சேவகன், பிராம்மணனைக் கச்சேரிக்குக் கூட்டிப்போக வந்தான். "இவன் தகுந்த யோக்கியதையை உடையவன். இவனை வேலைக்கு வைத்துக் கொள்வதால், நமது கச்சேரிக்கு நன்மை யுண்டாகுமென்று எண்ணி இவனுக்கு ஒரு உத்தியோகம் கொடுத்திருக்கிறேன்," என்று மானேஜர், தன் மேலதிகாரிக்குச் சிபார்சு செய்து எழுதினான். புருஷர்களுக்கு ஸ்திரீகள் மீது உண்டாகும் பாசத்தின் மகிமை இப்படிப்பட்டது. உலகம் முழு வதும் பெண்ணாசை பொன்னாசையிலேயே மதிமயங்கிக் கிடக் கின்றது.

998. ஒரு பாலிய ஸந்யாஸி பிக்ஷைக்காக ஒரு வீட்டுக்குச் சென்றார். இளம்பிராயத்திலேயே அவர் ஸந்யாஸத்தைக் கைக் கொண்டபடியால் உலக அனுபவம் அவருக்கு அதிகமில்லா திருந்தது. வீட்டுக்குள்ளிருந்து ஒரு யௌவன ஸ்திரீ அவருக்

குப் பிக்ஷை போடுவதற்காக வெளியே வந்தாள். அவளுடைய ஸ்தனங்களைப் பார்த்த இந்த ஸந்யாஸி அவளுடைய மார்பில் சிரங்கு புறப்பட்டிருக்கிறதா எனக் கேட்டார். அவளுடைய தாயார் அங்கு வந்து, "இல்லை, அப்பா! சிரங்கு ஒன்று மில்லை இவளுக்குக் கூடிய சீக்கிரத்தில் குழந்தை பிறக்கும். அக் குழந்தைக்குப் பால் கொடுப்பதற்காக ஈசுவரன் முன்காட்டியே இந்த இரண்டு ஸ்தனங்களைப் படைத்திருக்கிறான். குழந்தை பிறந்ததும், இந்த ஸ்தனங்களிலிருந்து பால் குடிக்கும்," என்றாள். இதைக் கேட்டவுடன், அந்த இளஞ் சந்யாஸி, "இனிமேல் நான் பிக்ஷைக்குப் போகமாட்டேன்; என்னை உண்டாக்கியவன், எனக்கு அன்ன ஆகாரங்களை அளிப்பான்," என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

999. ஆத்மவிசாரம் செய்வதால் மனம் பரிபூர்ணமான சாந்தியை யடையும் நிலைமையில் பரப்பிரம்மம் தோன்றும்.

ஒரு மனிதன் ராஜாவைக் காண எண்ணினான். ராஜாவோ ஏழு வாசற்படிகளுக்கப்பால் அரண்மனையின் உள்ளே வாழ்ந்தனன். அம்மனிதன் அரண்மனைக்கு வந்து, முதல் வாசலண்டை படாடோபத்துடனும் பரிவாரங்களுடனும் ஒருவன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். கண்டதும் தன் துணைவனிடம், "இவன்தான் ராஜாவோ?" என்று கேட்டான். துணைவன் சிரித்துக்கொண்டு "இவன் அல்லன்," என்றான். அப்பால் அவன் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, வாசல்களையும் தாண்டினான். ஒவ்வோரிடத்திலும் படாடோபம் ஜாஸ்தியாகவே இருந்தது. உள்ளே போகப் போக, அழகும் காம்பீர்யமும் அதிகமாகவே விளங்கின. ஒவ்வொரு வாசற்படியிலும் உட்கார்ந்திருந்தவனை அரசன்தானோ என்று இவன் கேட்ட வண்ணமாகவே இருந்தனன். ஆனால், அவன் ஏழாவது வாசற்படியைக் கடந்து சென்று அரசனை நேருக்கு நேரில் கண்டபோது, "இவன்தான் அரசனோ?" என்ற கேள்வி கேட்க வேண்டிய அவசியமில்லாதிருந்தது. அரசனுடைய அளவற்ற காம்பீர்யத்தைக் கண்டதும் இவன் ஆச்சரியத்தால் மௌனமுற்றான். பெருமை படைத்த அரசன்

முன்னர் தான் நிற்பதாகவே அவன் உடனே தனக்குள் நிச்சயித்துக்கொண்டான்.

1000. ஒரு காலத்தில் பெண் புலியொன்று ஒரு ஆட்டுக் கூட்டத்தின்மீது பாய்ந்தது. அப்போது, அப்புலி பூர்ண கர்ப்பமாக விருந்தது. அதனால் ஆடுகளின் மீது பாய்ந்த வேக அதிர்ச்சியினால் ஒரு குட்டியை ஈன்று, உயிரை விட்டது. குட்டி தப்பிப் பிழைத்து, ஆட்டுக்கூட்டத்தினிடையே வாழத் தலைப்பட்டது. புலங்களில் ஆடுகள் மேயும்போது, புலிக்குட்டியும் அவ்வாறே செய்யும். ஆடுகள் கத்தினால் புலிக்குட்டியும் அப்படியே கத்தும். காலக்கிரமத்தில் இந்தக் குட்டி முதிர்ந்த புலியாகியது. அப்போது ஒருநாள் வேறொரு புலி, இந்த ஆடுகளினிடையே பாய்ந்தபோது, ஆட்டுச் சுபாவத்தையுடைய புலியைக் கண்டது. உடனே, இந்தப் புதிய புலி, அதைத் துரத்திச் சென்று கழுத்தைப் பற்றிப் பிடித்தது. பிடிபட்டதும் இது ஆட்டைப்போலக் கத்தியது. அப்பால் அந்தப்புலி இந்தப் புலியை ஒரு குளக்கரைக்கு இழுத்துக் கொண்டுபோய், தண்ணீரில் அதன் நிழலைக் காட்டி, "இதோ பார்; என் உருவமும் உன் உருவமும் ஒரே மாதிரியாக உள்ளன. நீயும் என்னைப் போல ஒரு புலிதான். இந்த மாமிசத்தைத் தின்னு," என்று சொல்லி, ஒரு துண்டம் மாமிசத்தை அதன் தொண்டையில் திணித்தது. முதன் முதலில் இந்த ஆட்டுப்புலி அதைத் தின்ன மாட்டேனென்றது. அது ஆட்டைப்போலக் குரலிட்டு, தான் ஒரு ஆடெனவே சொல்லிற்று. அப்பால், அது ரத்தச் சுவையைக் கொஞ்சம் அறிந்ததும், உள்ளே மறைந்து கிடந்த புலிச் சுபாவம் தலையெடுக்க, மாமிசத்தைத் தின்னத் தொடங்கியது. அப்பால் அந்தப் புதுப்புலி, "நீயும் என்னைப் போன்றவன் என்பதை இப்போது தெரிந்து கொண்டாயல்லவா? இனி என்னோடு கூடக் காட்டுக்கு வா," என்று சொல்லி அழைத்துப் போயிற்று. இதுபோல ஒருவனுக்குக் குருவினுடைய அருள் இருந்ததானால் பயமே இல்லை. அந்தக் குரு உன் கண்களைத் திறந்து, நீ யார் என்பதை, வாஸ்தவத்தில் உனது ஆத்மா இன்னதென்பதைச் சொல்லுவார்.

1001. ஒரு கனவானுடைய வேலைக்காரன் ஒருசமயம் தன் எஜமானனுடைய வீட்டுக்கு வந்து ஒரு மூலையில் மிகுந்த பயபக்தியுடன் நின்றான். அவன் தன் கையில் எதையோ வஸ்திரத்தால் மூடி வைத்திருந்தான். எஜமானன் அவனைப் பார்த்து "என்ன சமாசாரம்? கையில் என்ன வைத்துக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான். வேலைக்காரன் துணிமுடிப்பிலிருந்து ஒரு இலந்தைப் பழத்தை எடுத்து, எஜமானன் முன்னால் பணிவுடன் வைத்து, அதை எஜமானர் சாப்பிட்டுப் பார்த்தால், தனக்குத் திருப்தியுண்டாகு மென்றான். வேலைக்காரனுடைய பக்தியைக் கண்டு சந்தோஷித்த எஜமானன் அந்த அற்புதமான வஸ்துவை அத்யந்தப் பிரியத்துடன் ஏற்று, "அடே! என்ன அழகான பழம், எங்கிருந்து உனக்குக் கிடைத்தது?" என்று கேட்டான். இதுபோல, ஈசுவரனும் பக்தனுடைய ஹிருதயத்தைத்தான் பார்க்கிறான். அவனுடைய மஹிமைகள் அளவற்றன என்றாலும் அவன் பக்திக்கு வசப்படுகிறான்.

1002. ஒரு மனிதன் ஒரு நாள் வியாதியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த தன் குழந்தைக்கு மருந்து வாங்கி வரும் பொருட்டு ஒரு ஸாதுவினிடம் அக்குழந்தையைத் தூக்கிக் கொண்டு போனான். அந்த ஸாது அவனை மறுதினம் வரும்படி சொல்லி யனுப்பிவிட்டார். மறுநாள் அவன் ஸாதுவினிடம் வந்ததும், அவர் "பையனுக்குத் தித்திப்பான பதார்த்தங்கள் ஒன்றும் கொடுக்காதே; வியாதி சீக்கிரத்தில் குணப்பட்டு விடும்," என்று கூறினார். இதைக்கேட்ட அம்மனிதன் "ஐயா, இதை நேற்றே என்னிடம் சொல்லியிருக்கலாமே," என்றான். அதற்குச் சாது, "அப்பா! நேற்றே சொல்லி யிருக்ககூடும்; ஆனால் நேற்று நீ வந்த சமயம் என் எதிரில் நிறைய சர்க்கரை வைக்கப்பட்டிருந்தது. அதைப்பார்க்கும் உன் குழந்தை 'ஏ! இவர் மிகவும் கபடர்! நான் சர்க்கரை தின்னக்கூடாதென்கிறார் இவர் மட்டும் நிறைய தின்னுகிறார்,' என்றல்லவோ நினைப்பான்?" என்று மறுமொழி கூறினார்.

1003. ஒன்றுக்கொன்று விரோதமாய்க் காணும் மனிதனின் சுயேச்சை, இறைவனின் அருள் ஆகிய இவையிரண்டிலும்

எது முக்கியமானது என்பதை அறியக்கூடாத இரண்டு சிஷ்யர்கள் ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் சென்றனர். அவர் "சுயேச்சையைப் பற்றி மிகவும் பிரமாதமாகப் பேசுகிறீர்கள்! எல்லாம் இறைவனின் இச்சையை யொட்டியே நடக்கின்றன. ஒரு முளையிற் கட்டப்பட்ட ஒரு பசுவைப்போல் நமது இச்சைகளெல்லாம் இறைவனுடையவற்றுடன் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அப்பசுவின் கயிற்றினளவுக்கு சுயேச்சை அதற்கிருப்பதைப் போலவே நமக்கும் சிறிதளவு சுயேச்சை இருப்பது வாஸ்தவமே. அதனால் மனிதன் எல்லாம் தனதிஷ்டமென்று நினைத்து விடுகிறான். ஆனால் அம்மனிதனின் இச்சைகளெல்லாம் இறைவனின் விருப்பத்தைப் பொறுத்தனவே யென்பதை நிச்சயமாய் உணருங்கள்.

"அப்படியானால் தியானம், தவம், பிரார்த்தனை முதலியவைகள் அநாவசியமா? எல்லாம் கடவுளின் இச்சை. அவன் இஷ்டப்படியே தான் எல்லாம் நடக்கும் என்று சும்மா விருந்து விடலாமே?"

"ஓ! வெறும் வாயால் மாத்திரம் அவ்வார்த்தைகளைச் சொல்லி விட்டால் போதுமா? முட்செடியில் கைபட்டதும் முட்கள் தைப்பதால் உண்டாகும் வேதனை வெறும் வாயினால் மாத்திரம் இல்லையென்று எத்தனை தரம் சொன்னாலும் நீங்கிவிடாது. தெய்வ வழிபாடுகள் முழுதும் மனிதனின் செய்கைக்குள்ளடங்குவதானால் பிறகு ஒவ்வொருவரும் அம்மாதிரி செய்துவிடமாட்டார்களா? ஒவ்வொருவரும் அதைச் செய்யமுடியாது; ஏன்? ஆனால் ஒன்றுண்டு. அவனால் உனக்கு அளிக்கப்பட்ட பலத்தை நீ சரியான முறையில் உபயோகிக்காவிட்டால் உனக்கு அதிகம் கொடுக்க மாட்டான். அதனால்தான் சுயப் பிரயாசை மிகவும் அவசியம். ஆகையால், இறைவனின் அருளைப்பெறுவதற்குத் தகுதியாவதற்குக்கூட ஒவ்வொருவரும் சிரமப்படுதல் அவசியம். இவ்வித சுயப்பிரயாசையும், இறைவனின் அருளும் சேருமானால், பல ஜன்மாந்திர வினைகள் இவ்வொரே ஜன்மத்தில் ஒழிந்து விடும். சிறிதளவேனும் சுயப்பிரயாசை மிகவும் அவசியமாகும்.

முற்றிற்று.



# தமிழ்ப் புத்தகங்கள்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் திவ்விய சரிதம். சுமார் 1000-பக்கங்கள் கொண்டது ... | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம் ... | 1 | 8 | 0 |
| குருதேவர் வாக்கியம். சாதா பைண்டு. ... | 0 | 5 | 0 |
| ஷை காலிகோ பைண்டு ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரித்திரம் ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீ விவேகாநந்த சரிதம் ... | 0 | 12 | 0 |
| பாலபோத் விவேகாநந்த சரிதம் ... | 0 | 7 | 0 |
| விவேகாநந்த ஞானதீபம் 600-பக்கங்கள் கொண்டது. ஏனைய பிரசங்கங்களுடன் ஞானயோகமும் கர்மயோகமும் இதனுள் அடங்கியுள்ளன. ... | 2 | 0 | 0 |
| இராஜயோகம் ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் இயற்றியது ... | 1 | 4 | 0 |
| பக்தியோகம் ,, ... | 0 | 10 | 0 |
| கர்மயோகம் ,, 0-12-0 ... | 0 | 12 | 0 |
| நமது தாய்நாடு ,, ... | 0 | 8 | 0 |
| கடிதங்கள் ,, ... | 0 | 8 | 0 |
| சிகாகோ பிரசங்கம் ,, ... | 0 | 5 | 0 |
| பவாஹாரி பாபா ,, ... | 0 | 3 | 0 |
| எனது போர்முறை ,, ... | 0 | 3 | 0 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் ,, ... | 0 | 2 | 0 |
| விதிவசம் அல்லது ஊழ்வினை ,, ... | 0 | 0 | 6 |
| ஜகஜீவபரவிளக்க வினாவிடை ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்த சுவாமிகளால் ... | 0 | 12 | 0 |
| முக்திநெறி ,, ... | 0 | 2 | 0 |
| பக்தி மார்க்கம் ஸ்ரீ பரமாநந்த சுவாமிகளால் ... | 0 | 5 | 0 |
| நடராஜவடிவம்—தில்லைத்திருநடனம் ... | 0 | 2 | 0 |

மடத்திலிருந்து வெளிவரும் 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' என்னும் மாதாந்திர பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு மேல் குறிப்பிட்ட புத்தகங்களில் அநேகம் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும். இப்பத்திரிகையின் வருடசந்தா

உள்நாடு ரூ. 2/- வெளிநாடு ரூ. 3/-

மானேஜர்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,

மைலாப்பூர், சென்னை.